கழக வெளியீடு: கஅசு

# தமிழ்ப்புலவர் அகரவரிசை

(முதற் பகுதி)



ஆசிரியர்:

சு. அ. இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1,

First Edition: October, 1959.

# THAMIZH PULAVAR AKARAVARISAI
## VOL - I



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS - 1.

*Head Office :*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1.—C. 1200.

# பதிப்புரை

நாடும் மொழியும் நன்னெறியுமாகிய மூன்றும் முறையே உடல் உள்ளம் உயிர்போன் றியைந்து வாழும் மாந்தர்க்கு வளம்பல வழங்கி, நலம்பல நல்கி உறுதுணை யாகும். இம் மூன்றன் அமைப்பும் சீர்பெற நிலைத்து நிற்பதற்குத் துணைபுரிவது தோலாநாவின் மேலோராகிய நல்லிசைப் புலவர்கள் யாத்தளித்த பெருநூலாகும். அத்தகைய பெருநூல்களை வழங்கியுள்ள பெரும்புலவர் களின் அருமைமிக்க வரலாறுகளை நாம் ஒவ்வொருவரும் நன்குணர்ந்து நாட்டமுற்று அவைகள் நமக்கு அருமை யாகக் கிடைத்த கலங்கரை விளக்கெனப் போற்றி யொழுகுதல் வேண்டும். அதன்பொருட்டுக் கழகத்தார் அரிதுமுயன்று அத்துறை வல்லாராகிய திரு. சு. அ. இராம சாமிப் புலவர் அவர்களைக்கொண்டு "தமிழ்ப் புலவர் வரிசை" என்னும் பெயரான் எழுதச்செய்து ஐந்நூற்றறுபத்தைவர் புலவர்களைப்பற்றி இருபத்தொரு புத்தகங்கள் வெளியிட் டனர்.

மேலும் ஆயிரத்தைஞ்ஞூற்றுக்கு மேற்பட்ட புலவர் களின் வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைத்துள்ளன அவற்றைச் சுருக்கம்பற்றி அகரவரிசையில் தொகுத்துத தொடர்ந்து வெளியிடக் கருதியுள்ளோம். அம்முறையில் "தமிழ்ப் புலவர் அகரவரிசை" என்னும் இந்நூற்கண் ஐந் நூற்று முப்பத்தெழுவர் புலவர்களின் அரிய வரலாறுகள் வந்துள்ளன. எஞ்சியுள்ளனவும் தொடர்ந்து வரும். இதனை எழுதியுதவிய திரு சு. அ. இராமசாமிப் புலவரவர் கட்குக் கழகத்து நன்றி உரித்தாகுக. இந் நூலினைப் பெரு மக்களும், ஆசிரிய மாணவர்களும், நூலகங்களும் வாங்கி யும் வாங்குவித்தும் பயனெய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

ஒருவருடைய பிறப்பு வளர்ப்பு வாழ்க்கை முதலியன பற்றி எழுதப்பெறும் நூல்கள் 'வரலாற்று நூல்கள்' என்று கூறப்பெறும். சிறந்த அறிஞர்கள், கொடையாளர்கள், வீரர்கள், அரசர்கள் முதலியவர்களுடைய வரலாறுகள் மறைந்துவிடாமல் எழுதிப் பாதுகாக்க வேண்டியது இன்றி யமையாததாகும். இத்தகையோருடைய வரலாற்று நூல்களால் நாட்டிற்கு நன்மைகள் உண்டாகும். வரலாறெழுதும் பழக்கம் மேனாட்டைப்போல் நம்முடைய நாட்டில் வளர்ச்சியடையவில்லை. நமது நாட்டிலும் வரலாறெழுதும் பழக்கம் அண்மைக் காலத்தில் இருந்துதான் ஓரளவு பரவி வருகிறது. முன்னாளில் இருந்தே வரலாறெழுதும் பழக்கம் நமது நாட்டில் ஏற்படாதபடியால் நமக்கேற்பட்டுள்ள இழப்புப் பெரிதாகும். அண்மைக்காலம் வரையில் நம்மிடம் வாழ்ந்திருந்து மறைந்த அறிஞர்களுடைய வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கின்றன.

நமது நாட்டில் புகழ்பெற்று விளங்கியிருந்த ஔவையார், திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரும் புகழாளர்களுடைய உண்மை வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ளமுடியாத நிலைமையில் உள்ளன. கேட்கப்பெறும் வரலாறுகள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கின்றன. சங்ககாலப் புலவர்களுடைய வரலாறுகள் அனைத்தும் அந்நாளில் எழுதப்பட்டிருக்குமாயின் அவைகள் நமக்கு இந்நாளில் எவ்வளவோ பயன்பட்டிருக்கும். நமது தென்னாட்டின் வரலாற்றையும் உள்ளவாறுணர்தற்கு அவைகள் உற்றதுணையாகவும் அமைந்திருக்கும்.

தமிழறிஞர்களுடைய வரலாற்றைத் தமிழ் உலகில் நிலைபெறச் செய்யவேண்டுமென்று விரும்பிய சைவ

சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப்பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் தமிழ்ப் புலவர்களுடைய வரலாறுகளை எழுதுமாறு கூறியதோடு, எழுதுவதற்குரிய வழிவகைகளையும் தெரிவித்தனர். யானும் அவ்வாறே அவ் வரலாறுகளைக் கூடியவரையில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எழுதினேன். அவைகள் தனித்தனி நூல்களாக வெளியாயின. மிகுபுகழ் பெற்றவர்களின் வரலாறுகள் முன்னர் வெளிவந்தன. பிறகு நூலியற்றிய அனைவருடைய வரலாறுகளும் இருபத்தொரு பகுதிகளாக வெளியாயின. இருபத்தொரு நூல்களினும் வெளிவந்த வரலாறுகள் ௩௯௬.

இவ் வரலாறுகளை எழுதுவதற்கு யான் பல நூல்களையும் நூலகங்களையுந் தேடினேன். விரிவாகக் கிடைத்த வரலாறுகள் போகச் சுருக்கமாகக் கிடைத்த வரலாறுகள் அகரவரிசையாகத் தொகுக்கப்பெற்றன பல புலவர்களுடைய பெயர்கள் நூன்முகப்பில் காணப்படுவதைத் தவிர வேறெவ்விதமான குறிப்புக்களும் அற்றவைகளாக இருந்தன. சில அறிஞர்களுடைய செய்திகளைச் சிறப்புப் பாயிரங்கள் புலப்படுத்தின சிலருடைய செய்திகள் செவி வழிச் செய்தியாகவுங் கிடைத்தன. இவ்வாறு கிடைக்கப் பெற்றவைகள் யாவும் இவ் அகரவரிசையிற் சேர்க்கப் பெற்றுள்ளன

இந்த அகரவரிசையைத் தொகுத்து முடிப்பதற்குத் தஞ்சையாவட்டம் மன்னார்குடியில் உள்ள கோட்டூர் இராமசாமி முதலியார் இலவச நூல்நிலையம், திருவையாறு [illegible]ர் மடத்தில் உள்ள நூல்நிலையம், காளையார் கோயில் கா. செ. மடாலய நூல்நிலையம், பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க நூல்நிலையம், நெல்லையில் உள்ள திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் சேர்ந்த சிவஞான முனிவர் நூல் நிலையம், திருவைகுண்டத்தில் உள்ள குமரகுருபர சுவாமிகள் நூல்நிலையம், பாளையங்கோட்டையில் உள்ள திருவரங்கனார் நூல்நிலையம், வாகீச புத்தகசாலை, திருநெல்வேலி

திருஞானசம்பந்த சுவாமி மடாலய நூல்நிலையம், பலவான் குடியில் உள்ள திரு. மெ. வெ. வேலப்ப செட்டியாரவர்களுடைய திருமுருகன் செந்தமிழ்நிலைய நூல்நிலையம், திரு. ராம. குமு. சு. குமரப்ப செட்டியாரவர்களுடைய தமிழக நூல்நிலையம், திருமறைக்காட்டை யடுத்த பஞ்சநதிக் குளம் அருணாசல சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் உள்ள நூல்நிலையம், மதுரைக் குட்டையாச் சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கரந்தைத் தமிழ்ச்சங்க நூல்நிலையம், தஞ்சை பாலையசுவாமிகள் மடாலய நூல்நிலையம், திருக்களர் கோ. ஆ. மடாலய நூல்நிலையம், திருவாவடுதுறை ஆதீனத்துச் சரசுவதி மகால் நூல்நிலையம், தருமபுர ஆதீன நூல்நிலையம், திருப்பனந்தாள் காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி நூல்நிலையம், சிதம்பரம் மௌனசாமிகள் மடாலய நூல்நிலையம், சென்னை வீர, சுப்பைய சுவாமிகள் மடாலய நூல்நிலையம், வியாசர் பாடி சிவப்பிரகாச சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மறைமலையடிகள் நூல்நிலையம், பேரையூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கோவை சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் (இப்பொழுது சம்பந்த சரணாலயத் தம்பிரான்) அவர்களுடைய நூல்நிலையம், திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களுடைய நூல்நிலையம், சிரவணபுரம் கௌமார மடாலய நூல்நிலையம், திருக்குடந்தை குமாரசாமிச் செட்டியாரவர்களுடைய நூல்நிலையம், மயிலம் சிவஞான பாலையசுவாமிகள் தமிழ்க்கல்லூரி நூல்நிலையம், காஞ்சீபுரம் ஆளவந்த வள்ளலார் ஆதீன நூல்நிலையம், காஞ்சி முத்தமிழ் அச்சகத்தில் உள்ள சேக்கிழார் நூல்நிலையம், காரைக்குடி இந்து மதாபிமான சங்க நூல்நிலையம், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலய நூல்நிலையம் ஆகியவைகளில் உள்ள நூல்கள் பலவும் பார்வையிடப்பெற்றுக் குறிப் பெடுக்கப்பட்டன. மேற்கூறிய இடங்கட்குச் சென்ற பொழுது அங்கங்குள்ள அன்பர்கள் ஆகவேண்டிய உதவிகளைச் செய்தனர். அவர்கட்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

தமிழ்ப்புலவர் அகரவரிசை நூல் முயற்சி பல்லாண்டு கட்கு முன்னரே தொடங்கப்பெற்றிருக்கிறது. யாழ்ப் பாணத்தில் இருந்து வெளிவந்த 'பாவலர் சரித்திர தீபகம்' என்னும் நூலே முதலாவது தமிழ்ப்புலவர் அகரவரிசை நூலாகும். இஃது ஒரு சிலருடைய வரலாறுகளையே கூறியது. இதற்குப் பின்னுஞ் சில தமிழ்ப்புலவர் அகர வரிசை நூல்கள் தோன்றின. இவைகளும் ஒரு சிறு அளவிலேயே அமைதிபெற்றன. இவ் வகரவரிசை நூல் பெரும்பாலாருடைய வரலாற்றைக் கூறுகிறது.

விரிவாக எழுதப்பெற்ற இருபத்தொரு நூல்களினும் அமைந்துள்ள புலவர்களை இவ் வகரவரிசையிற் சேர்க்க வில்லை. அந் நூல்களில் வந்துள்ள ஐந்நூற்றறுபத்தைவரின் பெயரும் புத்தக எண்ணும் அகரவரிசையில் இந் நூலின் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன. அவ் வரலாறுகளைப் பார்க்க விரும்புவோர் அவ்வப் புத்தகங்களில் பார்த்துக் கொள்ளலாம். இவ் வகரவரிசைப் புலவர்கள் இயற்றிய நூலின் பெயர் அகரவரிசையும் இறுதியில் உளது.

சமயாசாரியர்கள், ஆழ்வார்கள், சங்கப்புலவர்கள் முதலியோரின் வரலாறுகள் தனி நூல்களாக வெளி வந்திருத்தலின் அவர்களுடைய பெயர்கள் இவ் வகர வரிசையிற் சேர்க்கப்பெறவில்லை. நூல் அச்சாகுங்கால் கிடைக்கப்பெற்ற பல வரலாற்றுக் குறிப்புகள் நூலின் இறுதியிற் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டிருக்கின்றன. இத்தகைய வரலாற்றுத் தொண்டில் என்னை ஈடுபடுத்திய கழக ஆட்சிப்பொறுப்பாளரவர்கட்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்தக் கடப்பாடுடையது. இவ் வகரவரிசை வேலை இவ்வளவிலேனும் வெற்றிபெறத் துணைபுரிந்த முருகப் பெருமானின் திருவடிகளைப் போற்றுகிறேன்.

வைர்தமிழ்ப் பண்ணை
கருப்பக்கிளார்
தஞ்சை மாவட்டம்.
1-10-1959

சு. அ. இராமசாமிப் புலவர்

# தமிழ்ப்புலவர் அகரவரிசை



## க. அகத்தியப்ப முதலியார்

(19—நா.)

சீருஞ்சிறப்பும் பொருந்திய நம் பரத கண்டத்திலே தொண்டைவளநாட்டில் பெருநகர் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் பிச்சையப்ப முதலியார். இவர் தொண்டைமண்டல சதகத்திற்கு விரிவுரை இயற்றியிருக்கிறார். உரையைப் பாராட்டி, வேலூர் அருணாசல முதலியார், காஞ்சி புரம் கனகசபை நாயகர், பேறை தசாவதானம் செகநாதபிள்ளை, இரணியசித்தி முருகேச முதலியார், மாகறல் கார்த்திகேய முதலியார், காஞ்சிபுரம் ஏகமூர்த்திப் பிள்ளை, நத்தம் பொன் னம்பல முதலியார், வாலாசாபேட்டை பொ. துரைசாமி முதலி யார். பெருநகர் சொக்கலிங்க முதலியார், திரிசிரபுரம் அமிர்தம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"..... ...... ...... ......
**எளிவரு நடையின் மிளிரும் பொழிப்புரை**
**எழுதுவ தின்றி யமையாக் கடனென**
**சேயாற் றுந்துந் தென்காற் சுவைநீர்**
**ஓயா துலவி ஊறும் பழனப்**
**பெருநகர் வேளாண் மரபிற் பிறந்து**
**முத்தமிழ்க் கடலொடு கத்தலைச் சலதியும்**
**எண்மையிற் குடித்த தென்ம லயத்துச்**
**சம்புவை நிகர்க்குங் கும்பமா முனிவன்**
**பெயருற் றனமென் றயர்விற் களிக்கும்**
**அகத்தியக் கேய்ந்த அகத்தி யப்பனென்**
**அகத்தியங் கார்வத் தகத்திய மென்சொல்**

வழிவரா துன்னத் தொழிவுரு தெழுதல்
அடங்கா தெழுதினே ளுதலின் இஃதோர்
மடங்கான் நெறியென மனங்கொண் டுவத்தல்
குற்றம் குணமெனக் கொள்ளும்
முற்றும் உணர்ந்த முதியோர் கடனே,''

என்பது இவர் உரையின் தொடக்கத்தில் எழுதிய சிறப்புப் பாயிரத்தில் ஒரு பகுதி.

## உ. அகப்பேய்ச் சித்தர்

செந்தமிழ் நாட்டிலே சித்தர்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்களில் நாட்டு மக்களால் நன்குணர்ந்து பாராட்டப்பெற்ற சித்தர்கள் சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், அகத்தியர், போகர், கோரக்கர், கயிலாசநாதர், சட்டைமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், கொங்கணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி, இடைக்காடர், பிண்ணாக்கீசர், சுந்தரானந்தர், உரோமரிஷி, பிரமமுனி, புலிப்பாணி, கருவூரார், சுடுகாடர், அகப்பேய், அழுகணி, குதம்பை, பாம்பாட்டி முதலியோராவர். இவர்களில் பெரும்பாலோர், தமிழ் மொழியை நன்கு கற்றுணர்ந்தவர்கள். அகத்தியரை முதலாவது தமிழ்ப் புலவர் எனலாம். இவர்கள் காலக்கணிதம், மருத்துவம், வேதாந்தம், யோகம் முதலியவைகளில் நூல்கள் இயற்றியுள்ளனர். அகப்பேய்ச்சித்தர் மனதைப் பேயாக உருவகித்துப் பாடியபடியால் இப்பெயரைப் பெற்றனர் என்பர். இவருடைய பாடல்கள் பதினெண்சித்தர்கள் ஞானக்கோவையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

''காரண மானவெல்லாம்—அகப்பேய்
கண்டது சொன்னேனே
மாரணங் கண்டாயே—அகப்பேய்
வந்த விதங்களெல்லாம்''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௩. அக்கீம்-முகமது நிசாமுகையிதீன் சாயபு
(19—நூ.)

இவர் பாப்புராசபுரம் என்னும் ஊரில் இருந்தவர். முகமதிய சமயத்தினர். இவருடைய தந்தையார் பெயர் அக்கீம் முகமது சாகிபு. இவர் யூநாநி மருத்துவசாலை ஒன்று அமைத்து மருத்துவத் தொழில் புரிந்தார். தமிழிலும் நல்ல புலமை யுடையவர். இவர் "குடும்ப சம்ரட்சணி" என்னும் நூலை இயற்றி யுள்ளார். அந் நூலில் உலக வாழ்க்கையில் மக்கள் பின்பற்ற வேண்டிய ஒழுகலாறுகள் முதலியன நன்கு விளக்கப்பெற் றுள்ளன. நூலைப் பாராட்டி இவருக்குத் தமிழாசிரியராகவிருந்த சின்னச்சாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, திருமயிலை சண்முகம் பிள்ளை, கூ. அப்பன் செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். நூல் உரைநடையில் அமைந்தது. இடையிடையே கதைகளும் மேற்கோள் பாடல்களும் அமைந் துள்ளன.

"உலகனைத்து மாக்கியளித் தோங்குபரம் பொருளை
    உயிர்கள்தொறும் நிறைந்தொளிரும் ஒளிமயமாம் ஒன்றை
அலகிலவாம் ஆற்றலுள அநாதிநித்ய வாழ்வை
    அறிஞர்பலர் துதித்தேத்த அமருமருட் கடலைப்
பலபலவா கியசமய வாதிகட்கு மொன்றாய்ப்
    பகர்மனவாக் காதிகளால் பற்றவொணா நிலையை
இலகுமித யாம்பரத்தில் இருத்தியனு தினமும்
    இறைஞ்சிவழி பாடியற்றி ஏத்துதிநன் மனனே."

என்பது நூலின் கடவுள் வணக்கப்பாடல்.

## ௪ அங்கப்ப நாவலர்
(19—நூ.)

இவர் விசுவகரும குலத்தில் தோன்றியவராக இருக்கலாம் என்று தெரிகிறது. "பரசமய் கோளரியார் பிள்ளைத் தமிழ்" என்னும் நூலை இவர் பாடியுள்ளார். பரசமய கோளரியார் என்பவர் பிறசமயங்களை வென்ற ஒரு பெரியார். இந்நூலுக்குக் களத்தூர் வேதகிரி முதலியார் குமாரர் ஆறுமுக முதலியார், மேற் படியாரின் உடன் பிறந்தார் கந்தசாமி முதலியார், பெரிய

காவணம் பொன்னப்ப பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"மஞ்சேறு தண்ணறுப் பூந்துணர்ப் போதுவிரி
மாம்பொழில் உடுத்த தெய்வ
மாநதிப் பாடலங் கம்பையாற் றிற்கமல
மாளிகையில் வீற்றிருக்கும்
பஞ்சேறு சேவடித் திருவினொடு வெள்ளனப்
பார்ப்புவெண் பிள்ளை குலவிப்
பருவாய் பிளந்தருங் கனிநிமிர்த் தொருபுறச்
சிறையலகு பருவம் நோக்கி
அஞ்சாயன் மடவனப் பெடுதன் சேவலொடும்
அகமகிழ்ந் தணிசிறையினால்
அணைத்துப் பரிந்தலகு வாயினிரை யூட்டுமனம்
அதிகவளம் ஓங்கு செல்வச்
செஞ்சாலி வயல்சூழும் நெல்லைநக ராதிபதி
செங்கீரை யாடி யருளே
செயபுய சதுரபர சமயகோ ளரிராய
செங்கீரை யாடி யருளே."

என்பது செங்கீரைப் பருவத்தில் முதற்பாட்டு. மற்றும் இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் பரசமய கோளரியார் திருவூசல், பரசமய கோளரியார் திருவம்மானை, பரசமய கோளரியார் ஆசிரியப் பாமாலை முதலியன.

"பாசமெலாங் கொண்ட பரசமய கோளரியார்
நேசமெல்லாங் கொண்டுவிற்குஞ் செட்டிகாண் அம்மானை
நேசமெல்லாங் கொண்டு விற்கும் செட்டியே யாமாகில்
தோடமற என்னவிலை சொல்லுவனோ அம்மானை
சொல்விலை கண்ட சுறுக்கன்காண் அம்மானை."

என்பது அம்மானையில் ஒரு பாட்டு.

## ௬. அங்கமுத்து முதலியார்-க
## (19—நூ.)

இவர் களத்தூர் வேதகிரி முதலியாருடைய பெயரர். தம் பாட்டனாரிடமே இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலமை பெற்றதன்றி மருத்துவ நூல்களையுங் கற்று நாட்டு மருத்துவராகப் பணிபுரிந்தார். இவர் 'ஆயுள் வேதக் களஞ்சியம்' என்னும்

மருத்துவ நூலை இயற்றியுள்ளார். பதினாறு பகுதிகளாக அமைந்த அந் நூல் நாடிகள் உற்பவம், சுரரோக உற்பவம், சந்நிரோக உற்பவம், க்ஷயரோக உற்பவம், பாண்டு ரோக உற்பவம் முதலிய நோய் வரலாறுகளையும் அவைகளைத் தீர்க்கும் முறையையுந் தெளிவுபெறக் கூறுகிறது.

## சு. அங்கப்ப பிள்ளை—பி
(20—நூ.)

பாண்டிவள நாட்டிலே அம்பா சமுத்திரம் என்னும் ஊரில் இருந்தவர். அம்பாசமுத்திரம் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்த அரிகர பாரதி என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமையடைந்து புலவரானார். ஊர்க்காடு எலிமெண்டரிப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். செய்யுள் செய்வதில் வல்லவராகிய இவர் இராமசுவாமிகள் என்பவர் இயற்றிய வேதாந்தப் பிரதிபம் என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

"தன்னடிமை யெனக்கடைக்கண் சாற்றியதங்
குருநாதன் தகைமை யோர்கண்
முன்னவநின் கருத்தறைதி எனமறையின்
சிரப்பொருளை முற்று மாய்ந்து
துன்றுபெயர் வேதாந்தப் பிரதிபம்
என்னவே தொகுத்த நூலை
முன்னிலைநின் றச்சியற்றி அருளினன்பன்
னுளின்பம் மூழ்கி வாழ்க."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## எ. அச்சுதாநந்த அடிகள்

இவர் சகத்குரு ஆதி சங்கராச்சாரியார்மீது "திருத்தாலாட்டு" என்னும் நூல் பாடியுள்ளார்.

"பூதமய விடயமெல்லாம் புடைபெயர்ந்திட் டோடும்வண்ணம்
சீத சரணளிக்கத் தேடிவந்த தேசிகனே

இந்தியங்க ளெல்லாம் இரியத் திருக்கரத்தால்
பந்தவிருட் பாசம் பறிக்கும் பழம்பொருளோ."

என்பன அத் தாலாட்டில் இரண்டு பாடல்கள்.

## ௯. அஞ்சனாட்சி

கம்பர் காலத்தில் சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் வாழ்ந்திருந்த ஒரு தாசி. கம்பர் இராமாயணம் பாடி முடித்தபின் அரங்கேற்றஞ் செய்தற்குச் சீரங்கத்திற்குக் கொண்டு சென்றார். சீரங்கத்து வைணவர்கள் இன்ன இன்ன இடத்திற்குப் போய் இவர்கள் இவர்கள் சாற்றுக் கவியும் கையொப்பமும் பெற்றுக் கொண்டுவர வேண்டுமென்று கூறியபொழுது இவளையுங் குறிப்பிட்டு இவளிடமுஞ் சிறப்புப் பாயிரம் பெற்றுக்கொண்டுவர வேண்டுமென்று கூறினர். கம்பர் அவ்வாறே இவளிடமும் வந்தார். இவள் கம்பரை வரவேற்றுப் போற்றியதுடன், "இக் காரியத்தின் பொருட்டுத் தாங்கள் என்னிடத்திற்கு வரவும் வேண்டுமா? செய்தியைத் தெரியப்படுத்தினால் நான் தாங்கள் இருக்குமிடத்திற்கு வந்து ஆகவேண்டியதைச் செய்யமாட்டேனா" என்று பலவாறு பரிவுரைகள் கூறி:

> "அம்பரா வணிசடை யரன யன்முதல்
> உம்பரான் முனிவரால் யோக ராஜயர்
> இம்பராத் பிணிக்கரும் இராம வேழஞ்சேர்
> கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்."

என்னும் செய்யுளையும் பாடிக் கொடுத்தாள். இதற்குமேல் இவளைப் பற்றிய செய்திகள் புலப்படவில்லை.

## ௧0. அடைக்கல அடிகள்

(20—நூ.)

பாண்டிய நாட்டில் கோயிலூர் என்னும் பதியில் அங்காளி எழுந்தருளியிருந்த வீரசேகர ஞான தேசிகர் என்னும் பெரியார்பால் இவர் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்த மேதகு சிறப்புடையவர். இலக்கியப் புலமையுஞ் சிறக்கப்பெற்றவர். தஞ்சை குப்புசாமி ராசு மொழிபெயர்த்த பாலபோதம் என்னும் நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

> "நீர்மலி வாரிதி நிலவிய தரங்கக்
> கரங்களால் எற்றக் கரையிலார் முத்தம்
> வாயில்கள் தோறும் வயங்கிக் குவியச்
> சிற்றிடை மகளிர் சிறிய முச்சிலால்

எத்திசை முழக்கமும் எந்நாட் டுள்ள
பல்வள பண்டம் பரித்திடு நாவாய்
தாழுறுந் துறையின் தனிதமுங் கூடி
விண்ணாட் டுள்ளவர் தம்மிரு கன்னமும்
செவிடாம் வண்ணம் செய்துமேற் போகி
அண்டக டாகம் அதிர்த்திடும் வளனுடைத்
திருமந் திரபுரம் எனச்சிறந் தோங்கும்.''
...... ...... ...... ......

என்பது சிறப்புப் பாயிரத் தொடக்கம்.

## க0. அட்டாவதானம் கிருட்டிண ஐயங்கார்

19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் முத்துராமலிங்க சேதுபதியின் அரண்மனைப் புலவராக இருந்தார். இவர் இயற்றிய நூல்கள் நாலுமந்திரி கதை, பஞ்சதந்திரம், வீரகுமார நாடகம், விட நிக்கிரக சிந்தாமணி முதலியன.

## கக. அட்டாவதானம் சொக்கலிங்கப் புலவர்

இவர் ஏறக்குறைய 120 யாண்டுகட்கு முன், சேலம் நகரத்திலே வேளாண் குலத்திலே தோன்றினார். கல்வியை நன்கு கற்று எண்வகை அவதானமுஞ் செய்யும் சீரிய ஆற்றலையும் அடைந்தார். வடமொழியாற்றலும் இவருக்கு மிகுதியாக இருந்தது. இதனால் இவர் வடமொழியில் இருந்த சேலம் பாவநாசத் தலபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினார். புராணம் பன்னிரண்டு படலங்களையும் அறுநூற்று எழுபத்திரண்டு செய்யுட்களையுங் கொண்டதாக அமைந்திருக்கிறது.

''புண்ணியம் செய்யில் சித்தம் புனிதமாய் ஞானம் எய்தும்
உண்ணிறை ஞானத் தாலே உலகத்துப் பற்று நீங்கும்
எண்ணுறு பற்று நீங்க இரண்டற ஒன்றும் முத்தி
திண்ணமே பாவந் தேயப் புண்ணியஞ் செய்வர் மாதோ.''

என்பது பாவநாசச் சருக்கத்தில் ஒரு பாடலாகும். இப் புராணத்தைத் தவிரத் திருவள்ளுவர் புராணம் என்னும் நூலையும் இவர் பாடியுள்ளார்.

## கஉ. அண்ணாச்சாமிக் கவிராசர்-ஆ

### (19—நூ.)

இவர் சென்னை மாநகரில் திருமயிலையில் வாழ்ந்திருந்தார். சிறந்த செந்தமிழ்ப் புலவர்களில் ஒருவர். இவரிடம் பலர் கல்வி கற்றுச் சிறந்த புலவர்களாயினர். இவர் காலத்தில் சென்னையில் வாழ்ந்திருந்த புலவர்கள், திருமணம் கேசவ சுப்பராய முதலியார், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோமளேசன் பேட்டை இராசகோபால முதலியார் முதலிய பலராவர். திருவொற்றியூர் வெண்பாமாலை என்னும் நூலைப் பாடிய கோரஞ்சூழூர் சித்திரகவி கந்தசாமிக் கவிராசர் இவருடைய மாணவர் ஆவர். மேற்படி திருவொற்றியூர் வெண்பாவுக்கு இவர்,

"திருக்கோரஞ் சூழூரிற் கந்தசுவா
மிக்கவிஞன் செய்த வான்க
திருக்கோரஞ் செல்பொழில்சூ ழொற்றியூர்த்
தியாகர்வெண்பாத் திறத்தைக் கண்டோர்
திருக்கோரஞ் சிறிதுரையார் புவிசிரசன்
வாணனுந்தென் மலைதராப
திருக்கோரஞ் சுவர்க்கமென்றே சிகரவாய்
சித்தமதாற் றெளிவர் தாமே."

எனச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## கங. அண்ணாமலை உபாத்தியாயர்

கொங்குவள நாட்டுப் பல்லடம் பிரிவில் உள்ள கேத்தனூர் என்னுஞ் சிற்றூரிலே தேவாங்கர் குலத்திலே பொன்னஞ் செட்டியார் என்பவருக்குப் புதல்வராக அண்ணாமலை பிறந்தார். இரண்டு ஆண்டுகட்குள் பெற்றோர்களை இழந்தார். குழந்தையின் சிறிய தாய் அதனை வளர்த்து வந்தாள். ஆறாவது அகவையில் அண்ணாமலைக்கு அம்மை நோய் கண்டது. அதன் பயனாக இரண்டு கண்களும் பார்வையிழந்தன. கரவலூர் மாரியம்மனுக்கு வேண்டிக் கொண்டனர். கண்பார்வை மீளவில்லை. மனக்கண் மட்டுந் திறந்தது. எவ்வாறெனின், அக்கோயிலில் ஒரு பாடசாலை இருந்தது. அதன் ஆசிரியர் பாடஞ் சொல்வதை அண்ணாமலை கேட்டுக்கொண்டு தாமே ஒப்புவிக்கலானார்.

பிறகு ஊரையடைந்ததும் அரங்கசாமி நாய்க்கர் என்பவ ரிடம் தமிழ் கற்று மனப் பாடமாகவே எல்லாவற்றையும் உணர்ந்துகொண்டார். யார் செய்யுள் பாடினாலும் அதனைக் கேட்டு ஒரு தடவையிலேயே மீண்டும் ஒப்புவிக்குஞ் சக்தி இவருக்கு உண்டாயிற்று. சில காலம் பொறுத்துத் தாமே ஒரு பாடசாலையை ஏற்படுத்திக்கொண்டு பெரிய பிள்ளைகளின் உதவி யைக்கொண்டு பள்ளிக்கூடத்தை நடத்திவந்தார். பெரும்புலவ ருடைய பாடல்களெல்லாம் மனப் பாடமாயின. இசைபாடவுங் கற்றுக்கொண்டார். காலக் கணிதமும் கைவந்தது.

ஒருநாள் வீராட்சி மங்கலம் கந்தசாமிக் கவிராயர் என்பவர் பெருமாள் கோவிலில் அவை கூட்டிப் பெருமாள்மீது செய்யுள் பாடுவதாகச் சொன்னார் அதனைக் கேள்வியுற்று இவரும் தம் மாணவனை பொம்மிச் செட்டியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு தாமும் அவ்வவைக்குப் போய்ச் செய்யுள் பாடுவதாகச் சொன்னார்.

"சரி ரண்டுமூன் றென்னு மேகமும்
ஏக மாகியம் பெய்யு மேல்வையில்
காரி தண்டிரண் டான பக்கமும்
கழிய நாகமுன் கையி னாலெடுத்
தாரி ரண்டுகா லத்தி னுஞ்சுரந் (து)
அமுதம் ஈயுமா னிரைய ளித்தவன்
ஓரி ரண்டுதாள் சென்னி வைப்பவர்க்(கு)
உற்பவிக்குமோ ழ் வினைக ளில்லையே.

நீங்க டாவகை தூங்கிப் போய்வீழும்
செல்வ வாழ்க்கையிற் சிறி யோரையும்
பாங்க டாவெனும் பாவ ராய்வினைப்
பாவை மார்களாம் பரவை மூழ்கியே
தாங்க டாரமாம் பூம்பொ னாரையும்
தள்ளி யேகிடும் தடிய ராயினும்
வேங்க டாசலத் தானை ஏத்துவார்
மேவி வாழ்குவா ரேவை குந்தமே.''

இவை முதலிய பாடல்களையும் சில இசைப்பாடல்களையும் பாடினார். இவைகளைக் கேட்டு அனைவரும் புகழ்ந்தனர். தகுந்த நன்கொடையுங் கிடைத்தது. இவருடைய மாணவராகிய பொம்மிச் செட்டியுஞ் சிறந்த புலவரானார்.

## ௧௪. அண்ணாமலைச் செட்டியார்-இ
(1856)

இவர் பாண்டிவள நாட்டில் செம்பொன் மாரி என்னும் ஊரில் இராமநாதன் செட்டியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். தனவணிக மரபினர். இவர் திருவருண்மாலை என்னும் நூல் பாடியுள்ளார். நெஞ்சமே என் கண்ணி, சிவமயக் கண்ணி சதாசிவக் கண்ணி, சின்மயக் கண்ணி, தலச் சிறப்பு முதலிய பகுதிகள் அடங்கியுள்ளன. செம்பொன்மாரி சிவராமலிங்கம், திருவண்ணாமலை வேங்கடாசல முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"ஏறிமயின் மீதிருக்குந் தாளுங் கண்டேன்
இருபுறமும் வள்ளிதெய்வா னையையுங் கண்டேன்
சூர்முடி துளைத்துறும்வேல் அதனைக் கண்டேன்
சோதிமுடி மூவிரண்டுந் துலங்கக் கண்டேன்
கூறின்வளம் பெருகுசெயங் கொண்டான் தன்னில்
கோயி லுள்ளே உனதுதிரு அழகுங் கண்டேன்
ஆறுமுகம் பன்னிரண்டு கரமுங் கண்டேன்
அருள்பெற்றேன் இருவிற்றேன் அறிவுற் றேனே."

என்பது தலச் சிறப்பு என்னும் பகுதியில் ஒரு பாட்டு.

## ௧௫. அண்ணாமலை முதலியார்-ஆ
(19—நூ.)

இவருடைய தந்தையார் பெயர் இராமலிங்க முதலியார். இவருடைய ஊர் [illegible]. இவர் ஈசூர் செல்வ விநாயகர் மீது, 'விநாயகர் பாமாலை' என்னும் நூல் பாடியுள்ளார். அந்நூலுக்குச் சென்னை இராயபுரம் வே. கி. நாராயணசாமிப் பிள்ளை,

"தேமாலை வாழீசூர்ச் செல்வ விநாயகன்மேல்
பாமாலை பாடிப் பரிசுற்றான்—மாமாலை
நண்ணார் திசைக்கீர்த்தி நம் ராம லிங்கனருள்
அண்ணா மலைப்புலவன் ஆய்ந்து."

என்னுஞ் செய்யுளாலும் மற்றொரு செய்யுளாலுஞ் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## கரு. அதங்கோட்டாசான்

தொல்காப்பியரோடு ஒருங்கு கற்ற மாணவர்கள் பன்னிருவரில் இவரும் ஒருவர். அதங்கோடு என்பது இவர் பிறந்த ஊர். (அதங்கோடு என்பது திருவிதாங்கூராக இருக்கலாமென்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர்) பின்னுளில் இவர் மாணவர் பலருக்கு ஆசிரியராக விளங்கினமையின் இவருக்கு ஆசான் என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாகியது. இவரிடத்தில் நன்மதிப்புக் கொண்டார் இவரது இயற்பெயரைக் கூறுதல் தகுதியன்றெனத் துணிந்து ஊர்ப்பெயரையும் சிறப்புப் பெயரையும் ஒருங்கு புணர்த்தி இவரை "அதங்கோட்டாசான்" என்று கூறுவாராயினர். இதனுல் இவருடைய இயற்பெயர் அடியோடு மறைந்து இக்காரணப் பெயரே நிலைபெறுவதாயிற்று. அகத்தியர் மாணவர்கள் பன்னிருவரில் பெரும்பாலார்களுடைய பெயர் கட்கும் இத்தகைய கதியே இயைவதாயிற்று.

தொல்காப்பியர் தாம் இயற்றிய இலக்கண நூலை நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்தில் இப் புலவர் பெருமானுடைய தலைமையிலேதான் அரங்கேற்றஞ் செய்தார். இவர் அந்தணர்குலத்தில் தோன்றியவராக இருக்கலாமென்பது "அறங்கரை நாவின் நான்மறை முற்றிய" என்னும் அடைச்சொற்களாற் பெறப்படுகின்றது.

தொல்காப்பியனுர்க்கும் அகத்தியனுர்க்கும் பிற்றை நாளில் மனக்கோட்டம் உளதாயிற்று. ஆகவே அகத்தியனுர் தம் மாணவராகிய அதங்கோட்டாசானைப் பார்த்து "நீ தொல்காப்பியனது இலக்கண நூலை அரங்கேற்றஞ் செய்யாதே" என்று கட்டளை இட்டார். தொல்காப்பியனுர் தம் நண்பராகிய இவரிடம் பன்முறையுஞ் சென்று "நீவிர் எம்முடைய நூலைக் கேட்டுத்தான் ஆகவேண்டு"மென்று வற்புறுத்தினுர். இதனுல் இவருடைய நிலைமை இருதலைக் கொள்ளி எறும்பாயிற்று. இறுதியில் தொல்காப்பிய நூலைக் கேட்டு ஏதேனுங் குற்றங் கூறிவிடலாம். இதனுல் இருபக்கத்தினர்க்கும் ஒப்ப முடியுமென்று நூலைக் கேட்டு அரங்கேற்றஞ் செய்யத் தொடங்கினுர். பலவிடங்களில் தடைகளை நிகழ்த்தி மறுத்தார். தொல்காப்பியனுரோ சிறிதும் பின் வாங்காது தக்கவாறு விடையிறுத்தார். இதனுல் நூலரங்

கேற்றம் இனிது நிறைவேறியது. பனம்பாரனார் தாம் பாடிய சிறப்புப் பாயிரத்தில்,

> "நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
> அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
> அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து
> மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி."

என்று குறிப்பிடுகிறார்.

## கஎ. அதிமதுர கவி

14-ஆம் நூற்றாண்டில், திருமலைராயன் பட்டினத்தில் திருமலைராய மன்னனுடைய அவையில் அறுபத்து நான்கு தண்டிகைப் புலவர்கட்குத் தலைவராக இருந்தவர். காளமேகத்தைப் பார்த்து,

> "மூச்சுவிடு முன்னமே முந்நூறும் நானூறும்
> ஆச்சென்றால் ஆயிரம்பாட் டாகாதோ—பேச்சென்ன
> வெள்ளைக் கவிக்காள மேகமே உன்னுடைய
> கள்ளக் கவிக்கடையைக் கட்டு."

என்று பாடியவர். காளமேகத்தை எமகண்டம் பாடச் செய்தவர்.

## கஎ. அதிராவடிகள்

இவர் பழங்காலத்துப் பெரியார்களில் ஒருவர். இவர் ஆனைமுகக் கடவுள்மீது மும்மணிக் கோவை என்னும் நூலினைப் பாடியிருக்கிறார். அந் நூல் பதினொராந் திருமுறையில் சேர்க்கப் பெற்றிருக்கிறது. இவரைப்பற்றிய பிற செய்திகள் எவையும் புலனாகவில்லை.

> "ஒருநெடுங் கங்கை யிருங்குறும் பைம்புகர்
> மும்முகச் செந்நுதி நாவிணர் வெள்நிணக்
> குடற்புலவு கமழும் அடற்கழுப் படையவன்
> மதலை மாமதந் துவன்றிய கதனுடைக்
> கடதடக் கபோலத் தோரிட மருப்பிற்
> கரண்டக வுதரத்து முரண்டரு குழவிதன்
> சேவடி யுகள மல்லது
> யாவையும் இலமினி இருநிலத் திடையே."

என்பது அக் கோவையின் முதற் பாட்டாகும்.

## கஅ. அத்வைத கோளரிநாத சுவாமிகள் (1905)

இவர் கன்னியாகுமரியில் வாசஞ் செய்திருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியும் சமய நூற் பயிற்சியும் நன்கு அமையப் பெற்றவர். யோக நெறியில் நின்றவர். சித்தர் கலிவெண்பா என்னும் நூலுக்கு இவர்,

*" மாசிலாநன் வலம்புரிகள் வயல்கடொறுங் கிடந்தே*
*வயிறுளைந்து மணிகளினை வளப்பமுடன் ஈனும்*
*தேகளதாம் பிரபரனித் திரமாந் தெய்வத்*
*திருக்குருகூர் வருஞான சித்தமுனி வரர்தம்*
*ஆசியடை நதன்றுமுதல் அறுமுகவன் அருள்பெற்*
*றவனிதனில் பன்னூல்கள் அருட்டிறத்தால் அறைந்தே*
*காசினியெ லாம்புகழும் இராமலிங்கப் பெயரோன்*
*கருதுசித்தர் கலிவெண்பாக் கழறினனுட் களித்தே."*

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கசு. அநந்த கவிராயர்

இவர் மதுரையில் வாழ்ந்திருந்தவர். மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, உத்தரராமாயண நாடகம் முதலிய நூல்கள் இயற்றி யிருக்கிறார்.

**" அரியா சனத்தின் நடுவே கயற்கண்**
**அருள்சேர் துரைப்பெண் ஒருபால்**
**பிரியா திருக்கு மதுரேசர் நித்தர்**
**பிறைவேணி முத்தர் புகழைப்**
**புரியா திருக்கி னுயர்சிவன் முத்தி**
**புரமேவு தற்கெ ளியதோ**
**முரியாத கற்ப தருவாளி டத்தர்**
**முனிவோர் முதற்பி றருமே."**

என்பது மதுரைப் பதிற்றுப்பத்தந் தாதியில் ஒரு பாட்டு.

## உo. அநந்தகிருட்டிண கவிராயர்

இவர் முதலில் நமச்சிவாய தேசிகரிடம் பல நூல்களைப் பாடங் கேட்டார். பிறகு திருவாவடுதுறையை அடைந்து

பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பல நூல் களைப் பாடங் கேட்டார். ஆதீனத் தலைவராக இருந்த சுப்பிர மணிய தேசிகரிடம் தீட்சை பெற்றுக்கொண்டார். அப்பொழுது அம்பலவாணர் என்னும் தீட்சைப் பெயர் இவருக்குக் கொடுக்கப் பட்டது. மீனாட்சிசுந்தரம் பிள்ளை இவரைப் பாராட்டி,

> ''தம்பல மாகுந் திருவா வடுதுறை நண்ணிவளர்
> உம்பலர் போற்றும்பஞ் சாக்கர தேவன் உரைத்தபடி
> கம்பல வான்கண்ண னென்றே தினமுங் கரைவதினும்
> அம்பல வாண னெனும்பெய ரேதன் கமைந்ததுவே.''

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினர். பாபநாசம் என்னும் சிவப்பதியில் நடைபெறும் திருவிழாவில் ஒவ்வொரு நாளும் வாகனக் கவிபாடும் வழக்கத்தையும் இவர் மேற்கொண் டிருந்தார். இவர் பாபநாசம் நமச்சிவாயக் கவிராயருடைய வழி முறையினர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்விகற்றுச் சென்றபின் நல்ல நிலையில் சிறப்பாக வாழ்ந்திருந்தார்.

## உக. அநந்தநாத சுவாமிகள்

பாண்டிவள நாட்டில் குளத்தூரில் தோன்றியவர். நூல்களை நன்கு கற்றுச் சிறந்த புலவரான இவர் தென் திருப்பதியில் வாசஞ் செய்துகொண்டிருந்தார் வைணவ சமயத்தவராகையால் திருமால்மீது பெருமால் கொண்டு விளங்கினர். பரமதேசிகர் அந்தாதி, சீநிவாச சதகம், சீநிவாசமாலை, பரம தேசிகர் ஊசல் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவர்மீது சிறந்த பத்தி செய்து தொண்டராக விளங்கிய விருப்பாட்சி லிங்கையர் என்னும் வீர சைவர் பதிகம் முதலியன பாடியுள்ளார்.

> '' உலகெலாம் பணியும் பரவையில் துயிலும்
> ஒருவனை அன்பினால் அழைத்தே
> உண்மையாய் நிறுத்தி அவன்திரு வடியை
> உறுதியாய் அருச்சனை புரியும்
> சலசநேர் கரனே மதுரவா சகனே
> தண்ணிலாத் திங்களா னனனே
> சதுமறை புகழ்முந் நூலணி மார்ப
> தாரணி போற்றுறு பதனே
> அலகறு கல்விக் கெழில்பெறு மணியே
> ஐம்புல னடக்கியா தாரம்

ஆயினுந் தாண்டி ஒருதனி முதலாம்
அரியினை அறிந்தசற் குணனே
நலமிலேன் தனையாள் நான்மறை யாளர்
நனிபுகழ் தென்திருப் பதியோய்
நண்ணரு முத்திக் கரசனே அநந்த
நாதனே ஞானதே சிகனே ''

என்பது அப் பதிகத்தில் ஒரு பாட்டு. இவர் இயற்றிய நான்கு நூல்களும் வெகு காலத்திற்கு முன்னரே அச்சேறியுள்ளன.

## உஉ. அநந்தாச் சாரியார்
## (1896)

பாண்டிவள நாட்டில் ஆழ்வார் திருநகரியில் இருந்தவர். தேவராசபாரதியின் உடன் பிறந்தார்களில் இவர் ஒருவர். இவர் "சடகோபன் சந்திரகலாமாலை" என்னும் நூல் இயற்றியிருக்கிறார். நூலைப் பாராட்டி இவருடைய உடன் பிறந்தார், இலக்கண வித்துவான் சியர் கிருட்டிண ஐயங்கார், சினிவாசாச் சாரியார், போத்தி ஐயங்கார், தென் திருப்பேரை அநந்த கிருட்டிண ஐயங்கார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

''பாருக்குள் ளேமிகப் பாவியேன் ஆயினும்
பத்தர்போல் வேட முற்று
பகவதா நந்தத்தை யான்பெறக் கருதவே
பஞ்சேந்திரி யங்க ளெல்லாம்
கீரைகிழ்ப் புல்லுருவி போலப் படர்ந்ததைக்
கிஞ்சித்தும் எட்டா மலே
கெடுதலைப் பண்ணிடும் கொடியமா பாதகக்
கிளிமொழித் துவரி தம்மேல்
மாரியே சென்றபின் வனிதையர்கள் போகமே
வற்றாத சுகமென் னவே
வதுவையினை வேட்டின்னம் வாழ்வமென் றெண்ணுது
மலரடிக் காட்கொள் ளுவாய்
தேரோடு வீதியம ராதிநா தன்தனைத்
திருவடிகள் தொழுது வாழும்
திரைபொருவு பொருநையிரு கரைமருவு குருகைவரு
திருமருவு மகிழ்மா றனே.''

என்பது சந்திரகலா மாலையில் ஒரு பாட்டு.

## உ௩. அநந்தநாராயண சர்மா

கொங்குவள நாட்டில் வாழ்ந்திருந்தவர். கஞ்சகிரி சித்தேசர் சதகம் என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். நூல் பார்வைக்கு அகப்படவில்லை.

## உ௪. அநுகூல முனிவர்

இவருடைய காலம் இடம் முதலியன விளங்கவில்லை. இவர் பரமாநந்த திபம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார். கீழ்வருஞ் செய்யுளால் இவருடைய வரலாறு ஒரு சிறிது உணரப்படுகிறது.

> " சீர்பெருகுந் தீர்த்தபுரி நந்தி கேசன்
> திருக்கோயில் நதிக்கடுத்த கீழ்பா லாகப்
> பார்பெருகு மாதவத்தைப் புரிந்து மேவும்
> பரிவுடைய அநுகூல முனிவன் எங்கோன்
> ஏர்பெருகுந் தமிழ்ப்பரமா நந்த தீபம்
> என்றுரைத்த இந்நூலின் பயன் உணர்ந்தோர்
> பேர்பெருகும் அஞ்ஞானக் கடலை நீந்திப்
> பேசரிய மெய்ஞ்ஞானம் பெறுவர் தாமே "

> " அஞ்செழுத்தின் உருவாகி அறிவும் ஆகி
> ஆதிநடு ஈறுகி அநாதி யாகிச்
> செஞ்சடையிற் கொன்றைமலர் அணிந்தோன ஆகித்
> தேனுகிப் பாலாகிச் செகமே யாகி
> மஞ்சுலவுங் குழலுமையோர் பாக னுகி
> மகிழ்ச்சியுடன் எனையாண்ட குருவும் ஆகி
> வஞ்சமறத் தொழுமடியார் உளத்தின் மேவும்
> வள்ளல்தனைப் புகழ்ந்தேத்தி வணங்கு வாமே."

என்பது பரமாநந்த திபத்தின் முதல் பாட்டு.

## உ௫. அப்துல் காதிறு

இவருடைய ஊர் திண்டுக்கல் பக்கத்தில் உள்ள பேகம்பூர். இவர் சிறு அம்மானை என்னும் நூல் பாடியுள்ளார். இவ்வம்மானை உமறுப் புலவர் ஆக்கிய சிறுப் புராணத்தில் ஒரு காண்டமாகிய விலாதத்துக் காண்டத்தில் பாதை போந்த படலத்தை அடிப்படையாகக் கொண்டு பாடப் பெற்றது. இதன்கண் நபிநாயகம் மக்காவில் இருந்து மதினத்திற்குப் போகும் கரடுமுரடான

வழியில் ஓர் இரவு சோலையில் தங்கி மீண்டும் உதயத்தில் வழி யேக முயலுகையில் அபுசில் தடை சொல்லிப் பட்டபாடும், புலியைக் கண்டு கலங்கித் தரைமீது விழவும் அவ்வரி வேங்கை அவர் ஊர்ந்த ஒட்டகத்தைக் கௌவிச் சென்றதும் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. இது 1931-ஆம் ஆண்டில் அச் சிடப்பட்டுள்ளது மேலும் இவர் முகியித்தின் சதகம் என்னும் நூலும் பாடியுள்ளார்.

## ௨௬-௨௭. அப்துல் காதிறு புலவர்—ஆ-பி (1902)

பாண்டிவள நாட்டில் திருப்புத்தூர் என்னும் ஊரில் இருந் தவர். மகுமூது முத்து பாவாப் புலவர் என்பவரிடங் கல்வி கற்றுத் தெளிந்த புலமை அடைந்தார். கிழைக்கரை மு. க. அ. அப்துல் மசீது என்பவர் இயற்றிய ஆசாரக் கோவை என்னும் நூலுக்கு இவர் எட்டுச் செய்யுட்களால் சிறப்புப் பாயிரம் பாடி யுள்ளார்.

> "எழுத்தொடுசொற் பொருள்யாப்பும் அணியெனுமைந்
> இலக்கணமும் இலங்க வாய்மை
> பழுத்தொழுகும் இந்நூலின் தகைமையினைத்
> தெனப்பகரில் பாவல் லோர்கள்
> வழுத்தொருமை மனத்திருத்தி அழுக்காறற்
> றிடவூன்றி வாசிப் பாரேல்
> மழுத்தொகையும் அறிவாரவ் வறிவிடையில்
> பரஞ்சோதி முளைக்கும் அன்றே."

என்பது அச் சிறப்புப் பாயிரப் பாடல்களில் ஒன்று. இதனால் இவர் பல பாடல்களை இயற்றித் தேர்ந்தவர் என்பது நன்கு புலப் படுகின்றது.

## ௨௮. அப்துல்மசீது—மு. க. அ. (20—நூ.)

இவர் கிழைக்கரை என்னும் ஊரில் முகமது அப்துல்கரீம் மரைக்காயர் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். அவ்வூரில் இருந்த மு. கு. சுல்தான் முகியித்தின் என்னும் முகமதியப் புலவரிடங் கல்வி கற்றுச் சிறந்த புலவராகித் தாமே நூலியற்றுஞ்

சீரிய நிலையையும் அடைந்தார். ஆசாரக்கோவை, சங்கீர்த்தந மஞ்சரி முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். ஆசாரக் கோவை என்பது உலகியல் ஒழுகலாறுகளைப் பற்றிக் கூறுவது. மற்றையது வணக்க நூல். ஆசாரக்கோவை நூறு பாடல்களைக் கொண்டது. "மீதூண் விரும்பேல்" என்பது ஔவைப் பிராட்டியார் திருவாக்கு. மீதூண் விரும்பலால் விளையுங் கேட்டினை இவர்,

"அசனம் உண்டுவ யிற்றைநி ரப்பினால்
ஆதி யையவணங் கச்சடைப் புற்றிடும்
விசனம் மேவும் உறக்கம் மிகுத்திடும்
விளக்க மாகிய புத்தி குறைந்திடும்
பசன வாஞ்சையில் சித்தம் இழுத்திடும்
பங்க மாக உடம்பு கனத்திடும்
தசன ஒன்னலர்க் கேறுமு கம்மதுத்
தம்பி மாமரைக் காயச காயனே."

என்று பாடுகிறார் இந்நூலைப் பாராட்டி நாகூர் தர்கா மகா வித்துவான் வா. குலாம் காதிறு நாவலர், திரிசிரபுரம் இலக்கண உபாத்தியாயர் ஆ கா. பிச்சை யிபுறுகிம் புலவர், திருப்புத்தூர்- ஆ. பி. அப்துல் காதிறுப் புலவர், கொழும்பு உ. அ. அப்துல் கரீம், யாழ்ப்பாணம்-மு. சுலைமான் லெப்பை, கீழைக்கரை மு. கு. சுல்தான் முகியித்தீன், வேதாளையூர் செ. செ. முகமது செய்கு முகியித்தீன், தஞ்சை பா. நெயினு முகமது இராவுத்தர், கீழைக் கரை க. ம. மு. முகமது இபுறுகீம் சாகிபு, இலங்கை தெல் தோட்டம் அ. கா. காதிறு முகியித்தீன் புலவர், நாகூர் க. காதிறு முகியித்தீன் சாகிபு ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" .. ... ...... ...... ......
இரண்டுபத் தடுக்கி ஒன்றுகடை வைத்த
வழக்குறு மாக்கள் வன்மை கிழக்குற
நல்லிசைப் புலவர் பல்லோர் சொல்லிசைப்
பாடல்பெற் றுயர்ந்த பீடுசால் சிறப்பின்
சீதக் காதி மரைக்காயர் பாலமர்
சிறந்த மரபுவழிப் பிறந்தவன் புதுமலர்
அல்லியுட் கிடந்த தேறல் கொள்ளிய
வண்டுந் தேனுங் கிண்டுவழி எழூஉம்
விரைகெழு கீழக் கரையெனும் பதியினன்
பல்புகழ் படைத்த முகமதப் துல்கரீம்

என்பார் ஈன்ற பண்பார் மைந்தன்
குணநி வொழுக்கங் குணஞ் நலனொருங்
கேய்ந்துவச்த் தகத்துறை வாய்ந்த வித்தகன்
வண்டமிழ் இலக்கியம் இலக்கண முண்டமிழ்
துறழ்கவி பெய்யா நிற்குந் திறமுகில்
நீதுநிச் அப்துல் மஜீதென் பவனே
...... ...... ...... ......''

என்பது நாகூர்-வா. குலாம் காதிறு நாவலர் சிறப்புப் பாயிரத்தில் ஒரு பகுதி.

## உக. அப்பன் செட்டியார் - ரூ

இவர் சென்னைமா நகரில் சிறந்து விளங்கிய தமிழறிஞர் களில் ஒருவர். தொண்டைமண்டலம் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக விளங்கியிருந்தவர். இவரிடம் பலபேர் கல்விகற்றுச் சிறந்த தமிழறிஞர்களாகியுள்ளனர். இவர் பேரிச் செட்டியார் வகுப்பைச் சேர்ந்தவர். அருணசலப் புராண உரை முதலிய நூல்களை ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அட்டாவதானம் வீராச்சாமிச் செட்டியாருடைய மருகர் இவர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்குச் சேது புராணம் பற்றி எழுதிய ஆறு செய்யுட்கள் பலர்செய் கவியிற் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று:

'' பரிபுரச்செஞ் சீறடிமங் கையரிலனம்
பரிந்துலவும் பழன வேலி
விரிதருநற் புதுவைவரு சிவஞான
தேவர்புரி வினைநோன் பியாவும்
தெரிதரவோ ருருக்கொண்டா லன்னபொன்னுச்
சாமிவள்ளால் சிறந்த ஞானம்
தருதனுறு சேதுபுரா ணந்தனையித்
தமியேற்குந் தயைசெய் வாயே.''

இவர் 1904 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 25 ஆம் நாள் இவ் வுலக வாழ்வைத் துறந்தார்.

## ௩0. அப்பாச்சாமி அய்யர்

(19—நூ.)

வேலூரில் பாடசாலை ஒன்றில் ஆசிரியராக இருந்த இவர் தமிழறிவும் நிரம்பிப் புலமைபெற்று விளங்கினர். தமது பள்ளி மாணவர்கள் தஞ்சை மாவட்டப் பூகோளச் செய்திகளை மறந்து விடாமல் மனதில் பற்றிக் கொள்வதற்கு ஒரு வழியைக் கண்டு பிடித்தார். அவ்வழி பூகோளச் செய்திகளைச் செய்யுட்களாகப் பாடிப் போதிப்பது என்பதுதான். தஞ்சை மாவட்டப் பூகோளச் செய்திகளை நூற்றொரு பாடல்களாகப் பாடிப் போதித்தார். தம் பூகோளப் பாடல்கள் மறைந்துபோய்விடாமல் இருப்ப தற்காக அச்சிற் பதிப்பித்தும் வெளியிட்டார். அந்நூல் 1884 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது.

"மன்னார்குடி வடக்கி லெல்லை
மாகும்ப கோண மோடு
நன்னிலந் தானும் ஆகும்
நவிலுவேன் கிழக்கிற் கேளு
அன்னையே நாக பட்டணம்
அருந்திருத் தருப்பூண் டியும்
தென்னெல்லை பட்டுக் கோட்டை
திசைமேற்கில் தஞ்சா வூரே."

இப் பாட்டு மன்னார்குடித் தாலுக்காவுக்கு எல்லை கூறுகிறது. பாடல்களெல்லாம் இவ்வாறே எளியமுறையில் அமைந்துள்ளன.

## ௩க. அப்பாச்சாமி உபாத்தியாயர்

இவர் நடுநாட்டிலே பொய்கைப் பாக்கம் என்னும் ஊரினர். வளவனூர்க் குமாரபுரியில் வசித்திருந்தவர். செந்தமிழ்ப் புலமை யுடைய இவர் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர்கட்குக் கல்வி போதித்துக்கொண்டிருந்தார். தண்டபாணியடிகள் இயற் றிய திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு இவர்,

"கந்தவே ளாவலது கலைமகளோ
அருணகிரிக் கவிவல் லோனோ
சந்தவேய் வனத்திலுயர் தமிழ்க்கரசாய்
வருமுருக தாசப் பேரோ

டெந்தவே ளையுமடியார் பதத்துகள்கொண்
டாமரதைக் கிறைவன் சீர்த்தி
முந்தவே யிருந்தவட மொழியதனைத்
தென்மொழியான் மொழிந்த தன்றே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௩உ. அப்பாச்சாமி முதலியார் - அ (1850)

இவர் தொண்டைவள நாட்டில் தோன்றியவர். பேறை என்னும் ஊரில் வேதாந்த சித்தாந்த நூல்களினும் இலக்கண இலக்கிய நூல்களினுஞ் சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளை என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலமை பெற்றார். நாகப்பட்டினத்தில் இருந்த ஐயாத்துரைஞானியார் என்பவர் இயற்றிய ,நீல்லைச்சிவகாமசுந்தரி சதகம், நடராசர் சதகம் என்னும் நூல்களுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

" திடநாக மட்டபிரான் திருவடிக்கன்
பாய்நாளும் செவ்வி தாகப்
படஞக மணிபொன்னம் பலவனடிக்
கினியதமிழ்ப் பைந்தார் சேர்த்தான்
மடநாரை சங்குமிகு மணியைத்தன்
சினையெனவே அடைகாக் கின்ற
கடஞகை மேட்டுறையை யாத்துரைஞா
னியின்பெருமை கழற லாமோ ?"

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று.

## ௩௩. அப்பாத்துரை அய்யர் - மு (20—நூ.)

இவர் நடுநாட்டில் சோலை வீரசைவ சிவயோக சுவாமிகளின் மடாலயத்தில் மேற்படி சுவாமிகட்கு அடிமைபூண்டு ஒழுகியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமைபெற்ற இவர் கூடலூர் தாலுகா புதுப்பேட்டைக் கழக ஆண்பாடசாலையில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். இவர் வீரசைவ சிவயோக சுவாமிகள் வரலாறு என்னும் நூலை இயற்றியுள்ளார். அந் நூலுக்குச் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,

" உலகில்வரு பெரியவர்தஞ் சரிதமுணர்ந்
தெவர்களுமே உறுதி யோர்ந்து
கலைகவினை தனில்நீங்கிச் சிவஞான
மேமுதல கருலப் பெற்று
நிலவுசுகம் அடைவதுவே முறையென்ன
நூல்பலவும் நிகழ்த்து மாற்றை
மலமகன்ற திருமுஅப்பா துரைப்பெயர்கொள்
அன்பன்நன்கு மனத்தில் தேர்ந்து."

என்பதை முதலாக்கொண்டு சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள்.

## ௩௪. அப்பாவுக் கவிராயர் - பா
(20—நூ.)

சின்னையாபுரம் என்னும் ஊரில் பால்வண்ணங் கரையாளர் என்பவரின் திருமகனாகத் தோன்றியவர். பேரையூர்ப் பெருநிலக் கிழார் முத்துவிசய ரெகுநாத கொடுமுடித் தும்பையசாமி தும்பிச்சி நாயக்கரிடம் தமிழ்கற்றுத் தேறிச், சேற்றூர் சமஸ்தானப் புலவராக இருந்தவர். திருமலைச் சிங்காரமாலை என்னும் நூலுக்கு இவர் பாடிய பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" பண்டே அமுதுகடை பட்ட தெனவறிந்தும்
உண்டேன் இனியஃ துணேனென்றான்—மிண்டு
சுகஞ்சார வாழ்வால சுப்ரமண்யன் பாட்ட
திகஞ்சார மென்றிந் திரன்."

## ௩௫. அப்பாவுப் பிள்ளை - தி. மா
(கி. பி. 19—நூ.)

இவர் வடார்க்காடு மாவட்டத்தில் தோன்றிக் கல்வி கற்றுப் புலவராக விளங்கியிருந்தவர். சிவராமதேசிக அடிகள் என்னும் பெரியாரிடம் கல்வி கற்றவர் என்பர். பெங்களூர் செயின்ட் சோசப் கல்லூரி, கருவூர் உயர்நிலைப் பள்ளி ஆகியவைகளில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். இவர் கேதாரீசுர புராணத்திற்குப் பத்துப்பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" பூமேவு மூவேழா டோரிரண்டாம்
இலக்கணத்திற் பொங்கும் அன்பர்
தாமேவு மறைக்கோச மந்திரத்தால்
ஐம்பூசை சமைத்துப் போற்றத்

> னுமேவச் சிரவணிப்போர் முத்தியுற
> நேரற்குமவர் துறக்கந் துய்ப்பத்
> தேமேவுஞ் சிகேதா ரிச்சுரபு
> ராணமெனத் தெரிந்திட் டானும்.''

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௩௬. அப்பாவுப் பிள்ளை - திரு

இவர் திருமலைவாயல் என்னும் ஊரினர். சரவணமூர்த்தி சுவாமிகள் என்பவரின் மாணவராகி இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றார். அரிச்சந்திரனுடைய காதையை நாடகமாக இயற்றியுள்ளார். இவருடைய நாடகத்திற்குப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

> '' பார்புகழுங் கவியாண புரியதனி லோங்கிவளர்
> பண்புள விநோத சபையார்
> பட்சமுட னென்னையே கோரினு ரானதால்
> பரிதிகுல திலக ஞன
> சீர்பெறும யோத்திநகர் ஆண்டதிரி சங்கின்ற
> செல்வனற் சரிதை யதனைச்
> செப்பரு விலாசமாய்ப் பாடவே சிங்கார
> சேவலங் கொடிவே லவன்
> பேர்தனைத் தொழுதுமே என்னுளியன் றதைப்
> பேணுகம லாட்சி யருளால்
> பேசினேன் இசையதனைப் பிசகா இருக்கினும்
> பெரியோர்கள் கனிவு கூர்ந்தே
> சார்புறு மிலக்கண இலக்கியமு மறியாத
> தனையனைச் சிட னாகத்
> தாங்கிப் பெருங்கருணை புரிவீர்க ளெனவுங்கள்
> தாளடி பணிந்தன னரோ.''

என்பது அவையடக்கம்.

## ௩௭. அப்பாவுப் புலவர்

சோழவள நாட்டிலே திரிசிரபுரத்திலே வேளாளர் மரபிலே அப்பாவுப் புலவர் தோன்றினர். தந்தையார் பெயர் மாரிமுத்துப் பிள்ளை. அப்பாவுப் புலவர் இலக்கண இலக்கிய நூல்களையும்

ஆங்கில மொழியையும் வடமொழியையும் கற்ருர். தமிழிலே சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்தார். சிவராம தேசிகர் என்னும் பெரியாரை ஆசிரியராகக் கொண்டு அறிவு நூல்களையுங் கற்ருர். சைவச் சொற்பொழிவுகள் செய்வதினுஞ் சிறப்புற்று விளங்கினர். கோயிலூர் முத்துராமலிங்க ஞானதேசிகர்மீது நெஞ்சறிவுறுத்தல் என்னும் நூலை இவர் இயற்றினர்.

"ஆரணப் பொருளா யங்கங் கமர்ந்தொளிர் படிவந் தோறும்
காரண உருவாய்த் தோன் றிக் காட்சிதந் தருள நாளும்
தாரணி புகழுங் கோயி லூர்தனில் சதுரா யோங்கும்
பூரணன் முத்தி ராமன் பொன்னடி போற்று நெஞ்சே."

என்பது அந் நூலின் முதற் பாட்டு. இந்நூல் நூறு பாடல்களைக் கொண்டது. திருவிடைமருதூர் மகாவித்துவான் கோவிந்தசாமிப்பிள்ளை, கோயின்மாநகர் திருச்சிற்றம்பலம் பிள்ளை, கானாடு காத்தான், மு. இராமசாமிச் செட்டியார், சிதம்பரம் நா. சிவராமச் செட்டியார், சிந்தாதிரிப்பேட்டை - சிதம்பர முதலியார், அரன் வாயில் தங்கவேலுப் பிள்ளை, சேலம் சரவணப் பிள்ளை, பூவை அட்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், கோயமுத்தூர் - ரா. சபாபதிப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சிவராம லிங்க தேசிகன் தன்பால்
தவரு அனுபவத் தரிசனங் கண்டான்
திரிபுரஞ் செற்ற செல்வன் மலைநீள்
திரிசிரபுரத்தில் தேர்ந்து வாழ்வான்
கல்விகுண ஞானங் கருணை யுடையான்
நல்லவர் நாடு நண்பு மிக்கான்
தெய்வ உபாசனை தேறித் தெளிந்தான்
சைவந் தழைக்கத் தான்பிர சங்கம்
எங்கும் நடாத்தும் எழிலை வாய்ந்தான்
அங்கி லேய அரச பாடையும்
பாணினி தன்னுல் பரவச் செய்த
வாணிய வடமொழி யாவையுங் கற்ருேன்
செப்புபா வலர்கள் திலக னுகும்
அப்பாவுப் புலவன் அறிஞ ரேறே."

என்பது அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் இயற்றிய சிறப்புப்பாயிரத்தின் இறுதிப் பகுதியாகும்.

## ௩௮. அப்பாவையர் - க
(20—நூ.)

இவர் தென்னார்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டி என்னும் ஊரில் இருந்தவர். திருநாவுக்கரசரிடத்தில் பேரன்புகொண்டிருந்தபடியால் இவருடைய பெயர் வாகீச பக்த நாவலர் எனவும் வழங்கியது. திருக்கைலாச பரம்பரைப் பொம்மபுர ஆதீனப் புலவராக விளங்கிய நமச்சிவாய நாவலர் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலவரானார். இவரால் இயற்றப் பெற்ற நூல்களில் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள்மீது பாடப்பெற்ற பிள்ளைத் தமிழும் ஒன்று. இப் பிள்ளைத் தமிழை அடிகளாரின் வரலாற்றுக் குறிப்புக்களை நிறைத்துப் பாடியுள்ளார். முத்தப்பருவத்துச் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

"நித்தர் திருக்காட் டுப்பள்ளி
நெடுவீ தியினில் உப்புவிற்று
நேரும் ஒருநங் கையைக்கண்டு
நிறைய உளதோ எனுந்தொடரில்
அத்த அமைதி சொல்லமைதி
அமைந்த தொரு நேரிசைவெண்பா
அருளித் திருநோக் களித்தனுமே
அனலிற் பட்ட மெழுகெனவே
சித்தம் உருகித் தென்னோங்கு
நிலையை எனும்நல் தொடர்வெண்பா
செப்பி இறைஞ்ச அருள் புரிந்து
திகழ்மெய்த் துறவிற் செழித்துவளர்
முத்தர் பரவ முதன்மைபெறு
முனிவா முத்தந் தருகவே
மும்மைப் பொருளின் இயல்விளக்கும்
முதல்வா முத்தந் தருகவே."

மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் புட்பாசல புராணம், திருநாவுக்கரசு சுவாமிகள் பிள்ளைத் தமிழ், திருநாவுக்கரசு சுவாமிகள் இரட்டைமணிமாலை, திருவதிகைப் புராணம், தாண்டவமாலை முதலியன. திருவதிகைப் புராணம் இருபதுக்கு மேற்பட்ட படலங்களையும் 1037 செய்யுட்களையும் கொண்டு விளங்குகிறது. இப் புராணத்தைப் பாராட்டித் திருவாவடுதுறையாதீனம் சுப்பிரமணியத் தம்பிரான், நெய்புக்கோயில் சு. சோம

சுந்தர ஐயர், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, பூவை அட்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், பறங்கிப்பேட்டை முத்துத் தாண்டவராய பிள்ளை, பு. செ. கனகசபை ஐயர், புதுப்பேட்டை மு. அப்பாத்துரை ஐயர், கூடலூர் துரைசாமி தேசிகர், தி. அ. குப்புச்சாமிப் பத்தர், பண்ணுருட்டி நல்லதம்பிச் செட்டியார் க. ச. துரைசாமி முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவருடைய தந்தையார் பெயர் மணி ஐயர். அப்பாவையர் காலக்கணிதத்திலும் சிறந்த புலமையுடையவர். செல்விக்குப்பத்திலே வாழ்ந்திருந்த தாண்டவராயன் என்னுஞ் செல்வன் ஒருவன் இவருக்கு நண்பனாகவும் நன்கொடை வழங்குபவனாகவும் அமைந்திருந்தான். அவனுடைய பெருமையைப் பாராட்டுதற்கு இவர் தாமியற்றிய காலக்கணித நூலுக்குத் தாண்டவமாலை என்று பெயர் சூட்டினார். இந்நூல் அறுபத்தொரு பாடல்களால் ஆகியது. காலக்கணிதர்கட்கு மிகுந்த பயனுடையது.

> "ஒருவன் புகர்பொன்லான் ஒண்சேய் இரவி
> மருவுநல யோகரெனமன்று—திருவுடையோர்
> பார்க்கவனும் புந்தியென்று பாம்பே ரகலல்குல்
> சிக்கமலைச் சேயிழையாய் செப்பு."

என்பது தனுவிராசிப் பலன் கூறும் பாடல்.

## ௩௯. அப்பிள்ளையார்

வைணவர். ஆழ்வார்கள் வாழித் திருநாமம், திருவந்தாதியுரை, திருவிருத்த உரை, ஆகியவைகளை இயற்றியவர். பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர்.

## ௪௦. அப்புக்குட்டி ஐயர்

சோழவள நாட்டிலே நல்லூரிலே பிறந்தவர். தந்தையார் பெயர் சிவாகன ஐயர். தென்மொழியிலும் வடமொழியிலும் வல்லவர். வினையாற்றல் மிக்கவரெனப் பலராலும் பாராட்டப்பட்டவர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், குது புராணம், நல்லூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத் தமிழ் முதலியன.

## சக. அப்புவையங்கார்—ரெ
(20—நூ.)

இவர் பாண்டிவள நாட்டில், மின்னூர் தடமதில் சூழ் வில்லி புத்தூரில் ரெகுநாத ஐயங்கார் என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றியவர். இவருடைய குலம் வைணவ அந்தணர் குலம். வடமொழியையுந் தென்மொழியையும் நன்கு கற்றுத் தேறிச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். சீவில்லிபுத்தூரில் உள்ள இந்து உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்து உறுப்பினர்களுள் ஒருவராக இருந்தவர். சேற்றூர்ச் சமத்தானப் புலவராகவும் விளங்கினர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், 'சூடிக் கொடுத்த நாச்சியார் தோத்திரப்பாமாலை, திருவேங்கடமுடையான் பதிற்றுப்பத் தந்தாதி, வானமாமலைப் பஞ்சரத்தினம், தென்புதுவை மணிவண்ணன் உலா, வரமங்கைக் கலம்பகம் முதலியன. இவருக்கு நரசிம்மாசாரியர் என்னும் மறுபெயரும் வழங்கியதோடு 'கவிபூடணம்' என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கியது.

"அமிர்தமே தேனே ஆவினின் பாலே
அருமையாங் கண்டசர்க் கரையே
தமிழினின் சுவையே கனிந்தமுக் கனியே
சாற்றருங் கன்னலின் சாறே
விமிதமே விளைக்கும் வீணையின் இசையே
வேணுவின் நாதமே உனையான்
திமிலமஞ் சாரும் வேங்கட மலைமேல்
சேவித்தேன் சேதித்தேன் வினையே.''

என்பது இவரால் இயற்றப்பட்ட திருவேங்கடமுடையான் பதிற்றுப்பத் தந்தாதியில் ஒரு பாட்டு. இவருடைய வரலாறு திரு நாராயண ஐயங்கார் பாடியுள்ள சிறப்புப் பாயிரம் ஒன்றில் காணப்படுதலை அடியிற் காண்க.

" ...... ...... ......
மல்லிநாட் டினிலவிர் வில்லிபுத் தூரினில்
வந்தவ தரித்த அந்தணர் திலகன்
அணிமிகு புகழ்க்கௌண் டினியகோத் திரத்தான்
உலகினில் உயர்வுற் றிலகிடும் வைணவன்
அருங்கலை அனைத்தும் ஒருங்குணர்ந் துரைப்போன்

இரநாதாரியன் உரையநன் புதல்வன்
பொன்னிநன் னாட்டிடை மன்னிய கோயில்
கந்தாடை யண்ணன் செந்தா மரைபுரை
இணையடி நிழலே துணையென அடைந்தோன்
வடமொழி தென்மொழி இடமுறப் பயின்றுசேர்
செயற்கை யறிவோ டியற்கை யறிவும்
நுண்ணிய வறிவும் இசைந்த உளத்தினன்
ஏற்ற முறைப்படி நாற்கவி நவில்வோன்
வில்லிபுத் தூரினில் நல்லிசை மேவிய
இந்துறங் கவினில் செந்தமிழ்த் தலைமை
உபாத்தி யாயன் உயர்மது ரைத்தமிழ்ச்
சங்கத் தினரும் அங்கத் தினருள்
ஒருவன் சேற்றூர் மருவுமாஸ் தான
பண்டிதன் பண்டை நூல் கண்டித முரைப்போன்
மதுவைப் பெய்தெனப் புதுமைப் புராணமும்
இதன்முதல் நூற்றுச் சிதைவறு தமிழால்
பொழிப்புரை யும்மதன் பழிப்பறு சுருக்கமும்
மீதாந் தலைமைசேர் வேதாந்த தேசிகன்
ஓதா னருளிய கோதாத் துதியின்
நற்பொருள் உணர்ந்து பொற்புறச் சேர
அத்துவை தாதும் தத்துவார்த்த தீபிகை
என்றுசொ லுரையும் மன்னுமத் துதிக்கு
மொழிபெயர்ப் பெனச்சொலும் வழிநூ லாகிய
தோத்திர மாலையும் ஏத்ததன் உரையும்
ஒருதுறைக் கோவையும் மருவதன் குறிப்பும்
சித்திர கூடத் தந்திர முறுஞ்சீர்க்
குருமணி குயிற்றிய திருமணி மன்றெனும்
பேரம் பலத்தில் வீரம் பழையர்
எழுதலை யரசின் முழுதுலை களிப்பான்
அறிவமைந் தநன் பொறிவாழ் மார்பன்
மாவிந்தை தோய்ப்புயன் கோவிந்த ராசன்
கலம்பக மாலையும் பொலம்பணைப் புதுவைச்
சிலேடைவெண் பாவும் செசோலையந் தாதியும்
பதிற்றுப் பத்தெனத் துதிக்குமந் தாதியும்
செஞ்சொற் பொலியும் பஞ்சரத் தினங்களும்
அதிசுகம் பிரமாம் பதிகம் பலவும்
முதலாம் பலநூல் இதமா உரைத்தோன்
உளமுறும் பொறையில் வளமலி கொடையில்
ஒப்புமை யங்கா ரொன்றும்
அப்புமை யங்கார் ஆளரி யேறே.”

## ௪௨. அமிர்த கவிராயர்-பாலூர்

இவர் கோகுல சதகம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார். இந்நூல் ஆயர்குலத்தினரை மிக உயர்த்திக் கூறுகின்றது.

"பழையானை யெட்டக் கரத்தானைத் தன்பதம் பற்றினருக்
கிழையானை யானைமுன் னேயெதிர் வானை யெழிற்கருணை
மழையானை ரோகணிப் பாலுந்த் தானை மகிழ்ந்தவொரு
குழையானை யேந்தி வளர்த்தோர்கள் பாடியிற் கோகுலமே."

என்பது சதகத்தில் மூன்றாவது பாட்டு.

## ௪௩. அமிர்தலிங்க சோதிடர்
(20—நூ.)

இவர் சென்னைக்கு வடக்கேயுள்ள பொன்னேரி என்னும் ஊரில் இருந்தவர். தமிழிற் சிறந்த புலமை பெற்றிருந்ததோடு காலக் கணிதத்திலும் வல்லவராக விளங்கினார். இவர், 'சர்வ சித்தி கணநாதர் பஞ்சரத்தினம், சென்னைச் சாலைவிநாயகர் தோத்திரப் பாமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவை கட்குத் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் சிறப்புப் பாயிரம் பாடியிருக்கின்றனர்

"பூங்கடம்பப் புத்தேளுந் துளவத் தேவும்
பொற்கொன்றைத் தேவனுநந் தார்கள் சேரும்
பாங்குடைய வதுசோரா நாற்சொற் பூவால்
பரவியது நமக்கின்றே என்றுள் வெள்கி
ஓங்கலுறுங் குசைநுழையக் கமட மாகி
உவரிபுகப் பாரினொரு மூலை சார
வாங்குபுகழ்ச் சாலைவிநா யகன்றோட் கோர்பா
மாலைபுனைந் தானமிர்த லிங்க மாலே."

என்பது சாலைவிநாயகர் தோத்திரப் பாமாலையின் சிறப்புப் பாயிரம்.

## ௪௪. அமிர்தலிங்கத் தம்பிரான்

இவர் திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலை ஆதீனத்தில் இருந்தவர். திருமயிலைத் தலபுராணம் என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

"கங்கையா நதிமுன் னாகக்
கண்டதீர்த் தங்க ளெல்லாம்
இங்ஙனம் வருக என்றே
இமையமான் உள்ளம் உன்னச்
சங்கையில் சத்தி நோக்கு
முன்னரே நாட்சார்ந்தம்போற்
பொங்குதீர்த் தங்க ளெல்லாம்
புகுந்தகா பாலி தீர்த்தம்."

என்பது பார்வதியார் அருச்சனைச் சருக்கத்தில் ஒரு செய்யுள். இந்நூல் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரால் உரையெழுதப்பட்டு வெளிவந்துள்ளது

## சரு அமிர்தலிங்கம் பிள்ளை—சி. தா.
(20—நூ.)

இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் சென்னைமாநகரில் இருந்தவர். யாழ்ப்பாணத்து நல்லூர் சிற். கைலாசபிள்ளை, க. வ. திருவேங்கட நாயுடு முதலியோர் இவர்க்கு நண்பர்கள். ஒருநாள் நண்பர்கள் வட திருமுல்லைவாயில் என்னுஞ் சிவப்பதிக்கு இறைவழிபாட்டிற்குச் சென்றார்கள். இறைவன்மீது ஏதேனும் ஒரு நூலியற்ற வேண்டும் என்னும் எண்ணம் இவர்கட்குண்டாயிற்று. மும்மணிக் கோவை என்னும் நூல்பாடுவதென்றும், கைலாசபிள்ளை ஆசிரியப் பாவையும் இவர் வெண்பாவையும் க. வ. திருவேங்கட நாயுடு கட்டளைக் கலித்துறையையும் இயற்றுவதென்றும் முடிவு செய்துகொண்டு சிறிதுநேரத்திற்குள் பாடி முடித்தார்கள்.

'ஒன்றுநமை எங்கள் கறைக்கண்டா நின்னருளை
என்றுதோறு மென்றுதோறும் இன்புறுமே—புன்னுடலால்
வந்தவினை யென்செய்யும் மாமுல்லை வாயிலுறை
வெந்தவினை என்செய்யு மின்று."

என்பது இவர் பாடிய வெண்பாக்களில் ஒன்று.

## சசு. அமுதகவி
(20—நூ.)

இவர் செய்யுள் பாடுந் திறமுடையவர். திங்கள் வெளியீடுகளில் பல பாடல்களை இயற்றியுள்ளார். இவர் வாழ்ந்திருந்த

இடம் முதலிய பிற செய்திகள் புலனாகவில்லை. இவருடைய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

> " பூமண் டலத்தில் உடன்பிறந்து
> பொருளும் புகழும் பொலிந்தொளிர
> தாரும் மகிழ்ந்து மற்றவரும்
> தம்மை மதிக்க நல்லவராம்
> நாமஞ் சிறந்து நலங்கள்பல
> நாளும் பெருகி நாடறியச்
> சேமங் குலவித் திகழ்மாந்தர்
> சிலரோ செகத்தில் பலப்பலரே."

## ௪எ. அம்பலவாண அடிகள்

இவர் பூங்கோடு என்னும் ஊரினர். திருக்கோவலூர் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் கல்வி கற்றுத் தேறியவர். இவர் 'வேதாந்தசாரத் திரட்டு' என்னும் நூல் இயற்றியுள்ளார்.

## ௪அ. அம்பலவாணத் தம்பிரான்

இவர் திருவாவடுதுறை யாதீனத்தையோ தருமபுரவாதீனத்தையோ சேர்ந்தவராதல் வேண்டும். இலக்கண விளக்கம் வைத்தியநாத நாவலரின் புதல்வராகிய சதாசிவ நாவலர் ஒரு பேரவையில் நிகழ்த்திய சொற்பொழிவைக் கேட்டு வியந்த இவர்,

> " வன்மீக நாதன் வரத்தால் அவதரித்த
> வன்மீக நாதன் மரபினோன் —வன்மீகர்
> தாமோர் தமிழுருவாய்ச் சார்ந்த சதாசிவனை
> யாமோ புகழவல்லே மீண்டு."

என்று பாராட்டிப் பாடியுள்ளார் இதனால் இவர் இலக்கண இலக்கியங்கற்ற சிறந்த புலவர் என்பது தெளியப்படும்.

## ௪௯. அம்பலவாணன் கவிராசர்
(1867)

இவர் திருநெல்வேலியில் இருந்த முத்துக்குமாரசாமிக்கவிராசர் என்பவருடைய புதல்வர்களில் மூத்தவர். தந்தையாரிடமே

கல்வி கற்றவர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர் மீது பல செய்யுட்கள் பாடியுள்ளார். அவைகளுள்,

"தென்னுசா மித்துரைவேள் நேமமேவ
னவரன்பால் சேர்ந்தோர்க் கண்ணூர்
மின்னுசா மித்திதனை மெய்யுற்று
மேவினானை மேனி தன்னைப்
பன்னுசா மிப்பதத்தை யன்றிமற்றைப்
பரத்தேவரைப் பணியாச் சென்னிப்
பொன்னுசா மிப்ரபலன் புதுவைநகர்
ஆண்டருள்பூ பதிபாற் புக்கே."

என்பது ஒன்றாகும்.

## ௩௦. அம்பிகாபதி

இவர் கம்பருடைய மகன். தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த புகழுடைந்து விளங்கினார். சோழ மன்னனுடைய மகளுக்கும் இவருக்கும் ஏற்பட்ட காதலால் இவர் வெட்டுண் டிறந்தாராகத் தெரிவிக்கும் வரலாறுகள் உள. 'அம்பிகாபதிக் கோவை' என்னும் பெயருடைய கோவை ஒன்று அச்சாகி வெளி வந்துலவுகிறது. அக் கோவை இவர் பாடியதெனச் சிலரும், இவர் பாடியது அன்று என்று சிலரும் கூறுகின்றனர்.

இவருக்கு மகன் ஒருவர் இருந்தாரெனவும் அவர் அணி இலக்கண நூல் ஒன்று இயற்றினாரெனவும் அந்நூலே தண்டி யலங்காரமெனவுஞ் சிலர் கூறுகின்றனர்.

"பூவின் தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே."

என்னும் பாட்டும் இதனை உறுதிப்படுத்துகின்றது. அம்பிகாபதி தம் தந்தையாருடைய இராமாயணத்திற்கு,

"சம்ப நான்தன் உரைசெவி சாற்றுபூங்
கொம்ப னான்தன் கொழுநன் இராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதைப் பாச்செய்த
கம்ப நாடன் கழல்தலை யிற்கொள்வாம்."

என்று சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளார். கடவுள் சார்பாக இவர் பாடியதாகக் கூறப்படும் நூறு பாடல்களடங்கிய நூல் யாதெனப் புலனாகவில்லை.

"சற்றே பருத்த தனமே குலுங்கத் தரளவடம்
துற்றே யசையக் குழையூச லாடத் துவர்கொள் செவ்வாய்
நற்றே னொழுக நடனசிங் கார நடையழகின்
பொற்றேர் இருக்கத் தலையலங் காரம் புறப்பட்டதே."

என்னும் இறுதிப் பாடலே இவர் உயிரிழப்பதற்குக் காரணமாக விருந்தது.

"மெய்வாய்கண் மூக்குச் செவியெனு நாமங்கள் மேவப்பெற்ற
ஐவா யிலுநின தருந்தின ரோஅருந் தானவர்முன்
உய்வான் மலைகொண் டொலிநீர் கடைந்தவன் றும்பரென்போர்
மைவார் குழலியென போதுநின் போது மருந்தினையே."

என்பது அம்பிகாபதிக் கோவையின் கலவி மகிழ்தல்.

## ௫௧. அம்பிகாபதி சுப்பையர்

கொங்குவள நாட்டில் பூந்துறையில் இவர் இருந்தார். கரூர் தாலுகா முன்னூர் மரகதேசுவரர், மரகதம்மை, வேலாயுத சுவாமி, தெய்வயானை யம்மை, வள்ளியம்மை முதலான தெய்வங் களின்மீது அம்மானை அட்டகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார். இவர் இயற்றிய தனிப்பாடல்களில் ஒன்று ;

"அம்பு லியிற் கம்பர்க் கடிமையெனச் சொன்ன சின்னத்
தம்பிபணி செம்பொற் சரணனே—அம்மைக்கோர்
சுத்தண்ட மேலாகத் தோய்ந்த மரகதக்குன்
றுத்தண்ட வேலா யுதா."

என்பது. (அம்பிகாபதி என்னும் பெயர் கொண்டவர்கள் பாண்டி நாட்டில் வேம்பத்தூரிற் சிலர் இருந்தனர். அவர்களில் ஒருவர் இங்கு வந்து தங்கியிருக்கலாம்.)

## ௫௨. அம்மைச்சி

இவள் காஞ்சிபுரத்தில் இருந்த ஒரு தாசி. கல்வி கேள்வி களில் வல்லவள். செய்யுள் பாடுந் திறம் அமையப் பெற்றவள். அந்தகக் கவி வீரராகவ முதலியாரிடத்திலே பேரன்புடையவள்.

திருவாய் மலர்ந்தருளிய வைத்திய நூல்கள் பலவற்றைப் பரிசோதித்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அவைகளுள் பாலவாகடமென்னும் சிமிட்டு ரத்தினச் சுருக்க நூலும் ஒன்று. அது முந்நூற்றறுபது பாடல்களையுடையது.

"கொள்ளவே கணபாண்டு கணசுரங்கள்
கொடிதான அஸ்திவெட்டை இருமல்ரத்தம்
கொள்ளவே பறநதோடும் எண்ணெய்மார்க்கம்
குறிசொல்வேன் சிறுபிள்ளை கழிச்சல்தோஷம்
கொள்ளவே உப்பிலியின் பூண்டுவாங்கிக்
குளமாக நறுக்கிஆவின் நெய்யுஞ் சேர்த்துக்
கொள்ளவே ரவிகாய சாமம்தானு
குருவருளால பிள்ளைதனக் கிந்தி டாயே."

என்பது குழந்தைகளின் கழிச்சலுக்கு நெய் சொல்லுகிறது.

## ௫௫. அய்யாக்கண்ணு ஓதுவா மூர்த்தி
(20—நூ.)

இவர் சிதம்பரத்தில் இருந்தவர். செந்தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிவகதாப்பிரசங்கஞ் செய்வதினும் செய்யுள்கள் இயற்றுவதினுஞ் சிறந்து விளங்கினர். கவிராச நாயகம்பிள்ளை என்பவர் இயற்றிய சாயாவனத் தலபுராணத்திற்கு,

"உனத்தமதா ளடியவர்கட் கருண்முக்கட்
பெருமானுர் உறையுஞ் சாயா
வனத்தருமான் மியமதனைக் கவிராச
நாயகப்பேர் வள்ளல் செந்தேன்
எனத்திகழ்தீந் தமிழ்ப்பாவால் இயற்றினன்முன்
அதனையச்சில் இயற்றி மிக்கோர்
மனத்தெழுஞ்சீர்ப் பெருந்தோட்டத் துறைதுரைசா
மிப்புலவன் வழங்கி னுன் "

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௫௬. அய்யாத்துரைப்பிள்ளை
(20—நூ.)

இராமநாதபுரம் மாவட்டத்தில் விளங்குளத்தூர் என்னும் ஊரில் தோன்றிக் கல்வி கற்றுச் சிறப்புற்று விளங்கியவர். இவர்

வெயிலேறு மெயிலேறு மாத்துறையில்
மெய்யடியார் மிகவே வாழ்த்த
மயிலேறும் பெருமானை அயிலேந்துங்
கோமானை வணங்கி வாழ்வாம்.''

என்பது புராணத்தில் சுப்பிரமணியக் கடவுள் வணக்கம்.

## ௰௮. அரங்கசாமி ஐயங்கார் - (அட்டாவதானம்)
(20—நூ.)

தஞ்சை மாவட்டத்தில் உள்ள வடுவூர் என்னும் ஊரில் சிறந்த தமிழறிஞராக விளங்கி யிருந்த இவர் அட்டாவதானஞ் செய்யுந் திறமும் பெற்று விளங்கினர். இதனால் இவருடைய பெயருக்கு முன்னால் அட்டாவதானம் என்னுஞ் சிறப்புச் சொல்லும் இயைந்து நின்றது. அந்நாளில் அரித்துவாரமங்கலம் என்னும் ஊரில் கோபாலசாமி ரகுநாத ராசாளியார் என்னுஞ் செல்வர் ஒருவர் கொடையாலும் நடையாலும் சிறப்புற்று விளங்கினர். அவர்மீது இவர் இயற்றிய செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

'' திருவளர் சகாத்தமோ ராயிரத் தெழு நூறு
சேர்ந்ததொண் ணூற்றிரண்டு
திகழ்கலியி னுலா யிரத்துத்தொ ளாயிரம்
செப்புமெழு பத்தொன்றினில்
திசைபுகழ்பி ரமோதூத வாண்டுவிர்ச் சிகமதி
யினிலதேதி பதினேழினில்
திதிநவமி நாழிகையொர் முப்பத்தெண் முக்கால்
சிறந்தமுற் பக்கமோது
பகுவில்குரு வாரநாள் பன்னுபூ ரட்டாதி
பகிருபத் தொன்பநரைமேற்
பயினுத்தி ரட்டாதி யறுபத்து மூன்றுபரி
நாமமிரு பத்தேழரை
பாலவா கரணமோ ரெட்டரையி னிரவினில்
பங்கிலிரு பத்தேழின்மேல்
பரவமிர்த கடிகையுத யாதியைம் பத்தைந்து
பரசுநா லரையின்வீசம்
கருவதில் விருச்சிகத் தோரையில் கேட்டைநாள்
கருதொன்றி னிற்சூரியன்
கனவுத்தி ரட்டாதி யோரிரண் டிற்றிங்கள்
காண்பூர நாலிற்குசன்

> "திருக்குரு வான ஆன்ம
> சிவத்திடைச் சிவச் சித்தின்
> செருக்குடன் பாடாய்த் தோன்றும்
> திரிசிய சாலம் பற்றித்
> திருக்குநோக் கடைந்தாற் சித்தம்
> சிவ முந் திரிசி யத்தில்
> தருக்குஞா னந்த நோக்கும்
> தருங்குரு சரணம் போற்றி."

இப் பாடல் இவர் பிரமரசாநுபூதியிற் செய்துள்ள காப்புப் பாடல்களில் ஒன்று.

## ௩௧. அரங்கநாதக் கவிராயர் - தே. ர. (19—நூ.)

இவர் கொங்கு வளநாட்டில் பவானி தளவாய்ப்பேட்டையில் அரங்கசாமிச் செட்டியார் என்பவருக்கு மைந்தராகத் தோன்றியவர். பவானியில் பெரும் புலவராக விளங்கியிருந்த பாலபாரதி முத்துச்சாமி ஐயர் எனபவரிடம் கல்வி கற்றுப் புலமைத் திறமடைந்தவர். இவர் அருச்சுனன் தீர்த்த யாத்திரை சென்ற வரலாற்றை மிக விரிவாக "அருச்சுனன் தீர்த்தயாத்திரை" என்னும் பெயரோடு 1437 பாடல்க ளமையப் பாடியுள்ளார். முப்பது சருக்கங்கள் வரை நூலில் அமைந்துள்ளன. நூலைப் புகழ்ந்து பாராட்டித், திம்மப்ப ஐயர், தளவாய்ப்பேட்டை நஞ்சப்பச் செட்டியார், நூலாசிரியரின் மகன் இலட்சுமி நாராயண செட்டியார், பாலபாரதி முத்துச்சாமி ஐயர், உ வே. சாமிநாதையர் சேலம் நடராசையர், வீர. சுப்பைய ஞானதேசிகர், குமாரபாளையம் வேதாந்த மடாதிபதி சிதம்பர அடிகள், சீராப்பள்ளி இராமசாமிச் செட்டியார், உடுமலைப் பேட்டை முத்துச்சாமிக் கவிராயர், தோரமங்கலம் அ. வரத நஞ்சையபிள்ளை, சத்திமங்கலம் பக்கீர் சாய்பு, சென்னை வேலு முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> "பூவெறிந் தமரர் போற்றிட எழுந்து
> புரண்டிரு பாலினும் பொங்கிக்
> காவிரி படியத் திருவரங் கேசன்
> வரனினைக் கருதிநற் றவஞ்செய்

## ௩௩. அரங்கப்பிள்ளைக் கவிராயர்

இவர் பழவேற்காடு என்னும் ஊரிலே இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவராகச் சிறந்து விளங்கியிருந்தார். அரிச்சந்திரனுடைய காதையை உரைநடை விருத்தம் முதலியவைகளால் அரிச்சந்திர விலாசம் என்னும் பெயருடன் இயற்றினார். அந் நூல் ஆநந்த ஆண்டு புரட்டாசித் திங்களிலே வெளிவந்தது. அந்தணர்கள் அரிச்சந்திரனிடம் சந்திரமதியின் அழகைக் கூறுதல் ;

"காசியை விட்ட கன்று கன்னமா புரிக்கு வந்தோம்
மாசிலந் நகரை யாள்வோன் மதிதயன் அவன் முன் செய்த
பூசித தவத்தால் வந்த பொறகொடி கன்னி கண்டாய்
ஆசைகூர் அழகை நாங்கள் அறைந்தமட் டுரைசெய் வோமே."

## ௩௪. அரங்காச்சாரியார்

இவர் இவ்விருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் திருக்குடந்தையில் இருந்தவர். தென்னவநாடு சீநிவாச யோகீசுவரருடைய மாணவராக இருந்து நூல்களை ஓதியுணர்ந்தவர். இவர் "திலகப் பிரபாவ அதிரகஸ்ய வேதாந்த உபதேச உண்மை," ஞானமிட்டாய், ஞானக் கப்பல், ஞானக் குழம்பு, ஞானவியவகாரம் முதலிய பல நூல்களை எழுதியுள்ளார்.

"தோய்ந்தறியா வைணவரே ஐயா கேளீர்
சொன்னமொழி மறவாத நாமத் தோரே
ஈந்துநின்ற ஞானத்தின் விபரங் காணீர்
இருதயமாய் நின்றதொரு உயிரைக் காணீர்
காய்ந்துநின்ற ஞானக்கண் விபரங் காணீர்
கருந்துளசி பூண்டுமிகக் கதறு கின்றீர்
தேய்ந்துமிகப் போவதற்குப் பாடஞ் செய்வீர்
தெளிவாக உங்கள்மனம் தேரீர் தாமே"

என்பது உபதேச உண்மையில் ஒரு பாட்டு.

## ௩௫. அரசப்ப பிள்ளை - சு
(1901)

பாண்டிவள நாட்டில் மதுரைக்கு அண்மையில் உள்ள சோழவந்தான் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய தந்தை

றிலே தோன்றினர். தந்தையார் பெயர் இராமையர். இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமையடைந்து அம்பாசமுத்திரம் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகத் தொண்டு செய்துகொண்டிருந்தார். அம்பாசமுத்திரம் சிவன் கோயில் தருமகர்த்தா தெய்வநாயகம் பிள்ளை என்பவர் கேட்டுக் கொண்டதற்கிணங்கி அம்பாசமுத்திர புராணம் என்னும் அம்பைத் தலபுராணத்தை 1221 செய்யுட்கள் அடங்கிய நூலாகப் பாடினர்

இந் நூலினைப் பாராட்டி, அம்பாசமுத்திரம் ஆதிமூலம் பிள்ளை, திருநெல்வேலி பால்வண்ண முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளனர். புராணத்தில் சருப்பதோ பத்திரம், நான்காரைச் சக்கரம், அட்டநாகபந்தம், உபயநாக பந்தம், கோமூத்திரி, முரசபந்தம், ஏகபாதம், மாலைமாற்று முதலிய சித்திர கவிகளும் அடங்கியுள்ளன.

> "ஆதி நாடக மாடிய மானவா
> பாதி நாயகி யாகிய பாரகா
> சோதி யாடக மாகிய வானவா
> நீதி யாயநு யாசெய நீரகா."

என்பது கோமூத்திரி மற்றும் இவர் செய்த நூல்கள் பல.

## கூ௪ அரிகிருட்டிணசாமி முதலியார்

ஏறக்குறைய அறுபது யாண்டுகட்கு முன் புதுச்சேரியில் இருந்தவர் இராசகோபால முதலியார் என்பவரிடம் தமிழ் கற்றுச் சிறந்த புலமை பெற்றார்.

> "சிதம்பர நாதன் பதந்தனில் மாலை
> செப்பினன் இப்புவி மேலுச்
> சிதமிக் தெனயா வருஞ்சொலத் தெய்வ
> சிகாமணி செய்தவத் துதித்த
> சுதன் செழுங் குவளை மாலையா ரிருதோள்
> தூய்மையென் பலகலை யெவர்க்கும்
> இதமுற வுணர்த்துங் குமாரவேள் மகிபன்
> இயலறி புலவர்கண் மணியே."

என்பது இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௬௯. அரிகேசரி பராக்கிரம பாண்டியன்

இவன் தென்காசியைத் தலைநகராக்கிக் கொண்டு அங்கு அரசுபுரிந்ததோடு விசுவநாதர் கோயிலையுங் கட்டினான். இவன் இலக்கண இலக்கியப் பயிற்சியிற் சிறந்தவனாய்ச் செய்யுள் பாடுந் திறம்பெற்று விளங்கினான். இவனுடைய பாடல்கள் பல தென்காசிக் கோயிற் கல்வெட்டிலே அறியப்படுகின்றன. அப் பாடல்களில் இரண்டை அடியிற் காண்க.

> "ஓவலை நீயயத் தென்காசி யாலயந் தெய்வச்செய
> லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்னம்
> மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்தம்
> பாலேவல் செய்து பணிவன் பராக்ரம பாண்டியனே.
>
> சாத்திரம் பார்த்திங் கியான்கண்ட பூசைக ணாடத்தி
> ஏத்திவை பாண்டிய நாதன்பொற் கோயிலென் றும்புரக்கப்
> பார்த்திபன் கொற்கைப் பராக்ர மாறன் பரிவுடனங்
> கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே."

இவன் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவன் என்பது கல்வெட்டுக்களால் அறியப்பெறுகின்றன.

## ௭௦. அரிதாசர்

தொண்டைநாட்டிலே அரிவாசபுரம் என்னும் பழைய பெயரையும் நாகலாபுரம் எனனும் புதிய பெயரையும் உடைய ஊரிலே இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் திருவேங்கட முதலியார்; தாயார் பெயர் பெருமாள் முதலிச்சியார். இவருக்கு உடன்பிறந்தார்களும் இருவர் தோன்றினர். எல்லோரும் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினர். திருமலையப்பர் என்று பிள்ளைப்பெயர் பெற்ற இவர் திருமால் பத்தியிற் சிறந்து விளங்கினமையால் அரிதாசர் என்னுஞ் சிறப்புப் பெயரைப் பெற்றார்.

அக்காலத்திய அரசனான கிருட்டிணதேவராயர் இவருக்குப் பலவகையான அதிகாரங்கள் வழங்கியிருந்ததோடு சிறப்புக்களுஞ் செய்திருந்தார்.

இவர் தம்முடைய பெயர் நிலவுலகத்தில் நிலைக்குமாறு 'இருசமய விளக்கம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந் நூல்

ஆற்றுக்கு நீராடச் சென்ற இரு பெண்மணிகள் சைவ சமயம் வைணவ சமயம் என்னும் இரண்டினையுஞ் சீர்தூக்கி வைணவ சமயத்தினுடைய பெருமையைத் தம்முள் பேசிக்கொள்வதாகக் கூறும். இந் நூல் நான்கு காண்டங்களையும், இருபத்தாறு படலங்களையும் 2119 திருவிருத்தங்களையும் உடையது. நூலைக் கருமாமணி வண்ணன் என்னும் பெருமாள் கோயிலில் அரங்கேற்றஞ் செய்தார் இந் நூலின் மெய்ம்மையையும் பெருமையையும் உலகிற்குணர்த்தும் பொருட்டு இவர் இந் நூலைத் தீயிலிட்டு எடுத்ததாகவும் கதையுண்டு.

> " இரீபோல் விளங்கிக் கிளரும்புயக் கிட்ண ராயன்
> தரைமீது சிங்காத் திரியிலசெயத் தம்பம் நாட்ட
> வரமா தரவால் அளிதகேவட கூவம் மேவும்
> கருமா மணிவண் ணனைநீடு கருத்தில் வைப்பாம்.
>
> விரிதா தணியுந் தொடைமேவிய வேந்த னுன
> அரிநாதன் நினைந்தவெல் லாமுடித் தாண்ட கோவை
> தெரிதா தரவேத கிரித்தடச் செங்கண் மாலை
> பெரிதா தரிப்பார்க் கரிதோபிற வாத பேறே."

என்பன கடவுள் வணக்கப் பாடல்கள்.

## எக. அரியக்குட்டியா பிள்ளை - கா (1893)

இவர் ஈழவள நாட்டிலே கல்லூரியொன்றில் தமிழாசிரியராக இருந்தார். இலக்கண நூல்களை நன்கு கற்றுத்தேறிச் சிறந்த இலக்கணப் புலவராக விளங்கியதோடு, "இலக்கணாகரம்" என்னும் இலக்கண நூல் ஒன்றையும் இயற்றியிருக்கிறார். அந் நூல் இலக்கணச் செய்திகளை நன்கு விளக்கிக் கூறுகிறது.

> " காலை மாலை கடும்பகல் சாமம்
> ஆயவெந் நேரமும் அன்புடன் உருகிப்
> பாலைப் பருகும் பான்மையே போன்று
> பரமனை நினைந்து பன்முறை பணிந்து
> நூலை நுவன்றும் நுவலக் கேட்டும்
> பொருளை யறிந்தும் போற்றி நடந்தும்
> வாலப் பருவம் வறிது படாமல்
> ஆர்வமாய்க் கற்றல் ஆர்க்குங் கடனே."

என்பது மாணுக்கர் இயக்கு கூறும் பாட்டு. நூல் பெரும்பாலும் உரைநடையிலேயே அமைந்துள்ளது.

## எஉ. அருணாசல அடிகள் - சி

(20—நூ.)

இப் பெரியார் சோழவள நாட்டிலே திருத்தருப்பூண்டிப் பிரிவிலுள்ள குருநாதிக்குளம் என்னுஞ் சிற்றூரில் தங்கியிருந்து வீடுபேற்றையடைந்தவர். கோவிலூர் மடாலயத்தில் மெய்ஞ்ஞானச் செல்வராக வீற்றிருந்த கருணாநிதி அடிகள் என்னுஞ் சிதம்பர அடிகளபால் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்தவர். இலக்கணப் பயிற்சியும் பாப்பாடும் வன்மையும் இயையப் பெற்றிருந்தவர். பச்சையப்பப் பிள்ளை என்பவர் இயற்றிய காசிச்சாம்பசிவ தோத்திரம் என்னும் நூலுக்கு இவர்,

> "தனது சியன்றன் அருபமாய்த்
> தான்பெற் றிடுபே றுகடைந்தே
> பனு வூழனும் பயமரணம்
> பரியுயவும் படிக்கிசைந்து
> சொன்னன் நருநேசத் திரப்பா நல்
> தொன்மை மறைசைக் கணித்தாகப்
> பொனுரை தோப்புத் துறைத்துவ
> ஞசைக் காப்போர் பூண்டோரே"

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாக வழங்கியுள்ளார்.

## எ௩. அருணாசலக் கவிராயர் - வ. மு (க)

(20—நூ.)

இவர் கொங்கு நாட்டிலே வடவழி என்னும் ஊரிலே முத்துச்சாமி என்பவருடைய மகனுகத் தோன்றினர். இளமையிலேயே கல்வியை நன்கு கற்றுப் புலவரான இவர், மருதாசல முருகன் பிள்ளைத் தமிழ், திருப்பேரூர் உலா முதலிய நூல்களை இயற்றியிருக்கின்றர். உலா 915 கண்ணிகளையுடையதாய்ப் புராணேதிகாச வரலாறுகளையெல்லாம் தன்னகத்துக் கொண்டதாய்ச் சிறந்து விளங்குகின்றது.

மங்கை

" பூமன் வருந்த புதுக்கனக நிட்சேபம்
காமன் வகுத்த கருவூலம்—சாமனுக்கு
மோக வசீகரமாய் முன்போந்த மின்கோவை
ஆக அமைந்த அநுகூலம்—வாகைபெறு
மாலைப் பொழுதின் மலருஞ் செழுங்குவளை
காலைப் பொழுதலருங் கஞ்சமே—வேலைதரும்
பூவலயம் எல்லாம் புகழும் அலங்காரம
தேவர் அமுதநிகர் சிங்காரம்—ஆவலுடன்."

என்பன உலாவின் மங்கைப் பருவக் கண்ணிகளிற் சில. உலாவைப் பாராட்டிக் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார், கோயமுத்தூர் சி. கே. சுப்பிரமணிய முதலியார், துடிசைக்கிழார் சிதம்பரனார், சொக்கலிங்கம் பிள்ளை, சலகண்டபுரம் வரதநஞ்சைய பிள்ளை, கோயமுத்தூர் ஆறுமுகம் பிள்ளை என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" காஞ்சிவாய்ப் பேரூர்க் கண்ணுதல் மீது
பேதை முதலா மாதர் எழுவரும்
வீதியிற் கண்டு காதல் கொளவும்
உலா நூல் ஒன்றிங் குலாவப் பாடினன்
நிலாவிய அமுதம் குலாவிய தெனவும்
மடனாஞ் செரீஇய நிடமுறும அணியின்
இடைகழி பெருந வடவழிப் பதியோன்
முத்துச் சாமியென் றித்தரை சாற்றும்
வித்தகன் அளித்த புத்திர னென
கருணா கரவான் அருணா சலமென
வருநாற் புலமையின் வண்மை யோனே "

என்பது சதாசிவச் செட்டியார் பாடலில் ஒரு பகுதி.

## ௭௪. அருணாசலக் கவிராயர் (௨)

இவர் சேதுவள நாட்டிலே முதுகுளத்தூரிலே அட்டாவதானம் சரவணப்பெருமாட் கவிராயருடைய மகனாகத் தோன்றியவர். துவாத்திரிம் சதாவதானம் சரவணப்பெருமாட் கவிராயர்க்குத் தந்தை. தனிப் பாடல்கள் பல பாடியுள்ளார். இராமநாதபுரம் சமத்தானத்து அரசவைப் புலவர்களில் ஒருவராக இருந்தவர்.

## ௭௫. அருணுசலக் குருக்கள்

(19—நூ.)

இவர் புதுச்சேரியில் சைவ வேளாளர் வகுப்பில் சுப்பராயக் குருக்கள் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலவராகத் திகழ்ந்தார். இவர் இயற்றிய நூல்களுள் கோட்டைக் கணபதிமாலை என்னும் நூல் ஒன்று அச்சிடப்பெற்றது. கட்டளைக் கலித்துறையாலாகிய இந் நூல் பத்துப் பாடல்களையுடையது. நூலைப் பாராட்டிச் சொக்கபுரம் இராமலிங்கத்தம்பிரான், தருமபுர ஆதீனப் புலவர் சோமசுந்தரக் கவிராயர், க. சுப்பராய முதலியார், மூத்து. வினைதீர்த்த முதலியார், குமாரசாமி உபாத்தியாயர், பொன்னைய முதலியார், அருணாசல உபாத்தியாயர், [illegible]ச்சாமி உபாத்தியாயர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> மருவொரு பாசாங் குசமப்ப நாவல் வளர்கனியும்
> பெருவினை மன்கனி பெண்ணாமயூபம் பிறங்குகையில்
> திருவுற வேந்துந் தருணு ருணனைச் செங்கதிரோன்
> தருண கோசனை வாழ்த்துதல் செய்வொரு நாழிகையே.''

என்பது நூலின் ஒரு பாட்டு. பாடல்களில் வடசொற்கள் அதிகம் கலந்திருத்தலினால் இவர் வடமொழியிலும் வல்லுநர் என்பது வெளிப்படுகின்றது.

## ௭௬. அருணுசல சுவாமிகள் – (பிறைசை)

இப் பெரியார் வேதாந்த நூல்களை நன்கு கற்றுத் தேறியவர். திருத்துருத்தி இந்திரபீடம், கரபாத்திர சுவாமிகளின் ஆதீனத்தைச் சேர்ந்தவர். ஞானவாசிட்டம், வேதாந்த சூளாமணி முதலிய நூல்கட்கு இவர் உரை செய்திருக்கிருர்.

## ௭௭. அருணுசலச் செட்டியார்

(20—நூ.)

பாண்டிய நாட்டில் காரைக்குடியில் தனவணிக மரபில் இராமசாமிச் செட்டியார் என்பவருக்கு மகனுகத் தோன்றியவர். தக்க அறிஞரிடத்தே இலக்கண இலக்கியங் கற்ற இவர், வலைய

நாகர் மலைபாண்டி விநாயகர் பதிகம், திருவாரூர்த் தியாகேசர் பதிகம், உப்பக்கொண்டான் சிறுவயல் பொன்னழகியம்மன் பதிகம், காரைமாநகர்க் கொப்புடையம்மன் பதிகம், மீனாட்சியம்மன் பதிகம், கொப்புடையம்மன் வருகைப் பதிகம், குமரகுருபரன் பதிகம், சந்தப் பாடல்கள் முதலியன இயற்றியுள்ளார். தூத்துக்குடி சங்கரதாஸ், உரத்தூர் வைத்தியலிங்கம் பிள்ளை, ஆ. சத்திவேற் பிள்ளை, பார்த்தசாரதி நாயுடு என்போர் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளனர்.

> "மலர்மேவு கலைவாணி மனமூடு தொழுநாடி
> வரநாளும் அருள தேவியே
> வனமேவு சனகாதி முனிவோர்கள் உலைநாடி
> மகமாயி சிவை நாரிமா
> சிலைராசன மகளான உமைதேவி அபிராமி
> சிவகாமி அருள்வாளறுத்
> திகழ்பாத மலர்மீது விழுகாலை அருள்வாலை
> திரிசூலை பரைவாமி நீ
> மலைபோல முலைமேவு விலைமாதர் நடமாசை
> மயலூறு சுழல்காலெறு
> மனம்வாடி உழலவேலை அருள்போத இதுவேலை
> வரவேணும் இவணுடியே
> தலைமீது நதியோடு மதிசூடு சிவனேறு
> சமராடி வருநீலியே
> தருமேவு சுராநாடு நிகர்காரை நகர்மேவு
> சத்திமீனாட்சி உமையே."

என்பது மீனாட்சியம்மன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௭௮. அருணாசலதேவர் - வெ

பாண்டிவள நாட்டில் கழுகுமலையில் ஏறக்குறைய எண்பது ஆண்டுகட்கு முன்பிருந்தவர். "கழுகாசலத்தந்தாதி" என்னும் நூலை இவர் கழுகுமலை முருகக் கடவுள்மீது பாடியிருக்கிறார்.

> "சண்முக வென்றொருக் காற்சொல்லி லேழுந்தி தான்தரும்பின்
> கண்முகத் தாலுங் கச்சார் தனத்தாலுங் கவலையுறப்
> பண்முகக காரணமொழி மாதரின்பவப் பற்றறுக்கும்
> விண்முகங் கொண்ட கழுகாசலத்தின் மிகவடுத்தே."

என்பது அவ்வந்தாதியில் ஒரு பாட்டு.

## ௭௯. அருணாசலதேவர் - (க)

(20—நூ.)

சோழவள நாட்டில் வேளாங்கண்ணி என்னும் ஊரில் சிறந்த புலவராக விளங்கியிருந்த இவர் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் பத்திரிகையொன்றையும் அக் காலில் நடத்தினார். அரித்துவார மங்கலம் வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார், டில்லியில் நடந்த மாநாட்டு விழாவுக்குப் போய்விட்டுத் திரும்பிவந்த போது மேற்படி இராசாளியார் மீது பலபேர் செய்யுள்கள் பாடினர். அப்பொழுது இவருஞ் சில செய்யுட்கள் பாடினார். அவற்றுள் ஒன்றை அடியிற் காண்க:

"கற்றவர்க்குப் பொருணாதி தொகையின
நேயனிக்கும் கமலக் கையன்
சுற்றமகல நல்லவராய்க் குணந்தழுவி
ஆதரிக்கும் குன்றெனப் பாவோன்
சொற்றபுகழ் அரித்வார மங்கலத்தில்
தங்கிவளர் சுகுண நேயன்
நற்றநுமம் வளர்க்குமெங்கள் கோபால
சாமிதுரை நாளும் வாழி"

## ௮௦. அருணாசலப் பிள்ளை - (ப)

(1862)

இவர் சென்னைமா நகரில் முத்தியாலுப்பேட்டையில் இருந்த, "கலைமகள் விலாசக் கல்விச்சாலை" என்னும் பள்ளியில் தலைமையாசிரியராக அமர்ந்து மாணவர்கட்கு இலக்கண இலக்கிய நூல்களைப் போதித்தவர். இவர் காலத்தில் இராமநாதபுரத்தில் இருந்த பொன்னுச்சாமித்தேவர் சேதுபுராண நூலை அச்சிட்டுப் பலருக்கும் நன்கொடையாக வழங்கிக்கொண்டிருந்தார். இவர் அந்நூலில் தமக்கொரு பிரதி அனுப்பவேண்டும் என்று,

"வேலைசூழ் புவியின் சோலைசூழ் நாட்டுள்
ஆலைமாய் கரும்பு சாலைசூழ் இடங்களும்
வேதியர் வேதம் ஓதுறு கழகமும்
மாதவர் வைகும் கோதறு மனைகளும்
இங்ஙனம் பலவாம் எழில்வினோதங்களும்

அங்கணம் வைத்தும் அணிசெம்பி நாட்டுக்
கதிபதி யாகி மதிமுடி அரனை
விதிமுறை யாக வழிபடு நாவலோரும்
உன்று சிந்தை உடையவ னாகி
மன்று பொன்னுச் சாமித் தேவ!
உலகச் சநியாய் ஓங்கிய போம்
அலகிலாப் பரமன் அங்கமே பொருந்தக்
தரைகடற் றுறைக் துறைமுனி குடித்த
திரைசெறி நீரைத் தெவிட்டா தன்றி
பிறைநுதி அணிந்த பெம்மான் களந்தைக்
குறையா தொத்துக் கொடுப்பவர் போல
மதிதொறு மும்முறை யாமமுழ் பொழிந்து
நதிபொழில் கழனி நலம்பெற நிரப்புநின்
செங்கோல் வளமையால் எமபோ வியர்க்க
மங்கா நீயும் மாண்பயன் நோக்கி
அரியா யம்போ நுகமைக் கையால்
எளியேன் மிகவுங் கனியாற் கேட்கும்
சேது வரலா றேது புராணம்
நீடியாய் ஒன்று நேர்வர விடுவைபே."

என்னும் நிலைமண்டில ஆசிரியப்பாவை எழுதியனுப்பினர்.

## ௪௧. அருணாசல முதலியார்
(20—நூ.)

சோழவளநாட்டுத் திருமலைராயன் பட்டினத்தில் செங்குந்த மரபில் உத்தராபதி முதலியார் என்பவருக்குப் புத்திரராகத் தோன்றியவர். சைவசித்தாந்த நூல்களை இவர் நன்கு கற்றுத் தேறினமையால், "சைவசித்தாந்த சாகரம்" என்றுஞ் சிறப்புப் பெயரும் பெற்றனர். புராணேதிகாசங்களிலும் வல்லவர். காரைக்கால் அம்மையார் இயற்றிய அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை முதலிய நூல்களுக்கு இவர் உரையியற்றியுள்ளார். அவ்வுரையைப் பாராட்டித் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள், காஞ்சி நாகலிங்க முனிவர், சீர்காழி முத்துத் தாண்டவராயபிள்ளை, சென்னை கி. குப்புச்சாமி முதலியார், காஞ்சிபுரம் அ. க பொன்னுச்சாமி முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நோற்ற யின்பரஞ் சோதிதன் வாய்திறந்
தூற்ற அன்புடன் அம்மையே என்றுமோர்
பேற்றை முன்பெறப் பேயுரு வெய்திய
சாற்ற நம்புகழ்த் தாயை வணங்குவாம்."

என்பது இவர் இயற்றிய அம்மையார் துதிப்பாடல்.

## ௪௨. அருணாசல முதலியார்

சென்னையில் திருமயிலையில் வாழ்ந்திருந்தவர். இவர் பிறந்ததும் இந்த ஊரே. திருமயிலைக் கபாலீசர் பதிகம், கற்பகாம்பிகை பதிகம், பிரமராம்பிகை பதிகம், மயிலாமணி யீசர் பதிகம் முதலியன இவரால் இயற்றப்பெற்றவை: வேடிக்கையாகச் செய்யுள் செய்வதில் வல்லவர். இவர் இயற்றிய தனிப் பாடல்கள் பல. சிலவற்றை அடியிற் காண்க.

"துப்பத்துச் செட்டி குமாரன் கடன்தாண்டி
முப்பத்து முக்காத முங்கடந்து—கப்பலேறின்
ஆபத்து வாரா தகற்றி அவனடிக
ளாபத்துக் காணா விறன்."

பாலனைப் பழித்தல்

"செய்யான் வணர்மயி லைக்குளென் னுசைத் திரவியமே
மெய்யாந் தனங்குடத் தேவைத்து வாழ்ந்தனர் மேவுதந்தை
கையா டியதனம்பிள்ளை புசிக்கக் கடனெனவே
ஐயா வுனக்களித் தேனத னைவெறுப் பாயினரே."

## ௪௩. அருணாசல ஆச்சாரி - க.
(20—நூ.)

பாண்டிவளநாட்டில் சங்கர நாராயணர் கோவிலுக்கு அண்மையில் உள்ள புளியங்குடி என்னும் ஊரில் கந்தசாமி ஆசாரியார் என்பவருடைய மகனாக இவர் தோன்றினர். அவ்வூர் புலவர்கள் பலரைத் தன்பாற் பெற்ற சிறப்பினையுடையது. அருணாசலம் தக்க அறிஞர்பால் கல்வி கற்று, முருகதாச சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள் என்று அக்காளில் பெயர் விளங்கியிருந்த தண்டபாணியடிகட்கு மாணவராகவும் ஆகி அருளுரை பெற்றார். முருகப் பெருமானிடத்துப் பேரன்புகொண்டு அப்

பெருமான்மீது, வண்ண மஞ்சரி, வெண்பாவந்தாதி, இரட்டைமணிமாலை, அநுபூதி ஆகிய நூல்களை இயற்றினார்.

இந் நூல்களைப் பாராட்டிச், சிவகிரி சமீன் கோட்டையூர் சு. கந்தசாமிப்புலவர், நல்லூர் ச. முத்துக்கிருட்டிணக் கவிராயர், சேற்றூர்ச் சமத்தானப்புலவர் இராம கிருட்டிணக் கவிராயர், செவ்வற்குளம் ஆ. கந்தசாமிக் கவிராயர், தென்காசி மாடசுவாமிப் பண்டாரம், சிவகிரி மகாலிங்கக் கவிராயர், மலையடிக் குறிச்சி பிச்சையாப்பிள்ளை, புளியங்குடி—நா. திருக்காளத்தியப்பக் கவிராயர், நெற்கட்டுஞ் செவ்வல், இலட்சுமணக் கவிராயர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

தந்ததந்த தந்ததந்த தனதான

"தும்பமென் றிரண்டுகொங்கை கொண்டபெண்கள் பங்குறைந்து
கொஞ்சியும் புணர்ந்துழன்று மதனாலே
கொஞ்சுமம்ப லங்களின் றுவங்குபுண்சி ரங்கிநொந்து
கொண்டலின்கண் வந்தொடுங்கு மினல்போலே
வம்பிலிம்பர் நைந்திறந்து சம்புவெம்ப ருந்தருந்த
வஞ்சனங்க ளுங்கிடந்து கழியாதே
வண்டலம்பு செங்கடம்ப ணிந்ததிண்பு யந்துலங்க
வந்துநெஞ்ச நன்கிரங்கி யருள் வாயே
கம்பநின்றெ ழுந்துவம்பு கொண்டவன்க டம்பிளந்த
கம்பன்மைந்த னுங்கிறுங்கு மெழிலோனே
கண்டநஞ்ச ணிந்துபொன்ப ரம்பமர்ந்த நம்பர்வந்து
கண்டுமந்தி ரந்தெரிந்த குருநாதா
அம்பரஞ்ச ருங்கமுண்பு செங்கைதங்கு குந்தமொன்றை
அன்றெறிந்து வென்றுவந்த செயவீரா
அண்டநின்றி றங்குமிந்தி ரன்கொணர்ந்த தந்தியின்கண்
அன்றுவந்தி வர்ந்ததென்பு துவைவேனே."

என்பது வண்ணமஞ்சரியில் ஒரு பாட்டு.

## ௪௪. அருணாசலம்பிள்ளை

(19—நூ.)

இவர் தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள வாலிகண்டபுரம் என்னும் ஊரில் "பிரன்சுபால் சதரமீன்" என்னும் அரசியல் அலுவலில் இருந்தார். செய்யுள்

பாடத்தக்கவாறு செந்தமிழ்ப் புலமையும் பெற்றிருந்தார். இவர் திருவாவடுதுறைச் சுப்பிரமணிய தேசிகர்மீது, குருதோத்திர வெண்பா, குருதெரிசனப் புகழ்ச்சிக் கலிவெண்பா முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"செந்நிலைச் சார்ந்துகுடத் தீரார் துறைநகையின்கண்
வந்தோ குருவடிவாய் வார்கழற் றேன்—சந்ததமும்
அன்பர் குழாங்கட் கருத்துமைய தயாளருந்தி
இன்புற் றிருந்தோனைப் போற்று."

என்பது குருதோத்திர வெண்பாப் பாடலில் ஒன்று.

## ௩௫. அருமருந்து தேசிகர்

இவர் தென்பாண்டி நாட்டிலே திருச்செந்தூரிலே சைவ சமயத்திற் பிறந்தவர். திருச்செந்தூரில் எழுந்தருளிய திருமுருக விடத்திலே பேரன்புடையவர். சூடாமணி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கயாதர நிகண்டு, அகராதி நிகண்டு முதலிய பல நிகண்டுகளில் உள்ள அருஞ் சொற்களைச் சேர்த்து, ஒருசொல் பலபொருளாக விருத்தி எழுநூறு விருத்தங்களில் அரும்பொருள் விளக்கம் என்னும் நிகண்டு செய்தவர்.

"அலைமேலே அழுத்தல் ஆடல் ஆன்ற ஆசிரிய மும்பேர்
தலைநீ யுடனெழுதிக் கெளவுஞ்சற் குணமுஞ் சாற்றும்
பகலி உலைமேயுமாக்கை தருமதே வதைப்பேர் பன்னும்
முகவுமை விதையுமகப்பே மொன்றுதல் காத்திக்கும்பேர்."

என்பது அந்நூற் பாடலில் ஒன்றாகும்.

## ௩௬. அருணப்பச் செட்டியார்
(1895)

இவர் சென்னை மாநகரில் இருந்த கிறித்தவர்களில் ஒருவர். அபிடேகநாதர் மாலை என்னும் நூலை அந்தாதியாகப் பாடியுள்ளார். மாலையில் நூற்றிரண்டு பாடல்கள் உள்ளன.

"பொன்னுக்கும் புவிக்கும் பூவைக்கும் ஆளாகி
மின்னுக்கு நேருடலை விட்டுநின்ற—என்னுக்கும்
போக்கார் நிறைநின்ற பூவின் உதிப்பானை
நன்னாய்ந் தேற்றேற நமக்."

என்பது மாலையில் ஆறாவது பாட்டு.

## ௪௭. அருளப்ப நாவலர்

சோழநாட்டுப் பெரியபாளையத்தில் இருந்தவர். கத்தோலிக்க சமயத்தினர். அப்போகசிங்க முதலியார் என்னும் பெருந் தியாகி இடத்து உண்டு இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்து விளங்கிய இவர், திருச்செல்வராசர் காப்பியம் என்னும் நூலை இயற்றினர். இந்நூல் இருபத்தைந்து படலங்களையும் ஆயிரத்துத் தொளாயிரஞ் செய்யுட்களையுங் கொண்டது.

> "அயராவுயிர்க்கொருந் தவ்விடத் தந்தனன் விரவின்
> வையாவ துந்தோர மாசறு தாமுதல பெறுக்கவா
> பொய்யாவு மின்றிவெண் படிகத்தொளி தோன்றுபோயத் தென்னத்
> தூயபரனொருச் சுதனையத் தவக்கன்னி தந்தான்."

என்பது இவர் இயற்றிய நூலில் ஒரு பாடலாகும்.

## ௪௮. அருளப்ப முதலியார்
### (கி-பி 1900)

இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் முத்துசாமி முதலியார். அருளப்ப முதலியார் தேம்பாவணி இரண்டாங் காண்டத்தைக் கீர்த்தனையாகப் பாடியிருக்கிறார்.

> "அங்கமுடன நடந்தவெல்லாம் தூதனை சொல்ல
> அரசன் சோகமுன கேட்டுச் சினந்தான் வானில்
> பெருங் திரள் யாங்கள் கூடுவேண்டாயப் பகைவர் தம்மைப்
> போரில்வெல்வாய் அப்பொழுதென் திறம்ஏவர்க்கும்
> சகனைகயறத் தெரிவிப்பாய் என்றான் தேவன்
> தற்பரனை வணங்கிமன்னன படையை நோக்கி
> அங்கமறுச செழுகவென்றான் பகைவரைப் போய்
> அடருவார் யூதர்சண்டை தொடருவாரே."

என்பது கீர்த்தனையில் ஒருபாட்டு. திருமயிலை சண்முகம்பிள்ளை நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

> "தெருளப்பன நூற்கடலைத் தெரிந்தாய்ந்த
> செந்தமிழ்ப்பா வாணன் யாரும்
> மருளப்பற் பலகவிதை மழைபொழியும்
> மாமேகம் வகுத்த பன்னூல்"

'ஆயுமறை யோரெண்ண வருஞ்சகாத்தம்
ஆயிரத்து நானூற்றே டறுபத் தஞ்சாம்
தூயசுப கிருதுவினின் முதல்மா தத்தில்
துலங்குகுரு வாரத்துத் திராட நாளில்
நேயமுடன் நெல்லிநகர் வரத ராசன்
நிகரிலரங் கந்தலைவ னையி றைஞ்சும்
நாயகன்முன் அருளர்மகிழ்ந் திடவே வாகு
தேவகதை யரங்கேறி நலனுற் றானே.''

என்னுஞ் செய்யுளால் ஆசிரியர் வரலாற்றுக் குறிப்பு ஒருவாறு விளங்குதலைக் காண்க.

''ராமநான் மறைகளோதி ஒளிருமந் தணர்கள் செய்ய
வாமனன் சாம்பனன்றும் மங்கைதன் கந்த ரத்தின்
காமர்மங் கலநாண் சாத்திக் கால்வல மாகவந்து
மாமலர்க் குழலியம்மி மிதித்திட வடமீன் கண்டார்''

என்பது சாம்பவதியார் திருமணத்தில் ஒரு பாட்டு

## ௯௧ அருளாளப் பெருமாள்

திருமாலுக்குத் தொண்டு செய்தவர். ஞானசாகரம், பிரமேய சாரம் என்னும் நூல்களை இயற்றியவர். இவர் வாழ்ந்திருந்த காலம் 14 ஆம் நூற்றாண்டு.

## ௯௨. அரையர்சாமி

இவர் ஆழ்வார் திருநகரியில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சிறந்து விளங்கியிருந்த வைணவப் புலவர் திருவாய்மொழி முதலிய வைணவ நூல்கள் பலவற்றை ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்.

## ௯௩. அர்த்தநாரீச நாயகர் - சு
(20—நூ.)

இவர் சுகவனம் என்னும் ஊரில் சுகவனநாதன் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். அழகிரிநாத அடிகள் என்னும் முனியப்பருக்கு மாணவராகிக் கல்வி நலம் பெற்றவர். கரபுரநாதர் புராணம் என்னும் நூலுக்கு இவர் பொழிப்புரை

சேமரம் மியசரிதை யிற்சிறீ தெடுத்துவான்
சிறுத மேவு சோலை,
ஏருற்ற வளமேவு கின்றநகா னன்றுடி
இருப்பென் றாம் னரின் வாழ்வோர்
எந்தல்பீ ராநயி னாமறைக் காப்புலவ
ரின்றவத் துற்ற மைந்தர்
இயப்பரு மிலக்கண இலக்கிய மகோததி
எடுத்துண்டு கவிமாரி பெய்
எழிலிநிக ருமிஜது றாகநயி னார்ப்புலவர்
எனுசொல மகா வித்துவான்
பாருற்ற சீர்கொள் நவமணிமாலை என்றொரு
புராணம் படித்த னரதைப்
பலபேர்க ளுநயக்கண்டு கல்விநயம் ஓங்கிடப்
பண்ணுவது மேன்மை யென்றே
பால்போல வளம்பொங்கு புதுமனையில் வாழ்கின்ற
பாக்கிய உதார குண
பண்பிறும றுப்பிள்ளை சின்னவாப் பென்றிடும்
பார்த்திபன் வரத்தின் மகவாய்,
நேருற்ற பூமியிதி னப்துல்கா திறுவள்ளல்
நெஞ்சினில் உவப்பு மீறி
நிதியுதவ மகிழ்விளுன் மருதூர மகமதெந்
நிபுணகுரு நபீ ருந்தே
நேசவிசு வாசமாய்ப் புராணிக் காந்தினவிக
தப்பிரதி கொண்டு நேராய்
நீக்கமற நோக்கியச் சிடுவித்த னம்மரிய
நித்தனருள் உதவி கொண்டே.''

என்றும் இரட்டையாசிரிய விருத்தத்தால் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## ௯௪. அல்லி மரைக்காயர் - மீ (1878)

இவர் நாகூர் கா. மீருசெய்ப்பை மரைக்காயர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். சிறந்த தமிழ்ப்புலமை பெற்ற இவர், பஞ்சரத்தினம், பதிகம், தசரத்தினம், பதிற்றந்தாதி, நவமணி மாலை, வண்டுவிடுதூது, அன்னம்விடுதூது, அம்மானை, முனாசாத்து, நெஞ்சறிவுறுத்தல் முதலிய நூல்கள் பாடியுள்ளார். இவைகளைப் பாராட்டி, நாகபட்டினம் கிருட்டிணசாமி உபாத்தி

பாயர், முகமது நயினா மரைக்காயர், க. பகிர் முகியித்தீன், கு. முகம்மது சாகிபு மரைக்காயர், வ. குலாம்காதிறு நாவல ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்

“அருவாய் அணுவாய் அகிலம்விசும்
பனைத்துங் காக்கும் அரியபெருந்
திருவாய் மறையின் உட்பொருளாய்த்
தெருண்ட உயிர்க்கெல் லாங்கருவின்
கருவாய்த் தெளிவாய்க் காணரிய
கதிராய் எவணும் அமைந்தவெளி
உருவாய் நிறைந்த முதலோனே!
உவப்பின் கருணை புரிவாயே.”

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு

## ௬௭. அவிநயனார்

அகத்தியர் மாணவர்களில் ஒருவர். இவர் தம்முடைய பெயரால் அவிநயம் என்னும் நூல் ஒன்று இயற்றினார். ஆனால் அந்நூல் இக்காலத்தில் இல்லை. முற்காலத்திலேயே மறைந்தொழிந்ததுபோலும்.

## ௬௮. அவிநாசிநாத சுவாமிகள்

இவர் திருக்கோவலூர் ஞானியார் மடத்தலைவர் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பெரியாரை ஆசிரியராகக்கொண்டு இலக்கண இலக்கியங்களையும் அறிவு நூல்களையும் ஓதி உணர்ந்தார் சிகாமணிப் பதிகம், நெஞ்சுவிடுதூது, அபிடேகமாலை, அட்டமங்கலம் முதலியன இவரால் இயற்றப் பெற்ற நூல்கள்

## ௬௯. அவிரோதியாழ்வார்

இவர் அவிரோதிநாதர் எனவுங் கூறப்பெறுவர். சைன சமயத்தினராகிய இவர் திருநூற்றந்தாதி என்னும் நூல் பாடியிருக்கிறார். நூல் அருகக்கடவுள் மேலது.

“கொண்டல்கண் டீர்கொடை குன்றுகண்
டீர்புயம் என்று கொண்டே
தொண்டர்கண் டாரையெல் லாந்துதி
யாவண்ணந் தொல்லுலகில்

பண்டுகண் டேயறி யாப்பொருள்
ஈயவென் பாக்கி யத்தால்
கண்டுகொண் டேன்பின்னடி நீழலின்
கீழொரு கற்பகமே.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧00. அழகசுந்தரம்
(1793—1941)

ஈழவள நாட்டினர். சி. வை. தாமோதரம் பிள்ளையின் மகனாகத் தோன்றிய இவர் பி. ஏ. வரை கல்வி கற்றார். சென்னை அரசாங்கத்தார் தொகுத்த அகரவரிசை நூலின் ஆசிரியர் கூட்டத்தில் ஒருவராகப் பணிபுரிந்தார் கொழும்பு பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சியாளராகவும் இருந்தார். இவருடைய பெயர் பிரான்சிஸ் கிங்ஸ்பெரி எனவும் வழங்கியது. கிறித்து மதச் சூறைக்காற்றில் அடித்துச் செல்லப்பெற்ற யாழ்ப்பாணத் தமிழர்களில் இவரும் ஒருவர். இவர் சைவ சமய நூல்களையும் ஆராய்ந்தவர் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் ஏசு வரலாறு, அகப்பொருட் குறள், இராமன் கதை, பாண்டவர் கதை, சந்திர காசம் முதலியன. ஆங்கிலத்திலும் இவர் இரண்டொரு நூல்கள் எழுதியுள்ளார். பஞ்சாமிர்தம் பத்திரிகையில் இவர் சில கட்டுரை கள் எழுதினர். அப் பத்திரிகையை நடத்திய அ மாதவையர் காலஞ்சென்றபோது இவர் இரங்கற்பாக்கள் சில பாடியுள்ளார். அப் பாக்களில் ஒரு கட்டளைக் கலித்துறையையும் வெண்பாவை யும் அடியிற் காண்க.

''இல்லாளும் மக்களும் ஏங்கிக் கலங்க இனசனர்கள்
எல்லாரும் வாட இருநிலந் தன்சுமை யால்வருந்த
நல்லார்கள் நைய நமற்கொல்லி பாதத்தை நண்ணினன்காண்
சொல்லாமல் யாருக்கும் தோன்றல்மெய்ம் மாதவத் தூயவனே.''

''சடாயு புலம்பத் தசரதன்சென் றாற்போற்
புடவியிலே யான்புலம்பப் போனாய்—கடையனியான்
எப்போதும் இம்பர் இருப்பேனோ மாதவையா
தப்பாதுன் பின்வருவேன் சார்ந்து.''

## கoக. அழகர்சாமிப் பிள்ளை - ம
(20—நூ.)

"கூடலிற் கூடிவாழ் நாடரும் புகழான்
தருமமே உதித்ததென் தரும உருவான்
மதுரையா பிள்ளையின் மாண்புறு புத்திரன்
முத்தமி ழருமை முதுபெருங் கடலில்
மூழ்கி யாடும் வழுவறு திறலான்
காரெனக் கொடுக்குங் கருணைக் கையான்
நாவலர் மெச்சும் நாற்கவி வள்ளல்
அழகிரி சாமியென் றன்பின்
நல்லோர் உரைக்கும் வல்லோன் தானே."

என்று திரிசிரபுரம் அ. சுந்தரநாத பிள்ளையால் புகழ்ந்து பாராட்டப்பெற்ற இவர் மதுரைமா நகரில் மதுரையா பிள்ளை என்பவருக்கு அருமை மகனாகத் தோன்றினர் தக்கார்பால் கல்வி கற்றுத் தமிழறிஞரானார். மதுரையில் 'சிவஞான தீபச்சபை' என்னும் பெயரோடு சபையொன்றை அமைத்துச் சமயத் தொண்டு செய்தார். சிலருடைய விருப்பப்படி திருநெல்வேலிப் புராணத்தை உரைநடையாக எழுதி வெளியிட்டுள்ளார். திருச்சி, அ. சுந்தரநாதப் பிள்ளை, மு. கோவிந்தசாமிப் பிள்ளை, திருநெல்வேலி உமையொருபாகம் பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கoஉ. அழகிய திருச்சிற்றம்பல தேசிகர்

இவர் தருமபுர ஆதீனம் எட்டாவது பட்டத்துச் சுவாமிகளைக் குருவாகக் கொண்டவர். இலக்கண இலக்கியப் புலமையும் ஞானநூற் புலமையும் ஒருங்கே பெற்றவர். தம் ஞானாசிரியர்மீது கிளிவிடுதூது, என்னும் நூலை இயற்றியவர். மற்றும் அறிவானந்த சமுத்திரம், விஞவுரை, திரிபதார்த்த தீபம், சித்தாந்த நிச்சயம், அறுட்டான விதி, உசாத்தான தோத்திரம், அருட்பாமாலை முதலியன இவரால் இயற்றப்பட்ட நூல்கள். சொர்க்கபுரம் மடாலயத்தை உண்டாக்கியவரும் இவரே. இவருடைய பெருமையைக் கேள்வியுற்ற தஞ்சை மன்னர் பாபுசாகிபு ஏகோசி II இவருக்கு நிலங்கள் பல வழங்கியுள்ளார். மகாராணி சுசாஞபாய் இவர் சிட்டையில் இருக்கும் கோலத்தைக் கண்டு வணங்கி

அருள்பெற்றதாகக் கனவு கண்டார். சொர்க்கபுரத்திற்கு வந்து தேசிகரை வணங்கிச் சில மானியங்கள் விடுத்துச் சென்றார். இந் நிகழ்ச்சி கி பி 1737-இல் நடந்தது.

## ௧0௩. அழகுநாச்சி

திருச்செங்கோட்டிலே உள்ள அர்த்தநாரீசுரர் கோவிலில் தொண்டு செய்துகொண்டிருந்த இவள் கல்வி கேள்விகளில் வல்லவளாகச் சிறந்து விளங்கினாள். அக்கோயிலுக்கு வந்த பாலபாரதியார் என்னும் புலவரைப் போற்றிப் பாராட்டிய துடன் சர்க்கரைப் பொங்கலுக்கும் சிவபிரானுக்கும் சிலேடை யாகச் செய்யுள் ஒன்றைப் பாடுமாறு அப்புலவரை வேண்டிப் பாடச் செய்தவள் பிறகு பாலபாரதியார், வரடிகல்லுக்கும் விலைமகளுக்கும் சிலேடையாக ஒரு வெண்பாப் பாடுவாயாக என்று கட்டளையிட்டபோது,

> "மேகம் உறையுதலால் வேண்டினபேர் சுற்றுதலால்
> நாகமலை மீதிலுற நண்ணுவதால்—யோகர்புகழ்
> ஆசுமது ரம்பாடும் ஐயாசுப் பையாகேள்
> தாசியெனும் வந்திகல்லுந் தான்."

என்று பாடியதல்லாமல்,

> "கல்லும் இளகும் உனதமுத கவிகள் கேட்ட எனதுசெவி
> அல்லும் பகலும் என்னஉண வருந்தும் ஐயா வேதமங்கை
> வல்லி முளைத்த நண்ணுவூர் வாழ்வே வால பாரதியே!
> சொல்லுந் தமிழுக் கேழுகடலே சொல்லாய் கலைகள் வல்லோயே"

என்றும் பாலபாரதியாரைப் புகழ்ந்து பாடியவள்.

## ௧0௪ அறம் வளர்த்தான்

இவர் பதினேழாம் நூற்றாண்டில் இருந்த ஒரு புலவர். சிவ வழிபாட்டு முறைகளை நன்குணர்ந்த சைவர். வடமொழியையுந் தமிழ்மொழியையும் நன்கு பயின்றவர். இவர் அநுட்டான விதி, தத்துவ ரூபம், பரதசாரசங்கிரகம், அவிநயக்கிரந்தம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார் என்பது,

> "சந்ததமும் புரியும்அநுட் டானவிதி
> யின்பூசைத் தத்துவ ரூபம்

செந்தமிழின் விருத்தமுமுன் சேர்பரத
விரிவனைத்தும் தேர்ந்து பொன்னின்
அந்தமெனப் பரதசார சங்கிரகந்
தன்னொடவி னயக்கிரந்தம்
தந்திசெய் தறம்வளர்த்தான் ஆசிரியத்
தாற்புவிமேல் நாட்டி னானே ''

எனவரூஉஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது. அவிநயக் கிரந்தம் என்பது கூத்தின் இலக்கணங்களைக் கூறுவது,

" அரிய நிருத்தாண் டவம்நிர்த்தம் நாட்டியங்
குரவைவரி கோலம்வகைக் கூத்தேழ்—பரவுமிது
சாந்தம் விநோதம் வகைக்கூத் தெனமூன்றாய்
ஓர்ந்துணர்ந்தோர் ஆய்ந்த உரை.''

என்பது பரத சங்கிரகத்தில் ஒரு பாட்டு.

## ௧௦௫. அறிவானந்த அடிகள்
### (20—நூ.)

இவர் உடையார்பாளையம் என்னும் ஊரினர். காஞ்சிபுரம் சரவணானந்த சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். இவர் திருக்கல்லங் குறிச்சிக் கலியுகப் பெருமாள்மீது தலப்பிரபந்தம் என்னும் நூல் இயற்றியுள்ளார்.

" அருணனே போற்றி போற்றி
அகண்டனே போற்றி போற்றி
தருணனே போற்றி போற்றி
தருமனே போற்றி போற்றி
தெருளனே போற்றி போற்றி
இன்மையா போற்றி போற்றி
கருணனே போற்றி போற்றி
கம்பனே போற்றி போற்றி.''

என்பது கம்பப்பெருமான் போற்றி மாலையில் ஒரு பாட்டு.

## ௧௦௬. அனந்தராமையர் - இ. வை
### (1872—1931)

தஞ்சைமாவட்டத்திலே உள்ள இடையாற்று மங்கலம் என்னும் ஊரில் பிறந்தவர். தந்தையார் பெயர் வைதீச்சுர ஐயர்.

தாயார் பெயர் தையலம்மாள். சிறந்த தமிழ்ப் புலவர். வட மொழி கற்றவர். நினைவாற்றல் மிக்கவர். செய்யுள் இயற்றுந் திறமுடையவர். கும்பகோணம் நகர உயர்நிலைப்பள்ளி, மயிலாப்பூரில் உள்ள பென்னாத்தூர் சுப்பிரமணியம் உயர்நிலைப்பள்ளி, கும்பகோணம் கல்லூரி, சென்னை மாகாணக் கல்லூரி ஆகியவைகளில் தமிழாசிரியராக இருந்தவர். கலித்தொகையைக் குறிப்புக்களோடு வெளியிட்டிருக்கிறார். களவழியையும் இவர் வெளியிட்டிருக்கிறார். இவர் மறைந்த தேதி 26—12—1931.

இவர் வீரவனப் புராணம் என்னும் நூலுக்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

"கூறுபுது வயல்வாழ்வோன் வினைதீர்த்த
வேள்புதல்வன் குறைவி லாச்சீர்
ஏறுநய சுகுணமிகு மியல்புடையான்
வீரப்பன் எனும்பே ரானும்
வீறுபெற முயன்றெழுதா எழுத்தினிமை
வித்துற்ப வித்த தற்குப்
பேறுபுகழ் எனப்பெற்றார் இவர்களுடை
முயற்சியெம்மால் பேசற் பாற்றோ?"

## கஎ. அனவரதவிநாயகம் பிள்ளை - சு. (1877—1940)

தந்தையார் பெயர் சுப்பிரமணிய பிள்ளை. தாயார் பெயர் ஈசுரவடிவு அம்மாள். சென்னை கிறித்தவக் கல்லூரியில் தத்துவ பாடம் படித்து, பி. ஏ. வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சிபெற்றார். எம். ஏ.யில் தமிழ் படித்து நச்சினார்க்கினியரைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினார். கிறித்தவக் கல்லூரியில் முதலில் போதகராகவும், பிறகு உள்நாட்டு மொழிகட்கு மேற்பார்வையாளராகவும் பல ஆண்டுகள் வேலை பார்த்தார். கொழும்புப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகவும், சென்னைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் லெக்சிகன் உறுப்பினராகவும், தமிழ் ஆராய்ச்சியாளராகவும் இருந்தார். இவர் இயற்றிய நூல்கள் நச்சினார்க்கினியர், சைவசித்தாந்த வரலாறு, ஔவையார், ஏசுநாதர், தமிழ்ப் பெருமக்கள் வரலாறு, மாணவர் தமிழ் அகராதி, பழமொழி அகராதி முதலியவை. பல தமிழ் நூல்களை ஆராய்ந்து அவைகட்கு முன்னுரை எழுதியிருக்கிறார். பிறந்தது

20-9-1877. இறந்தது ஏப்ரல் 1940. வருண சிந்தாமணி என்னும் நூலுக்குப் பின்வரும் பாடல்களை இவர் சிறப்புப் பாயிரமாக வழங்கியுள்ளார்:

"வேதமுதற் பலகலைகள் விளங்குமொரு
நாடகசாதி மெய்ம்மை சுற்றும்
பேதமுறா வகைவெளிநின் கற்றோர்க்கும்
கல்லார்க்கும் பிறங்கும் வண்ணம்
போதமுறு வருணசிந்தா மணியெனு நூல்
கூட ஆர்ப புகழ்வேளாளா
மாதவத்தால் வருகனக சபைவள்ளலை
மையரந்தன்பின வழங்கினால்.

எத்துறையும் இலாமன் ஆரியமும்
திராவிடமும் எனும்வே தங்கள்
புகுநியா யமுமேனைப் புராணவிதி
கரமுதற் புகலு மெய்ப்பமைத்
தக்கபல நூல்களினும் உள்ளநியா
யமும்இந் நூல் தகவுற் றோங்கத்
தொக்கவுதா ரணமாகக் காட்டினான்
இவனபெருமை சொல்வார் யாரே"

## க0அ. ஆசாரியர் அநிருத்தர்

இவர் முத்தரையர்க்கு ஆசிரியராகவோ சைன முனிவருள் ஒருவராகவோ இருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றனர். இவர் பாடிய கட்டளைக் கலித்துறைப்பாடல்கள் பல கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

## க0கூ. ஆதிமூலம் பிள்ளை
(1869)

இவர் காரைக்காலில் நெடுங்காடு என்னும் ஊரில் இலக்கிய இலக்கணப் பாடசாலை யொன்றில் ஆசிரியராக இருந்தார். இலக்கண இலக்கியங்களில் வல்லவர். இவர் புதுவை சவராயலு நாயகர் மீது,

"காரேறு பூம்பொழிலும் கமலமலர்த்
தடம்பலையும் கயற்கண் வேய்த்தோள்
வாரேறு பூண்முலையார் உலவுமணி
மாடமுமா வளமு மங்கும்

*சீரேறு புதுவையில்வாழ் தாரேறு*
*புயச்சவரா யலுமால் சிற்றத்*
*தோரேறு புலவருக்கெனை ற,பிருர்வியந்*
*திடிற்சிறியேன் உரைப்ப தென்னே.''*

என்பது முதலிய ஐந்து பாடல்கள் பாடியிருக்கிறுர். திருக்கோவையார் நூலைப் பொன்னுச்சாமித்தேவர் அச்சிற் பதிப்பித்த போது அந் நூற் பிரதியொன்று அனுப்பவேண்டும் என்று அவருக்கு இவர் எழுதிய பாட்டு :

*''மருவாருங் கொன்றைபுனை ந் தொளிர்நடனத்*
*தொருபரன்சீர் வழுத்துங் கோவை*
*திருவாரு முத்தமிழ்தேர் நச்சிஞர்க்*
*கினிய .ரை சிறக்க அச்சில்*
*தருவாரும் புதுவைபொன்னு சாமிமகி*
*பாபதிப்பித் தனையாம் பொல்லாக்*
*கருவாரும் பிணிநீக்கக் கோவையிலொன்*
*றெனக்கருளிக் களிப்பாய் மன்னே.''*

## கக௦. ஆதிமூர்த்தி - பா
## (20—நூ.)

இலக்கண இலக்கியப் பயிற்சிமிக்கவர். பல உரைநடை நூல்களும் செய்யுட்களும் இயற்றியுள்ளார். ''வெற்றியும் மன நிலையும்'' என்னுந் தலைப்பில் இவர் பாடிய பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

*''இழிவுளேன் எனில் எய்துவை அந்நிலை*
*ஏற்றம் எண்ணில் இலங்கி உயர்தியால்*
*மொழியும் வெற்,ி வருவதன் முன்னரே*
*முந்த உன்வலி கொண்டு முயனுதி*
*வருவில் வேகமும் வன்மையும் வென்றிடா*
*வாழ்க்கை யாருசமர் நாளும் மதித்திடின்*
*பழுதில் வெற்,ிக் காணும் அவனதே*
*பார்இயற்றுவன் என்பவன் பாவினே.''*

தமிழ்நாட்டில் தோன்றித் தமிழ்ப்புலமை பெற்ற இவர் காசியிலும் வசித்திருந்தார் என்று தெரிகிறது.

## ௧௧௧. ஆதிமூலப் பாவலர் - ரா

இவர் ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன்பு நெடுங்காடு என்னும் ஊரில் வசித்திருந்தவர். பதார்த்தகுண சிந்தாமணி முதலிய நூல்களை ஆராய்ந்து அச்சிட்டவர்.

"திருவளர் மார்பனும் திசைமுகத் தொருவனும்
இருநிலங் கீண்டும் இவர்ந்துவின் புகுந்தும்
அடிமுடி காணாட் டரியவன் கடலெழு
கடுவமர் களத்தன் கண்ணுதற் பெருமான்
இருட்டி யாதியைத் தொழின்புரி செல்வன்
திருத்தம் பயில்வான் நித்தியன் உத்தமன்
கற்றவர் உண்ணுங் கற்பக நறுங்கனி
பற்றவா வறுத்தோர் பருகுதென் னமிர்தம்
வேத முடியின் விளங்கு மெய்ப்பொருள்
பூதமை தாயொளிர் புண்ணிய மூர்த்தி
கங்கை வேணியன் கடுக்கையந் தாரன்
திங்கள் சூடிய செம்மல்செம் மேனியன்
வெள்ளியங் கிரியில் வீற்றிருந் தருள்வோன்
உளமக களிகூரத் துமையவட் கன்று
செப்பிய அற்புத சிந்தா மணியை
.. . .. . . . ... ."

என்பது இவர் பதார்த்தகுண சிந்தாமணி முகப்பில் பாடிய சிறப்புப் பாயிரமாகும்.

## ௧௧௨. ஆதிமூல முதலியார்

முன்னாளில் சென்னையில் இருந்த தமிழ்ப்புலவர்களில் இவரும் ஒருவர். உவின்ஸ்லோ அகராதி எழுதப்பெற்றபோது இவரும் துணைபுரிந்தார். கதாசிந்தாமணி என்னும் நூலின் கதைகளை முறைப்படுத்தி எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தியவர்.

## ௧௧௩. ஆதியப்பனார்

இவர் ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன் தருமபுர ஆதீனத்திலே அழகிய சிற்றம்பல தேசிகர் காலத்திலே புலவராக இருந்தார். வடமொழியிலும் தென்மொழியிலும் புலமை

மிக்கவர். இவர் திருக்களர்ப் புராணத்தை வடமொழியில் இருந்து தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார் :

> "தொண்டர்தமக் கரனுதவாப் பொருளொன் றுண்டோ
> தொல்லுலகில் சிவனடியார் பெருமை சோதித்
> தண்டர்தொழும் சிவபெருமான் அறிவ தன்றி
> அகிலகோ டியிலொருவர் அடியார் காள
> கண்டன்மிகு பெருமைதனை அவரே யன்றிக்
> கருதுவா ரிலையதனுல் கமலத் தோனின்
> தெண்டிரையில் துயிலுமவோனின் தேவர் தம்மின்
> சிவனடியார் பெரியரெனச் செப்ப லாமால்."

என்பது புராணத்தில் நிருத்தச் சருக்கத்தில் ஒரு பாட்டு. ஆதியப்பனுர் என்பதைச் சிலர் ஆடியபாதனுர் என்றும் எழுதி யிருக்கின்றனர்.

## கக௪. ஆதிவராக கவி

சோழவள நாட்டிலே வேதியர் குலத்திலே சைவசமயத்திலே தோன்றியவர். காந்தருவப் பெண்ணுகிய காதம்பரி என்பவளை அவந்திநாட் டரசனுகிய சந்திராபீடன் என்பவன் மணஞ்செய்த கதையை விரித்துரைக்கும் காதம்பரி என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

> "பாற்கடற் சென்ற பூசை பாலின்மேல் ஆசை வைத்து
> மேற்கொள வரினும் எல்லா வெள்ளமும் கொள்ள வற்றே
> பாற்கடல் அனைய காதம் பரிக்கடற் பரப்பி லாசை
> மேற்கொளும் என்றன் நெஞ்சம் வேண்டுவ கொள்ளு மன்றே."

என்பது நூலின் பாயிரம்.

## கக௫. ஆதிவாயிலார்

இவர் பரத சேனுபதியம் என்னும் நாடக இலக்கண நூல் ஒன்றை இயற்றினுர். அடியார்க்குநல்லார் காலத்திற்கு முற்பட்டவர். இப்பொழுது அந்நூல் இல்லை. மறைந்துவிட்டதாகத் தெரிகிறது.

## கக௬. ஆத்திரையர் பேராசிரியர்

தொல்காப்பியர் காலத்திலிருந்த புலவர்களில் ஒருவர். இவர் தொல்காப்பியத்திற்குப் பொதுப்பாயிரம் பாடியுள்ளார்.

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமும்
திங்க ளன்ன கல்வியும் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவது
அஃகா அன்பும் வெஃகா உள்ளமும்
துலைநா அன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பினர் ஆகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாளாண் மையும்
உலகியல் அறிதலும் நிலையிய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்த்துஞ் சொல்வன் மையும்
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்
இன்னோர் அன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர்
அறனே பொருட்பயன் இன்பெனும் மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய எண்வகை உறுப்பினுள்
ஏற்பன உடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்
தன்னோர் அன்னோர்க்குத் தான்பயப் படுதலும்
செய்ந்நன்றி அறிதலும் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்றம் மானம்போச் சாப்புக்
கடுநோய் சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையும் குறிப்பறிந் தொழுகலும்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலும் உரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே."

இதனல் இவர் பழம்பெரும் புலவர்களில் ஒருவரென்பதும் பேரறிஞரென்பதும் பெறப்படும்.

## ககஎ. ஆத்துமாநந்த அடிகள்

இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக் குறுக்குத்துறை முதலிய இடங்களில் தங்கியிருந்தவர். வேதாந்த நூற்பொருள்களை நன்கு ஆராய்ந்துணர்ந்து ஆத்துமாநந்த விளக்கம் என்னும் நூலையும் திருப்போரூர்ச் சிதம்பர தேசிகர் அந்தாதி என்னும் நூலையும் இயற்றி யிருக்கிறார்.

ஆத்துமாநந்த விளக்கம் என்னும் நூல் ஆசிரிய விருத்தம், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூவகைப் பாக்களா னியன்றது. ஞானசாதனவியல், நிலையியல், பயனியல், அடைந்தாரியல், பொய்வேட வொழிபியல், அவிவேகியியல், இரங்கலியல், உற்றதுரைத்தலியல், உறுவது கூறலியல் என ஒன்பது வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

"எங்குநிறை பாற்கடலுள் அநவரதங்
கள்வெறியன் இருந்தானேனும்
அங்கதனை அருந்தாமல் விரும்புகள்ளே
துருவியழுங் குறுமா றெனப்பக்
கங்குலைபகல அறுஞான சுகத்திருந்தும்
அஞ்ஞானக் கட்டுட் பட்டோர்
பங்கமறு விடயமெங்கே எனத்தேடித்
தேடிமனம் பதைக்கின் றாரே."

என்பது ஆத்துமாநந்த விளக்கத்தில் ஒரு பாட்டு. இந் நூலைப் பாராட்டி, அரிமளம் சிவானந்த அடிகள், சிவஞானபுரம் இலக்கணமுத்துக் கவிராயர், இராசவல்லிபுரம் சங்கரசுப்பிரமணிய பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திறம்வேண்டினை நல்ல செயலைவேண்டிற் சேமம்
பெறவேண்டிற செத்துப் பிறவா—நெறிவேண்டிற்
செய்யதிருப் போரூர்ச் சிதம்பரப்பேர்த் தேசிகற்கு
மெய்யடிய ராகி விடும்."

என்பது சிதம்பர தேசிகர் அந்தாதியில் ஒரு பாட்டு. இந் நூலைப் பாராட்டித் திருவண்ணாமலை ஈசானிய மடம் நடேச அடிகள் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளனர்.

## ககஅ. ஆநந்தக் கூத்தர்

இவர் பாண்டிவள நாட்டில் தாம்பிரபரணி யாற்றுக் கரையில் உள்ள விரவநல்லூரிற் பிறந்தவர். நல்லாசிரிய ரிடத்திலே தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும் இலக்கிய நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர். சைவ நூல்களினும் மிகுந்த பயிற்சியுடையவர். இவருடைய அறிவாசிரியர் பெயர் சத்தியஞான தேசிகர். இவர் சிவப்பதிகளுக்குப் பயணஞ் செய்துகொண்டு திருக்காளத்தியை அடைந்து இறைவழிபாடு செய்துகொண்டு தங்கியிருந்தார். அப் பதியிலிருந்த தமிழ்ச் சான்றோர்கள் இவருடைய தமிழ்ப்புலமையை உணர்ந்து திருக் காளத்திப் புராணத்தைத் தமிழிற் பாடுமாறு வேண்டிக்கொண் டனர். இவர் அவர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி அவ்வாறே பாடிமுடித்தார். இவருக்கு வடமொழி நூலை மொழி பெயர்த்துக் கூறியவர் சங்கரநாராயணையர் என்னும் ஒரு மறையவராவர். இவருடைய செய்யுளின் இனிமையை அறிந் தவர்கள் இவருக்குப் பரிமள கவிராயர் என்று சிறப்புப் பெயர் சூட்டினர்.

"பூவுல கதனில் தேவுல கெனலாம்
பொன்முக ரித்திரு நாடு
தேவுல கதனில் திருவுல கெனலாம்
திகழ்திருக் காளத்தி மூதூர்
மூவுல குளரு முதலுல கிதுவே
முருகவிழ் நறியகற் பகப்பூங்
காவுல கதனில் அமரர்மாத் திரையே
கடவுளர் யாவரும் இங்கே."

என்பது புராணத்தில் ஒரு பாட்டு.

## கககூ. ஆநந்த பாரதி

இவர் பாண்டிவள நாட்டில் குன்றக்குடியில் காசிச்சாமி மடம் என்னும் மடத்தில் துறவியாக வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களையும் வேதாந்த நூல்களையும் நன்கு கற் றுணர்ந்தவர். பொதுத்தொண்டிலும் பற்றுக்கொண்டு பணி புரிந்தவர். இவர் சில வேதாந்த நூல்களும் வேறு சில வகை நூல்களும் இயற்றியிருக்கிறார்.

"சுத்தமாஞ் சுகவாரி எங்குநிறை பொருளெனும்
சூட்சத்தை அறிய வல்லீர்
சுயராச்ய மாகவே இந்தியர்கள் அனுபவச்
சுகமதைக் காட்ட வல்லீர்
எத்தேச மாந்தரும் சாந்தத்தில் ஆழ்ந்திடும்
இன்பங் கொடுக்க வல்லீர்
இணையிலா அரசர்முதல் ஏழைகளுஞ் சமமாய்
இருக்கவகை காட்ட வல்லீர்
பத்தருஞ் சிநேகருடன் பகைவரும் ஒருமையாய்ப்
பார்த்துமெய் அறிய வல்லீர்
பார்முழுதுஞ் சமரசஞ் சாத்மீகஞ் சாந்தமும்
பரவுதற் குரைக்க வல்லீர்
கர்த்தனென் றிடுபொருளை எத்தேச மாந்தர்க்குங்
கருணையென் றருள வல்லீர்
காந்திமகான் என்றகன புண்யனே! கதர்பெருத
காட்சிதந் தாள்க நிதமே."

என்பது இவர் பாடிய காந்திமகான் தோத்திரத்தில் ஒரு பாட்டு. இவர் சில ஆண்டுகட்கு முன்புதான் காலஞ்சென்றார்.

## கஉ0. ஆபத்தாரணர்

இராமநாதபுரம் மாவட்டத்திலே யுள்ள மருதூர் என்னும் ஊரிலே ஆபத்தாரணர் தோன்றினார். இந்த மருதூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீதுதான் தலைமலை கண்ட தேவர் மருதூரந்தாதி என்னும் நூலைப் பாடினார். ஆபத்தாரணருடைய காலம் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இருக்கலாம் என்று எண்ணுகின்றனர். இவர் தருமபுர ஆதீனத்தில் எழுந்தருளியிருந்த குருஞான சம்பந்தருக்கு மாணவராக அமைந்து சைவசித்தாந்த நூல்கள் பலவற்றைக் கற்றுத் தேறினார். பூகோள விலாசம் என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றது. அந்நூலில் அண்டங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளன. புவனங்கள், திசை காப்பாளர்கள், கண்டங்கள் முதலியவற்றின் தன்மைகள், விளைபொருள்கள், மக்களியற்கைகள் முதலியன விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. இடையிடையே மருதூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் பெருமையும் எடுத்துக் கூறப்படுகின்றது.

"தமிழ் மணம் கமழும்
காழி யம்பதி வாழ்
ஞானசம் பந்தனை வணங்கின்
ஞானசம் பந்தம் இனிவி டேனிதே."

என்பது பூகோள விலாசத்தின் காப்பு.

அந்நூலின் பூகோள வரலாறு,

"ஆடகமா மேருமலை யாயிருக்கும் பூமிதனைக்
கோடிபல [illegible] யாய்க் கொண்டிருக்கும்—நாடியிங்கு
[illegible] நோயறுநோட் டாயிரமாம்
[illegible] தாங்கிநிற்பான் சேடேந்திரன்—இன்னுமிந்தப்
பூமியினை [illegible] பூவலகின் தன்மை
[illegible] —தெரியனச்
[illegible] தாமதித் தெவழில்
[illegible] தாயைந்தே—வாகுமதின்
சுற்றினை [illegible] தொகையுமொரு நூல நிலைக்கத்
[illegible] யோசனையா—மற்றுமிதன்
[illegible] யோசனையும்
தாபுவிகா ரிலைக்கத் தானுந்தும்—சூழ்கின்ற
தெற்கு வடக்குந் திசையளவும் ஓரிலக்கம்."

என்று கூறப்பெறுகிறது.

## கஉக. ஆபத்துக்காத்த பிள்ளை

மதுரை மாவட்டம் மேலூர்ப்பிரிவு சொக்கம்பட்டியில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். மாம்பழக் கவிச்சிங்க நாவலர் காலத்தில் வாழ்ந்திருந்தவர். எச் சபையிலும் கேட்பவர்கள் [illegible] டயுமாறு பேசத்தக்க ஆற்றல் அமைந்தவர். இவர் தம்மூரில் கிராமத் தலைவராகவும், மருங்காபுரிப் பெருநிலக் கிழாரிடம் மேலாளராகவும் இருந்தார். உரைநடை வடிவாகச் செய்யுள் அமைப்பதில் மிகவுங் கெட்டிக்காரர். காலக் கணிதத் திறமும் வல்லவர். இவர் திருவாவடுதுறைச் சுப்பிரமணிய தேசிகரைக் கண்டு வணங்கியபோது,

"திருவாவடுதுறைப் பண்டார சந்நிதி யவர்களைத்
தெரிசனஞ் செய்த அடியார் சிகத்தில் சிறந்தவைசு
வரியபூத தேவப் பிரசாதமும்பெற்று வாழ்ந்துபின்பு
பரலோக சாதகமும்பெறுவாரென் பதுநிசமே."

என்று பாடினார். இதனை உரைநடையாகவும் படிக்கலாம்.

## ௧௨௨. ஆராவமுதாசாரியர்

இவர் பாண்டிவளநாட்டிலே திருக்கானப்பேருக்கு அண்மையில் உள்ள திருச்சுழியல் என்னும் ஊரில் இருந்தவர். திருச்சுழியலின் சிறப்பைக் கூறுவதாகிய திருச்சுழியற் புராணம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

> "பண்டொரு காலந் தன்னில் பாரத கண்ட வைப்பில்
> தண்டமிழ் மலயக் குன்றம் தழுவிய பாண்டி நாட்டில்
> கொண்டல்கண் படுக்குஞ் சோலைக் கூடலம் பதியில் வாழ்வோன்
> மண்டலம் புரக்குங் கோமான் பராக்கிரம வழுதி என்பான்."

என்பது பாண்டியன் பிரமகத்தி தீர்த்த சருக்கத்தில் ஒரு பாட்டு.

இவர் திருக்குருகூர் ஞான சித்தருடைய நூலுக்குச் சிறப்புப் பாயிரங் கூறியுள்ளார். சில பாடல்களை அடியிற் காண்க:

> "எண்ணிலா யுகங்களெலாம் தமக்கொருநா
> ளாகவெண்ணி இலங்குஞ் சித்தர்
> புண்ணியமெலாந் திரண்டோர் வடிவெடுத்திப்
> புவியினில்தெக் கணதே யந்தான்
> பண்ணியநல் தவப்பயனால் குருகூரில்
> கங்கைகுல பதியாய்த் தோன்றி
> விண்ணிலுளோ ரும்புகழக் கலியையபா
> யிரத்துட்பல் வெள்வி செய்தும்."

> "சித்தனெனப் பெயரெடுத்துச் சித்திகள்பற்
> பலபுரிந்தும் சித்தர்க் கான
> பத்திவழி பாடியற்றுஞ் சபையொன்று
> மூவிடத்தும் படைப்பான் என்ற
> உத்தமர்வாக் குப்படியே உதித்தவன்பல்
> தலங்கள்தொறும் ஓதும் பாக்கள்
> எத்தலமும் நிறைந்திடுஞ்சீர் எவரறியார்
> ஞானசித்தன் என்னும் பேரே."

> "அப்பெரிய மாதவத்தோன் அருமறையந்
> தணர்நிறைந்த அரங்கம் மேவி
> சுப்பிரம மாருமழ கியமணவா
> ளப்பெருமான் சுடர்பொற் றாள்மேல்
> எப்புவனங் களும்வியக்கத் தமிழ்ப்பாவால்
> திருமாலை இனிது சாத்தி
> செப்பவொணாப் புகழுடைந்தான் ஆறிருபா
> கமும்முடித்த செல்வன் அம்மா."

## க௨௩. ஆரியங்காவல் பிள்ளை

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர்களில் ஒருவர். திருநெல்வேலிப் பக்கத்தைச் சேர்ந்த சைவர். திருமணமானபின் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களை யடைந்து கல்வி கற்று வல்லவரானவர். ஒருநாள் இரவில் உறக்கம் பிடியாமல்,

'விடவாளை வென்ற விழியாளைப் பூமியின் மேலதிர
நடவாளைப் பெண்களுந் நாயக மாமொரு நாயகத்தை
மடவாளை என்னுள் வதிவாளை இன்ப வடிவை என்சொல்
கடவாளை யான்தெய்வ மேயென்று போயினிக் காண்பதுவே.''

என்று பாடிக்கொண்டிருந்ததைப் பிள்ளையவர்கள் கேட்டு, அவர் பிரிவுத்துயரால் வருந்துகிறார் என்றுணர்ந்து, மனைவி பெற்றோர் முதலியோர்களை வரச்செய்து அவர்களுடன் தங்கியிருந்து கற்கச் செய்தார்.

## க௨௪. ஆரியப்ப புலவர்

இவர் கும்பகோணம் என்று வழங்குகிற திருக்குடந்தை நகரிற் பிறந்து வளர்ந்து சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்தார். இவருடைய புலமை பலராலும் வியந்து பாராட்டத் தக்கதாக விளங்கியது. இவர் பதினெண் புராணத்துள்ள விட்டுணு புராணம் நான்கனுள் ஒன்றாகிய பாகவத புராணத்தைப் பாடினார். அதில் 155 அத்தியாயங்களும் 4970 செய்யுட்களும் உள்ளன.

"சீர்பூத்த பேரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானவிடை
நீர்பூத்த தெய்வவுலகம் நிறைந்தொளிதன் பால்தோன்ற
வார்பூத்த முத்தொழிலும் இனிதியற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக் கடவுண்மலர் அடிநினைவாம்.''

என்பது பாகவதப் பாடல்களுள் ஒன்று. இவருடைய பாகவதம் ஆரியப்ப புலவர் பாகவதம் என வழங்குகின்றது. இதனைக் கோமளபுரம் இராசகோபால பிள்ளை என்பவர் வெளியிட்டிருக்கிறார். இவருடைய புலமையை வியந்து ஒருவர்,

"கம்பனென்றும் கும்பனென்றும் காழிஒட்டக் கூத்தனென்றும்
தும்பமுனி என்றும்பேர் கொள்வரோ—அம்புவியில்

மன்னு வலர்புடைசூழ் வாழ்குடந்தை ஆரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்.''

என்று புகழ்ந்து பாடியுள்ளார்.

## கஉரு. ஆரோக்கிய நாயகர்

(கி. பி. 19—நூ.)

இவர் முன்னோர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்து பின்னர்ச் சென்னையிற் குடியேறினர். இவர் சென்னை பெரியமெட்டில் வாழ்ந்திருந்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சௌரிமுத்து நாயகர். ஆரோக்கிய நாயகர் தேம்பாவணியைக் கீர்த்தனையாகப் பாடியுள்ளார். இந் நூலைப் பாராட்டி, செல்வராசு ரெட்டியார், தாவீதுநாதசுவாமி, ஞானப்பிரகாச சுவாமி, திருத்தணிகை விசாகப்பெருமாளையர், அட்டாவதானம் வீராசாமி செட்டியார், பங்காரு ரெட்டியார், புதுவை அப்பாவுபிள்ளை முதலியார், வேலுப் பிள்ளை, முத்துப்பிள்ளை, நயினுத்தை அபரா முதலியார், புதுவை கனகராய முதலியார், யாழ்ப்பாணம் சி. வை தாமோதரம் பிள்ளை, யாழ்ப்பாணம் தெல்லிப்பிழை சிதம்பரம் பிள்ளை, புதுவை மலையப்பிள்ளை, புதுவை சவராயலு நாயகர், சவரிநாத முதலியார், தஞ்சை அருளப்ப முதலியார், புதுவை சி. மாணிக்க நாயகர், புதுவை அந்தோணிமுத்து நாயகர், நெல்லித்தோப்புச் சவேரியப்ப உபாத்தியாயர், முருகேச பண்டாரம், கோமளீசுரன் பேட்டை இராசகோபால பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கின்றனர்.

''ஆதியுமாய் அந்தமுமாய் ஒன்றாய் மூன்றாய்
அண்டபிண்ட பூரணமாய் நிறைந்த ஞானச்
சோதியுமாய்த் தெய்விகமாய்ப் பரமாய்த் தானாய்ச்
சுயமூல காரணமா யிறுதி கால
நீதியுமாய் நிர்மலமாய் அருவாய் எங்கும்
நின்றபிரான் திருவுபய சரணுக் காளாய்
வேதவடி வாகவந்த சூசை மீதில்
வியஞ்சொல்வே னுடகத்தோ டயஞ்சொல் வேனே.''

என்பது நூலில் சூசையப்பர் தோத்திரம்.

## கஉகூ. ஆவுடையப்ப செட்டியார் - பி

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் அம்பா சமுத்திரம் தாலுகா வடக்குக் காருகுறிச்சி என்னும் ஊரில் இருந்தவர். ஆழ்வாரப்ப பிள்ளை எனவும் முருகதாச சுவாமிகள் எனவும் பெயர் பெற்றிருந்த அறிஞரிடம் இலக்கண இலக் கியங்கள் கற்றுப் புலமைபெற்று விளங்கினர். தம் ஆசிரியர் இயற்றிய நூல் ஒன்றுக்கு இவர்,

> "எண்ணே நிலக்கண விலக்கியமுத நீரேகித்
> தண்ணேறுஞ் சம்பரத்தைத் தாண்பருகிப்—பண்ணேறிச்
> சாருந் தமிழ்வானு தனிலசைந்து தாரணங்கொண்
> டிருஞ்செய் யுட்செல் லுறந்தாககிச்—சேருமனு
> மேனைக் கவிஞ்சவ மின்விசி வேண்டியசொற்
> கானக் கவிசெய் கனபுலவர—ஆனபயிர்க்
> காற்றில் வறந்தியல்பேர டாங்குறுகற பான்மகளிர்க்
> கேற்றநெறி யின்பா ரிலக்கணமாம்—தேற்றுமழை"

எனத் தொடங்கிக் கலிவெண்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளார்.

## கஉஎ. ஆறுமுக அடிகள் (க)

(18—நூ.)

இவர் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரியார் என்னும் பெயரால் கூறப்பெற்றுர். திருவண்ணுமலையிலே வாழ்ந்திருந்த குகை நமச்சிவாயருடைய மாணவராக அவரிடம் அருளுரை பெற்றவரென்று கூறுகின்றனர். குகை நமச்சிவாயரிடம் அரு ளுரை பெற்றபின் பெண்ணையாற்றங்கரையில் இருந்து வெகு நாள் தவஞ் செய்துகொண்டிருந்தார். பிறகு திருக்கோவலூர் ஆதீனத்தை அமைத்து அதில் இருந்துகொண்டு, பூங்கோட்டு அம்பலவாண அடிகள், சட்டமுனிகள், அவிநாசிநாத சுவாமிகள், அம்பலவாண சுவாமிகள், சம்பூரணபிரகாச சுவாமிகள் முதலிய மாணவர்களுக்கு அருளுரை வழங்கிக்கொண் டிருந்தார். இவ ருடைய மாணவர்களும் அறிவுநூல் இயற்றுந் திறமையுடையவர் களாக விளங்கியிருந்தனர். இவர் நிட்டானுபூதி முதலிய முப்பத் தொரு நூல்களை இயற்றினர். நிட்டானுபூதி நூலுக்கு முத்தி

சித்தாந்தம், வாசகர்மாலை, சுப்பிரமணிய பரம் பரம்பரியம்

ராமப் பிரமம் என்பவர் விரிவுரை இயற்றியுள்ளார். நூல் தொண்ணூற்றாறு பாடல்கள் அடங்கியது. வடமொழியில் இருந்து மொழிபெயர்க்கப்பட்டது.

> "பாவனா தீத நிட்டானு பூதி
> பரசிவன் உமைதனக் கருளத்
> தேவியும் மகிழ்ந்த வடமொழி அதனைச்
> செஞ்சடைப் பிரான்றிரு அருளால
> கோவல்வாழ் ஆறு முகசிவ ஞான
> குருபரன் தமிழினால் உரைத்தான்
> மேவுநற் பயனை உணர்ந்துசா தித்தோர்
> மேன்மைவீ டடைவது நிசமே."

என்பது சிறப்புப்பாயிரம்.

> "அன்னமயம் பிராணமயம மனோமயவிஞ் ஞான
> ஆனந்த மயத்தினுடன் ஐங்கோச மயமாய்
> இன்னன்மயம நீங்கியமெய்ஞ் ஞானியுளங் குகையாம்
> எப்போதும் நீங்காமல் இசைந்துமிக வாழ்வோன்
> பன்னரிய விரிவுவராஞ் சமனாதிகம் இவைகள்
> பகர்வரிதால் பிரமன்முதற் பண்ணவர்தம உளத்தில்
> உன்னரிய ஓம்நமசி வாயகுரு ராசன்
> உபயசரண் எமதுளத்தும் உச்சியினும் வைப்பாம்."

என்பது குருவணக்கப் பாட்டு. இவர் தொண்ணூற்றேழு வயது வரை வாழ்ந்திருந்து 1769 ஆம் ஆண்டில் வீடுபேற்றை யடைந்தார். 1832.

## ௧௨௮. ஆறுமுக அடிகள் (௨)
## (1893)

இவர் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் தம்பிரான்களுள் ஒருவராக இருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சிமிக்காராகிய இவர் திருப்பனந்தாள் காசி மடத்தலைவர் மீது இயற்றிய பாடல்களில் ஒன்று;

> "முன்னாளான்றோர் செய்தமைத்த முதிரும் பனசை மடாதீனம்
> சின்னாளதனிற் செலற்குரியர் அல்லார் சென்று சிறப்பெய்த
> இந்நாள அவர்கள் ஓட்டெடுப்ப எதிர்வா தஞ்செய் துடையகுரு
> தன்னான் கையிற் சேர்த்தருள்சா மிநாத முனிவர் தவமெனிதோ.

என்பது.

## ௧௨௯. ஆறுமுக அடிகள் (௫)

(19—நூ.)

இவர் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் விருத்தம், காமாட்சி யம்மன் விருத்தம் முதலியன பாடியுள்ளார். அவை வல்லூர் வேலாயுத உபாத்தியாயரால் பார்வையிடப்பட்டு அச்சாகி யுள்ளன.

> "சங்குவெண் குழையாய் சடையினை உடையாய்
> சங்கரி யிணைப்புற முடையாய்
> தங்கிய மழுமான் தரித்தகை யுடையாய்
> தனையுணர்ந் தறிந்திடும் அன்பர்
> அங்கையி னெல்லிக் கனியென உடையாய்
> அடியனேன் அகமிடம் உடையாய்
> எங்கணுந் தானு யிலகுமெய் யுடையாய்
> எந்தையே காம்பர நாதவே."

என்பது ஏகாம்பரநாதர் விருத்தத்தில் ஒரு பாட்டு.

இவர் திருவெண்காட்டில் வாழ்ந்திருந்தார் என்றும் பண்டார வகுப்பில் தோன்றியவர் என்றும், திருப்புகழ் முதலிய பல நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தியவர் என்றும், 1876-ஆம் ஆண்டிற் காலமானார் என்றுந் தெரிகிறது.

## ௧௩௦. ஆறுமுக தேசிகர்

இவர் செங்கோட்டையிலே வழிவழிச் சைவ வேளாளர் மரபிலே தோன்றியவர். திருவாவடுதுறையிலே சிவதீக்கை முதலியன பெற்று மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்களிடம் கல்வி பயின்றவர். திருவானைக்காவில் சிலகாலம் வசித்திருந்து பின் திருவண்ணாமலை யாதீனம் பண்டார சந்நிதி யாய் எழுந்தருளியிருந்தவர். 1888ஆம் ஆண்டிலே பாண்டித் தலம் பதினான்கனுள் ஒன்றான பிரான்மலை என்னுங் கொடுங் குன்றத்திலே இறைவன் திருவடிநீழலை யடைந்தார்.

இவர் சிவதீக்கை பெற்ற காலத்திற் பாடிய பாடல் களில் ஒன்று :

"இம்மைமுதல் எப்பயனும் எய்துவதெங்
கெனவாதிங் கென்றோ டாற்றும்
மும்மைமலங் களும்வேரோ டறக்களைந்த
பயனின்றே முற்றும் வண்ணம்
செம்மைசெய்தாண் டனையிதற்குக் காரணநின்
னருளன்றிச் சிறியேன் பால்முன்
எம்மையினுந் தவங்காணேன் துறைசையிற்சுப்
பிரமணிய எங்கோ மானே."

## கஈக. ஆறுமுகநயினார் பிள்ளை - த

இவர் தென்பாண்டிநாட்டிலே திருநெல்வேலிப் பேட்டையில், சைவவேளாளர் மரபில் தருமசிவ பிள்ளை என்பவருடைய நன்மகனாகத் தோன்றினார். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையிடம் இலக்கண நூல்களைக் கற்றுணர்ந்தார். விருதை சிவஞான யோகிகளிடம் சைவசித்தாந்தம் முதலிய நூல்களைக் கற்றுணர்ந்தார். புராணச்சொற்பொழிவுகள் பல இவரால் பல பேரவைகளிலும் நிகழ்ந்தன. ஈழவளநாட்டிற்குஞ் சென்று சமயத் தொண்டு செய்தார். நற்குடிவேளாளர் வரலாறு, மகாசைவர் புராணம் என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார். மகாசைவர் புராணம் முதலாவது தேவகிரிக் காண்டம் ஆயிரத்து அறுநூற்றுப் பதினைந்து பாடல்களைக் கொண்டது. உலகியல் முறைகளைச் சைவமுறைமைக் கேற்ப விரித்துரைப்பது.

"மற்றதன் பெயர்கள் கல்வியே படிப்பே
வாசனை விஞ்சையே வித்தை
சொற்றவை கற்கப் படுதலாஸ் கல்வி
தொடர்ந்தெழு மையுமனம் படிந்து
நிற்றலாற் படிப்பு வாய்மொழி மணந்து
நிலவலான் வாசனை உணர்வில்
பற்றலான் வித்தை உயர்த்தலான் விஞ்சை
பகர்பொருட் டிறனிவை தேர்மின்.

அருமைமா னுடர்க்காங் கைப்பொருள் இரண்டில்
அழிவுறுஞ் செல்வமொன் றேபொய்ப்
பொருள்பிறி தொன்று கல்விய தழிப்
புனலினும் அழிதரா தழலால்
கருகுறு தரசும் கவரவொண் ணுது
களவுபோ காதுகாப் பெளிது
பெருகுவ தன்றிக் கொடுக்கினுங் குறையாப்
பெட்பதக் கல்விமெய்ப் பொருளே."

என்பன கல்வியைப்பற்றிய இரண்டு செய்யுட்கள். இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடிய விருதை சிவஞானயோகிகள்,

"செந்தமிழ்ப் பாவால் தந்தவன் செல்வர்வாழ்
நெல்லைக் குடவயின் உள்ளநற் பேட்டைச்
சைவவே ளாளருள் மெய்வழா தோங்கும்
தவமார் தரும சிவவேள் அருளிய
மைந்தன் முதன்மொழிப் பைந்தமிழ் தேர்ந்து
மெய்ப்பொருள் வடிவாம ஒப்பனைத் தாய்தழூஉம்
பால்வணன் தாள்மரூஅச் சால்புடை மாதவச்
சுப்பிர மணியமால் ஒப்புநன் மாணவன்
ஒத்தகோட் டாற்றில் முத்தமிழ் வன்மை
மருதரத் தேசிக விநாயக மால்பால்
இலக்கணங் கற்றுத் துலக்குமெய் யோர்ந்தவன்
எம்பாற் பற்பல உண்மைகள் தேர்ந்தவன்
தென்மொழிக் கண்ணும் மன்னுசை வத்தும்
நீங்கா அன்புமிக் கோங்கும் அறிஞன்."

என்று குறிப்பிடுகின்றார்.

## கஙஉ. ஆறுமுக நாயகர் - கா.
### (20—நூ.)

இவர் காஞ்சிமாநகரில் தோன்றி இலக்கண இலக்கியங் களைக் கற்றுச் சிறப்புற் றிருந்ததன்றிப் பல நூல்களை ஆராய்ச்சி செய்து 'வருணதருப்பணம்' என்னும் நூலை இயற்றியுள்ளார். நூல் பலவகையான சாதிச் செய்திகளையும் தகுந்த எடுத்துக் காட்டுகளோடு கூறுகின்றது. நூலைப் பாராட்டி, உ. வே. சாமிநாதையர், பண்டித நாராயணசுதர்சன சாத்திரிகள், இலட்சுமணசூரி, மருவூர் கணேச சாத்திரியார், கா. கோபா லாசாரியார், தில்லையம்பூர்த் திருவேங்கடராமையங்கார், 'மகேச குமார சர்மா' என்னும் குப்புச்சாமி ஐயர், சிரங்காச்சாரியார், வீரராகவ சாத்திரியார், தண்டலம் பாலசுந்தர முதலியார், வ. சு. செங்கல்வராய பிள்ளை, விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார், கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, வெண்பாப்புலி வேலுச்சாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் கந்தசாமி முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, கா. வடிவேலுச் செட்டியார், சி. வில்வபதிச் செட்டியார்,

ஆ. மே. சென்னகேசவலு நாயுடு, வல்லி ப. தெய்வநாயக முதலியார், கோவிந்தராச முதலியார், வல்லநகர் வயித்திய லிங்கம் பிள்ளை, திருவிசை நல்லூர்ச் சின்னைய நாயகர், பசுபதி நாயகர், கா. அண்ணுச்சாமி நாயகர், செங்கற்பட்டு அரங்கசாமி நாயகர், திருமழிசை சிவப்பிரகாசையர் என்போர் நூலைப் பாராட்டிச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சீர்தருஞ் சுருதி மிருதியே யாதி
செப்பரும் நூல்கள்மேற் கோளாச்
சார்தரும் வருண தருப்பணம் எனு நூல்
தயங்கச்செய் தவனெவன் என்னில்
கூர்தரும் வன்னி குலமனன் மாடம்
குலவுறுங் காஞ்சிமா நகரான்
பேர்தரு மாறு முகப்பெயர்ப் புலவன்
பெருந்தகை இன்குணத் தோனே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று.

## கஅரு. ஆறுமுகப் பாவலர் (க)

இவர் கொங்குநாட்டில் வாழ்ந்திருந்தவர் என்பது,

"செங்குந்த வேலர் திருக்கை வழக்கநூல்
எங்கும் பரிமளிக்க வேசெய்தான்—கொங்கில்
நிகரற்ற ஆறுமுகன் என்றுசொலும் வேளாண்
வகைவந்த நன்னு வலன்."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது. இவர் செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத்தந்தாதி என்னும் நூல் இயற்றி யுள்ளார். நூல் செங்குந்தர் பெருமையை விளக்கச் செய்யப் பட்டது. கட்டளைக் கலித்துறையா லியற்றப்பட்ட இதில் நூறு பாடல்கள் அடங்கியுள்ளன.

"கமலா லயப்பெண்ணை மாலுக்குத் தந்த கனகச் செங்கை
கமலா யுதனுக் கிரதியை மாமணங் கண்ட செங்கை
கமலாயி எந்தை சடைமீ திருந்திடக் காட்டு செங்கை
கமலா சனக்கச்சி நல்வீரர் தன்திருக் கஞ்சக் கையே."

என்பது நூலின் முப்பத்து மூன்றுவது பாடல்.

## கநச. ஆறுமுகப் பாவலர் (உ)

ஆத்திச்சூடிப் புராணம் என்னும் நூல் ஒன்று ஆறுமுகப் பாவலர் இயற்றியதாகக் காணப்படுகிறது. முற்கூறிய ஆறுமுகப் பாவலரும் இவரும் ஒருவரா வேறா என்பது தெரியவில்லை. ஆத்திச்சூடிப் புராணம் என்னும் இந் நூல் ஔவையார் இயற்றிய ஆத்திச்சூடியை அடிப்படையாகவைத்துப் பாடப்பெற்றுள்ளது. இந் நூலுக்குக் கோபர்வதமாலை என்று வேறொரு பெயர் உண்டென்றும், இதனை இயற்றியவருடைய தந்தையார் பெயர் பழநிபூபதி என்றும் தெரிகிறது. பாடல்களில் பெரியபுராண வரலாறுகள் நிறைந்துள்ளன.

"அறஞ்செய விரும்பு மாயனா கஞ்சம்
ஆயிர மலரினோர் மலர்தான்
குறைந்ததென் றெண்ணி விழியடி தரித்த
கொள்கையை மறப்பனோ கொடியேன்
இறைஞ்சிய மனிதர் அமரராக் கதரும்
ஏறிய பதம்பெறு கைலை
அறம்பெறு கங்கைக் கோகிரி மேவும்
ஆதிசத் தீசநா யகனே."

என்பது நூலின் முதற்பாட்டு.

## கநரு. ஆறுமுகம் பிள்ளை - கோவை (1896)

கொங்குவள நாட்டினர். கோயமுத்தூர்ப் பெரும்புலவர் ம. சந்திரசேகரம் பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றவர். போளிமாம்பட்டி என்னும் ஊரில் கணக்கராகப் பணிபுரிந்திருந்தார். திருப்பேரூர்ப் பட்டிவிநாயகர் மாலை, கோய முத்தூர் வரசித்திவிநாயகர் வெண்பாமாலை முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பெற்றன. இவருடைய நூல்களைப் பாராட்டி, வீராட்சிமங்கலம் தமிழ்ப் புலவர் தி. சிவன் பிள்ளை, ச. திருச் சிற்றம்பலம் பிள்ளை, சாமக்குளம் வேங்கடரமணதாசர், சீவில்லி புத்தூர் சீனிவாச ஐயங்கார், கோயமுத்தூர் வீ. இராமசாமிப் பிள்ளை, குனியமுத்தூர்க் கறுப்பண்ண பிள்ளை, கோயமுத்தூர் அரிராம், திருக்கண்ணபுரம் கிருட்டிணமாச்சாரியார், ச. நடேச

பிள்ளை, சி. கே. சுப்பிரமணிய முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"பகர முடியா இனியசுகம்
பார்க்கில் உலகில் பாதிமதி
நிகரும் நெற்றி மாதரிடம்
நிலைக்குஞ் சுகமே சுகமெனவோர்
பகலில் நொடியும் பிரிந்திலையைப்
பழகும் அடியேன் அதைவிடுத்து
நகரப் பணித்தி யாமமாயின்
நாளும் மறவேன் நாயகனே."

என்பது திருப்பேரூர்ப் பட்டிவிநாயகர் மாலையில் ஒரு பாட்டு.

## கசுசு. ஆறுமுகம் பிள்ளை

பாண்டிநாட்டில் 19-ஆம் நூற்றாண்டில் இருந்தவர். அரிச்சந்திர வெண்பா, மதுரையமக வந்தாதி முதலிய நூல்களை இயற்றியவர்.

## கசுஎ. ஆறை கிழார்

கார்மண்டல சதகம் என்னும் நூலைப் பாடிய ஆறைகிழார் என்பவர் கொங்கு நாட்டிலே அவிநாசி என்னும் ஊரிலே கி. பி. 1025-க்கும் 1070-க்கும் இடைப்பட்ட காலத்திலே வாழ்ந்திருந்தார். இவருடைய குலம் கொங்குநாட்டு வேளாளர் குலம்.

கார்மண்டல சதகம் மற்றைய மண்டல சதகங்களைப்போல் நூறு பாட்டால் அமைந்தது. கார்காத்த வேளாளரது பழைய வரலாற்றையும் பழக்க வழக்கங்களையும் பெருமைகளையும் மண்டலச் சிறப்பையும் அந்நாட்டில் வாழ்ந்திருந்த வள்ளல்கள், புலவர்கள், ஞானிகள் முதலியோரது வரலாற்றையும் பிற சிறப்புக்களையும் எடுத்துக்கூறுவது.

கார்மண்டல சதகம் எழுபத்தைந்தாவது பாடல்

"விட்டிலங் கும்பொழில் கற்பக நாட்டு விபுதர் கிழாள்
இட்டிடை நூற்கிழாள் சேக்கிழாள் பாற்கடல் ஈன்ற கிழாள்
அட்டிலங் கும்புரம் வெல்கிழா ளின்சீர் அவனி பெற்றாள்
மட்டிலங் குங்கிழாள் நல்வெள்ளி காராளர் மண்டலமே."

இப் பாட்டினுள் வெள்ளிவீதியாரைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

## கஙூ௫. ஆனையப்ப முதலியார்
(20—நூ.)

சிறந்த தமிழ்ப்புலமை பெற்று விளங்கிய இவர் நாமக்கல்லில் போர்டு உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்துகொண்டிருந்தார். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரம் ஒன்றுந் தெரியவில்லை. கருணீகர் புராணம் என்னும் நூலுக்குப் பின்வரும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

"பூவிருள் போக்கும் கமலநா யகற்காம்
புராண மும்பிர மாண்டமும் பொலிந்து
மேவிரு சரிதம் பலவுள அவற்றில்
விளங்கு சீகரு ணீகருக் குரிய
மாவிரி வான சரித்திரம் மான
வயங்கு தென்மொழி நடையினை யாப்பால்
பாவிரி வாணர் சுவைத்திடப் பகர்ந்தான்
பண்புசேர் வரதநஞ் சய்யனும் கவியே."

## கஙூகூ. இரகுநாதையர்
(1856)

தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்தில் இருந்தவர். பாரதச் சொற்பொழிவு செய்வதிற் சிறந்து விளங்கினமையால் இவருடைய பெயர், "பாரதப் பிரசங்கம் சாமையர்" எனவும் வழங்கியது. இவருடைய தந்தையார் பெயர் இலக்குமண ஐயர். இரகுநாதையர் முத்தமிழையும் நன்கு கற்றுச் சிறந்து விளங்கினர். இவரை வல்லூர் தேவராச பிள்ளை,

"இயலிசை நாடகம் என்னுமுத் தமிழாம்
சலநிதி பருகித் தருக்கும் அகத்தியன்
முன்னுநாற் கவிசொல் செந்நாப் புலவன்
பேரவைக் கண்ணுள்ள பெரியோர் வியப்பப்
பார தாதி பன்னூற் பொருளை
விரித்துரைத் தரும்புகழ் மேவிய உரவோன்."

என்று புகழ்ந்து பாராட்டியுள்ளார். இவர் காமாட்சியம்மை பதிற்றுப்பத் தந்தாதி, ஏகாம்பரநாதர் சதகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். மேற்படி நூல்களைப் பாராட்டி, வல்லூர் தேவராச பிள்ளை, ஆறைமாநகர் ஐயாச்சாமி முதலியார், காஞ்சிபுரம் இராமாநுச பிள்ளை, மெய்யூர் பொன்னம்பல நாயகர், சிந்தாமணி இராமலிங்க முதலியார், பூவிருந்தவல்லி சபாபதி முதலியார், புன்னைப்பாக்கம் சுப்பராய முதலியார், தண்டலம் சிதம்பர முதலியார் முதலிய புலவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நாக பூடணி நாரணி கச்சிவாழ்
மாகர் போற்றும் மரகத மேயரன்
பாக மன்னு பசுங்கிளி பாவியேன்
சோக நீங்குவ தென்றம்மை சொல்வையே."

என்பது பதிற்றுப்பத்தந்தாதியில் ஒரு பாட்டு.

## கசo. இரத்தினகிரி நாவலர்
(19—நூ.)

இவர் பழநியம்பதியில் விளங்கிய புலவர்களில் ஒருவர். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரங் கிடைத்திலது. தோத்திரமாலை என்னும் நூலுக்கு இவர்,

"சுந்தரஞ்சேர் பழநியப்ப சுகுணநிதி
கரியகா ளியின்மேற் சூட்டும்
பைந்தமிழ்மா லையின்பொருளைக் கணிசுவைமற்
றுளபலவும் பரிசோ தித்து
விந்தைபெறு கனகனகஸ் தியனனந்தன்
வெண்கலைமான் இவர்கள் வெள்கி
அந்தரந்தென் குவடுபில மயன்றூலு
வினிற் குடிபுக் கடைந்தார் மாதோ."

என்னும் பாவாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். வேறுபல நூல்களிலும் இவருடைய சிறப்புப்பாயிரப்பாடல்கள் காணப்பெறுகின்றன.

## கசக. இரத்தினசபாபதி முதலியார் - வே.
(20—நூ.)

இவர் புதுச்சேரியினர் "கனகரத்ன தீபமணி" என்னும் நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார். அந்நூல் உபதேச உண்மை,

மதிவிதி வெண்பா, ஞானக்கும்மி, நவரத்தினமாலை எனப் பல பிரிவுகளாக இருக்கின்றது. ஆறும் பண்ணை கண்ணப்ப சுவாமி கள் என்பவர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். உபதேச உண்மையில் ஒரு பாட்டை அடியில் காண்க.

> " வேதாந்தம் என்றுசொல்லி உலகில் மாந்தர்
> வெறும்பிறுக்-காய்க் காயாசந் தரித்துக் கொண்டு
> நாதாந்த போதமென்ன நாமே என்பார்
> நாரியரைக் கண்டாலோ நாய்போ லாவார்
> மோகாந்த காரமதில் மூழ்கி யந்தோ
> முக்கியமாய் வயிறுவளர்த் தலைவார் மட்டைப்
> பாஷாண்டி வேஷமதை நம்பப் போகா
> பாழ்மனதைக் கட்டவல்லோ பாதை வேண்டும்."

## கசஉ. இரத்தின முதலியார் - ச.
(20—நா.)

புதுவையைச் சார்ந்த முத்தியாலுப்பேட்டை என்னும் ஊரில் சண்முக முதலியார் என்பவருக்கு அருமைத் திருமகனுகத் தோன்றியவர். இவர் மயிலத்தில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுள்மீது "மயிலமாலை" என்னும் நூலைப் பாடி யுள்ளார்.

> " தாயினும் இனிய நின்றனை நினையாத்
> தன்மையேன் எனினுமிக் குயர்ந்த
> நீயெனைப் புரந்து நன்னிலை யதனில்
> நிறுத்துவ துன்பரம் அலவோ
> பாயுமா மதவெண் கரியிவர் குலிசன்
> பருவரல் ஒழித்திடும் பதியே
> மாயிரு ஞாலம் புகழ்ந்திடும் மயில
> மாமலை மன்னிய மணியே."

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## கசா. இரத்தினம் பிள்ளை – ச

சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே திருத்தருப் பூண்டியிலே இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சபாபதிப் பிள்ளை. சபாபதிப் பிள்ளை வழக்கறிஞராகத் தொழில் புரிந்தவர். இரத்தினம் பிள்ளை புலமைக் கல்வி கற்றுப் புலவ

ராஞர். இவர் சிறிய நூல்கள் பலவற்றை இயற்றியிருக்கிருர். தெத்திமாநகர்ப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர் அளித்த சிறப்புப் பாயிரத்தின் அடிகளிற் சில வருமாறு.

மறைசைத் தோப்புத் துறைமுகந் தனனுள்
குன்ரு ஒழுக்கமும் குறையாப் பேறும்
ஒன்ருய்க் கலந்த உத்தமர் வழியினில்
அமிழ்தினும் இனிய தமிழ்மகள் அருளால்
கவித்திற னோடுஞ் செவித்திறம் பெற்றவன்
பழுதிய புகழுடைப் பழநியப் பேத்திரன்
தவத்தொடு பிறந்து சிவத்தொடு பழகு
நமச்சி வாய நல்லோன் உரைத்தனன்
ஆசா ரியன்சீர் பேசுமோர் பதிகமும்
பாசா தீதப் பழம்பொருள் தாட்கோர்
பதிற்றுப் பத்தந் தாதியும்
பண்புடை உலகங் கண்பெறு மாறே.''

## கசச. இரத்தினவேலு முதலியார் (ஈக்காடு)

ஈக்காடு என்னும் ஊரினர். பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும், இருபதாம் நூற்ருண்டின் முற்பகுதியிலும் இருந்தவர். திருவிளையாடல் புராணம், காசி காண்டவுரை, பார்க்கவ புராணம், முதலிய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தியவர். சிவமகா புராணம், சிவபராக்கிரமம், பஸ்ம மகாத்மியம் முதலிய நூல்களை மொழிபெயர்த்தவர். உரைநடை நூல்கள் பல எழுதியவர். சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். மோசூர் முனிசாமி முதலியார் என்பவர் இயற்றிய நூலுக்குப் பின்வருமாறு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"மதியணி சடிலத் திறைவனும் புனிதன்
மன்னுயிர்த் தொகைகளுக் கருள்வான்
வதிதரு பதிகள் எண்ணில அவற்றுள்
வளமிகு தொண்டைநாட் டிலகு
பதிகளெண் ணென்கும் பரவியே பரமன்
பைங்கழல் துதிபுரி பனுவல்
விதியுளி பிரபந் தங்களா யியற்றி
விளக்கினன் மேதக விரித்தே

அன்னவன் எம்முன் றம்பகன் மவுலி
அமர்திரி பதகையின் மரபும்
கன்னலின் தோளும் குவளைசேர் மார்பும்
கவினலைப் பதாகையும் உடையோன்
தன்னையே சார்ந்தோர் பொன்னையே அடையத்
தயைபுரி கருணையோர் வடிவன்
என்னிரு கண்கள் நேர்முனி சாமி
எனும்பெயர்ப் புலவர்நா யகனே.

கருப்பதிற் புகாது கண்டவர் துதிக்கக்
கவிஆறு கரிகளாப் புனைந்து
விருப்புடன் சான்றோர் குழாமிடைந் தெங்கும்
விளங்குறு தொண்டைநாட் டமரும்
திருப்பதிக் கோவை என்றொரு பெயரால்
திகழ்தர அளித்தனன் அவற்கு
அருப்பமில் கைம்மா றறிஞர்கள் இயற்றற்
காவதொன் றுள்ளதோ அறைமின்.''

## கசரு. இராசகோபால் பிள்ளை - திரு.

(19—நூ.)

தொண்டைவளநாட்டில் திருநீர்மலை என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய பெயருக்கு முன்னால் "செந்தமிழ்ப் புலவர்" என்னுஞ் சிறப்புச் சொல்லுங் காணப்படுகிறது. இவர் காஞ்சிபுரம் வரதராசர் உற்சவப் பதிகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார். இவருடைய சிறப்புப்பாயிரம் பல நூல்களிலும் காணப்படுகின்றது.

'' நீரார் கடற்புவி விளங்குகச் சிப்பதியில்
நீரசன் செய்வி மூரயில்
திகழாதி நாட்காலை மண்டலந் தன்னிலே
திறையுமிரு மதிய நடுவில்
ஏரார் திவாகரன் இருந்தெனப் புவிநீளை
ஏந்திழையார் நாப்பண் மகிழ்வோ
டிலகுபொற் சப்பரத் தூர்ந்துவரு வரதநின்
இணையிலாச் சேவையைக் காண
பேரார் பிறப்பளிப் பூமிதனி லுனதுபூம்
பொன்னடி புகுவ தல்லால்
பொற்சிங்க மேறிவரு அன்றிராச்
சேவையைப் புகழ்கல்வி தனில்நிறைந்த

தோரா ரதந்தனும் சொல்லவச மன்றெனிற்
சிற்றறிவி னேன்சொல் வதே
தீரத்தி கிரியத்த நீரத்தி கிரியொத்த
சீரத்தி கிரியத் தனே.''

என்பது உற்சவப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கசசு. இராசகோபால முதலியார் - பு.

இவர் சென்னைமா நகரில் இருந்தவர். ''வித்தியா தானச் சங்கம்'' என்னும் பெயரோடு சங்கம் ஒன்று அமைத்து அச் சங்கத்தில் புலவராக அமர்ந்து பலபேருக்கு இலக்கண இலக் கியங்களைப் போதித்ததன்றிப் பாடசாலை ஒன்றிலும் ஆசிரிய ராகப் பணிபுரிந்தார். இலக்கணங் கற்கத் தொடங்குபவர்கட்குப் பயன்படுமாறு இலக்கணச் சுருக்கம் முதலிய நூல்களையும் எழுதி வெளியிட்டார். இவருடைய இலக்கணச் சுருக்கம் அந் நாளிற் பலராலும் போற்றிப் பாராட்டப்பட்டது.

## கசஎ. இராசகோபால முதலியார் - ம.
(20—நூ.)

இவர் இக்காலத்தில் மகாபலிபுரம் என வழங்கும் மாமல்ல புரத்தில் இருந்தவர் கோவளம் குட்டிசாமி நாயகர் என்னும் புலவரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றுத் திகழ்ந்தார். மல்லாபுரத் தலமகாத்மியச் சுருக்கக் கொம்மிப் பாடல் என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

'' திருக்கடன் மாமலையில் தேவர்பிரான் மீது
உருக்கமா கப்பதிகம் ஓதப்—பெருக்கமுள
அந்தரத்தில் இந்திரனோ டண்டரெல்லாரும் பணியும்
சிந்துரத்தின் மாமுகனைச் சேர்.''

என்பது நூலின் காப்புப் பாட்டு. இவர் சோழிய வேளாள குலத்தினர் என்பது சிறப்புப் பாயிரப் பாடலால் விளங்கு கின்றது.

## கசஅ. இராசசேகர முதலியார்
(1866)

இவர் தொண்டைவள நாட்டில் பட்டூர் என்னும் ஊரில் பச்சையப்ப முதலியார் என்பவருடைய புதல்வராகத் தோன்

றியவர். சென்னைமா நகரில் வாழ்ந்திருந்தவர். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர். இவர் சென்னைமா நகரில் உள்ள காமாட்சியம்மைமீது இசைப்பாடல்கள் பல செய்திருக்கிறார். இசைப் பாடல்களில் ஒரு கட்டளைக் கலிப்பாவை அடியிற் காண்க.

"பூத்திருக்குஞ்செந் தாமரை யாணிதம்
    போற்று நின்னெழில் மங்களச் சேவையை
நேத்திரந்நீர் ததும்ப மனமிக
    நெகிழ மெய்ப்புள கங்கொள நாவாரத்
தோத்திரஞ்செய் தடியி லடிக்கடி
    தொழுதெழுந்து சிரமேற் கரங்கொண்டு
பார்த்திருத்தாற் பழவினை நீங்குமே
    பார்புகழ் சென்னை காமாட்சி யன்னையே."

## கசகூ. இராசநாயகம் - செ.

ஈழநாட்டில் கொழும்பில் இருந்தவர். "யாழ்ப்பாணச் சரித்திரம்" என்னும் நூலை இவர் எழுதியுள்ளார். அது பல பிரிவாக அமைந்துள்ளது. ஆங்கிலேயர் காலம் என்னும் பிரிவில், சரித்திரக் குறிப்புக்கள், வடமாகாண ஏசெண்டர்கள், தலைமைக்காரர், வரிகள், நீதிபரிபாலனம், நாணயங்கள், வன்னி, ஏற்றுமதி இறக்குமதி, சிறையாளர், ஊழியம், முத்துச்சலாபம், புகையிலை, புடவை நெய்தல், நெடுந்தீவுக் குதிரை வளர்ப்பு, தபால், ஆங்கில தேசக் கிறித்தவ சபை, புயல்களும் வெள்ளப் பிரவாகமும், நல்லூர்க் கந்தசாமி கோயில், வித்தியா பரிபாலனம், வெஸ்லியன் மிஷன், அமெரிக்கன் மிஷன், சேர்ச் மிஷன், கத்தோலிக்க சபை, மருதடி விநாயகர் கோயில், சங்கக்குளிப்பு, சைவ சமயக் கிளர்ச்சி, அநுராதபுரம், தொற்று நோய்கள், பகிரங்க வீதிகள், சட்டசபைத் தமிழ்ப் பிரதிநிதிகள், பட்டங்கள், சேனை வேளாண்மை, ஆபத்துக்குதவிச் சங்கம், இந்தியக் கூலிகள், நீர் பாய்ச்சல், யாழ்ப்பாணப் புகைரதவீதி, திருக்கேதீச்சுரம் ஆகிய தலைப்புகளில் செய்திகள் அமைந்துள்ளன.

"பூமலி மொழியிற் புகழ்மலி தெய்வப்
    பொலிவுறு தமிழுமா ரியமும்
பாமலி கலைநூ லெழுத்துணர் புலமைப்
    பரிசினை வளர்த்திடு முறையால்

> நாமலி யாழ்ப்பா ணத்தமி ழார்ய
> நன்மொழி விருத்திசெய் சங்கத்
> தேமலி அபிமா னத்தினுல் இந்நூல்
> திகழ்தர உரிமையாக் கினனே.''

என்பது இவர் நூலுக்கு உரிமை உரையாகப் பாடிய பாடல்.

## ௧௫௦. இராசப்ப கவிராயர்

இவர் இராசப்ப நாவலர் எனவுங் கூறப்பெறுவர். திருவெண்ணெய்நல்லூரில் ஏறக்குறைய எண்பது ஆண்டுகட்குமுன் வாழ்ந்திருந்தார். திருநாவலூர்ப் புராணம் இவரால் இயற்றப் பெற்றது. 514 பாடல்களும் திருநகரச் சருக்கம், உமாதேவியார் அருச்சித்த சருக்கம், விட்டுணுபூசித்த சருக்கம், சண்டேசர் பூசித்த சருக்கம், கருடன் பூசித்து விடவாதை தீர்த்த சருக்கம், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரச் சருக்கம், சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தடுத்தாட்கொண்ட சருக்கம், நரசிங்க முனையரையர் உற்சவம்புரிந்த சருக்கம், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மகாபூசை செய்த சருக்கம் என்னும் ஒன்பது சருக்கங்களுமுள்ள நூலின் அவையடக்கச் செய்யுட்கள் இரண்டை அடியிற் காண்க.

> ''சந்திரனின் போனிறமும் பக்கமுமீ
> னுசையுமேற் சார்ந்த வாற்றல்
> பந்தமுற்ற நின்னேடொத் தனன்யானு
> மெனக்குருகு பகரு மாபோல்
> சிந்தைதெளி தருகலைகள் தேர்ந்தினிய
> கனியமுதம் தேன்பா கென்னச்
> சந்தமுறு கவியுரைக்கும் பெரியோர்முன்
> சிறியேனுஞ் சாற்ற லுற்றேன்.
>
> முதிர்சுவைமிக் கருள்கலைகள் முறையுணர்ந்து
> தமிழ்ப்பாடல் மொழியும் மேலாம்
> மதியுறுநற் கவிவலர்முன் சிறியேனும்
> சிலபுகல மதித்த வாறு
> கதிரவனில் வாடியபைங் கூழ்தழைப்ப
> உலகிலுளோர் களிக்கப் பெய்யும்
> துதிபெறுபைம் புயலினமுன் புன்பனிமற்
> றதுவிரும்பிச் சொரிதல் போலும்.''

## ௧௫௧. இராசாராம் கோவிந்தராவ்
(கி. பி. 1890)

இவர் வடமொழி, தென்மொழி, தெலுங்கு, மகாராட்டிரம் முதலியவைகளில் வல்லவர். தஞ்சைமாநகரில் வாழ்ந்திருந்தவர். இவர் வேறு மொழியில் இருந்த பக்தர்களுடைய வரலாற்றைத் தமிழில் மொழிபெயர்த்து எண்பத்திரண்டு பக்தர்களுடைய வரலாற்றைப் "பக்த மான்மியம்" என்னும் பெயரோடு ஐயாயிரத்து நானூறு செந்தமிழ்ப் பாடல்களாகப் பாடியிருக்கிறார்.

"எனப்பண் டரியின்வர லாறுமங் கேய்ந்த கண்ணன்
தனக்கன் புறுதாசர்க டம்வர லாறும் ராமன்
மனத்தின் புறவாழ்த்துநர் தம்வர லாறு மற்றும்
துனத்துண் டமிழ்ச்செஞ் சொலினுங்கவி சொல்ல லுற்றேன்."

"அரிநாம மகிமையைச்சற் றேனுந் தேரா
அசாமிளன் ஒருவிதஞ்சொல் லியத னாலே
விரிசோதிப் பரமபதம் மேவ லானுன்
விமலநா மந்தெரிந்து விடாமல் ஓதித்
தெரிசித ரன்தனைத்தம் வசஞ்செய் துற்ற
தேசிகர்தஞ் சரித்திரத்தைப் படிப்போர் கேட்போர்
பெரிதாக அவர்களிடத் தன்பு செய்வோர்
பெறும்பலனை இனைத்தெனயாம் பேசலாமோ."

இவை நூற்பயன் முதலியன சொல்லிய பாடல்கள்.

## ௧௫௨. இராசுச் செட்டியார் செ. எம்.
(19—நூ.)

சென்னைமாநகரில் இருந்தவர். அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் முதலியோர் இவர் காலத்தில் இருந்தவர்கள் M. B. P. T. என்னும் ஆங்கிலப் பட்டம் பெற்றவர். தமிழறிவும் நன்கு அமையப்பெற்றவர். "ஞானகாந்தி" "குசாவதி" "காதல்" "மதிமாலினி" முதலிய கதை நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவர் பூவை கலியாணசுந்தர முதலியார் மீது இயற்றிய செய்யுள் ஒன்றை அடியிற் காண்க.

"பன்னரிய செந்தமிழ்நற் கடற்படிந்து
பொருள்நீரைப் பருகிச் சான்றோர்
உன்னியுறை சென்னைநகர்க் குவடேறி
மாணவர்கள் உளம்பொழிந்து

பன்னியகல் விப்பயிரை விளைவிக்கும்
மேகமென வதிந்து வாழும்
என்னருமைப் பூவைநகர் மணவழகு
பல்லாண்டிங் கினிது வாழ்க.''

## கருரு. இராசு முதலியார்
(20—நூ.)

இவர் ஆரணி சாகீர் சத்தியவிசய நகரம் இராமசாமி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். தம்முடன் பிறந்தவராகிய தணிகாசல முதலியார் என்பவரிடம் தமிழ் கற்றுத் தேறினர். கணித விளக்கம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றுள்ளது. நூலைப் பாராட்டித் திருக்கோவலூா ராதீனம் ஞானியாரடிகள், ம. தி பானுகவி, தெ. நாராயண ஐயர், காமக்கூர் சுந்தர முதலியார், ஆரணி சாகீர் சித்திரகவி அண்ணாமலைச் செட்டியார், பழநிச் செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூல் பலவகையான கணக்கு விவரங்களைக் கூறுகின்றது.

''இணங்குமொழிப் பாலர் எளிதின் அறிவான்
கணித விளக்கங் கழற—வணங்குவனல்
குஞ்சரமு தங்கொள் குரிசில்வி நாயகன்றன்
கஞ்சமுறழ் தண்டையணி கால்.''

என்பது நூலின் காப்புச் செய்யுள்.

## கருச. இராசு முதலியார் - பூ. மு.
(1902)

இவர் சென்னைமா நகரில் பூவிருந்தவல்லியிலே காராளர் மரபில் தோன்றியவர். தந்தையார் பெயர் முத்துச்சாமி முதலியார். இவர், ''இல்லற சாரசங்கிரகம்'' என்னும் உரை நடை நூலை எழுதியுள்ளார். மேற்படி நூலில் ஆடவர் தருமம், திருநீற்றுப் பெருமை, சிவகண்மணிப் பெருமை, நாட்கடன் புரிதல், கதிரவன் வணக்கம், திருக்கோயில் வழிபாடு, உடனலப் பாதுகாப்பு, மாதர் தருமம், ஆண்டுப் பிறப்பின் வரலாறு, வரலட்சுமிவிரத வரலாறு, விநாயக சதுர்த்தி விரத வரலாறு,

நவராத்திரி விரத வரலாறு, தீபாவளி விரத வரலாறு, கேதார கௌரி விரத வரலாறு, கார்த்திகைத்தீப தரிசன வரலாறு முதலிய பல செய்திகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இந் நூலுக்குக் கோவிந்தராச முதலியார் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"........................ ........

பூவிருந்த வல்லியென் புகழ்பதி யாளன்
நாவிருந் தமிழ்க்கலை நன்குபல் லுணர்ந்தோன்
பாரா ளரசர் பரவுறும் புகழ்சால்
காரா ளர்மரபிற் கண்ணிய புகழுமை
நன்மூத் துச்சாமியென் நல்லறி வாளனுக்(கு)
உன்னருந் தவமென உற்றிவண் உதித்தோன்
பராபரன் சிவனைப் பதித்துளத் தேத்துறூஉம்
இராசெனும் பெயருடை இருந்தமிழ்ப் புலவனே."

என்பது அப்பாயிரத்தின் இறுதிப் பகுதி.

## கஉடு. இராமகிருட்டிணக் கவிராயர்
(19—நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் சேற்றூரில் தோன்றியவர். தமிழ் பயின்று புலமைத்திறம் பெற்றிருந்த இவர் வடமலைத் திருவனந்த சுந்தரதாசப் பாண்டியர்மீது "தென்சேறைத் தடாக சிங்காரமாலை" என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூலைப் பாராட்டிச் சேற்றூர் இராமசாமிக் கவிராயர், அருணாசலக் கவிராயர், மீனாட்சிசுந்தரக் கவிராயர், புனல்வேலி இராமசாமிப் பாரதி, கல்போது புன்னைவனக் கவிராயர், சேற்றூர் இராம சாமிக் கரையாளர். திருவில்லிபுத்தூர்ப் பொன்னுச் செட்டியார், பேறையூர்த் தெய்வசிகாமணிப் புலவர் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். மாலையில் ஒரு பாட்டை அடியிற் காண்க.

"பொங்கும் புகழ்ச்சுந் தரதாசென் கோனைப் பொருந்தியபூ
மங்கள மன்னர் முடியுற வேத்து மலர்ப்பதத்து
தங்கைக் கிசைந்த நடுவக் குளத்துக்கு நானுவமை
தங்கிய நூலையும் வேலையும் பாலையுஞ் சாற்றுவனே."

## கருசு. இராமகிருட்டிண பிள்ளை - தி.

பாண்டிவள நாட்டில் கழுகுமலை என்னும் முருகக்கடவுள் திருப்பதியில் திரவியம் பிள்ளை என்பவருக்கு அருமைத் திரு மகனுகத் தோன்றியவர். இளமைப்பருவ முதற்கொண்டே அறுமுகக் கடவுண்மாட்டுச் சிறந்த மெய்யன்புகொண்டு விளங்கிய இவர் திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என்று வழங்கப்பெற்ற தண்டபாணி யடிகளிடத்தில் நூல் கற்று அறிவுரை பெற்று அப்பெரியாருடைய மாணவராஞர். தம் ஆசிரியராகிய அப்பெரியார் இயற்றிய திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு,

"கலையேறுந் தவத்தினர்பா வலர்பலரேத் தலத்தும்
கழறுதொல் புராண விளக்கந் தொகுத்தோர் கரையாம்
நிலையேறு மொருதட்டி லமைத்ததனுக் கெடையா
நேரொருதட் டினில்வைத்து நிகழ்போத நெறியாம்
துலையேறுந் தரத்திலுயர்ந் தோருரைத்து நிறையில்
தூக்கியகான் மாற்றுயர்ந்த சொலுங்கனமுந் தோன்றத்
தலையேறுந் திருப்புகழ்மா தவனுவலா மாத்தூர்த்
தலபுரா ணத்திறமே தழைக்கவியந் தனரே."

என்னுஞ் செய்யுளையும் அறுபத்துநான்கு கலைவண்ணப்பா ஒன்றையும் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கருஎ இராமகிருட்டிண பிள்ளை - கோ
## (1876)

இவர் சோழவளநாட்டில் தஞ்சை கிறித்துவப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமைபெற்ற இவர் பல நூல்களையும் ஆராய்ந்து அவற்றில் உள்ள அறநெறிச் செய்யுட்களையெல்லாம் தொகுத்து, தொண்ணூற்ருறு அதிகாரங்களாக வகைப்படுத்திச் 'சாராமிர்தத் திரட்டு' என்னும் பெயரோடு தனி நூலாக வெளிப்படுத்தியுள்ளார். தொண்ணூற்ருறு அதிகாரங்களைக்கொண்ட இந்நூல் எண்ணூற்றறுபத்தாறு செய்யுட்களைக்கொண்டு

" தாட்டா மரையைஎன் ஞுப்பாவி என்றனைத் தள்ளிவிட்டாள்
மீட்டா தரிப்பவர் யாரநுள் வாய்மக மேருவினில்
பாட்டாள் உயர்ந்திடும் பாரதந் தன்னைப் பரிவுடனோர்
கோட்டா லெழுதி மகிழுஞ் சிதம்பரக் குஞ்சரமே.

என்பது குஞ்சரமாலையில் ஒரு பாட்டு.

## ௧௧௨. இராமசாமி ஐயர் - ப (௨)

(19—நூ.)

இவர் வையை என்னும் ஊரினர். இவருடைய தந்தையார் பெயர் பஞ்சநத ஐயர். இவர் திருவையாற்றந்தாதி, திருவையாற்று நிரோட்ட யமகவந்தாதி, திருவையாற்றிரட்டை மணிமாலை, மயூரகிரி இரட்டை மணிமாலை, திருத்தொண்டர் போற்றிக் கலிவெண்பா முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

" அடிக்கஞ்சத் நாலகைந் தெய்த்தே நியங்கியழிந்த சண்டன்
அடிக்கஞ்சத் நாலத்நி னிசெய்நி டேலரி யாண்டடியின்
அடிக்கஞ்சத் தான்றனைக் கேகிடக் காணரியாய் நிண்கறை
யடிக்கஞ்சத் தாக்கறச் செய்தேயை யாற்றிலங் கானந்தனே "

என்பது திருவையாற்று நிரோட்ட யமகவந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௧௩. இராமசாமி ஐயர் (௩)

இவர் யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டையில் பிறந்தவர். வேதாந்த நூல்களிலும் இலக்கண இலக்கிய நூல்களினும் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தவர். இவருடைய மகன் நாகேசையர் என்பவரும் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இராமசாமி ஐயருடைய தந்தையாராகிய சுப்பிரமணிய ஐயர் என்பவரும் சிறந்த புலவராகத் திகழ்ந்து, கதிரைமலை முருகன் மீது இசைப்பாடல்கள் பல இயற்றினார். இவரால் இயற்றப் பெற்ற நூல் அல்லி நாடகம் என்பது.

## ௧௧௪. இராமசாமிகள் - நா.

திருவிதாங்கூர் சமத்தானம் வற்கலை சிவகிரி மடாலயம் நாராயணகுரு சுவாமிகளிடம் அருளுரை பெற்றவர். இவர்

வேதாந்தப் பிரதீபம் முதலிய உரைநடை நூல்களை இயற்றி யுள்ளார். வேதாந்தப் பிரதீபத்தைப் பாராட்டி, வீர. சுப்பைய சுவாமிகள், ல. நாராயணசாமி நாயகர், பி. அங்கப்ப பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"முன்னாளில் ஆசிரியர் பாடியா
திகளின்முதற் பொருளைக் காட்டப்
பின்னாளில் அவர்சீடர் பிரகரணம்
பலவாகப் பிரித்து வைத்தார்
இந்நாள்வே தாந்தப்பிர தீபமெனத்
தமிழிலவை திரட்டி யீந்தான்
எந்நாளும் தவமுயலு மிராமசா
மித்தவத்தின் இறைவன் மாதோ."

என்பது வீர. சுப்பைய சுவாமிகளவர்களின் பாடல்.

## கசுரு. இராமசாமிக் கவிராயர் - அ.
(1897)

இவர் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயருடைய புதல்வர். தந்தையாரிடமே கல்வி கற்றுப் புலமைபெற்றுத் திகழ்ந்தார். பூங்கொன்றை வேலங்குடியில் உள்ள கறுப்பண்ண சாமிமேற் சதகம் ஒன்று இயற்றினார்.

"இருமரபின் மறுவிலாக் கற்பழகு மங்கையை
இசைந்துமண மாலை சூட்டி
இதயமொன் றுயிருவர் சௌபரியர் எனமக்கள்
இளமையிற் பெற்றெடுத்தே
பெருகுசீர் வயதுசற் றுங்குறைவி லாமலே
பிணியினில் வருந்தி டாமல்
பிறையா யிரந்தொழுது முற்றெட்டில் கட்டியே
பிரபலம தாய்வந்த பேர்க்
கருள்புரிந் தன்னமிட் டுத்தரும வழியினின்
றவரவர் குலத்தி னுக்கே
அடுத்தநல் தொழில்செய்து மானமது தவறிடா
தார்க்குநல் லவனென் னவே
வருபுருட சிங்கமென வாழ்பவன் புண்ணிய
வானென் றுரைப்பர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசுவாமியே."

என்பது கறுப்பண்ணசாமி சதகத்தில் ஒரு பாட்டு.

## ௧௬௬. இராமசாமிக் கவிராயர் (மதுரை)

(19—நூ.)

சென்ற நூற்றாண்டின் இறுதியில் இருந்தவர். தம்மைக் கம்பர்குல திலகர் என்று கூறிக்கொள்ளும் இவர் மதுரையில் இருந்ததாகத் தெரிகிறது. மதுரை சோமசுந்தரக் கடவுள்மீது தெய்வசிகாமணிமாலையும் அங்கயற்கண்ணம்மைமீது கண்மணி மாலையும் பாடியுள்ளார். இராமநாதபுரம் சரவணப் பெருமாட் கவிராயர், மதுரை மதுரகவி மீனாட்சிசுந்தரதாசர், மதுரை ஆதிமூலம் பிள்ளை, சின்னச்சாமிக் கவிராசர், சுப்பைய நாயுடு முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> " உதிக்கின்ற திங்கள் முகமுஞ் செவ்வாயும் ஒளிர்செவிமேல்
> பதிக்கின்ற சங்கக் குழையுங்கண் மூன்றும் பரிந்திமனை
> மிதிக்கின்ற பாதமுந் தோன்றிட விந்திரவி மானமதில்
> திதிக்கின்ற சுந்தரச் சொக்கேநற் றெய்வ சிகாமணியே "

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## ௧௬௭. இராமசாமி குருக்களையா - ஏ.

(19—நூ.)

பாண்டிவள நாட்டில் முகவூரில் ஆதிசைவ அந்தணர் குலத்தில் தோன்றியவர். தமிழ்மொழியை நன்கு கற்றுணர்ந்து செம்பாகமாகச் செய்யுள் பாடுந் திறமமைந்து விளங்கினார். அவ்வப்போது தனிப்பாடல்கள் பல பாடினார்.

> " இருதையா லயனிகரா மிடையுடையா
> ளாய்வெகுநாள் இல்லையானத்
> திருதையா லயன்வரினும் இசையாளுன்
> பான்மயலுற் றேங்கினாள் யான்
> இருதையா லயமிலைநீ தொடைபெறுதற்
> கென்றுவந்தேன் ஈவாய் அன்பாய்
> இருதையா லயமதனு சொன்னாட்டுந்
> தென்னாட்டுக் கிறைவ ரேறே."

என்பது இவர் ஊற்றுமலை இருதயாலய மருதப்பதேவர்மீது பாடிய பாடல்களில் ஒன்று.

## கசுரு. இராமசாமிச் சாமிகள் - அ.

இப்பெரியார் கோவிலூர் வேதாந்த மடத்தில் இருந்தவர். இலக்கண நூல்களையும், இலக்கிய நூல்களையும், வேதாந்த நூல்களையும் நன்கு கற்றுப் பெரும் புலவராக விளங்கியிருந்தவர். இவர் பல வேதாந்த நூல்களை நன்கு ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருப்பதோடு ஐந்திலக்கணங்களையும் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். இவரால் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் நூற்றுக்குமேல் இருக்கலாம்.

## கசுசு. இராமசாமிச் சிவயோகியார்

(20—நூ.)

இவர் திருக்குரங்காடுதுறை என்னும் ஊரில் யோகியாக விளங்கியிருந்தவர். இவர் இலக்கண இலக்கிய நூல்களை அதிகங் கல்லாதவராயினும் திருவருட் பெருமையால் "துதியருட்பா" என்னும் நூலைப் பாடியுள்ளார். இவர் அந்தணர் குலத்தில் தோன்றியவர் என்பது அவருடைய பின்வருந் துதியருட்பாப் பாடலால் அறியப்பெறுகிறது.

> "இல்லென் றுரைக்கும் பெருந்தகைபூண்
> டேறுங் கரையொன் றிதமறியாப்
> புல்லன் மறையோர் குலத்துதித்தேன்
> புலமை யறியேன் பொருளறியேன்
> கல்லென் ஞெரும் மனமுடையேன்
> கனவின் கருணை அருட்சோதி
> நில்லென் றெனக்குன் உபதேசம்
> நேர்ந்த விருப்பின் னெறியென்றோ ?"

## கஎo. இராமசாமிச் செட்டியார்

வான்தோய் புகழுடைச் சான்றோர்களால், "தொண்டை நாடு சான்றோ ருடைத்து" என்று வியந்தோதப்பெற்ற தொண்டைவளநாட்டிலே இந்நாளில் திருவள்ளூர் என வழங்கும் திருஎவ்வுளூரில் வணிகர் மரபில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இராமசாமிச் செட்டியார் தோன்றினார். கல்வி கேள்விகளிற் சிறந்து சிறந்த செந்தமிழ்ப் புலமைபெற்று விளங்கினார். திரு

எவ்வுளூர்ப் பிள்ளையார்மேலும் அம்மையார்மேலும், குன்றக்குடி முருகப்பெருமான்மீதும் மற்றும் பல சிவப்பதிகள்மேலும் பதிகங்கள் பாடினார். 'எவ்வுளூர்க் கலம்பகம்' என்னும் பெயருடன் கலம்பகம் ஒன்றும் பாடினார். இக்கலம்பகம் மிகுந்த சிறப்பமைந்து விளங்குகின்றது. பின்னாளில் இவர் சென்னையை அடைந்து அங்குத் தங்கினார்.* சரசாங்கி நாடகத்தை எழுதிய சலசலோசனச் செட்டியார் இவருடைய அருமைத் திருமகனாவார். இவர் இயற்றிய குன்றக்குடிப் பதிகச்செய்யுள் ஒன்றை அடியிற் காண்க.

"திருமருவு மணிமகுட மணிமுடியின் அழகுமுயர்
செங்கமல வதன அழகும்
திரிபுண்டரந் தங்கு நுதலினழ குங்கருணை
திகழுமலர் விழியின் அழகும்
குருமருவு தாரகம் உரைத்தவாய் அழகுமணி
குண்டலச் செவியின் அழகும்,
கொரகரி இலங்குபன் னிருபுயத் தழகும்விற்
குலவும்வடி வேலின் அழகும்
மருமருவும் அம்புயச் செங்கையின் அழகுமிகு
மாதருறை வாம அழகும்
மன்னும்பூம் பதவழகும் அடியன்இரு கண்காண
மயிலின்மேல் வந்தருள் செய்வாய்
அருமறை விளம்பியந் தணர்வேள்வி புரிகுன்றை
அம்பதி இலங்கும் அரசே
அமையுமணி சிரவுரக மிசைதுயில்செய் அரிமருக
அமலபர சிவமுருகனே."

இவர் பாடிய சீகாளத்திக் கலம்பகத்தில் ஊசற் பாட்டு,

"தகைபெறுநான் முகன்மாலும் வணங்கிப் போற்றச்
சதமகனு தியவிபுதர் மலர்கள் தூற்றச்
சுகவாணி கமலைரதி சசியா மாதர்
சொல்லுறுசாம் பூநதப்பொன் வடந்தொட் டாட்ட
அகமகிழ்பல் வாத்தியங்கள் முழக்க மார்ப்ப
ஆனந்த முடன்கவிஞர் விருது பாடத்
திகழ்ஞானப் பூங்கோதை ஒருபால் மேவச்
சீகாளத் திக்கரசே ஆடி ரூசல்."

* இவரால் இயற்றப்பெற்ற செய்யுள் நூல்கள் பல.

## களக இராமசாமி நாயுடு - அ

இவர் திருச்சிராப்பள்ளியில் தென்னிந்திய இரயில்வேப் பிரிவில் எழுத்தாளராக அலுவல் பார்த்துக்கொண்டிருந்தவர். திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகளின் அடியவர்களில் ஒருவர். இவர் திருச்சிராப்பள்ளிப்புத்தூரில் உள்ள ஆதிவராகப்பெருமாள் மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். இவர் முத்துவீர உபாத்தியாயரிடம் இலக்கண இலக்கியங் கற்றுத் தேர்ந்தவர்.

" மணிகொண்ட நெடுநேமி வைப்பினொடு வானகமும்
வாரிவாய்ப் பெய்த முகிலே !
மலர்வந்த நான்முகனை உந்திமல ரில்தந்த
மாணிக்க மணிவி ளக்கே !
கணிகொண்ட குடவளையி னங்களருள் மணிநிலவு
காலுமழ கியபு தூரில்
கமலமல ரிற்குடி யிருக்கும் பிராட்டியொடு
காமுற் றிருக்கும் அமுதே !
திணிகொண்ட நிருதர்குல மனனுகி யோங்கிய
திரைக்கடலி னுப்ப ணின்று
சிறக்கிலங் காபுரி புரக்கிரா வணனுவி
தேய்த்தவற் கிளைய னுன
அணிகொண்ட விடணற் கரசருள் பரானந்த
அமுதமே எனையா ளுவாய்
ஆனைகரா விற்கலறி மூலமென வக்கணெதி
ராதிவரா கக்க டவுளே."

என்பது அப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## களஉ. இராமசாமி நாயுடு - கா
(20—நூ.)

பெருந்தமிழ்ப் புலவராக விளங்கிய இவர் காஞ்சீபுரம் என்னும் ஊரினர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் எண்ணிறந்தன. குசேலோபாக்கியான உரை, பிரபுலிங்கலீலை உரைநடை, பிரபோத சந்திரோதய உரைநடை, திருவிசைப்பா திருப்பல்லாண்டு உரை, திருவெங்கைக்கோவை உரை முதலியன இவருடைய நூல்களிற் சில. இவர் இயற்றிய தில்லை கோவிந்தராசப் பெருமாள் 'இணைமொழி யமகமாலை' என்னும்

நூலுக்குத் திரிசிரபுரம் வி. கோவிந்தப் பிள்ளை, புதுவை இராமாநுச நாவலர், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, திருமணம் கேசவ சுப்பராய முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> " திருமா திருமார் புடையா னியம்பல செவ்வொலிய
> திருமா திருமா திருகண்ணி னகழல் செவ்வனுறுத்
> திருமா திருமா வதனா னடஞ்செ யத்துயில்ச
> திருமா திருமாம் பொழில்தில்லைச் சிருமென் சிந்தையவே."

என்பது இணைமொழி யமகமாலையில் ஒரு பாட்டு. இவருடைய பெயர் பின்னளில் காஞ்சிபுரம் இராமாநந்தயோகி என்று வழங்கியது.

## ௧௭௩. இராமசாமிப் பாரதிகள்

புனல்வேலி என்னும் ஊரில் இருந்த சிறந்த தமிழறிஞர். ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதயாலய மருதப்பதேவர் காலத்தினர். மேற்படி பெருநிலக்கிழார்மீது செய்யுள்கள் பல இயற்றிப் பரிசு பெற்றிருக்கிற விவரத்தையன்றிப் பிற செய்திகள் தெரியவில்லை.

> " சக்குந்தங் கச்சினுத னும்மானும் பிறையுநிகர்
> தையலெட்டுத்
> திக்குந்தங் கச்சியினை யேபலமாய் நடத்தனங்கனை
> தேனிதங்கச்
> சிக்குந்தங் கச்சியிவள் ரூபமதி னிலையதில்
> தெரியாதில்லை
> மிக்குந்தங் கச்சிவிகை யூரிருத யாலயனே
> மேவுவாயே."

என்பது மேற்படி இருதயாலய மருதப்பதேவர்மீது பாடப்பட்ட பாடல்களில் ஒன்று.

## ௧௭௪. இராமசாமிப் பிள்ளை (மதுரை)

(20—நூ.)

இவர் இராமநாதபுரத்தில் தோன்றியவர். கல்வி கற்றுச் சிறப்படைந்த இவர் பிற்காலத்தில் மதுரையில் தங்கியிருந்தார்.

ஞானதீக்கை முதலியவைகளைப் பெற்றபின் இவருடைய பெயர் ஞானசம்பந்தப் பிள்ளை எனவும் வழங்கியது. இவர் பலநூல்களை இயற்றியிருப்பதோடு, பல நூல்களை ஆராய்ந்தும் அச்சிற் பதித்து வெளியிட்டிருக்கிறார்.

> "எண்ணெய் நிறைந்த குடஞ்சென்னி
> இடையில் நிறுவி ஏகுதல்போல்
> மண்ணில் ஊர்வ வருந்துறுமே
> என்ன எண்ணி மனத்துருகிக்
> கண்ணின் நோக்கங் கீழ்நோக்கிக்
> கால்கள் மெல்லப் பெயர்த்தெடுத்து
> நண்ணும் வலந்தான் இயற்றிடுக
> பரனை நவில்முத் தரமேனும்."

என்பது இவர் இயற்றிய சிவாலய தரிசனவிதியில் வலஞ்செய் விதியைப்பற்றிய பாட்டு

## கஎரு. இராமசாமியா பிள்ளை—அட்டாவதானம் (19—நூ.)

பாண்டிவளநாட்டில் கழுகுமலையில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்தவர். அட்டாவதானஞ் செய்வதிலும் வல்லவர். இவர் காலத்தில் எட்டையபுரம் திருநெல்வேலி முதலிய இடங்களில், கடிகை நமசிவாயப் புலவர், இராசவல்லிபுரம் முத்துச்சாமியா பிள்ளை, புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, அழகிய சொக்கநாத பிள்ளை, கவிராச நெல்லையப்ப பிள்ளை, கூபத்துக் குருக்களையா, பாளையங்கோட்டை சண்முகநாதன் கவிராசர், சிவகாமிநாத பிள்ளை, கடிகை பரமசிவப் புலவர் முதலியோர் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தனர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. கடிகை நமசிவாயப் புலவர் இயற்றிய 'வல்லீ பரதம்' என்னும் நூலுக்கு இவர்,

> "மகரராச ராசபூ சிதராச மகரராச
> மகரராச ராசஸ்ரீ
> மாமண்ட லாதிபதி சோமசே கரசரண
> வரசக்ர தரபூபதி

மலர்மங்கை நடனமிடு தளவாய் புயாசலன்
    வாணர்கவி கோபனில
மயில்வா கனத்துலவு கைலாய சற்குருவை
    வடிவேல் எடுத்த கரசே
வலர்கார்த்தி கேயருட பததாம ரைத்துணை
    மலர்ந்தமகு டாதி பத்யன்
மன்னுபுகழ் தென்னிளசை அரசுபுரி நலசில்ல
    வார்கோத்ர சிந்தா மணி
மநுநீதி நவரூத சக்ரவர்த் தினியவர்கள்
    வரிசைபல பெற்ற சுமுகன்
வம்சமணி தீபிகை எனும்பெருநன் னூல்கொடுதம்
    மரபினை விளக்கும் வரதன்
செகராசர் பரவச்சி வந்தபொற் கமலபத
    திடவுக்ர சௌரிய விசயன்
செகவீர ராமக்கு மாரஎட் டேந்த்ரமுகில்
    திருவுளக் கனிவு கூர்ந்து
தென்கழுகு மலைவாசர் சரவணோற் பவரன்பர்
    சிந்தைகுடி கொண்ட நேசர்
தேவசே னாபதி நான்மறைக் கெட்டாத
    திவ்யசர ணாரவிந் தச்
தேவசே னைக்குரிய ராகியுங் கான்வேட
    சேரியிற் சிறுமி தந்த
செந்தினைப் பிண்டியுண் டானந்த பரவசத்
    தினராய் மணந்த கதையைச்
செந்தமிழில் நாடக பிரபந்த மாகவே
    செப்புகென உத்த ரவுமே
செய்திடப் புந்தியுள் கொண்டுபர மானந்த
    தேசிகன் ஞானோ தயன்
சுகராதி வந்தனைசெய் கார்த்திகே யக்கடவுள்
    துணையடியை மறவா தவன்
சுத்தசித் தன்திவ்ய சாந்தகுண பூதரன்
    துலைக் குமகா ரணைத்
தொடர்விளிலை கண்டவன் வித்துவசி ரோன்மணி
    சொற்கடிகை வம்சன் மலைமேல்
தோன்றுதீ பிகைநமசி வாயகவி ராசனுல்
    சொற்பொலிவு பொருண்ம துரமும்
சோர்விலா திம்பர்ச் செவிக்கமு தெனத்தந்த
    சுந்தரவி லாச மதனைத்
தொழுகுல சிரேட்டன்நவ ரசமொழுகு சங்கீத
    சுரசார நிலையு ணர்ந்தோன்

சுருதிமுறை தவறாத செயவால சாமிகுரு
துணையடி பராவு மதனன்
சுப்பரா யக்குரிசில் கைப்படா மலகமெனச்
சூட்சிந் திசைத்த பலவாய்ப்
பகராதி தாளமொடு ராகசுர பேதமிகு
பண்ணமைத் தமையை எங்கோன்
பார்த்திபர்கள் போற்றுநல கீர்த்திமான் சைவப்
பயிர்க்குரிய காள மேகம்
பரதனொடு தாசரதி சோதர சிரேட்டமிப்
படியிலெனு மொழியை நிலைமை
பாலிக்க வந்தருளு மாலுக்ர கேசரிச
பாரத்ந மதன னெனும்சூ
பாசானு வாகன்விசு வாசரதி குணநேச
பத்மைசெறி வாகு வலயன்
படியெலாம் படியவளர் வெங்கடே சுரஎட்ட
பாண்டியன் உளம கிழ்ந்திப்
படிவாய்த்த மாதுரிய பாரதவி லாசமெப்
படியிலும் படிப டியெனப்
பரவமுத் தமிழ்பரவு நெல்வேலி அச்சில்
பதித்தரங் கேற்றி னனரோ.''

என்னுஞ் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## களசு. இராமசாமிப் பிள்ளை - கா

இவர் திரிசிரபுரம் பீமநகரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களிலும் காலக்கணித நூலினும் சிறந்த புலமை வாய்ந்தவர். இவர் சோதிட சிகாமணி என்னும் நூலை முதனூல் கொண்டு சீரிய செந்தமிழ்ப் பாக்களில் பாடியுள்ளார்.

'' மதியின் பாக்கி யனைந்திடை வாழ்வுற
மாம திக்கா யம்பாக்கிய வான்வந
பதிய னுட்சியு முச்சங்க ளைபெறப்
பாலன் தந்தைக்குப் பூரண வாயுளே
புதிய மாமதி பஞ்சமன் மேருவும்
புகரு மாட்சியி லாபநட் பெய்துற
அதிக மாரவி யாட்சிபெற் றோங்குற
அவன்பிதா நெடி தாயுளை மேவுமே.''

என்பது பூரண பிதிர்ப்பலன் என்னும் பகுதியில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி மேகளத்தூர் வீரப்ப செட்டியார், திரிசிரபுரம்

வரகநகர், ஆ. கா. பிச்சை இபுராகிம் புலவர், கு. சோமசுந்தர உபாத்தியாயர், சோதிடம் வி. ஆரியமுத்துப் பிள்ளை, சோதிடம் சோலைமலைப் பிள்ளை, குன்றத்தூர் மதுரகவி மாணிக்க முதலியார், மா. பொன்னுச்சாமிப் பிள்ளை, இராசு நாயகர், வே. சுப்பிரமணிய உடையார், பிருங்கி இராமசாமி முதலியார், சென்னை உருத்திரகோடியா பிள்ளை, தம்புசாமிப் பிள்ளை, முகமது அப்துல்லா சாயபு, திருப்பையூர் இரகுபதி மழவராயர், திரிசிரபுரம் முத்தையக் கோனர், அரன்வாயல் வேங்கடசுப்புப் பிள்ளை, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கஎஎ. இராமசாமிப் புலவர் - சு.
(19—நூ.)

பெங்களூர் என இக்காலத்தில் வழங்கும் கலியாணபுரம் அரசுமா நகரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய வாழ்க்கை வரலாறுகள் தெரியவில்லை. சிறந்த புலவராக விளங்கியிருந்தவரென்பது பெயரினால் அறியக்கிடக்கிறது. நாலுமந்திரி விலாசம் என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரத்தின் ஒரு பகுதி,

> "கடலே முனையும் மருங்கினில் உடுத்த
> நெடும்புவி தன்னில் நீர்வளம் நிலவளம்
> மிக்குள தாகி விளங்கும் பொய்கையில்
> பக்குவ மாகப் படர்ந்தில கியநல்
> தாமரைத் தாளில் தரளம் உதிர்க்க
> வாமபொற் சிறகனம் அயர்ந்துகண் வளரப்
> பணைகளிற் களித்துப் பாய்வரா லினங்கள்
> மணமுறும் பலாவின் கனிகளை உதிர்க்கக்
> கதிரவன் தடந்தேர் கடக்கொணு மதில்சூழ்."

என்பது. இவர் பரத்துவதியான கீர்த்தனை என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூலுக்குச் சென்னை இராயபுரத்தில் இருந்த வே. கி. நாராயணசாமிப் பிள்ளை என்பவர்,

> "சைவர்கள்தஞ் சிவசமய நெறியென்பார்
> நாரணன்றன் சமயத் தோர்கள்
> பொய்யில்விசிட் டாத்துவிதப் பொருளென்பார்
> ஏனையர்தம் பொருளே என்பார்

பெய்யருளுங் கடற்கடவுள் நிலையுணர்வார்க்
குறைவிடமாம் பெங்க ளூரில்
சையிகனி ராமசா மிப்பரத்வ
தியானகீர்த் தனையை மாதோ.''

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஎ௮. இராமசாமி முதலியார் - அ.

(19—நூ.)

திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள அரியநாயகிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை யடைந்தவர். மௌனகுரு பதிகம், ஞானக்கும்மி முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். இவர் ஆய்க்குடி என்னும் ஊரில் இருந்த பரமசிவ அடிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர்.

''தேகத்தை நம்பித் திரிந்திடுஞ் சீவர்கள்
சென்மம் எடுத்தே அலைந்திடுவார்
ஏகத்தை நம்பி இருப்பவர்க்குச் சென்மம்
எப்படி உண்டாகும் ஞானப் பெண்ணே.

வாய்ஞானம் பேசியே ஞானியென்று தன்னை
மதிக்கவே காயாச மொட்டை யிட்டுப்
பேயனைப் போலவே பிதற்றுவன் நீயவன்
பேச்சில் மயங்காதே ஞானப் பெண்ணே.''

என்பன ஞானக்கும்மியில் இரண்டு பாட்டு.

## கஎ௯. இராமசாமி முதலியார் - சுப்பு

(19—நூ.)

''புதுவையம் பதியிற் பொருந்திய தூயோன்
கற்றோர்க் கிருகணன் கல்விய நிருவினன்
பெற்றோர் பிறந்தார் பேணுசற் பாத்திரன்
திங்களார் கண்ணியான் செஞ்சடைத் தேங்கிய
கங்கா குலத்தினன் கலைக்கடல் கடந்தோன்
சுப்ப ராயவேள் சுதனெனனச் சொற்றிடும்
தப்பிலா இராம சாமிநா வலனே.''

என்று பொன்னுப் பிள்ளை என்பவராற் பாராட்டப்பெற்ற இவர் புதுச்சேரியில் சுப்பராய முதலியார் என்பவருக்கு அருமைத்

திருமகனாகத் தோன்றிக் கல்விகற்றுப் புலமைபெற்றுக் கலவைச் சுப்பராய செட்டியார் என்பவருடைய தருமப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். செய்யுள் செய்வதில் தேர்ச்சிபெற்று விளங்கிய இவர், வில்வவனத்தந்தாதி, கோகிலாம்பிகை மாலை, முத்துக்குமாரக் கடவுள் பஞ்சரத்தினம் முதலிய நூல்களை இயற்றினார். இந்நூல்கள் திருப்பாதிரிப் புலியூர் இயற்றமிழாசிரியர் க. ரா. சிவசிதம்பர முதலியார் அவர்களால் ஆராய்ந்து பார்க்கப்பட்டுப் புதுவை பொன்னுப் பிள்ளை, தி. க. சுப்பராயச் செட்டியார், கும்பகோணம் சிவகுருநாத ஐயர், அ. பெரியசாமிப் பிள்ளை, உ.சு. மாணிக்கப் பிள்ளை, கு. இரத்தினப் பிள்ளை என்பவர்களுடைய சிறப்புப்பாயிரப் பாடல்களோடு வெளியாகியுள்ளன.

"பாண்டியன் வேள்வி தன்னின்மூ வாண்டு
பகரும் புதல்வியா வந்து
மாண்டரு மதுரை ஆண்டிடும் அரசே!
வஞ்சனேற் கருளும்நாள் உளதோ?
வேண்டுபொன் மன்றில் தாண்டவஞ் செய்த
விமலர்கா மீசர்பா கத்தார்
ஆண்டகை யரசர் ஈண்டியே வாழும்
அணிவில்வைக் கோகிலாம் பிகையே."

என்பது வில்வவனக் கோகிலாம்பிகை மாலையில் ஒரு பாட்டு.

## கஅ௦. இராமசாமி ரெட்டியார்

சோழவள நாட்டில் ஏய்யலூர் என்னும் ஊரில் சிற்றூர் மணியஞ் செய்துகொண்டிருந்தவர். தமிழறிவுமிக்க இவர் சீனிவாசதாதாசாரியர் என்பவர் இயற்றிய பூவராகர் அந்தாதி என்னும் நூலுக்கு,

"திருமுட்ட மாம்பதியில் வாழ்பூவ ராகனருள்
சேர்ந்துதிரு நாதமுனிகள்
திருமரபில் வந்தநர சிங்கதே சிகர்தந்த
சீநிவாச ரெனுமாரியர்,
தருமாதி வாராகன் விடயமாம் யமகவந்
தாதிகா ரிகைகள் நூறும்
தருமுபய வேதநத் பொருள்விளக் கஞ்செய்து
சந்ததங்கேட்ப வர்க்குக்,

கருவிற் புகாவண்ண முய்விக்கு மிகுமறிவு
காட்டுநற் செய்கை யீயும்
கடிதிலரி பத்திதரு மன்பரொடு சேர்வுறக்
கமலை யருள்நனி யீயுமால்,
இருமா நிலத்திலிவ் வாராக ரந்தாதி
இதுபத்தி யோடு செய்த
இயற்சீநி வாசரம் புயவல்லி யோடுறையும்
இறைவரா கரும்வாழ் கவே.''

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கஎக. இராமச்சந்திர கவிராயர்

(19—நூ.)

இவர் இராயநல்லூர் என்னும் ஊரில் இருந்தவர். செய்யுள் பாடுந் திறம் மிக்கவராதலின் கவிராசர் எனவும், கவிச் சக்கரவர்த்தி எனவும் கூறப்பெற்றார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் தாருகாவன விலாசம், மகாபாரத விலாசம் என்பன. தாருகாவன விலாசம் என்பது ஆணவங் கொண்டிருந்த தாருகாவன முனிவர்களது தவத்தைச் சிவபிரான் கெடுத்த கதையைச் சொல்வது. மகாபாரத விலாசம் என்பது மகாபாரதக் கதை கூறுவது. இரண்டும் நாடகத் தமிழில் அமைந்தவை. இவைகள் வெகுகாலத்திற்கு முன் அச்சாகி வெளிவந்தன. மறுமுறை அச்சிடப்பட்டதாகத் தெரியவில்லை.

''அத்தனை அரனை விண்ணோர்க் காதியை அகில மெல்லாம்
பெற்றவித் தகனை ஞானப் பெண்ணொரு பாகத் தோனை
நத்திநல் லடிவ ணங்கி நாமருந் தவமி ழைத்தால்
சத்தியாய் நாமிப் போதே சாயுச் சியம்அடைய லாமே.''

என்பது தாருகாவன விலாசத்தில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு ஊர் பெயர் முதலியன அறியப்பெறாத அறிஞர் ஒருவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். அதனை அடியிற் காண்க:

''மணிமுடி அரசர் மற்ற வையகத் தவர்கள் போற்றும்
அணிதிரு ராய நல்லூர் ஆதித்தன் குலத்து தித்த
குணமணி ராமச் சந்த்ர குரிசில்இந் நாடகத்தைப்
பணியுளம் வியப்ப சீதப் பசுந்தமி ழாற்செய் தானே.''

## கஅஉ. இராமச்சந்திர குருசாமிதாசர்
(1909)

இவர் சம்பத்கிரி அச்சுதானந்த சுவாமிகளின் மாணவர். அப்பெரியாரிடம் அருளுரை பெற்றவர். 'குசேல சரித்திர ஏற்றப் பாட்டு'' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

''தொல்பிறப்பிற் செய்த தோடமெது தானோ
தனமுடை யோருக்குத் தாராத பிரமன்
பொருள்வர வில்லார்க்குப் புத்திரரைத் தந்தான்
செல்வமில் லாதார்க்குச் சேயர்களைத் தந்தான்
இக்கொடுமை யாலே இவரிருக்கும் வீட்டில்
தரித்திர மிகுந்து தந்தனிக்க லானார்
வீடுதேடிவந்த விருந்துக் கஞ்ச லானார்
பின்னுமந்த வீட்டில் பிச்சைக்கும் நாயில்லை
சிற்றெறும்பு சேர்ந்து சீவிக்க நொய்யில்லை
கையிலொரு காசும காணுவதற் கில்லை
அண்டையில் எவரும் ஆதரிப்பார் இல்லை
மக்கள் படுந் துன்பம் மாற்றுவதற் கில்லை ''

என்பது ஏற்றப் பாட்டில் சில அடிகள்.

## கஅங. இராமச்சந்திர பிள்ளை — ஏ.

இவர் நாஞ்சில் நாட்டினர். செந்தமிழ் மொழியை நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்றார். கள்ளியங்காடு என்னும் ஊரில் பள்ளியொன்றமைத்துக் கணக்காயராக விளங்கினார். அருந்தமிழ்ப் பாடல்களையும் இவர் திருந்திய வகையில் பொருந்துமாறு பாடுவதில் புகழ்பெற்று விளங்கினார். பறக்கை மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் இயற்றிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப் பாயிரத்தை அடியிற் காண்க :

'' சீர்மருவு செந்தமிழ்நன் னாட்டில் ஆன்றோர்
செழுங்குழுச்சேர் பக்கிபுரத் திலகு மென்ன
ஏர்மருவு வேளாளர் மரபில் தோன்றி
ஏற்றவருக் குதவுமனத் தினிமை மல்கிப்
பேர்மருவும் அறிஞருளப் பேழை வைகும்
பிரபலநன் னிலைபெற்ற பெருமை தாங்கிப்
பார்மருவு பன்னலனும் பலிப்பச் செந்தில்
பதிற்றுப்பத் தாம்பனுவல் பணித்துத் தந்தான்.

அன்றியுநற் கந்தர்கலி நீங்கு வெண்பா
அறைந்தவன்றன் அணிமலர்த்தாள் அகத்திற் சூடிக்
கன்றியவெவ் வினைதுடைத்துக் காட்சி பூண்டு
கவலைமல மயக்கொழித்துக் கவலொ ணுச்சீர்
துன்றியமெய்ப் பேறுபெற்ற பெரியோ ஞகித்
தொல்லுலகில் எஞ்ஞான்றும் தோன்ற நின்ருன்
ஒன்றியபல் விலக்கணவி லக்கி யங்கள்
ஒருசேரக் கற்றுணர்ந்த உரவோன் அம்மா.

தொல்லறத்தின் முறைபிறழாத் தொடர்பு தாங்கிச்
சுத்தசைவ சித்தாந்தச் சூழ்ச்சி தேறி
இல்லறத்தின் படியொழுகும் இயல்பே பூத்து
எளியாரைப் புதியாரை இனிது காத்துப்
புல்லறத்திற் புக்காத போத மேறிப்
பூதலத்தும் மீதலத்தும் புகழே கொண்டோன்
மல்லறத்திற் கொருகூடராய் வயங்கி நின்ற
மாணிக்க வாசகப்பேர் மதிவல் லோனே.''

இவற்ருல் இவர் பல பாடல்கள் பாடித் தெளிவுபெற்றவரென்பது நன்கு பெறப்படுகின்றது

## கஅச. இராமச்சந்திர வெள்ளைப் பொம்மைய நாயகர் (1863)

இவர் கரிசைப்பட்டு என்னும் ஊரில் பெருநிலக்கிழாராக விளங்கியிருந்தவர். இவருடைய குலம் சில்லவார் குலம் என்று சொல்லப்படுகிறது. இவர் சிற்றரசராக விருந்தும் தக்க அறிஞர்கள்பால் தமிழ்மொழியை நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்ருர். இவர் அறநூல் ஒன்று "இதய தீபம்" என்னும் பெயரோடு செய்துள்ளார். அது குறள் வெண்பாக்களால் ஆகியது.

"வேளாண்மை செய்யா விடினுணவே இல்லையந்தத்
தாளாண்மை யார்க்குந் தலை."

என்பது அந்நூலில் ஒரு குறள். இந்நூலுக்குத் தெட்சணமூர்த்தி நாயகர் என்பவர் உரை செய்திருக்கிருர். உரை செய்த தெட்சணமூர்த்தி நாயகர், அரண்மனை வித்துவான் காட்டுவாவா சாய்பு, மதுரை சுப்பராய பத்தர், கரிசைப்பட்டு அண்ணுசாமி ஐயர், மழவராயனேந்தல் துவிசதாவதானம் சுப்பராமையர்,

மதுரை நாகம நாயகர், சிவகங்கை சங்கரலிங்கம் பிள்ளை, மதுரை ஆதிநாராயண பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## க௪௫ இராமதேவர்

இவர் ஆயிரம் பாடல்கள் அடங்கிய வைத்திய நூல் ஒன்றை இயற்றினார். அந்நூலிலே பலவகையான மருந்துகள் செய்யும் முறை கூறப்பெற்றுள்ளது.

> " முற்றான இந் நூல்தான் ஆயிரந்தான்
> முறையான கருக்குருவம் வெளியாச் சொன்னோம்
> கற்றான தயிலங்கள் இருதப்போக்குக்
> கருவான லேகியங்கள் பற்பமார்க்கம்
> சொற்றான கபாடங்கள் நசியப் போக்குச்
> சுணுவான கஷாயங்கள் திலதப் போக்குப்
> பற்றான சாலங்கள் பரிசவேதை
> பாடினோ மாயிரத்திற் பணிவா முற்றே."

என்பது நூற்பாடல்களில் ஒன்று.

## க௪௬. இராமநாதச் செட்டியார் - மு

(20—நூ.)

பாண்டிவள நாட்டில் காரைக்குடியில் தனவணிகர் மரபில் முத்தையச் செட்டியார் என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர் இலக்கியங்கள் சில கற்றுச் செய்யுள் பாடும் புலமையடைந்திருந்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் 'கந்தபுராண படலச் சிறப்புக் கவி' முதலியன.

> " வானேறும் பொழில்கள்பல பொலிந்து மீறும்
> மயலேறி மலரேறி வண்டரெல்லாம்
> கானேறும் பிரசமெலாம் தேக்கிச் சூழ்ந்த
> கயமேறிக் கரையேறிக் கடிவா னேறும்
> தேனேறுங் கனியருந்தும் கவிக ளெல்லாம்
> தியக்கேறித் தெங்கேறிச் செல்வா னேறும்
> [illegible]றுங் கலையேறும் கனக மேறும்
> வலனேறும் நலனேறும் வளங்கொள் நாடு."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## க௭எ. இராமநாதச் செட்டியார்

(20—நூ.)

செட்டிமார் நாட்டில் நாச்சியார்புரம் என்னும் ஊரில் தன வணிக குலத்தில் தோன்றியவர். வன்தொண்டச் செட்டியாரிடம் நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்டுப் புலமையடைந்தார். குன்றக்குடியில் எழுந்தருளிய முருகப்பெருமான்மீது காவடிச் சிந்து முதலியன பாடியுள்ளார். பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் பாடிய வீரவிநாயகர் பதிகம் மாலை முதலிய நூல்களுக்கு இவர்,

> ''கந்தரமார் நெஞ்சர்க் கருதுங் கதிரேசன்
> சுந்தரவி நாயகர்க்குச் சொற்றபதி—கந்தமொடு
> விமாலை வாடுமென வீர விநாயகர்க்குப்
> பாமாலை வேய்ந்தான் பரிந்து.''

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## க௭அ. இராமநாதர்

நமது உடலில் தோள்கள் கண்கள் முதலிய பலவிடங்கள் சிலபோது துடித்தலை அறிகின்றோம். இன்ன இன்ன இடங்கள் துடிக்கிற் பலனிதுவாம் என்று கூறும் ''துடிநூல்'' என்பதொன்றை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூல் பதினாறு பாக்களைக் கொண்டதாக விளங்குகின்றது. இந் நூல் விக்கிரமாதித்த மன்னனுடைய வேண்டுகோளின்படி இயற்றப்பெற்றதென்பதை,

> ''மன்னன் விக்கிர மாதித்தன் சொல்வழிப்
> பன்னி ரண்டொரு நால்விருத் தத்தினில்
> துன்னு சீர்த்துடி நூலைத் தொகுத்தனன்
> நன்னி லம்புகழ் இராமநா தன்னரோ.''

என்னும் பாடல் இயம்புகின்றது. நூலின் பாக்களில் ஒன்றை அடியிற் காண்க.

> சிருடனே துடிக்கில்உச்சி இடரே நீங்கும்
> சிறந்தவுச்சி வலந்துடிக்கில் அச்சம் சொல்லும்
> பேருடனே உச்சியிடம் பெருமை யாகும்
> பின்தலையே துடிக்கிற்சத் துருக்க ளுண்டாம்

சார்புடனே தலையடங்கற் றுடிக்கு மாயின்
தலைவனுற் பெருமைசம் பத்து முண்டாம்
நேருடனே நெற்றியிடந் துடிக்கு மாகில்
நேர்வார்த்தை சம்பத்து நிறைய வாமே.

## கஅகூ. இராமநாதன்
## (1893)

கோயிலூரில் எழுந்தருளியிருந்த முத்துராமலிங்க அடிகளாருடைய மாணவர்களில் இவர் ஒருவர். இவர் பதிநாமாமுதம், சிவநாம தசபஞ்சகம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"இணையிலாப் பொருளே பழமறைக் கொழுந்தே
இறைவனே எங்கள் நாயகனே
துணைமுலை உமையாள் பங்கனே ஞானச்
சோதியே சுடரொளி விளக்கே
பணிசெயும் அடியேன் பிறவிவேர் அறுத்துப்
பரகதி கொடுத்தருள் பரனே
அணிபுகழ் வேலப் பதியினில் உறையும்
அப்பனே ஆருயிர்த் துணையே."

என்பது சிவநாம தசபஞ்சகத்தில் ஒரு பாட்டு.

## ககூo. இராம பாரதியார்

இவர் பிறந்த ஊர் காலம் முதலியன அறியப்படவில்லை. ஔவையார் இயற்றிய ஆத்திசூடி மொழிகளை இறுதியில் அமைத்து, "ஆத்திசூடி வெண்பா" என்னும் பெயரோடு நூல் ஒன்று செய்தார். ஆத்திசூடி வெண்பாவை இராம பாரதியார் இயற்றினர் என்பதை,

"பாரோர் புகழ்ராம பாரதிசெம் பாகமதாய்ச்
சீராத்தி சூடி செழுந்தமிழைப்—பேராக
நாகரிகன் புன்னைவன நாதமகி பன்புனைந்தான்
வாகுவினிற் கீர்த்தி வர."

என்னும் வெண்பாவும் விளக்குகின்றது.

"அருளார் கபிலை அறமே செயமென்
றிருளகல வேங்கைக் கியம்பும்—பெருமையினால்
மாவளரும் புன்னை வனநாதா மெய்த்துணையா
மேவிஅறஞ் செய்ய விரும்பு."

என்பது ஆத்திசூடி வெண்பாவில் ஒரு பாட்டு.

## ககூக. இராமலிங்க ஐயர்

19ஆம் நூற்றுண்டிலே யாழ்ப்பாணத்து நல்லூரிலே இருந்தவர். சந்தான தீபிகை என்னும் நூலை இயற்றினர். சரசோதிமாலை என்னும் நூலைப் பதிப்பித்து வெளியிட்டார்.

## 'ககூஉ. இராமலிங்க ஐயர்
(கி. பி. 19—நூ.)

பாண்டிவள நாட்டிலே இராமேசநல்லூர் என்னும் அறுகன் கூவிளங் கிராமத்தில் மகாதேவ ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தேவி மான்மியம் என்னும் நூல் பாடிய சோமநாத பாரதியார் என்பவரிடம் கல்வி கற்றுர். இவர் தம்முடைய ஆசிரியரின் நூலுக்கு,

> "சீர்பெறு வளங்க ளெல்லாம்
> செழித்தரா மேச நல்லூர்
> பேர்பெறுந் தலத்தில் வாழ்வோன்
> பெருகுமுச் சுதந்த ரத்தான்
> ஏர்பெறுஞ் சோம நாதன்
> எழில்சிவ தாசன் என்போன்
> பார்பெறும் அமிழ்தாய்த் தேவி
> மான்மியம் பகர்ந்தான் மாதோ."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ககூ௩. இராமலிங்கக் கவிராயர் (பேட்டை)
(1868)

பாண்டிவள நாட்டிலே திக்கெலாம் புகழும் திருநெல்வேலிக்கு அண்மையிலே உள்ள பேட்டையில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இவரைப்பற்றிய செய்தியெதுவுந் தெரியவில்லை. இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர்மீது இயற்றிய இருபத்தெண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம், அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம் ஆகிய பாடல்கள் தனிப்பாடலிற் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் இருபத்தெண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தத்தை அடியிற் காண்க:

"மணிகொண்ட பஃறலைப் பாந்தள்மா முடிநெளிய
மாமேரு வுஞ்ச லிக்க
மாகமு நடுங்கவகி ரண்டமு மொடுங்கவுணர்
மாயமர கதநி கர்த்த
மலைமயிலின் முதுகில்வரு சரவணோற் பவகுகனை
மனமென்னு மலரி னூலே
மகிழ்ந்தருச் சனைசெய்து தொழுங்கருணை வள்ளலே
மாநிதிய முதவு தருவே
திணிகொண்ட மாதவத் தோர்கள்மநம் அகலாத
தேசோ மயாநந் தமாஞ்
சேதுநா யகனருள் விளக்கும் புராணத்தைத்
திறமாயச் சிற்ப தித்துச்
செல்வமிக் குயர்கீர்த்தி தன்பேர் விளங்கிடச்
செயமான கவிகள் பாடும்
திவ்யகவி வாணர்கட் கமிர்தபுத் தகமருள்
செழுங்கருணை பொழியு முகிலே,
அணிகொண்ட கல்வியரு ளாக்கநன் மாண்புபொறை
அதிகமா ஞாநம் யாவும்
அமைந்தசிவ ஞானமணி மன்னனரு ளால்வந்த
அமிர்தகுண மான முதலே
ஆகம்பொன் மதிமுகம் நாசிகுமிழ் வேய்த்தோள்
அனங்குநிகர் மின்னூ ரெலாம்
அன்புபெற் றோங்கிவாழ் காமனென மடலெழுதி
அநுதினம் பார்க்கு மரசே
கணிகொண்ட கல்வியாம் பயிரன்பு நீராற்
கவின்பெற வளர்த்து நாளும்
காலம்வரை யாதநு பவித்துவளர் சீலநின்
காட்சியை உரைக்க வெளிதோ
கமலமா துறையுநற் புதுவைமா நகரில்வாழ்
கர்த்தனே பொன்னுச் சாமிக்
கன்னனே மேருபுய நிரகட் டழகமுக
கமலவசி கரநா தனே."

## கக்சு. இராமலிங்கக் குருக்கள் - வி

இவர் விருதுப்பட்டியில் வாழ்ந்திருந்தவர். செல்வக் குழந்தைகள் திருத்தாலாட்டு முதலிய நூல் இயற்றியுள்ளார்.

"தேவர் வணங்குந் திருமாலை யீசுரனை
பூவெடுத்துப் பூசைபண்ணும் புண்ணியத்தால் வந்தாயோ
சென்னைக் கவர்னர்மெச்சும் சீமானும் உங்களம்மான்

> கன்னப் பணிதிகொண்டு காதுகுத்த வாரார்கள்
> மிக்கவருட் சொக்கேசர் மீனுட்சி பெற்றெடுத்த
> உக்கிரவீர பாண்டியனுய் உலகாள வந்தாயோ.''

இவை அத் தாலாட்டில் சில அடிகள். இவர் அச்சகம் ஒன்றை அமைத்து அதை நடத்தினர் எனவும், மற்றும் பல சில்லரை நூல்களை இயற்றித் தம் பதிப்பகத்திலேயே வெளியிட்டார் என்றும் தெரிகிறது.

## கசுரு. இராமலிங்கத் தம்பிரான் - கொ
(20—நூ.)

சென்னையில் இருந்தவர். திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகளின் அடியவர்களில் ஒருவர். கார்த்திகைத் தீபம் முதலிய நூல்கள் எழுதியுள்ளார். சுவாமி சதானந்தா என்பவருக்கு இராசரிஷி என்று பெயர் கொடுக்கப் பட்டபோது இவர் பாடிய செய்யுள்களில் ஒன்றை அடியிற் காண்க.

> ''சற்றுமா றின்றிப் பலபகல் இயற்றும்
> சாற்றருந் தவப்பயன் ஒருங்கே
> பொற்புறத் திரண்டோர் வடிவெடுத் தென்னப்
> பூதலம் புகழுற உதித்தோன்
> விற்பன சாமி நற்சதா நந்தா
> எனும்இயற் பெயரமைந் துள்ளோன்
> கற்றநா வலர்கள் பாவலர் தம்மைக்
> கருதுயிர் எனப்பரிந் தளிப்போன்''

திருவண்ணுமலை வரலாறு முதலியன இவர் எழுதிய நூல்கள். அண்மைக்காலம் வரையில் வாழ்ந்திருந்த அறிஞர்களில் இவர் ஒருவர்.

## கசுசு. இராமலிங்கம் பிள்ளை - அ
(20—நூ.)

இவர் திரிசிரபுரம் எஸ். பி. ஜி. கல்லூரியில் தமிழாசிரிய ராக இருந்தவ்ர். மருங்காபுரி சமத்தானப் புலவராகவும் அவதானங்கள் செய்பவராகவும் விளங்கினுர். இவருடைய புலமைச் சிறப்பை நோக்கி இவரை மகாவித்துவான் என்று

கூறினர். இவர் மதுரை அங்கயற்கண் அம்மை அலங்காரம், மதுரைநாயகி மாதமாலை முதலிய நூல்களைப் பாடியுள்ளார். இவ் விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர்.

> "சீரார் செழியன் மகளாய்ப் பிறந்து திகழ்கலைகள்
> நேராய்ப் பயின்று முடிசூடித் திக்கினை நேடிவென்று
> காரார் கயிலைப் பிரான்வச மாக்கிக் கதித்த செல்வப்
> பாரார் மனுமுறை செங்கோல் நடாத்திய பார்வதியே."

என்பது அங்கயற்கண்ணம்மை அலங்காரத்தில் முதற்பாட்டு.

## கககள. இராமலிங்கம் பிள்ளை - ஆ. தி.

(20—நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டம் ஆற்றூரில் திருச்சிற்றம்பலம் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவர் தச்சநல்லூர்ச் சித்தர் மான்மியம் என்னும் நூலை இருநூற்றைம்பத்தைந்து செய்யுளாகப் பாடியுள்ளார். நூலைப் பாராட்டி மேலகரம் சொ. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளனர்.

> "சித்தர்தம் ஆணை தன்னைச் சென்னிமேல் தாங்கிக் கற்பின்
> உத்தமி ஆகுங் கன்னி ஒருத்தியை மணந்து பின்னர்
> மத்தமும் மதியுஞ் சூடும் வானவன் கருணை நோக்கால்
> புத்திரன் ஒருவற் றந்தான் புண்ணியப் பயனே போல."

என்பது நூலில் ஒரு பாட்டு. மற்றும் இவர் மிக்கேல்சித்தர் மான்மியம், சுப்பிரம சொரூபானந்தர் மான்மியம், சிவாநுபூதி, மாதவச் சிவஞான சுவாமிகள் நான்மணிமாலை முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். அரசாங்க அலுவலில் இருந்தவர்.

> "முனிவரர்க் கமுதம் அன்பால் முகமலர்ந் தூட்டா நின்ற
> பனிமலர்க் கோதை கற்பிற் பகரரு வடமீன் அன்னாள்
> கனியினும் இனிய தீஞ்சொல் கார்மயில் அம்மை ஈன்ற
> நனிசிவ ஞான யோக நாதர்தாள் வழுத்து வோமே."

என்பது சிவஞான சுவாமிகள் நான்மணிமாலையில் ஒரு பாட்டு. திருச்செந்தூர் முருகக்கடவுள் மும்மணிக்கோவை என்னும் நூலும் இவரால் இயற்றப்பெற்றுள்ளது.

"கண்டுநல் விடுறப் பாதார விந்தங் கருதிமலர்
கொண்டுகை கூப்பியே மெய்யடி யார்தினங் கூடுசெந்தூர்த்
தண்டுழாய் மார்பன்நஞ் சாரங்க பாணி தனிமருகா
வண்டுபண் கொண்டவுன் செந்தா மரைப்பதம் வாழ்த்துவனே."

என்பது மும்மணிக்கோவையில் ஒரு பாட்டு.

## கசுஅ. இராமலிங்கம் பிள்ளை (வ)

ஈழவள நாட்டுச் சுதுமலையிலே பிறந்தவர். தந்தையார் பெயர் வைரமுத்து உடையார். முத்துக்குமார பிள்ளை என்பவரிடத்தில் கல்வி கற்றார். ஆங்கிலத்திலும் வல்லவர். இவரால் இயற்றப்பெற்றவை சங்கிலியந்தாதி, மாணிக்கவாசகர் விலாசம், நளச்சக்கிரவர்த்தி விலாசம், இசைப்பாடல்கள் முதலியன. இவர் 1885 ஆம் ஆண்டிற் காலமானார்.

"பொன்னுலகம் என்னப் பொலியுநிட தம்புரக்கும்
மன்னனளச் சக்ரவர்த்தி மாகதையை—இந்நிலத்தே
சந்த விலாசத் தமிழால் இயம்புதற்குத்
தந்தி முகன்தாள் சரண்."

என்பது இவர் இயற்றிய நளச்சக்கிரவர்த்தி விலாசக் காப்புச் செய்யுள்.

## கசுகூ. இராமலிங்கம் பிள்ளை (ங)
## (19—நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் பொந்தம்புளி என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் நவநீதகிருட்டிண பிள்ளை. வண்ணப்பாடல்கள் பாடுவதில் வல்லவராகிய இவர் கந்தபுராணச் செய்திகள் எல்லாவற்றையும் அடக்கிக் கந்த புராண வண்ணம் என்னும் வண்ணப்பாடலைப் பாடியிருக்கிறார்.

"எந்தப் புராணத் தியல்பினிலு மேற்புகழின்
கந்தப் புராணமதைக் காதல்வணஞ்—சந்திசொல
மாதங்கத் தன்காணு மாதங்கத் தன்பயந்த
மாதங்கத் தன்புவரு மால்."

என்பது காப்பு. பாடலைப் பாராட்டி, பெருநாழி வயிரவலிங்கம் பிள்ளை, முதுகுளத்தூர்க் கணக்குச் சுப்பையா பிள்ளை,

மேற்படியூர் பூ. ஆறுமுகம் பிள்ளை, சடையனேரி உத்தண்ட வேலுச்சாமியா பிள்ளை, கடலாடி துரைச்சிங்கம் பிள்ளை, பார்த்திபனூர் பழனியாண்டி யாசாரி, கடலாடி சிக்கந்தர் மூகையதீன் புலவர், கமுதக்குடி குமாரசாமியாசாரி, வால சுப்பிரமணியபுரம் சித்தமக் கவிராயர், பெருநாழி சங்கமுத்துப் பிள்ளை, மேற்படியூர்க் கந்தசாமிப் புலவர், கருப்பண பண்டாரம், மாரிமுத்துப் பண்டாரம் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள் ளனர். ஒரே ஒரு பாடலுக்கு இத்துணைப்பேர் சிறப்புப்பாயிரம் பாடியிருப்பது வண்ணப்பாட்டின் அருமையை எண்ணியே போலும்.

## உ00. இராமலிங்க முதலியார்
(1897)

இவர் சென்னை திருமயிலையில் குமாரசாமி முதலியார் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். திருமயிலையில் இருந்த வித்துவான் சண்முகம் பிள்ளையிடங் கல்வி கற்றுப் புலமை பெற்றவர். திருவொற்றியூர்த் தியாகேசர் மீது பதிற்றுப்பத்து அந்தாதி என்னும் நூல் ஒன்று இயற்றியிருக்கிறார்.

"விண்ணூர் பொழில்சூழ் ஒற்றிநகர்
விளங்கும் என்னை ஆளுடையான்
பெண்ணூண் அலியென் றுரைக்கரிய
பெருமான் கருணை ஒருசிறிதே
கண்ணா ரகிலத் துறுமடியர்
கருதில் எவையே அவர்க்கரிதாம்
உண்ணா டிடில்சர் ஏழுலகும்
ஒடுக்கிப் படைத்துப் புரப்பாரே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## உ0க. இராமாநந்த சுவாமிகள்

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர். சங்கற்ப நிராகரணம் என்னும் வேதாந்த நூலை இயற்றினார். இஃது அருணாசல சுவாமிகள் உரையுடன் வழங்குகிறது.

## உ0உ. இராமாநந்த சுவாமிகள் - (நிச்சல)
(20—நூ.)

இவர் திருவருட்பிரகாச வள்ளலாரின் மரபில் தோன்றியவர். அருணாசல சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அறிவு நூல்களைப் பயின்று தெளிந்தவர். காஞ்சீபுரத்தில் வாழ்ந்திருந்தவர். மோட்ச சாதன விளக்கம், சீதாராமாஞ்சநேய சம்வாதம், புராணே திகாச தத்துவார்த்த தீபிகை முதலிய நூல்களை இவர் இயற்றி யிருக்கிறார். இவருடைய நூல்களைப் பாராட்டி, மகேந்திரவாடி சேடாத்திரி சுவாமிகள், பெங்களூர் மௌனாநந்த சுவாமிகள், தே. சுப்பராய முதலியார், தண்டரை சுப்பராய ஆச்சாரியார், மணிமங்கலம் திருவேங்கட முதலியார், ல. நாராயணசாமி நாயகர், சிவாநந்த சுவாமிகள், முத்துக்குமாரசாமி முதலியார், வேலு நாயகர், தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், தில்லையம்பூர் சோமயாசி, வேங்கடராம ஐயங்கார், குத்தனூர் இராமசாமிச் சாத்திரியார், கா. இராமசாமி நாயுடு, புதுவை பெரியசாமிப் பிள்ளை, வெண்பாப்புலி வேலுச்சாமிப் பிள்ளை, காஞ்சீபுரம் சிவப்பிரகாச ஐயர், கா. நமச்சிவாய முதலியார், புதுவை, பராங்குச நாவலர், ஆ. மே. சென்னகேசவலு நாயுடு, காஞ்சீபுரம் கனகசபை நாயகர், கண்ணபிரான் முதலியார், சென்னை வா. மகாதேவ முதலியார், பானுகவி, ம. இராசகோபால பிள்ளை, கோ. வடிவேலுச் செட்டியார் மாணவர் அங்கமுத்துப் பிள்ளை, தி. அ. குப்புசாமிப் பத்தர், புதுவை இராமானுச பாவலர், காஞ்சீபுரம் சிவஞான ஐயர், காஞ்சீபுரம் சிற்றம்பல முதலியார், வைத்தியலிங்கம் பிள்ளை, வல்லி ப. தெய்வநாயக முதலியார், கா. ர. கோவிந்தராச முதலியார், சென்னை நிச்சலா நந்த சுவாமிகள், காஞ்சீபுரம் சின்மயானந்த சுவாமிகள் முதலிய பலபேர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். மேலும் இவர் சொரூபானுபூதி கொம்மி, அபரோட்சானுபவ கீர்த்தநாநந்தலகரி, ஞானயிபோதம் முதலிய நூல்களையும் இயற்றினார். இவர் மோட்சசாதன விளக்கத்தில்,

> "பொன்னுல காதி யாகப்
> பொருந்துமுன் னுலகிற் கப்பால்
> மன்னிய பொருளாய் மேலாய்
> மறைமுடி வாகி யாவும்

தன்னுளே யிருக்கந் தானும்
சகலத்தும் ஒளிர்வா னாகித்
துன்னுநற் சுயம்பிர காசச்
சொரூபத்தின் அடிகள் காப்பே ''

என்று சொரூப வணக்கஞ் செய்துள்ளார்.

இவர் 'சொரூப சித்தாந்த மாலை' என்னும் நூலும் பாடியுள்ளார். வெண்பாவாலாகிய இம் மாலை நூற்றைம்பது பாடல்களைக் கொண்டது. ஆதிநாராயண சாத்திரியார், கா. இராமசாமி நாயுடு, வெண்பாப்புலி வேலுச்சாமிப் பிள்ளை, நாராயணசாமி நாயகர், பராங்குச நாவலர், ஆரணி மேடிகை சென்ன கேசவலு நாயுடு, கோவிந்தராசு முதலியார், பு. ம. திருவேங்கட முதலியார் ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' பண்பறிந்தா ராகிப் பகர்வீர் பலகாலம்
விண்பரந்த மெய்ப்பொருளை மேவீர்காண்—மண்பிறந்தும்
என்ன பலனடைந்தீர் ஏதுக் குடற்பாரம்
தன்னைச் சுமப்பதுவே தாம்.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௨0௫. இராமாநுச ஐயங்கார்
(20—நூ.)

பாண்டிவள நாட்டிலே சீவரம் பூதூர் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த வைணவர். விழுப்ப நல்லூர்ப் பெருமாளையங்கார் என்பவர் இயற்றிய 'பல திரட்டு மங்களப் பிரபந்தம்' என்னும் நூலுக்கு இவர்,

'' இருக்கெழிலார் குலத்துதித்த வேங்கடதா
சன்கவிகள் இனியும் அன்னை
கருக்குழியி லாகாமல் முத்திபெறும்
வழிகாட்டிக் காரி மாறன்
திருக்குறுங் குடியாதி மால்குணங்கள்
அத்தனையுஞ் சேர்ந்து ஞானப்
பெருக்குயர்ந்து திகழ்ந்ததவன் அந்தரங்கம்
பக்திவெள்ளப் பெருமையாலே.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## உ௦௪. இராமாநுச ஐயர்—வே.
(1868)

இவர் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை யெய்திய இவர் திராவிட பாடசாலை என்னும் பெயரோடு பாடசாலை ஒன்றை ஏற்படுத்தி மாணவர் பலருக்கு இலக்கண இலக்கியங் கற்பித்தார். இவருடைய பாடசாலையில் வேறு சில புலவர்களும் ஆசிரியர்களாக இருந்தனர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்குச் சேது புராணப் புத்தகங் கேட்டுப் பாடற் கடிதம் ஒன்று எழுதியனுப்பினார்.

*"காவேந்தன் தவக்கொடியின் நலனுகரும்*
*கடவுண்மலர்க் கழல்கள போற்றும்*
*மூவேந்தர் எனவுதித்த முகிற்கரனே*
*முருகவிழ்தார் முல்லை மார்பா*
*பூவேந்தர் புகழ்பொன்னுச் சாமியெனும்*
*சித்தசனே புலவர் வாழ்வே*
*நாவேந்தன் அருள்சேது பதிமான்மியம்*
*அஃதொன்றை நல்கி டாயே.*

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## உ௦௫. இராமாநுச கவிராசர்
(19—நூ.)

பாண்டிவளநாட்டில் இடை செவல் என்னும் ஊரில் இருந்த தமிழ்ப் புலவர். இவருடைய பெயர் பழநியாண்டிக் கவிராயர் எனவும் வழங்கியது. மாணவர் பலருக்குப் பாடஞ் சொல்வதிலும் பெருநிலக்கிழார்களைப் பாடிப் பரிசு பெறுவதிலும் இவர் தமது காலத்தைச் செலவிட்டுக் கொண்டிருந்தார்.

*"முன்னூற்று மலைத்தலைவா கறக்குழியுட்*
*பொருதகண்ணு மூடர் மீது*
*சொன்னூற்று மலைத்தலைவான் விடாதுகவி*
*ஞரைக்காத்த சுகுண ஓங்கும்*
*தென்னூற்று மலைத்தலைவா இருதயா*
*லையவுனையே சேராப் பெண்கள்*
*மன்னூற்று மலைத்தலைவாய்ந் தெழுமணிபோன்*
*றும்புனலை மார்பிற் ருனே."*

என்பது இவர் ஊற்றுமலை இருதயாலய மருதப்ப தேவர் மீது பாடிய பாடல்களில் ஒன்று.

## உ0௬. இராமாநுசதாசர் - குரவை

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலிய விளக்கமாக வில்லை. திருமால் திருப்பதி நூற்றெட்டிற்குந் திருப்புகழ்ச் சந்தத்தில் பாடல்கள் இயற்றியுள்ளார். அந்நூல், "நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ்" என்று பெயர் பெறும். பாடல்கள் அருணகிரிநாதருடைய திருப்புகழ்ப் பாடல்களைப் போலவே இனிமை ததும்பி விளங்குகின்றன. திருக்கவித்தலம் என்னும் பதியின் திருப்புகழை அடியிற் காண்க.

'உருக்க முற்ற மைப்பர் சேலையை
அவிழ்த்த விழ்த்து டுப்பர் சோமனை
யொதுக்கி மற்ற தற்கு ளேகுறு — நகையாடி

உதைப்பர் சற்றி ணக்க மாகுவர்
கடித்தி லைச்சு ருட்கை மாறுவர்
உருட்டு மைக்க டைக்க ணேபொர — மடமாதர்

வருத்து மிச்ச கத்தி லேயிதழ்
அருத்து மச்சு கத்தி லேதலை
மடித்த கைப்பு டைப்பி லேபெரு — மயலாகி

மனத்த கத்த முக்கு ருவகை
அடைத்தி ருட்ட றைக்கு ளேபடும்
வனைத்தொ டக்க றுத்து நீயருள் — புரிவாயே

தரித்த முத்தி ரைக்கை நாவலர்
பொருட்டெ ளித்தெ டுத்த நான்மறை
தமிழ்க்கொ ழித்து ரைத்து நீள்கழல் — தொழுவேதாள்

தழைத்த கட்செ விச்சை யோகவெள்
வரிச்சு ருட்டு டற்ப ணுடவி
தனிற்ற னித்தி ருக்க ணேதுயில் — நெடுமாலே

செருக்க னைத்தெ திர்த்த ராவணன்
முடித் தலைக்கு வட்டி னேடடி
தெறித்த மர்க்க ளத்தி லேபொடி — படமீறு

சிலைத்த லைச்செ றித்த நாணொலி
புடைத்தெ முக்கு மைத்த சேவக
திருக்க வித்த லத்தின் மேவிய — பெருமாளே."

## உ௦எ. இராமாநுச நாவலர்—
(20—நூ.)

கொங்குவளநாட்டில் கரடிபாவி என்னுஞ் சிற்றூரில் வேங்கடரங்கப்பிரசங்கியார் என்பவருக்கு இவர் மூத்தமகனாகத் தோன்றினார். பிள்ளைப் பருவத்தில் கல்வி கற்கவில்லை. அகவை இருபத்தைந்து நிரம்பியதற்கு மேல் கல்விகற்க விரும்பினார். தொலைவில் உள்ள ஊர்களுக்குச் சென்றார். ஐந்தாண்டுகளில் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு கற்றுச் சிறந்த புலவராகி 'நாவலர்' என்னும் பெயர் பெற்றார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், காரமடை ஸ்தலபுராணம், க்ஷத்திரிய புராணம், சத்தியோபாய் சரித்திரம், சடாசனநியமனம் என்பன. இவைகளில் சில அச்சாகியுள்ளன. இவர் காலமான நாளில் கருடன் நாள் முழுதும் கத்திக்கொண்டு வீட்டைச் சுற்றியதாம்.

## உ௦அ. இராமாநுசப் பாவலர்
(20—நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் சம்பா ரெட்டிப்பாளையம் என்னும் ஊரில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் கிருட்டிணர். இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமை யடைந்து திகழ்ந்தார். இனிய செய்யுள் இயற்றும் இயல்பும் இவருக்கு அமைந்திருந்தது. அதனால் இவருடைய பெயர்க்குமுன் மதுரகவி என்னும் சிறப்புஞ் சொல்லுஞ் சேர்ந்தியைந்தது. இவர் திருவல்லிக்கேணி வேதவல்லித் தாயார்மீது திருப்பதிகம் பாடியுள்ளார். பதிகத்தைப் பாராட்டி, ம. இராசகோபால பிள்ளை, வேங்கடாசல நாயகர், கோ. வடிவேலுச் செட்டியார், வா. மகாதேவ முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பதிகத்திலொரு பாட்டைக் காண்க :

"மணிபெறுஞ் செஞ்சூட்டு மாசுணப் பள்ளியுடை
வள்ளல்மகிழ் கின்ற கொடியே
வளருநின் மலர்விழி அருட்கொடன்றோஉலக
மலரயன் சிட்டிப் பதும்

திணிபெறச் சநார்த்தனன் காப்பதும் அராவணி
சிவன்துடைப் பதும் உரைக்கில்
சீரிய சுபாஞ்சனை தேவிசுத னுக்கன்று
தீர்க்காயுள் தந்த தாயே
துணிபெறக் கண்ணுதல் அருஞ்சுருதி யோவிடும்
தூயைநின் சீர்த்தி யடியேன்
சொல்லவச மாகுமோ எமதுபெரு மாட்டியே
சுகுணசீ மாட்டியே நன்(கு)
அணிபெற மடந்தையர்கள் அணியவரு திலகமே
ஆதரி யளிக்கே ணிவாழ்
அலைவல்லி மலைவல்லி கலைவல்லி தலைவல்லி
ஆம்வேத வல்லி அன்னையே.''

## உ௦கூ. இராமாநுசம் பிள்ளை
(19—நூ.)

தொண்டைவள நாட்டிற் காஞ்சீபுரத்தில் இருந்தவர். வல்லூர் தேவராசப் பிள்ளை முதலியோர் இவர் காலத்தினர். சேடமலை பதிற்றுப்பத் தந்தாதி, கிருட்டிண கர்ணாமிருதம், வைணவ சமய வினாவிடை, அத்திகிரிமாலை, அத்திகிரிப்பதிற்றுப் பத்தந்தாதி, அத்திகிரிப்பதிகம், திருக்கச்சியந்தாதி, திருத்தணி கைப் பதிகம், திருத்தணிகை தெய்வயானையம்மைபதிகம், திருத் தணிகை வள்ளியம்மை பதிகம், காட்டுமலையீசன் பஞ்சரத்தினம், கலியாணபுர அங்கயற்கணம்மை ஊசல் முதலியன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள். இவருடைய நூல்களைப் புகழ்ந்து வல்லூர் தேவராசப்பிள்ளை, ஆறைமாநகர் ஐயாச்சாமி முதலியார், நமச்சிவாய முதலியார், காஞ்சீபுரம் இரகுநாதையர், புன்னைப் பாக்கம் சுப்பராய முதலியார், தண்டலம் சிதம்பர முதலியார் முதலிய பலர் சிறப்பித்தனர். இவர் பாட்டு வருமாறு :

'' தேவ னேமுகில் நாணுறும் வண்ணனே
செய்ய தாமரை நேர்தரு கண்ணனே
கோவி னங்கள் குவிதர வேயிசை
குறித்த வாய்க்குழ காவெனை யாளுவாய்
தூவியன்ன நடைபயில்மங்கையர்
சுரியல்கண்டு முகிலெனத் தோகைபூங்
காவிலுள்ளங் களித்துநன் காடுறுங்
கரிசில் சேடப்பருப்பதத் தாமனே.''

## உகம. இராமானுசலு நாயுடு
(20—நூ.)

இவர் திரிசிரபுரத்திற்கு அண்மையில் உள்ள திருவரங்கத்தில் தோன்றியவர். பிரசாநுகூலன், அமிர்த குணபோதினி முதலிய பத்திரிகைகளை நடத்தியதன்றிக் கமலாபாய் கதை, பரிமளா, வித்தியா நவநீதம், சனகாமோகன சாதுரியம், நாகரிகபாரிசாதம், சுகுமார திலகம், ஆசையின் முடிவு, தகாதயுத்தி, காணமற் போன ராகவலு, இரஞ்சிதரத்தினம், வித்தியாநவநீதம், புராதன சரித்திர விவரங்கள், ஆநந்தகதா கல்பகம் இரண்டு பாகங்கள் முதலிய கதை நூல்களையும் எழுதியுள்ளார். இவருடைய வேடிக்கையான பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"உலகிலே மிகுபிரக் கியாதியுடன் வாழுவா
யூறுவோர் வெகுபேர்கள் தாம்
உற்றிடும் பிரசித்தி யாற்செலவு மிகுந்திட
உறுதொல்லை இவர்க ளுணரார்
நலமிகுங் கிராமத்தில் சுகிர்தநிலை தன்னிலே
நல்வாழ்வு வாழ்ந்த ஒருவன்
நாளுமே புதுநாக ரிகமோ கத்தினல்
நலமில்வீண் டம்பத் தினல்
பலருமே தற்புகழ வேண்டுமென் றும்மிகு
கவுரவம் அமைந்த வான
பட்டங்கள் பெறவேண்டு மென்றுமே பொருளெலாம்
பாராது செலவு செய்து
நிலமதனில் நகரவா சத்தினை விரும்பியே
நிலையிலா ஆர வாரம்
நிகழ்த்தினன் உலகியலும் கீர்த்திநிலை யாமையும்
நெஞ்சிலுண ராமை யாலே."

## உகக. இராமாநுசன் கவிராசர் - (வா)
(1872)

இவர் திருநெல்வேலி மாவட்டத்திலே ஆழ்வாழ் திருநகரியில் இருந்தவர். சிறந்த புலவராகிய இவர் கோயில் திருப்பணிகளிலே ஈடுபட்டிருந்தார். இவருடைய தந்தையார் பெயர் வானிளவரசு கவிராசர். தந்தையும் புலவர் தாம். இவர்கள் இருவரும் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரமெதுவுந் தெரியவில்லை. இராமாநுசன் கவிராசர், சுப்பிரமணியர் கோவை

என்னும் நூலுக்குப் பின்வருஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

" நீர்மேவு செஞ்சடைக் கடவுள்வாழ் வெள்ளிவரை
நேர்திருக் கோணா சலம்
நிறைகருணை வளர்திருக் கேதீச் சரமின்னும்
நகரில்சிவ தலம நேகம்
நிலைகொண்டு திகழீழ மண்டலத் திற்பெருமை
நிறைதனதன் வாழ்ந கரமும்
நிதிதங்கு சசிகேள்வன் அரசுசெயு நகரமும்
நிகரோ எனச்சொல் வளமும்
ஏர்கொண்ட செந்நெலும் வார்கொண்ட கன்னலும்
இளையார்கள் பந்து பயிலும்
இலகுமணி மேடையும் அவருலவு ஓடையும்
எழில்கொள்சொன் னத்து வசமும்
இனியவன சாலையுங் கனிகள்மிகு சோலையும்
இரத்னகோ புரமதில் களும்
இதிகாச உரைபேசும் அதிதிபுணர் வாசமோ
டிசைசகல திருவும் ஓங்கிச்
சீர்மேவு திருவானைக் கோட்டைமுரு கற்குநீ
செய்கவோர் கோவை என்று
செந்தமிழ் வளர்த்திடத் தென்னனிகர் வான்செல்வ
வான்கொடையில் வள்ளல் போல்வான்
தீர்க்காயு ளான்சீர்க் கொழும்புநக ரதனில்வாழ்
சிலசிவ குருநாத வேள்
சேயனென வருநமசி வாயனெனு மாமுகில்
சிறந்துபொன் மாரி பொழியத்
தார்மேவு மலையான மகராச ராசசமு
கத்தில்வளர் சித்வ ரத்நம்
சகலகலை ஞாபகக் குட்டிக் கவிஞசே
கரவீர வாகு மன்னன்
தவத்தினில் உதித்தவடி வேலெனுங் கற்பகம்
தழைவுற்று முகம லர்ந்து
தரணியெல் லாம்பரிமளித்திடக் கோவையாம்
தாரைவேய்ந் தனதமை யவே."

## ௨கஉ. இராமைய அடிகள்

சோழவளநாட்டில் மாயூரத்தில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லவராகிய இவர்

நாகூர்ப் புராணத்தை வடமொழியில் இருந்து தமிழில் மொழி பெயர்த்துப் பாடியுள்ளார். மேற்படி நூல் ஒன்பது சருக்கங்களை யும் எழுநூற்றுத் தொண்ணூற்றெட்டுச் செய்யுட்களையுங் கொண்டது. நூலைப் பாராட்டித் திரிசிரபுரம் வெ. நாராயண சாமிப் பிள்ளை, ப. சிங்காரவேலுப் பிள்ளை, த. குப்புசாமி நாயுடு என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "வாரணதேக விதாரணபாவ நிவாரணனே
> சீரண முறுவிட பாரணதிரிபுர மாரணனே
> ஆரண வசனமு தாரண மாயறி காரணனே
> நாரண னூர்பணி கோசுர ணேச நமோநமவே."

என்பது துருவாசர் பூசித்த சருக்கத்தில் ஒரு பாட்டு.

மற்றும் இவர் திருமயிலைத் திரிபந்தாதி என்னும் அந்தாதியும் பாடியிருக்கிறார்.

> "கயிலையொன் றீச னருள்பெற வேண்டிக் கவித்துறையால்
> மயிலையந் தாதி யொருநூறு செய்யுள் வகுத்தணிந்தான்
> சயிலவெண் ளேுள விலக்கண மாகத் தமிழ்க் குறுமைந்
> தியலையுந் தேரு மறையோன் மயிலை இராமையனே."

என்பது மயிலையந்தாதியின் சிறப்புப் பாயிரம்.

> "பூமனை யானையு மாயோனை யுந்தந்த பூங்கடுக்கைத்
> தாமனை யானை வனையுந் துவனைசனைச் சங்கரிசேர்
> வாமனை யானை யதனுடை யானை மயிலையிற்செந்
> தேமனை யானை மனமே நினைவினை தீருதற்கே."

என்பது அந்தாதியின் முதற்பாட்டு.

## ௨௧௫. இராயசம் – பொன்னுச்சாமிச் செட்டியார்

இவர் திருவாவடுதுறையிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே தோன்றியவர். தந்தையார் பெயர் முத்துச் செட்டி யார். இவர் நமச்சிவாய சற்குருமூர்த்திக்குப் பதின்மூன்றும் பட்டத் தில் எழுந்தருளியிருந்த சுப்பிரமணிய தேசிகர் காலத்திலே ஆதீனப் புலவராக இருந்த மேலகரம் சண்பகக் குற்றாலக் கவிராயர் என்பவரிடத்தில் இலக்கண இலக்கிய நூல்கள் பல வற்றை நன்றாகக் கற்றுணர்ந்து புலமை பெற்றார். ஆதீனத் தலைவர் எழுந்தருளிய அவையிலே அவையோர் வியக்கும்படி,

தலைவர் மீதும் தலைவருடைய கட்டளையின்படி பல செல்வர்கள் மீதும் இவர் பாடிய பாடல்கள் பலவாகும். மற்றும் சேரநாட்டரசர் மீதும் சில பெருநிலக்கிழார்கள் மீதும் பாக்கள் பல பாடிப் பரிசு பெற்றிருக்கிறார். வெகுநாள்வரையில் ஆதீனப் புலவராகவும் இராயசமாகவும் இருந்தவர். இவர் தனிப்பாடல்கள் பலவும் "துறைசைச் சிலேடை வெண்பா" என்னும் நூலும் பாடியிருக்கிறார்.

"பொன்னனைய மாதர்களும் பொன்னிகர்க்கும் பூசுரரும்
சொன்னங் கொழிக்கும் துறைசையே—பொன்னம்
பலநா டகத்தார் பராவரிய முத்திப்
பலநா டகத்தார் பதி."

என்பது துறைசைச் சிலேடை வெண்பாவில் ஒரு பாட்டு. இந்நூற்கு, உ. வே. சாமிநாதையர், சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர், சு. பொன்னோதுவார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். 'துறைசை வேலவர் இங்கிதமாலை' என்னும் நூலும் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

"வெற்றிலைவெற் றிலையென்றே தண்டுறைசைப்
பதிமறுகில் விற்றேன் கையில்
பற்றிலைவே லவனென்முன் மற்றொருவர்
துணையின்றிப் பரிவான் வந்து
வெற்றிலைகொள் வேனெனக்குக் களிப்பாக்கென்
றுனிலையே விற்ப தென்றேன்
கற்றிலையோ வென்கின்றா னென்னேடி
சேடியிது கழறு வாயே."

என்பது அந்நூலில் ஒரு பாட்டு.

## ௧௩௰ இருபாலைச் செட்டியார்

இவர் ஈழவளநாட்டினர்; அமிர்தசாகரம், பதார்த்த சூடாமணி முதலிய மருத்துவ நூல்களை இயற்றியுள்ளார்.

"இவ்வெண்ணெய் காந்தி பித்தம்
இளைப்புதேத் திரத்தின் ரோகம்
கவ்வைசேர் சிரவ லிப்புக்
கபாலமுட் டணஞ்சி ரங்கோ(டு)

எவ்வமாங் கிருமி போக்கும்
    எழிலுங்கண் ணொளியும் உண்டாம்
செவ்வையாம் பலனும் உண்டாம்
    என்னவே செப்பி னூரே.''

என்பது இவர் நல்லெண்ணெயின் குணத்தைப்பற்றிப் பதார்த்த சூடாமணியில் பாடியதாகும்.

## உகரு. இரேவணசித்தர்

இவர் பதினாறும் நூற்றாண்டில் சிதம்பரத்தில் வாழ்ந்திருந்தவர். சைவசமயத் துறவியாக விளங்கிய இவர் சித்துத் தன்மையுடையவராக விளங்கினார் என்பது சித்தரென வழங்கும் பெயரினால் உணரப்படும். துறவியாக அறிவு நூல்களைக் கற்றுத் திகழ்ந்த இவர் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுச் சிறந்திருந்தார் என்பது நன்கு உணரப்படுகின்றது.

இவர் பிங்கலம், திவாகரம் முதலிய நிகண்டுகளை ஆராய்ந்து ஒருசொற் பல்பொருள்கள் பலவற்றைத் திரட்டி அகரவரிசையாக அமைத்து ஒரு நிகண்டு செய்தார். அந்நிகண்டு அகராதி நிகண்டு என்று பெயர் பெறும். இந் நிகண்டினையன்றிச் சிவஞான தீபம், பட்டீச்சுரப் புராணம் முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

சிவஞான தீபம்

''படைக்கலங்கள் கொலைத்தொழில்கள் பலசெய் தாலும்
    பாவவிதம் படைக்கலத்தை மேவி டாவாம்
படைக்கலங்கொண் டவன்பாலே நின்றாற் போலப்
    பரனருளின் வசமாகிப் பணிசெய் வோர்கள்
துடைத்திடுவர் மலத்தினையெத் தொழில்செய் தாலும்
    துக்கசுகப் பவக்கடலில் தோயா ரென்றும்
அடைக்கலமா யாண்டசிவன் பாத நீழல்
    அடைந்திடுவர் எப்பதமும் பொருந்தி டாரே.''

## உகசு. இலக்கணம் சிதம்பரநாத முனிவர்

சிவஞான முனிவரின் மாணவர் பன்னிருவருள் இவர் ஒருவர். இவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் பாடியுள்ளார்.

புராணம் 987 பாடல்களையும் பதினெட்டுப் படலங்களையுங் கொண்டது.

"வேதவே தாந்த மன்னி விளங்குமித் தலத்து மேன்மை
ஓதுவோர் கேட்போர் மாயப் பிறப்பற உமையாள் கோனைக்
காதலிற் கலப்பர் நீயும் கருத்தொருங் குற்றுக் கேட்டி
பூதநா யகனும் பாட லேச்சுரன் புகழை யென்றான்."

என்பது தேவி தவஞ் செய்த சருக்கத்துச் செய்யுள்களில் ஒன்றாகும். இப் புராணம் 1896 ஆம் ஆண்டில் முதன் முறை அச்சிடப் பட்டு வெளியாகியது.

## உகஎ. இலக்குமண பிள்ளை
(1895)

தென்னாற்காடு மாவட்டத்தில் பரங்கிப்பேட்டை என்னும் ஊரில் இருந்த இவர், ஆஞ்சநேய அவதார தீபிகை, இராம வைபவ சிந்தாமணி முதலிய உரைநடை நூல்களை எழுதியுள்ளார். இவருடைய நூலுக்கு வை. மு. சடகோப இராமாநுசாச்சாரியார் முகவுரை எழுதியுள்ளார்.

## உகஅ. இலக்குமணயோகிகள்
(20—நூ.)

திருநெல்வேலிக்கு அடுத்த முன்னீர்ப்பள்ளம் என்னும் ஊரினர். பரமசிவ அடிகள் என்னும் பெரியார்பால் அருளுரை பெற்றுப் பரஞானம் பெற்றவர். இவர் தம்முடைய வாழ்க்கையில் ஏற்பட்ட நடைமுறைச் செயல்களைப் பாக்களாகப் பாடி அநுபவஞானம் என்று பெரிட்டு வெளியிட்டுள்ளார். மற்றும் முன்னீர்ப்பள்ளம் விநாயகர் வணக்கம், பூரணகிருபேசுரர் பதிகம், பெருங்கருணை நாயகியம்மாள் பதிகம், செல்வியம்மாள் கும்மி, பெரியசாமி கும்மி, சிவாலயக்கும்மி, அம்பிகை வணக்கம், மேலை முனைஞ்சி சிவத்தல வணக்கம், திருமலைவார சுப்பிரமணியர் விருத்தம், செப்பறை நடராசர் விருத்தம், இசைப் பாடல்கள் முதலியனவும் இயற்றியிருக்கிறார்.

" தானான தன்மையது சார்ந்து நின்றால்
சகமென்ப தெவ்வளவும் காண்பதில்லை
தானான தன்மையது சார்ந்து நின்றால்
சஞ்சலமாம் மனதையங்கு காண்பதில்லை
தானான தன்மையது சார்ந்து நின்றால்
சங்கடமாம் சரீரமதைக் காண்பதில்லை
தானான தன்மையது சார்ந்து நின்றால்
தானேதா னாயிருந்து வாழ்வோம் யாமே."

என்பது அநுபவஞானத்தில் ஒரு பாட்டு.

## உகக. இலட்சுமணப் பிள்ளை - ப
(20—நூ.)

சோழவளநாட்டில் திருத்தில்லைக் கணித்தாகவுள்ள பரங்கிப் பேட்டையில் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்குமுன் இருந்தவர். 'இயற்றமிழ்ப் பிரபந்த வித்துவான்' என்று புகழ் பெற்றவர். அந் நாளில் ஆழ்வார் திருநகரியில் இருந்த வேங்கடத்துறைவான் கவிராயர் என்பவர் இயற்றிய மாறன் கோவை என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். சிறப்புப்பாயிரம் நூலை அச்சிட்டவரை எண்ணிப் பாடப்பட்டதாயினும் நூலாசிரியரை யும் பாராட்டியுள்ளார்.

" அம்மாறன் கோவைத் தருசே வடிதொழு மன்புடையான்
செம்மாறன் கோவைகு நற்குரு கூரில் திலகமன்னன்
கம்மாறன் கோவைத் தமிழிய றேர்வேங் கடத்துறைவான்
இம்மாறன் கோவையை ஈந்துவை யத்தையீ டேற்றினனே."

என்பது அச் சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## உஉ0. இலிங்கபாரதி

இவர் வீரை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். மறையவர் குலத்தினர். இவர் அரிச்சந்திர நாடகம் இயற்றியுள்ளார்.

" மதிவளர் குடையான் செங்கோல்
மனுவென நடத்தி வாய்மை
அதிசெயம் படைத்த கோமான்
அரிச்சந்திரன் கதையைப் பாடத்

துதிசெயப் பொருளு மீந்து
தொண்டர்செவ் வினையுந் தீர்த்துக்
கதிதரும் விட்ட வாசல்
கணபதி காப்புத் தானே.''

என்பது நூலின் காப்புப்பாடல்.

## உஉக. இலிங்கப்ப ஐயர்

இவர் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன் உத்தம தானபுரத்தில் வாழ்ந்திருந்தவர். நூல்கள் பலவற்றைக் கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். செய்யுள் செய்யும் ஆற்றலும் இவருக்கு நன்ருக அமைந்திருந்தது. இசைப்பயிற்சி சொற்பொழிவாற்றல் ஆகியவைகளையும் மிகுதியாகப் பெற்றிருந்தார். சாமிமலை முருகக் கடவுள்மீது குறவஞ்சி நாடகம் ஒன்றைப் பாடி அரங்கேற்றினர்.

## உஉஉ. இளம்பெருமானடிகள்

முற்காலத் திருவருட் செல்வர்களில் இவரும் ஒருவர் இவர் சிவபெருமான் மீது மும்மணிக் கோவை பாடியிருக்கிருர். அக் கோவை சிவபெருமான் திரு மும்மணிக்கோவை எனப்பெறும். அது பதிஞெராந் திருமுறையிற்சேர்க்கப்பட்டிருக்கிறது.

''கொண்டற் காரெயிற்றுச் செம்மருப் பிருவின்
புண்படு சிமையத்துப் புலவுநாறு குடுமி
வரையோன் மருக புனைாள் கொழுந
இளையோன் தாதை முதுகாட்டுப் பொருநநின்
நீருடு பொலங்கழல் பரவ
வேருங்கு கவர்க்குமோ விதிதரு நெறியே.''

என்பது அக் கோவையிற் பதின்மூன்ருவது பாடல்.

## உஉங. இளையபெருமாள் தாசர்
### (20—நூ.)

திக்கெலாம் புகழுந் திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநகரியில் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன் வாழ்ந்திருந்

தவர்; வீரவைணவர்; பச்சைமால் அடியையே நச்சிப் போற்றி நாளும் பணிந்திருந்தவர். வைணவ சமய நூல்களில் பெரிதும் ஈடுபாடுடையவர். வேங்கடத்துறைவான் கவிராயர் என்பவர் இயற்றிய மாறன் கோவைக்கு இவர்,

"மாலைவக்கு மார்பனுக் கோரா யிரங்கவி மாலைசொன்ன
தேவைக் குருகைப் பிரானைப் புகழ்ந்து செழுந்தமிழோர்
நாவைக்குஞ் சீர்வேங் கடத்துறை வான்கவி நாதன்சொன்ன
கோவைக்கு முன்வேலி மேற்கோவை யாம்பிற கோவைகளே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப் பாயிரங் கூறியுள்ளார்.

## உஉச. இளையான் கவிராயர்
### (19—நூ.)

முத்தமிழ்ச் சங்கமும் எத்திறத்தினும் தோலா நாவின் மேலோராகிய நல்லிசைப் புலவரும் திகழ்ந்து சிறந்த பாண்டி நாட்டினராகிய இவர் அப்பரமேசர் தலபுராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார். அப்புராணம் பத்துப் படலங்களை யும், நானூற்றுத் தொண்ணூறு பாடல்களையுங் கொண்டது. கந்தசாமிக் கவிராயர், கோயமுத்தூர் ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை, வட்டமலை புதுப்பாளையம் முத்துச்சாமி ஐயங்கார், சேற்றூர் இராமகிருட்டிண ஆசாரியார், மு. சுந்தரத் தேவர், கோயமுத்தூர் முத்துச்சாமிச் செட்டியார், இராயகிரி முத்துச் சாமிப் புலவர், உடுமலைப் பேட்டை ஆண்டியப்ப பிள்ளை, வீராச்சி மங்கலம் சோமசுந்தரப் பிள்ளை, கண்ணபுரம் பழநிக்காங்கயக் கவுண்டர், சேலம் சுப்பராயக் கவுண்டர், கோயமுத்தூர் கோவிந்தப்பச் செட்டியார், தாயம்பாளையம் முத்தப்பச் செட்டி யார் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"திங்கள் ஞாயிறு விளங்கிய திசையெலாம் பரவும்
எங்கணாயகன் திருநடம் எளிதில்விட் டகன்ற
கொங்கு லாவுபைந் தருவனங் குடிகொண்மா முனிவர்
கங்கை யாத்திரை யேகுதல் கருத்துமேற் கொண்டார்."

என்பது பாயிரச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## உஉரு. இறசூல் பீவியம்மாள்
## (1910)

இவ்வம்மையார் முகமது சமயத்தினர். பாண்டிநாட்டினர். இவருடைய கணவரின் பெயர் பரிமளம் முகமது காசிம் சாய்பு. கணவன் மனைவி ஆகிய இருவரும் மெய்யறிவு கைவரப் பெற்ற வர்கள். இறசூல் பீவியம்மாள் ஞானமிர்த சாகரம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

> "அருவில்லான் உருவில்லான் அணுவும் இல்லான்
> ஆணில்லான் பெண்ணில்லான் அலியும் இல்லான்
> கருவில்லான் குருவில்லான் கலியும் இல்லான்
> காசிதனில் ஒட்டாத கருணை நாயன்
> திருவில்லா நாவில்லான் சயும் இல்லான்
> திசையெட்டொடு பதினாறு கோணும் இல்லான்
> மருவில்லான் ஓரெழுத்தாய் நிற்கும் சோதி
> மணிநாதக் கடவுளையான் போற்றி னேனே."

என்பது கடவுளர் வாழ்த்துப் பாடல்களில் ஒன்று. பொருள் வினவிடைக் கண்ணி, கண்மணிப் பதிகம், பரிமளக் கண்ணி, மாக்கொடிக்கண்ணி, என்தாய்க்கண்ணி, முச்சுடர்க்கண்ணி, றகுமான்கண்ணி, பரானந்தக்கண்ணி பீற்முருதுக்கண்ணி, எங்நாட்கண்ணி, குருபரக்கண்ணி, கண்மாறிக்கண்ணி, வேகுதே, காணேனோ, நெஞ்சோடு புலம்பல், வெண்பா, இரட்டை யாசிரிய விருத்தம், காட்சிப் படலம், கோட்டைப் படலம் என்று பல பிரிவுகளாக நூல் அமைந்துள்ளது.

## உஉசு. ஈசான தேசிகர்

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தவர். "திருக் கடம்பநாதபுராணம்" என்னும் புராணத்தை இவர் பாடியுள்ளார் அப் புராணம் பதினேழு அத்தியாயங்களையும் அறுநூற்று முப்பத் தொன்பது பாடல்களையுங் கொண்டது.

> "முடியா விரஞ்சே ரரிமுகனை
> முன்னோன் விடுப்ப வச்சிரத்தால்
> கடியோ னுயிர்கொன் றாயிரத்தெட்
> டண்டச் சேனை களைமுழுதும்

பொடியாய்ப் பொடித்திந் திரசாலம்
எல்லாம் போக்கிப் பொருசூரன்
மடியா மாயை உருப்பலவும்
மடித்தான் வடிவேல் பிடித்தானே.''

என்பது சேவலும் மயிலும் சிவகதிபெற்ற அத்தியாயத்தில் ஒரு பாட்டு.

## உஉஎ. ஈசுர பாரதி

(கி. பி.—1700)

இவர் பாண்டிவளநாட்டில் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். இவர் பல்பொருட் சூளாமணி என்னும் நிகண்டகராதி யொன்று இயற்றியிருக்கிறார். இவருடைய தந்தையார் பெயர் சிதம்பரபாரதி.

''கொல்லமெண்ணூற் றெழுபத்தா றெனக்கணிதப்
பாவாணர் குறித்த ஆண்டின்
மல்குபுகழ் விக்கிரம வருடத்தா
வணிமூல வளஞ்சேர் நாளில்
நெல்லைநகர் வடிவுவந்த வேய்முத்தைப்
பணிந்துலகில் நெடுநாள் நிற்கப்
பல்பொருட்சூ ளாமணியை ஈசுரபா
ரதிதமிழால் பாடி னனே.''

என்பது பாயிரச் செய்யுள்.

## உஉஅ. உடையார் பிள்ளை

(20—நூ.)

நாஞ்சில் நாட்டில் கோட்டாறு இடலாக்குடி என்னும் ஊரினர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவராகவிளங்கிய இவர் இயலிசை நாடகம் என்னும் முத்தமிழினும் வல்லவராக விளங்கியிருந்தபடியால் ''முத்தமிழ்ப் புலவர்'' என்று பெயர் பெற்றிருந்தார். மாணிக்கவாசகம் பிள்ளை என்பவர் பாடிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர்,

" சீர்மேவு தடம்பொழில்சூழ் செந்தில் வாழும்
 செய்யமுரு கேசனடி திகழு மாறு
பார்மேவு தமிழ்மொழியின் பழமை காணப்
 பதிற்றுப்பத் தந்தாதி பகர்ந்தான் புன்னைத்
தார்மேவு திருமால்வாழ் தலத்து யர்ந்த
 தகைமைபெறு பக்கிபுரத் தமர்ந்தா னென்றும்
பேர்மேவு கலையறிவின் பெருமை யாளன்
 பெயர்மணிவா சகனென்னப் பேசு வாரே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## உஉக. உண்ணுமுலை எல்லப்ப நயினர்

பதினாரும் நூற்றாண்டில் திருவண்ணாமலையில் இருந்தவர். 'எல்லப்ப' என்று பெயர் வருவதைக் கொண்டு இவர் 'சைவ எல்லப்ப நாவலர்' எனச் சிலர் எண்ணுவர். இருவரும் ஒருவ ரென்பதற்கு ஆதாரமில்லை. இவருக்கும் இவர் காலத்திய பரமேசுவரப் புலவர் என்பவருக்கும் பகை ஏற்பட்டிருந்தது. பரமேசுவரப் புலவர் இவர் மீது ஒரு வசைப் பாடலைப் பாடினர். அவ் வசைப்பாட்டைக் கேட்டவுடன் இவர்,

" பாழ்ப்பா மடத்துப் பரமாவுன் பாழ்ங்கவிதை
கேட்பாரெல்லாம் புத்தி கெட்டபேர்—தோட்பாவும்
ஓணன் விழுந்தாலும் உண்டுபரி காரமிது
வாணா ளளவே வரும்."

என்று எதிர் வசைபாடினர். 'பரமா' என்றது பரமேசுரப் புலவரை. இவரைப்பற்றிய பிற செய்திகள் புலப்பட்டில.

## உஉ௰. உதீசி தேவர்

இவர் சைன சமயத்தினர். திருக்கலம்பகம் என்னும் நூலினை இவர் இயற்றியிருக்கிறார்.

" புயங்க ளாயிரந் திரண்டிரு மருங்கும்
 பொங்கி யாயிரம் வரையெனக் குலாவக்
கயங்கொள் தாமரைப் போதென மலர்ந்த
 கண்க ளாயிரங் களிப்பவின் னவர்கோன்

நயங்கொள் ஆநந்த நாடகம் ஆடி
நாமமாயிரம் பாடவந் தருளும்
சயங்கொள் ஆழியங் கடவுளே எமக்குள்
சரணமாவன அரண மாவனவே.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## உருக உத்தண்ட வேலாயுத பாரதி

உயிர்கொடுத்து ஓங்கும் மெய்ம்மை காத்த வேளாளர் வாழ் தொண்டைவள நாட்டிலே செங்கற்பட்டு மாவட்டத்திலே உள்ள உத்தரமேரூர் என்னும் ஊரிலே இவர் அந்தணர் குலத்தில் தோன்றினர். இவருக்கு இடப்பெற்ற பெயர் காசிநாதன் குப்பையன் என்பது. இவருடைய தந்தையார் பெயர் தேவராச பட்டர். உத்தண்ட வேலாயுதபாரதி என்பது சிறப்புப் பெயர். இவர் இளம் பருவத்திலேயே வடமொழி தென்மொழி இரண்டையும் நன்கு கற்றுணர்ந்தார். இவர் திருவதிகை வீரட்டானேசுரர் மீது கலம்பகம் ஒன்று பாடியுள்ளார். அதன் பொருட்டு நன்கொடையாக இவருக்கு மூன்றுமா நிலமும் ஒரு மனையுந் தானமாக வழங்கப்பட்டன. இவர் இயற்றிய கலம்பகம் இந்நாளில் வழக்கத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. கலம்பகம் பாடிப் பரிசு பெற்ற செய்தியைக் கல்வெட்டில் இருந்து அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

## உருஉ. உத்தண்ட வேலுச்சாமியா பிள்ளை - ப
(19—நூ.)

பாண்டிவளநாட்டில் உள்ள சடையனேரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்த இவர் பல நூல்களையுங் கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். பெருநாழி இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராண வண்ணம் என்னும் நூலுக்கு இவர்;

'' எண்ணரிதாம் விசும்புலகின் மிகுவளஞ்சேர்
பொதுவைநகர்க் கிறைவன் என்றும்
நுண்ணறிவால் நவநீத கிருட்டிணன்தோற்
றதனருளால் உதித்து மண்மேல்

உன்னை உன்னத் திகட்டாத அமுதமென
எம்முருகன் ஒளிசேர் காந்த
வன்னமெனப் புகன்றனன்முத் தமிழ்விசய
இராமலிங்க மதிவலோனே.''

என்று சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். கடலாடி சிக்கந்தர் முகையதின் புலவர், முதுகுளத்தூர் ஆறுமுகம் பிள்ளை முதலியோர் இவர் காலத்தில் இருந்த பல்லாற்றானும் சிறந்த பண்பமை புலவர் பெருமக்களாவர்.

## ௨௩௩. உபயகவி அப்பா

இவரைப் பற்றிய விவரம் எதுவும் புலப்படவில்லை. இவர் "நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதித் தாலாட்டு'' என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

"உபயகவி அப்பா உரைக்குமிந்தத் தாலாட்டால்
உபயமோ கத்திலுள்ளோர் உகந்தூழி வாழியவே
தன்னில் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து
தன்னிலைய ளுகிநின்ற நாதமுனி வன்வாழி
குருகூரன் வாழி கோகனகச் செவ்வாயன்
மருமலர்து மாயணியும் மாலாதிநா தன்வாழி.''

என்பன நூலின் இறுதி.

## ௨௩௪. உபேந்திராசிரியர்

இவர் ஒரு சைன முனிவர். தாம் இயற்றிய நூலுக்கு 'சினேந்திரமாலை' என்று இவர் பெயர் அமைத்துள்ளார். அந் நூல் இருபத்து மூன்று காண்டங்களையும் ௪௩௪ செய்யுட்களையும் உடையது.

"பூராடம் பூசமும் விற்கடகம் போதாகத்
தேரோன் புதன்வெள்ளி சேயுறினும்—ஊராடு
தந்தைதாய் பிள்ளையொடு தன்மாமன் சாமென்று
வந்தியா நேரே மதி.''

என்பது சினேந்திர மாலையில் ஒரு பாட்டு. இந்நூல் காலக் கணிதச் செய்திகளைக் கூறுகின்றது.

## உ௬ரு. உமாபாக தேவர்

இவர் ஏறக்குறைய இருநூற்று ஐம்பதுயாண்டுகட்கு முன்பு, மெய்கண்ட சந்தானம் திருத்துறையூராதீனத்தவராய்க் கோட்டூரில் இருந்தவர். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளாரின் இளவலாகிய வேலைய சுவாமிகளால் இயற்றத் தொடங்கி இயற்றப்பெற்ற வீரசிங்காதன புராணத்தின் இறுதி ஐந்து சருக்கங்களையும் பாடியவர்.

> "ஓமென உரைத்தல் சர்வ
> வியாபகத் துருவ மாகும்
> ஓமென உரைத்தல் மந்தி
> ரயந்திரத் துயிர தாகும்
> ஓமென உரைத்தல் மேலாம்
> ஒளிர்பரப் பிரம மாகும்
> ஓமென உரைத்தல் முத்தி
> யாகுமென் றோவிக்குஞ் சங்கம்."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்றாகும்.

## உ௬௬. உமையொருபாகஞ் செட்டியார்

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் அம்பாசமுத்திரம் பிரிவில் உள்ள வடக்குக் காரா குறிச்சி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சி நன்கு அமையப்பெற்றவராதலின் திண்ணைப் பள்ளிக்கூடம் ஒன்று ஏற்படுத்தி மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்தார். அந்நாளில் கீழக்கல்லூரில் இருந்த ஆழ்வாரப்ப பிள்ளை என்பவர் இயற்றிய 'சிருகாச்சிரம தர்மம்' என்னும் நூலுக்கு இவர்,

> "ஆசு மதுரநற் சித்ரவித் தார அமிர்தகவி
> பேசுஞ் சிலாபுரி ஆழ்வாரப் பண்தன் பிரபந்தமே
> காசி முதற்கன்னி எண்டிசை ஞாலங் கசிந்துருகி
> வீசும் புகழுண்ட கோளகைக் கப்புற மேவியதே."

என்னுங் கட்டளைக் கலித்துறையாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## ௨௩௭. உய்யவந்த தேவநாயனுர்

இவர் எவ்வூரினர் என்பது அறியப்படவில்லை. இராமேசு வரம் முதலிய சிவப்பதிகளுக்குப் போய்விட்டுக் காவிரியாற்றுக் கரையில் உள்ள திருவியல் ஊரில் எழுந்தருளியிருந்தார். அக் காலை ஆளுடையதேவ நாயனுர் என்பவர் அவரைக் கண்டு வணங் கிப் "பெரியீர்! அடியேன் பிறவிக் கடலில் வீழ்ந்து பன்னெடுங் காலமாகக் கரைகாணமாட்டாது தியங்கித் துன்புறுகிறேன். அடியேனைக் கரையேற்றி யருளவேண்டு"மென்று வேண்டிக் கொண்டார். உய்ய வந்த தேவநாயனுர் அவருடைய பக்குவத் தைக் கண்டு திருவுளங் களிகூர்ந்தார். திருக்கண் சாத்தித் திருவடியுஞ் சூட்டியருளினுர். சைவாகமங்களிற் சொல்லியருளும் பொருள்களை நாற்பத்து நான்கு திருவுந்தியாகச் சுருங்க அருளிச் செய்தார். அந்நூல் சைவசித்தாந்த நூல்களுள் ஒன்ருய்த் திருவுந்தியார் என்னும் பெயருடன் சிறந்து திகழ்கின்றது. திருக் களிற்றுப்படியார் என்னும் நூலைச் செய்த திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனுர் இவருடைய மாணவரின் மாணவராவர்.

> "வையமுழுது மலக்கயங் கண்டிடும்
> உய்யவந் தாறுரை யென்றுந் தீபற
> உண்மை யுணர்ந்தா ரென்றுந் தீபற."

என்பது நூலின் இறுதிப் பாட்டு.

## ௨௩௮. உருத்திரகோடிப் பிள்ளை - பு
(19—நூ.)

சென்னைமாநகரில் இராயபுரத்தில் இருந்தவர். தமிழிற் புலமை பெற்றிருந்ததோடு காலக்கணிதத்திலும் சிறந்து விளங் கினுர். இவர் இயற்றிய நூல்களில் பழநி வழிநடைச் சிந்து என்பதொன்று அறியப்படுகிறது. அச் சிந்திற்கு வே. கி. நாராயணசாமிப் பிள்ளை,

> "மாதிடங்கொண் டோன்பயந்த வான்பழநி யான்றனக்கு
> மாதிடங்கொண் டோர்சிந்து மாநிலக்குச்—சோதிடரில்
> உன்னப் பொருவில் உருத்திரகோ டிச்செப்பல்
> என்னற் புதமென்பேன் யான்."

என்று சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். சோதிட கணிதம், ஆருட கணிதம் என்பனவும் இவர் இயற்றியவைகளே. இவருடைய தந்தையார் பெயர் இராமசாமிப் பிள்ளை.

## உ௩௯. உருத்திரசன்மர்

இவர் பல நூறுண்டுகட்குமுன்பு மதுரைமாநகரில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் உப்பூரிகுடிகிழார். தாய் பெயர் சாலினி. இவர் அறுமுகப் பெருமானின் ஒரு கூறாக உலகில் தோன்றியவர் என்பர். உருத்திர மூர்த்தியாகிய சிவபெருமானுடைய சாபக்கேட்டால் மூங்கைப் பிள்ளையாகத் தோன்றினர். ஊமையாக விருந்தாலும் ஓதாதுணர்ந்த பேரறிவுடையராய்ப் பெரும் புலவராய்த் திகழ்ந்தார். அந்நாளில் சங்கத்தில் இருந்த நக்கீரர் முதலிய புலவர்கள் ஓர் அரிய நூலுக்கு உரையொன்று இயற்றி ஒவ்வொருவரும் தத்தம் உரையே சாலச் சிறந்ததென்று சொற்போரிட்டனர். சிவபெருமான் உருத்திர சன்மராகிய இவரிடம் வந்து தத்தம் உரைகளைக் கூறிச் சிறந்த உரையை அறிந்துகொள்ளுமாறு பணித்தார். அவர்களும் அவ்வாறே இவ்வுருத்திர சன்மரிடம் வந்து தத்தம் உரையைப் படித்தனர். உரைகளின் பெருமையையுஞ் சிறுமையையும் தமது முகக் குறியானே புலப்படுத்தி நக்கீரனர் உரையே சிறந்ததென்று யாவரும் உணர்ந்துகொள்ளுமாறு செய்தார். இவருடைய செய்தி திருவிளையாடலில் கூறப்பட்டுள்ளது.

> "பின்பாவல ரெல்லாம்பெரு வணிகக்குல மணியை
> அன்பாலழைத் தேகித்தம தவையத்திடை யிருத்தா
> நன்பான்மலர் நறுஞ்சாந்துகொண் டருச்சித்தனர் நயந்தே
> முன்பாவிருந் தருந்தீந்தமிழ் மொழிந்தாரவை கேளா.
>
> பல்காசொடு கடலிற்படு பவளஞ்சுடர் தரளம்
> எல்லாநிறுத் தளப்பானென இயல்வாணிகக் குமரன்
> சொல்லாழமும் பொருளாழமுந் துலைநாவெனத் தூக்க
> நல்லாறறி புலவோர்களும் நட்டாரிகல் விட்டார்."

என்பது திருவிளையாடற் புராணம்.

## உ௪௰. உரோமரிடி

புசுண்ட மாமுனி என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர் மருத்துவப் புலமையில் சிறந்து விளங்கினர். இவர், "உரோமரிடி நூறு, உரோமரிடி ஐநூறு" பஞ்சபட்சி சாத்திரம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். உரோமரிடி ஐநூறு என்னும் நூலிலே,

"புசுண்டருடைய பிள்ளை உரோமன்" என்று தம்மைத்தாம் சுட்டிக் கூறியுள்ளார். சித்தர்கள் பாடிய நூல்களைச் சட்டைமுனி பறித்துக் கிழித்தபோது, புசுண்டர் தம்முடைய மகனாகிய இவருடைய பாடலைச் சடையுட் செருகியொளித்து மறுபடி பொதிகை மலைக்குக் கொண்டுபோய் அகத்தியருக்குக் காட்ட அவர் அதனை வாங்கி ஒளித்து வைத்துவிட்டார் எனவும், மறுபடி நெடுங்காலம் அவருக்குத் தொண்டு செய்து அந்நூலை வாங்கினார் என்றும் இவருடைய நூற் பாடலால் அறியப் பெறுகிறது.

> " அம்பரத்தில் ஆடுகின்ற ஐயர் பாதம்
> அநுதினமும் மனதில்வைத்து அருளும் பெற்றுத்
> தம்பரத்தில் எனையாண்ட புசுண்டர் பாதம்
> சதாநித்தம் பூசைபண்ணித் தாசனாகிப்
> பம்பரம்போல் உலகமெலாம் ஆட்டி வைக்கும்
> பராபரத்தின் கிருபையதாற் பாச நீக்கும்
> செம்பருத்திப் பூவதுபோல் சிவந்து நின்ற
> சின்மயத்தின் பாதமலர்ச் சோதி காப்பே."

என்பது மருத்துவம் ஐநூறில் ஒரு பாட்டு.

## உசக. உலகநாத சாத்திரிகள்

இவர் திருவிடை மருதூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தமிழையும் வடமொழியையும் நன்கு கற்று இருமொழிப் புலமை பெற்று விளங்கினார். வேதாந்த நூற்பயிற்சியினும் வல்லவர். இவர் சங்கரபூச்ய பகவத்பாதாசாரியாரால் வடமொழியில் இயற்றப் பெற்ற விவேக சூடாமணி என்னும் நூலைத் தமிழில் மொழி பெயர்த்து இனிமை ததும்புமாறு 671 பாடல்களாகப் பாடியருளினார். இந்நூல் வேதாந்தப் பொருளை இனிது விளக்குவது.

> " திருவிடை மருதூ ரின்கண் திரமதாய் வசிக்கா நின்ற
> பிரமவம் சத்து தித்த பெருமைசேர் உலக நாதன்
> மருளறு விவேக சூடா மணியெனும் கிரந்த நூலை
> வரதமிழ்க் கவிதை யாக வளமதாய் அமைக்க லானான்."

என இவரே தமது செய்தியையும் நூலின் இறுதியில் குறிப்பிட்டிருக்கிறார். வாழ்ந்திருந்த காலம் முதலியன விளக்கமாகவில்லை.

ரிபுகீதை முத்திகண்டம் முதலிய வேறு நூல்களையும் இவர் மொழிபெயர்த்திருக்கிறார்.

## உசஉ. உலகநாத முதலியார் - பெ
(1868)

சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். நார்மல் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர் கோமளேசுவரன் பேட்டையில் வாழ்ந்திருந்த இராசகோபால பிள்ளையிடம் இலக்கண இலக்கியங் கற்றுணர்ந்தவர். செய்யுள் இயற்றுவதிற் சதுரராகிய இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய செய்யுட்களில் ஒன்றை அடியிற் காண்க:

*"அல்லேந்தும் உருவரக்கர் குலஞ்செற்ற*
*அடல்வீரன் அன்பாந் தோழன்*
*வில்லேந்து நெடுங்கரத்துக் குகப்பெருமான்*
*குலனில்வரு விளக்கா நங்கள்*
*மல்லேந்து மணிவரைத்தோட் பொன்னுச்சா*
*மிப்பெயர்கொள் வள்ளான் மிக்க*
*சொல்லேந்து சேதுபுரா ணந்தனையொன்*
*றருள்செய்தென் சொற்கொள் வாயே."*

## உசங. உலகநாத தேசிகர்

இவர் உலகாநுபூதி என்னும் அகவற்பா நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார். அந்நூல் முன்னுளிற் குலப்பிரிவுகள் முதலியன இல்லை யென்பதையும் குலப்பிரிவு ஏற்றத் தாழ்வு முதலியவைகளைக் கற்பித்தவர் பார்ப்பனரே யெனவும் தெளிவு படுத்திக் கூறுகிறது. இருநூற்றைம்பதடிகளால் அமைந்த இச் சிறு ஆசிரியப்பா நூல் இக்கால உலகிற்கு மிகவும் ஏற்றது.

*"அநாதி காலத்து ஐவகைப் பகுப்பில்*
*குறிஞ்சி பாலை கொன்றைவளர் முல்லை*
*மருதம் நெய்தல் எனப்பெயர் மரீஇய*
*ஒவ்வொரு பிரிவினும் செவ்விதின் நலமும்*
*உணர்வும் உடையோர் உயர்ந்தோர்; ஒழிந்தோர்*
*தாழ்ந்தோர் எனஇரு சாதியின் அமைந்தனர்*
*அவருள் சாதி வேற்றுமை அமைந்தில.*

> உயர்ந்தோன் ஒருகால் தாழ்ந்தோன் ஆதலும்
> தாழ்ந்தோன் ஒருகால் உயர்ந்தோன் ஆதலும்
> கால வேற்றுமையின் ஏலும் அல்லது
> அந்தணர் அரசர் வணிகர் சூத்திரர்ப்
> பிரிவு நான்கில் பிரமன் வதநத்து
> அந்தணர் தோவில் கொந்தார் மன்னவர்.''

என்பன அந்நூலிற் சில அடிகள்.

## உசச. உலகநாதன்

இவருடைய குலம் நாவிதர் குலம் என்று கூறப்பெறுகிறது. ஆனால் இதற்கு ஆதாரம் யாதுமிருப்பதாகத் தெரியவில்லை. வழி வழிச் செய்தியே காரணமாகத் தெரிகிறது. பதின்மூன்று பாடல்களடங்கிய உலகநீதி என்னும் நீதி நூலையும் சாதிபேத விளக்கம் என்னும் நூலையும் இவர் இயற்றியிருக்கிறார். இவர் முருகப் பெருமானிடத்தில் பேரன்புடையவர் என்பது உலகநீதிச் செய்யுட்களால் பெறப்படுகின்றது.

> ''சேராத இடந்தனிலே சேர வேண்டாம்
> செய்தநன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்
> வீரோடுங் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்
> உற்றாரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்
> பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்
> பிணைபட்டுத் துணைபோகித் திரிய வேண்டாம்
> வாராருங் குறவருடை வள்ளி பங்கன்
> மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.''

என்பது உலகநீதியில் எட்டாவது பாட்டு.

## உசரு. உலகுடைய நாயனார்

இவர் வைணவப் பார்ப்பனர் குலத்தில் தோன்றியவர். கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்கினார். பழவினைப் பயனால் சைவத் துறவு பூண்டு வீடுபேறடைய வேண்டும் என்னும் எண்ணம் இவருக்குண்டாகியது. திருவாவடுதுறை யாதீனத்தை யடைந்தார். அந்நாளில் அங்கு அம்பலவாண தேசிகர் என்னும் பெரியார் அறிவாசிரியராக அமர்ந்திருந்தார். அவர் துறவொழுக்கத்தில் சிறந்தவர். சைவ நூல்கள் பலவற்றை

இயற்றியவர். அப் பெரியார் இவருக்குச் சைவத் துறவு கொடுத்து மெய்யறிவு நூல்களைக் கற்பித்தருளினர்.

கல்வியறிவிற் சிறந்தோங்கிய இவர் மிகுந்த புகழ்பெற்று விளங்கினர். தம்முடைய ஆசிரியர் மீது வணக்கச் செய்யுட்கள் பல இயற்றினர்.

“என்னையும் உன்னையுந் தன்னையுங் காட்டா
திந்திய விடயமே காட்டி
இயல்வினை மாயை இரண்டையும் எனையும்
இணக்கிய ஆணவ மலத்தின்
தன்னுறு வழிநின் சத்தியை நடாத்தித்
தருமதன் சத்திகள் எல்லாம்
தயங்குநின் உருவம் மூன்றினால் மாற்றித்
தாள்நிழல் தந்துகாத் தனையே
கன்னலங் கழனிக் காழிமா நகரில்
கவுணியன் இரண்டுஞா னமுமே
கற்றிடா துணர சர்க்கிடை போகாக்
கதிர்முலைப் பால்கறந் தளித்த
அன்னைதன் பகுவாந் தன்மையை அகற்றி
ஆதரித் தருள்கொடுத் தவனே
ஆவடு துறைசை அம்பல வாணா
அடியவர்க் கருளுமா நிதியே.”

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## உசகூ. உறங்காவில்லிதாசர்
## (20—நூ.)

பாண்டிவள நாட்டில் ஆழ்வார் திரு நகரியில் ஏறக்குறைய அறுபது ஆண்டுகட்கு முன் வாழ்ந்திருந்தவர். திருமாலடிக்கே பெருமால் கொண்டு தொண்டு புரிந்தவர். நாலாயிர திவ்ய பிரபந்தம் வில்லிபாரதம் முதலிய நூல்களில் ஆழ்ந்த பயிற்சி யுடையவர். வேங்கடத் துறைவான் கவிராயர் செய்த மாறன் கோவையைப் பாராட்டி இவர்,

“சீலப் பிரமத் திருஞான முத்திரைச் செண்பகமெய்க்
கோலப் பிரபல மாமாறன் கோவையைக் கோத்தளித்தான்
வாலப் பிரம சரிய விராம மகாவிரதன்
சாலப் பிரச மலர்ச்சே வடியென் தலைக்கொள்வனே.”

என்று பாடியுள்ளார்.

## உசஎ. உறையூர் முத்துவீர உபாத்தியாயர்

இவர் கொல்லர் வகுப்பில் பிறந்தவர். ஆகவே கம்மாள உபாத்தியாயர் என்றும் வழங்கப்பட்டார். திரிசிரபுரம் வண்டிக் காரத் தெருவில் வாழ்ந்திருந்தார். முத்துவீரியம் என்னும் இலக்கண நூலையும் வேறு சில நூல்களையும் இவர் இயற்றினர். முத்துவீரியம் அச்சாகி வெளிவந்துள்ளது இவர் உ. வே. சாமிநாதையர் காலத்தில் வாழ்ந்திருந்தவர். இவரிடம் பலர் கல்வி கற்றுப் புலவராயினர். இவர் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் பிள்ளைத்தமிழ் நூல் ஒன்றுக்குப் பின்வருங் கவியைச் சாற்றுக் கவியாக அளித்திருக்கிறர்:

"தண்ணறுமுண் டகப்போதில் இருந்துலகம்
ஆக்கியவே தாவே இந்தக்
கண்ணகன்ற புவியினில்தன் உருமாற்றி
மக்களுருக் கவினத் தாங்கி,
வண்ணமுறு மீனட்சி சுந்தரமென்
றொருநாமம் வயங்க வின்பம்
விண்ணவரும் பெறத்தந்தி வனப்பிள்ளைத்
தமிழினிதா விளம்பி னனே."

## உசஅ. ஊனையூர்ப் பாரதியார்

இவர் சிவகங்கைநாட்டிலே ஊனையூரிலே பிறந்தவர். இவருடைய குலம் அந்தணர் குலம். காலம், பாடுவார் முத்தப்ப செட்டியார் காலம். கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். முத்தப்ப செட்டியார் செயங்கொண்டார் சதகம் அரங்கேற்றிய அவைக்கு இவரும் சென்ருர். பாடல்களைக் கேட்டுவிட்டு,

"ஓங்குபத்மா சூரனைக்கண் டோடியொளித் தார்விசயன்
வாங்குதனு வாற்பூசை வாங்கினர்—சங்கிருக்கும்
நன்னியமச் சோமீச னர்செயங்கொண் டாரென்ருல்
என்னசெயங் கொண்டார் இவர்."

என்று ஒரு வெண்பாவால் தமது எண்ணத்தை வெளியிட்டார். முத்தப்ப செட்டியார் உடனே,

"என்னசெயங் கொண்டார் இவரென்றீர் முப்புரத்தைச்
சொன்னமய மாய்ச்சமைத்த சோமீசர்—பின்னும்
சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணால்
எரித்துச் செயங்கொண்டா ரே."

என்று பாடினார். அவ்வளவில் இவர் வாயடங்கிப் பேசாதிருந் தார். இதற்குமேல் இவரைப்பற்றிய செய்திகள் எவையும் புலனாகவில்லை.

## உசக. எட்டீசுவரக் குருக்கள் (19—நூ.)

எட்டையபுரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்திருந்தார் கடிகை - நமசிவாயப் புலவர், கடிகை-பரமசிவப் புலவர் முதலியவர்கள் இவர் காலத் தில் எட்டையபுரத்தில் பெருநிலக்கிழாருடைய அவைக்களப் புலவர்களாக இருந்தனர். கடிகை நமசிவாயப் புலவர் இயற்றிய "வல்லீபரதம்" என்னும் நூலுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். அப்பாடல்,

"பொன்னாட்டுக் கிறைபணியால் புணரியின்நீர் அருந்திப்
புவிப்பைங்கூழ் தழைக்கமழை பொழிமுகிலே போலக்
கொன்னாட்டுங் கதிர்வேற்கைக் குமாரஎட்ட மேந்திர
கோமான்றன் பணியதனால் குயலயத்தோர் மகிழச்
சொன்னாட்டுங் கடிகைநமச் சிவாயமுகில் காந்தத்
தொல்லாழிச் சுதையருந்திச் சுவைநவமாத் தோன்ற
மின்னாட்டும் இடைக்குறமான் தனைக்கழுகா சலவேள்
வேட்டதமிழ் நாடகமா மழைமிகப்பெய் தனனே."

என்பதாம்.

## உருo. எழும்பூர்த் திருவேங்கடாசல முதலியார்

இவர் சென்னை எழும்பூரில் வாழ்ந்திருந்தவர்; நல்ல புலவர். மாணவர் பலருக்குப் பாடஞ் சொல்லியதன்றி இராமாயணம் முதலிய நூல்களை ஆராய்ந்து பதிப்பித்தும் வெளியிட்டவர் பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சென்னைக்குச் சென் றிருந்த போது அடிக்கடி இவரைப் பார்த்து உரையாடிக் கொண்டிருந்து வந்தார். கம்பராமாயணம், செவ்வைச் சூடுவார்

பாகவதம், நாலாயிர திவ்விய பிரபந்தம் முதலிய நூல்களில் நல்ல பயிற்சியுள்ளவர். மீனாட்சிசுந்தரம் பிள்ளை தமக்கிருந்த சில ஐயங்களை இவரிடங் கேட்டுப்போக்கிக் கொண்டதுடன் சில நூல்களைப் பாடங்கேட்டுந் தெளிந்தார்.

## உருக. எல்லப்ப நாயகர் - மா

(20—நூ.)

புதுச்சேரியில் இருந்தவர். பங்காருப் பத்தர் என்பவரை ஆசிரியராகக்கொண்டு தமிழ் கற்றார். அரசினரின் தருமப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். இவருடைய செய்யுட்கள் அவ்வளவு சிறப்புடையனவாகக் காணப்பெறவில்லை. தம் ஆசிரியர் காலமானபோது பாடிய இரங்கற்பாக்களில் ஒன்றை அடியிற் காண்க.

> *" சாத்ரரிய ரத்தாட்சி ஆண்டதனில்*
> *மாசிமதி சனியோர் பத்தில்*
> *ஊற்றமிகு சிவராத்ரி நற்றிரயோ*
> *தசிதிகழும் ஓணை நந்தன்னில்*
> *நாற்றமிகு பூஞ்சோலை நாற்றிசையுந்*
> *திகழ்புதுவை நகரின் மிக்கோன்*
> *ஆற்றல்பெறு பங்காரு கவிராயன்*
> *சிவலோகம் அடைந்தான் மன்னே."*

## உருஉ. எல்லப்ப முதலியார் - க

(20—நூ.)

இவர் தொண்டைவளநாட்டில் பனைப்பாக்கம் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் கண்டி முதலியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். இவர் சிவப்பிரகாச ஐயர் என்னும் அறிஞர்பால் கல்விகற்றுச் சிறந்த புலமையடைந்தார். ஊரார்கள் விரும்பியபடி தாம் பிறந்த ஊரின் புராணத்தை இவரும் நாராயணசாமி முதலியார் என்பவருஞ் சேர்ந்து இனிய செய்யுட்களாகப் பாடி முடித்தனர். அப்புராணம் கக படலங்களையும் ககஙஎ திருவிருத்தங்களையும் உடையதாக விளங்குகிறது. நூலில் ஓவியப் பாடல்களும் அமைந்துள்ளன. அட்டாவ

தானம் பூவை கலியாண சுந்தர முதலியார், ஐயன் பேட்டைச் சிவப்பிரகாசையர், பாலூர் வேலுத் தேசிகர், காஞ்சி நாகலிங்க முதலியார், காஞ்சிபுரம் சோணுசல பாரதியார் ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*"செங்குமுதம் வாயெனவுஞ் செழுங்குவளை கண்ணெனவும்*
*அம்புயமென் முகமெனவும் அணிவள்ளை காதெனவும்*
*பம்புவளைக் கடைசியர்கள் பாரா தகழ்ந்தெறிவார்*
*அங்கெழுபுன் முதலியவை அனுக்குவதற் கஞ்சுவரோ."*

என்பது திருநாட்டுச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## உருரு. என் நயினுப் புலவர்

இவர் முத்துப் புலவர், நாச்சிமுத்துப் பணிக்கர், சாமிப் புலவர் என்பவர்களிடத்திலே கல்வி கற்றுத்தேறினுர். முக்கூடல் பள்ளு நாடகம் என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றது. முக்கூடல் என்னும் ஊர் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ளது. முக்கூடல்பள்ளு அச்சாகி வெளிவந்துள்ளது. இவர் இயற்றியது அன்று என்பாரும் உளர். பிற செய்திகளை முக் கூடல்பள்ளியிற் காண்க.

## உருச. ஏகசந்தக்கிராகி

இவர் பாண்டிவளநாட்டில் வடமலையப்ப பிள்ளையன் காலத் தில் இருந்தவர். எதனையும் ஒரே முறை கேட்ட அளவில் உள்ளத்தில் பற்றும் ஆற்றல் இவருக்கு அமைந்திருந்தபடியால் 'ஏகசந்தக்கிராகி' என்னும் காரணப் பெயர் தோன்றியது. இதனுல் இவருடைய இயற்பெயர் மறைந்துபோய்விட்டது. இவர் திருக்குறளைப் பின்னமைத்து வடமலை வெண்பா என்னும் நூலை இயற்றியுள்ளார்.

*"பூமகனை எல்லாப் புவனத் தொடும்படைத்தான்*
*மாமகள்கோன் காவை வடமலையே—ஆமே*
*அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு."*

என்பது நூலின் முதற் பாட்டு.

## உ௫௩. ஏகம்பவாணன் மனைவி

இவள் ஆற்றூரில் இருந்த ஏகம்பவாண முதலியார் என்பவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்தவள். கல்வி பயின்று செய்யுள் பாடுந் திறம்பெற்றிருந்தவள். ஒருநாள் சேரசோழ பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஏகம்பவாண முதலியாருடைய இல்லத்திற்கு வந்து 'முதலியார் எங்கே?' என்று உசாவினர். 'வயலுக்குச் சென்றுள்ளார்' என்று இவள் செய்தி அனுப்பினாள். இதனைக்கேட்ட மூவேந்தரும், 'வயலுக்கு முடிநடப் போயினாரோ?' என்று இகழ்ச்சியாக உரைத்தனர். இதனைக்கேட்டவுடன் இவள்,

> "சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
> ஆனை மிதித்த அருஞ்சேற்றில்—மானபரன்
> பாவேந்தன் ஏகம்ப வாணன் பறித்துநட்டான்
> மூவேந்தர் தங்கள் முடி."

என்னுஞ் செய்யுளைப் பாடினாள். இச்செய்யுள் ஒன்றை இவள் பாடியதைத் தவிர வேறு செய்யுட்களையோ நூல்களையோ இயற்றியதாகத் தெரியவில்லை. இதன் பிறகு ஏகம்பவாண முதலியாரால் மூவேந்தர்கட்கும் தொல்லைகள் பல நேர்ந்தன.

## உ௫௪. ஏகாங்கிச் சுவாமிகள்

(20—நூ.)

இவருடைய முழுப்பெயர் அழகிய மணவாள ராமாநுச ஏகாங்கிச் சுவாமிகள் என்பது. இவர், தில்லை, திருமலை, பெருமாள் கோவில், திருநாராயணபுரம், திருச்சித்திரகூடம் முதலிய ஊர்கட்குப் பதிகம் பாடியுள்ளார்.

> "சீர்பூத்த நிமைகளுஞ் செழும்பொற் பூமேல்
> திருமகளும் அடிவருடத் திரைநீர்ப் பொன்னிப்
> பேர்பூத்த திருவரங்கம் பெரிய கோயில்
> பிரணவவி மானத்துள் பெரும்பாந் தள்மேல்
> வார்பூத்த கருவரைவெண் மலைமேற் கஞ்ச
> வனம்பூத்துக் கிடந்தாங்கு மலர்க்கண் துஞ்சும்
> கார்பூத்த நிறத்தேவைக் கருணை மாலைக்
> கண்கள்பயன் பெறக்கண்டேன் களிகொண்டேனே."

என்பது கோயிற் பதிகத்தில் ஒரு பாட்டு.

## உருள. ஏகாம்பர முதலியார் - செஞ்சி

(20—நூ.)

செஞ்சியில் வாழ்ந்திருந்த இவர் செந்தமிழ்ப்புலமை பெற்ற தோடு சித்திரகவி முதலிய செய்யுள் பாடுந் திறனும் பெற்றிருந் தார். அதனுல் இவருடைய பெயருக்குமுன் "சித்திரகவி" என்னுஞ் சிறப்புச் சொல்லுஞ் சேர்ந்துநின்றது. இவர் அரிச் சந்திர அம்மானை என்னும் "சந்திரமதிமாலை" பாடியுள்ளார். அந்நூல் புகழேந்தி பாடிய நங்கைப் பாடல்களின் போக்கைத் தழுவியுள்ளது. மாதிரிக்குச் சில அடிகளைக் கீழே காண்க:

"ஆதி விநாயகரே! அரனூர் திருமகனே!
சோதிக் கணபதியே! சாம்பவியாள் புத்திரனே!
மூலாதா ரப்பொருளே! மூஷிக வாகனனே!"

## உருஅ. ஏகாம்பரம் (க)

இவர் ஈழவள நாட்டிலே பிறந்தவர். இருபாலை என்னும் ஊரிற் சீர்த்திபெற்றிருந்த சேனுதிராய முதலியாரிடமும் திருத் தணிகைச் சரவணப் பெருமாட் கவிராயரிடமுங் கல்வி கற்றவர். சமயத்தொண்டு செய்யவந்த ஆங்கிலேயர்கட்குத் தமிழ் கற்பிக் கும் பணியை இவர் மேற்கொண்டிருந்ததோடு நூல்கட்கு உரை யெழுதும் பணியையும் மேற்கொண்டிருந்தார். இவரால் உரை யெழுதப்பெற்ற நூல் கந்தரந்தாதி முதலியன. இவர் தம்முடைய ஐம்பதாவது அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இவர் தனிப்பாடல்கள் பல பாடியிருக்கிருர். திருமலைச் செட்டியார் குமாரன் இராமசாமிச் செட்டியார் என்பவர் காலமானபோது இவர் பாடியது:

"சீரேறு பரிதாபி வருடமா டித்திங்கள்
சென்றபதி னொன்கு தேதி
சித்திரை யுடுப்புதன் வாரபூ ருவமான
திதியாறு கும்ப சென்மன்
பேரேறு வண்ணை நகர் திருமலைச் செட்டிபெறு
பேறு மாணிக்க ரத்தினம்
பிணியருக் கருமருந் துதவுத்தமன் கணிதபிர
தாணிசொல் வித்தகன்

தேரோது வாதர்க்கோர் இடியேறு சபையினடு
நீதிப்ர சங்க சிங்கம்
நிகழும்ப தொன்பதாம் வயதினன் குலதிலத
நிபுணன்எனும் இராம சாமி
ஏரோது வற்சரனீ ரோதிகிரு தேதுமதி
யீரொரான்ப தேற்ற வெள்ளி
எழிலுரோ கணியருமை விருச்சிக விலக்கினத்
திறைவர்பத மெய்தி னானே.''

## உருகூ. ஏகாம்பரம் (உ)

ஈழவளநாட்டிற் பிறந்தவர். முற்கூறிய ஏகாம்பரம் என்பவருக்கு இவர் உறவினர். இவர் கி. பி. 1844-க்குச் சரியான பிலவ ஆண்டு பங்குனித் திங்கள் உ௩-ஆம் நாள் பிறந்தார். இளம் பருவத்தில் இலங்கையிற் கற்கற்பாலனவாகிய கலைகளையெல்லாங் கற்றபின் இந்தியாவை அடைந்து மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, இராசகோபால பிள்ளை, இராமலிங்க அடிகள் முதலியோரிடத்திலே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறியதோடு எண்வகை அவதானங்களைப் புரிதலினும் சிறந்து விளங்கினார்.

ஈழவளநாட்டிலே அவதான வித்தையில் முதன் முதலாகத் தேர்ச்சிபெற்றவர் இவரே என்பர். இவருடைய தாய்தந்தையர் இவருடைய கல்வியின்பொருட்டு மிகுபொருள் செலவிட்டு வறியவராயினர். இவர் புரூரவச் சக்கிரவர்த்தி புராணம் முதலிய நூல்களைப் பாடினார்

ஒருவர் இவரைப் பார்த்து ஆகாரத்தில் தொடங்கி ஈகாரத்தில் முடியுமாறு முருகக் கடவுள்மீது ஒரு வெண்பாச் சொல்ல வேண்டுமென்றனர். உடனே இவர்,

'' ஆத்தியணி புஞ்சடையா னைமுகற்குப் புத்திரனே
ஏத்தும் பலர்க்குவர மீவோனே—கூத்தென்றே
காமினியின் வாழ்வெல்லாங் குன்றுவிக்குங் காரணனே
ஏசிலனீ நீயேசே யீ.''

என்று பாடினார்.

கல்வியறிவிற் சிறந்து விளங்கிய இவர் நீண்ட வாழ்நாளைப் பெற்றிருக்கவில்லை. திருமணம் நடைபெற்ற ஒரு திங்களிலேயே

நமது முப்பத்துமூன்றும் அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடிநீழலே யடைந்தார்.

## உகூ0. ஏரம்ப ஐயர் - ம

பாண்டி நாட்டில் வேம்பத்தூரில் வாழ்ந்திருந்த சிலேடைப் புலி பிச்சுவையர் என்பவருக்குப் பெயரராகத் தோன்றியவர். தந்தையார் பெயர் மகாதேவ பாரதி. ஏரம்ப ஐயருடைய பெயர் பிச்சுவையர் எனவும் வழங்கியது. சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் அவ்வவ்வமயங்களிற் றனிப்பாடல்கள் பல பாடினர். மதுரைமா நகரில் இராமலிங்கக் கவிராயர் என்பவர் 1939-ஆம் ஆண்டில் அட்டாவதானம் புரிந்தபோது இரண்டு பாடல்களால் அவதானியைப் பாராட்டினர்.

"பன்னலமுந்திகழ் சீர்சால் பதியெனும் பேரைநகர்த்
தென்னவர் மெச்சிடு மீனுட்சி சுந்தரச் செம்மலருள்
கன்னனெனச்சொலும் ராமலிங் கப்பெயர்க் காருணியன்
நன்னய மாச்செய்த அட்டாவ தானம் நவிலரிதே."

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## உகூக. ஏனுதி சாத்தஞ் சாத்தன்

ஏனுதி என்பது அரசர்களால் அளிக்கப்படுஞ் சிறப்புப் பெயர். வேள்விகுடிச் செப்பிதழ்ச் சாதனத்தில் இவருடைய பாடல்,

"கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பாண்டியாதி ராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக் கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கனைளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாது
கொற்கைகிழான் நற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச் சாலை முன்னின்று வேள்விகுடியென் றப்பதியை
சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
நீரோட்டிக் கொடுத் தமையால்."

என்று காணப்பெறுகின்றது.

## உசுஉ. ஐதுறூசு நயினார்ப் புலவர்

இவர் காலங்குடியிருப்பு என்னும் ஊரில் மீராநயினா மரக்காயர் என்பவருடைய மகனாகத் தோன்றினர். தமிழ்மொழி நூல்களை நன்கு கற்றுப் புலவராகவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகியது. தக்கார்பால் பல நூல்களை ஓதியுணர்ந்தார். நால்வகைப் பாக்களையும் நன்கு பாடத்தக்க புலமைத்திறம் உண்டாகியது. புலமைத்திறம் மிக்காருக்கு ஆண்டவனுடைய அருட்டிறமும் எளிதில் உண்டாகிவிடுகிறது. அவ்வாறே இவருக்கும் அருட்டிறம் உண்டாகியது. வேண்டுகோள்களெல்லாம் வேண்டியவாறே பலித்தன. ஆயினும் இவர் வறுமையால் வாடி அதனை ஒரு பொருட்படுத்தாதிருந்தார்.

இவரால் இயற்றப்பெற்ற நூல் நவமணிமாலை. இதனை முகியித்தீன் புராணம் என்றுங் கூறுவர். இந்நூல் முப்பத்தைந்து படலங்களையும் இரண்டாயிரத்து முந்நூற்று முப்பத்தைந்து செய்யுட்களையும் உடையது.

> "கார்பூத்த நிமுற்கவிகை மகுமூது
> நபிபேரர் கௌது நாதர்
> சீர்பூத்த நவச்சரிதை தனிற்சிலதல்
> லறிஞருரைத் தெளிவின் பாட
> நீர்பூத்த நிலவுலகை முதலெவணுஞ்
> சமதாகு நிமல தூய
> பேர்பூத்த வகுதான பெரும்பொருணம்
> மிறைகாவற் பேற தாமே."

என்பது கடவுள் வாழ்த்துப் பாடல்களில் ஒன்று.

> "நானிலம் புகழு நங்கோன் நற்கர நீவ மூப்பி
> வேனிதம் பயிலும் பாடி மெலிந்தமை தழைத்து குத்த
> பானிற வெண்மால் வானின் பரந்தழகொடுநீ ரேற்று
> நீணிறத் தொலிநே ரன்பை நீக்கிரா நிகர் நிறைந்த."

என்பது நாட்டுப் படலத்தில் முதல் பாட்டு. இந்நூலுக்குக் குலசேகரன்பட்டினம் சர்க்கரை சாகிபுத் தம்பியவர்கள் குமாரர் அல்லாப்பிச்சைப் புலவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

ஒருநாள் இவர் தமக்குச் சிறிது பொடி வேண்டியதாக இருந்தபோது பக்கத்தில் இருந்த மற்றொருவரிடஞ் "சிறிது

பொடி வேண்டும்'' என்று கேட்டாராம். பொடி வைத்திருந்தவர் மடியில் வைத்துக்கொண்டே "இல்லை" என்று இயம்பினாராம். உடனே இவர் ;

"மடிதனில் பொடியை வைத்துக்
கேட்பவர்க் கில்லை யென்றால்
அடிதனில் மூலந் தள்ளி
அநியாயமாய்ச் சாகு வாரே.''

என்று செய்யுள் பாடத் தொடங்கினாராம். இதனைக் கேட்டவர்கள் நகைத்தனராம். பொடியை வைத்துக்கொண்டு கொடுக்க மறுத்தவர் மூலந்தள்ளி மாண்டாரா இல்லையா என்று தெரியவில்லை. இவருடைய தனிப்பாடல்கள் "ஐதுரூசு நயினார்ப் புலவர் பாடல் திரட்டு'' என்னும் பெயருடன் வெளியிடப்பட்டுள்ளதாம். ஊர்வாழ் மக்கள் அனைவரும் தத்தமக்கியன்றவாறு வரிகள் வைத்துத் தொகுத்து வாங்கி இப்புலவருக்கு அளித்து வந்தனராம். இவர் இச்ரி 1295 (கி. பி. 1879) ஆம் ஆண்டில் ஆண்டவன் அடிநிழலை அடைந்தார்.

## உசுரு. ஐயடிகள் காடவர்கோன்

இவர் தொண்டைவள நாட்டிலே காஞ்சிபுரத்திலேயிருந்த பல்லவர்கள் மரபில் தோன்றியவர். சைவமுந் தமிழுந் தழைப்பதற்குத் தக்க தொண்டு செய்தவர். தமிழ் மொழியை நன்கு கற்றுப் புலமையடைந்து செய்யுள் பாடுந் திறம்பெற்று விளங்கியவர். பூவேந்தராகவும் பாவேந்தராகவும் விளங்கிய இவர் சிவப்பதிகட்குப் பயணஞ் செல்லுங்கால் செய்யுட்கள் இயற்றுதலையும் மேற்கொண்டிருந்தார். இவர் அளவற்ற பாடல்கள் பாடினார். அவைகளெல்லாம் மறைந்துபோக இருபத்துநான்கு வெண்பாக்கள் மட்டுங் கிடைத்தன. அவை க்ஷேத்திரத் திருவெண்பா என்னும் பெயரோடு பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பெற்றுள்ளன.

"தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்னாமுன் ஏழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாதம் நினை.''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உகச. ஐயம்பெருமாள் ஆசிரியர்

இவர் மதுரைப்பதியில் தோன்றிக் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கியவர். பாண்டிநாட்டின் பல சிறப்புக்களையுந் தொகுத்துப் பாண்டிமண்டல சதகம் என்னும் நூலினை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூலுக்கு இவர் ஆசிரியர் என்பது,

"பழுதில் மதுரைப் பதிவீர பூபதி பாலனுயர்
வழுதி புரக்கின்ற தென்பாண்டி நாட்டினை வண்மைபெற
உழுது தழைக்கின்ற வேளாளர் தம்மை உயர்வரென
எழுதும் பெருமான் புனிதநல்ல தம்பியெங் காங்கேயனே."

"வளங்கொ ளரிய கயிலுந்தை யாந்தொண்டை மண்டலத்தை
விளங்கும் வடமலை தென்கரைக் காட்டை மிகவுயர்த்தார்
நளம்பெறும் ஐயம் பெருமாள்தென் பாண்டிநன் னாட்டினிலவந்
துளங்கொள வோங்கிய வேளாளர் தம்மை உயர்த்தினனே."

என்னுஞ் செய்யுட்களாற் பெறப்படுகின்றது.

"பேர்கொண் டரசுசெய் மீனாட்சி யம்மன்றன் பிள்ளைத்தமிழ்
கூர்கொண்ட நலங்கொள சொக்கேசர் மும்மணிக் கோவைமுதல்
தேர்ந்து சிறக்குங் குமர குருபரத் தம்பிரான் சொல்
பார்கொள் பெருமையைப் பெற்றது பாண்டியன் மண்டலமே."

என்பது அச்சதகத்தின் முப்பதாவது செய்யுள்.

## உகரு. ஐயம்பெருமாள் சிவந்த கவிராசர்

இவர் பதினாறும் நூற்றாண்டில் இருந்தவர். கருங்கொல்லர் மரபில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் வேலாயுதன். ஐயம்பெருமாளுடைய தாய்மாமனாகிய சிவந்த கவிராசர் என்பவர் சிறந்த புலவராக விளங்கினார். இவர் அவரிடமே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறிச் சிறிய புலமையடைந்தார். புரூரவ சரிதை என்னும் நூல் இவரால் இயற்றப் பட்டது. அந்நூல் இருபத்தைந்து படலங்களையும் 920 செய்யுட் களையும் உடையது. நாடு, நகரம், இளவேனிற் பருவம், போது கொய்தல், புனல் விளையாட்டு ஆகியவைகளிற் கூறிய கற்பனை கள் மிகச் சிறந்தவை. இவர் வாழ்ந்திருந்த இடம் தென்காசி என்று கூறுவர். இவர் தம்முடைய நூலை வரதுங்கராமனுடைய அவைக்களத்தில் அரங்கேற்றியதாக அறியப்படுகிறது.

"வையம் புரக்கும் வரராம வழுதி மகிழத் தமிழ்மாரி
பெய்யுஞ் சிவந்த கவிமேகம் மருகன் வேலா யுதப்பெருமாள்
ஐயம் பெருமாள் சிவந்தகவி ராசன்காசி நகரமர்ந்தோன்
பொய்யொன் றில்லா முத்தமிழ் நூல் புலவர் புகழப் புகன்றனனூல்."

என்பது நூலின் சிறப்புப்பாயிரம்.

## உகசுசு. ஐயாக்கண்ணு ஓதுவார் - சி (1893)

சிதம்பரத்தில் இருந்தவர். கூத்தப்பிரான் கோவி தேவாரம் ஓதும் திருப்பணியை மேற்கொண்டிருந்த இவர் சி புலவராகவும் விளங்கினார். திருப்பனந்தாட் காசிமடத்தலை சாமிநாத சாமிகள்மீது இவர் பல செய்யுட்கள் பாடினார். அ றுள் ஒன்றை அடியிற் காண்க.

"பொன்னேங்கு மணிமவுலி யோராறு
முகனருளாற் புலமை யெய்தி
மன்னேங்கு பண்டார மும்மணிக்கோ
வைமுதலா மாலை வேய்ந்து
மின்னேங்கு மாதருமைத் தேசிகராள்
மெய்ஞ்ஞான விளிம்பு கண்ட
தென்னேங்கு குமரகுரு மூர்த்தியின்றன்
கீர்த்தியவெவர் செப்பு வாரே."

## உகசுஎ. ஐயாக்கருப்பன் செட்டியார் - நா. கரு. (20—நூ.)

பாண்டிவளநாட்டில் நாட்டரசன்கோட்டை என வழங்கும் திருப்பனசையில் இருந்தவர். தந்தையார் பெயர் ஐயாக்கருப்பன் செட்டியார். சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் குன்றக் குடி முருகக்கடவுள் பதிகம், திருப்பனசை இராமாநுச திரிதச வெண்பா முதலிய பல நூல்கள் இயற்றியுள்ளார். இராமாநுச திரிதச வெண்பாவைப் பாராட்டி நாட்டரசன்கோட்டை சு. வெள்ளைவாரணம் பிள்ளை, கண்டிப்பட்டி மு. முத்துராக்குச் சேர்வை என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆசூரி கேசவருக் காதிரைநாள் அஞ்சேயாய்
மாசூரு தம்மறையோர் மாமனத்துட்—டேசூறு

ஞானம் பகர்ந்தநல்ல ராமா நுசமுனியே
யானம்பி னேனின் னடி.''

என்பது இராமாநுச திரிதச வெண்பாவில் ஒரு பாட்டு.

## உகூஅ. ஐயாச்சாமி ஐயர் - நா

இவர் கோமல் என்னும் ஊரினர். தமிழாசிரியராகத் தொழில் புரிந்தவர். திருவெமனேச்சுரத் தலபுராணத்தைத் திருத்தியும் விளக்கியுங் கூட்டியும் செப்பனிட்டு வெளியிட்டவர். இந்நூலுக்கு உ. வே. கோபால தேசிகாச்சாரியர், சுவர்ணம் ஐயர், இளையான்குடி சையது அலாவுதீன் ராவுத்தர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' இத்தகைக் கோயிலின் கண்
யாவையும் நன்று காக்கும்
புத்தமுதின் சொற் பொன்னூர்
பூண்முலை உமையாள் என்னும்
சத்தியோ டினிது மேவும்
தாணுவாம் எம்பு ரேசன்
வித்தகத் தொண்டர் உய்ய
வீற்றிருந் தருளு மென்றும்.''

என்பது திருநகரச் சிறப்பில் ஒரு பாட்டு.

## உகூகூ. ஐயாச்சாமிப் பிள்ளை
(19—நூ.)

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி கற்றுத் தேறிய இவர் தஞ்சை மாநகரில் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். இவரிடம் பலர் கல்வி கற்றுச் சிறந்த புலவர்களாய் விளங்கியிருந்தனர். திருத்தில்லை யமகவந்தாதி உரை முதலிய நூல்களை இவர் எழுதியிருக்கிறார். இவருடைய நூல்களைப் பாராட்டிக் கா. சுப்பராய பிள்ளை, ப. மாரிமுத்து நாயக்கர், மு. குருசாமி பிள்ளை, சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' பொன்திகழ் தஞ்சை உறைஐயாச் சாமிப்
புலவர்கோன் தன்குரு அளித்த
என்றுமன் றில்லை யமகவந்தாதிக் கியற்றுரை
யிணையறு தொக்கும்

என்றுரை சேடன் நாவையு மலரோன்
இரண்டுறத் துணித்தனன் என்றூல்
தோன்றுறை அமுதை அவ்வுரை கடுக்கும்
சுவையிலென் றுரைப்பவர் எவரே.''

என்பது சதாவதானம் சுப்பிரமணிய ஐயருடைய பாட்டு.

## உஎ௦. ஐயாச்சாமிப் பிள்ளை - கோவை
## (1896)

இவர் கோயமுத்தூரில் வேளாளர் மரபில் தோன்றியவர். நகராட்சி மன்றத்தில் அலுவல் பார்த்தவர். இலக்கண இலக்கியங்களையும் கற்றுப் புலமைபெற்ற இவர் ''திருக்கல்யாண ஊசல்'' முதலிய நூல்கள் பாடியுள்ளார். மேற்படி நூலைப் பாராட்டி, கோயமுத்தூர் இலண்டன் மிஷன் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை, நா. மு. ம. பழனியப்ப செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''நாற்றிசையும் பஞ்சவர்ணக் குளோப்பு மாட்டி
இராப்பகலாய்ச் சொலிக்கமா ணிக்கம்பூட்டி
பார்த்தவர்கண் பூத்திடக்கண் ணூடி காட்டி
பகர்ந்தவெட்டுத் திக்கிலும்பொற் பதுமை நாட்டி
நேர்த்திபெறும் இம்மணமண் டபத்திற் கொப்பாய்
நிகர்வேறென் றில்லையெனப் பலபேர் செப்பக்
கோத்திரத்தில் உயர்சேர குலத்து வஞ்சைக்
கொழுநரொடும் மருவிவிளை யாடி னூசல்.''

என்பது ஊசலில் ஒரு பாட்டு.

## உஎக. ஐயாச்சாமி முதலியார்

இவர் ஏறக்குறைய இருநூறுயாண்டுகட்குமுன் கல்யாணபுரம் என்னும் பெங்களூரில் பிறந்து கல்வி கற்றுச் சிறந்து விளங்கினூர். கல்விச் செல்வத்தோடு பொருட் செல்வமும் இவரிடத்தில் சிறந்து விளங்கியது. கல்வியை நன்கு கற்றுத் தேர்ந்த இவர் அருமையான செய்யுட்களை விரைந்து பாடுவதில் வல்லவராக விளங்கினூர். காளமேகப் புலவருடைய செய்யுட்களை நன்கு படித்து அதனுடைய சிறப்புக்களைக் குறித்துப் பத்திரிகைகளில் எழுதிக்கொண்டிருந்தார். இவருடைய கல்வித் திறமையை

உணர்ந்த பலர் இவரையும் பாடல்கள் இயற்றுவதற்கு ஊக்கித் தாங்களே பொருள் கொடுத்துப் பாடச்சொன்னார்கள். இவரும் திறமையாகப் பாடினார். இவருடைய பாடல்கள் காளமேகப் புலவருடைய பாடல்களைப்போல் சிறந்து விளங்குகின்றன.

அண்ணாப்பிள்ளை என்பவர் பாம்புக்குந் தாம்புக்குஞ் சிலேடையாகப் பாடவேண்டுமென்று வேண்ட அவ்வாறே பாடியது.

நேரிசை வெண்பா

" நஞ்சிருக்கும் நீண்டிருக்கும் நாரியர்கை யாடுமே
மிஞ்சிற் குடத்திட்டால் மேவுமே—செஞ்சொல்லால்
ஆம்பல் கலையுணர்ந்த அண்ணாப்பிள் ளைவேளே
பாம்புந்தாம புஞ்சரியாம் பார்."

சேலம் குமாரசாமிப்பிள்ளை என்பவர் சிவனுக்கும் மலைக்குஞ் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

" கொன்றை யணிதலால் கூன்பிறை யேந்துதலால்
பின்றவிலாச் சர்ப்பங்கள் பேணுதலால்—என்றும்
குவலைவளர் சேலங் குமாரசாமி வேளே
சிவனுங் கிரியுமாந் தேர் "

இவருடைய பாடல்களைப் பாராட்டிச் சென்னை அண்ணாப் பிள்ளை, கொங்கர்பட்டுச் சபாபதி முதலியார், தஞ்சைநகர் அம்மாப்பேட்டை மதுரைச் செட்டியார் முதலியோர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர்.

## ௨௭௨. ஐயாச்சாமி முதலியார் - சென்னை (1900)

சென்னைமாநகரில் இருந்தவர். சிறந்த புலவர்களில் ஒருவர் இவரைப்பற்றிய விவரம் எதுவுந் தெரியவில்லை. குணங்குடி மஸ் ரான்மீது தோத்திரப்பா முதலியன பாடியுள்ளார்.

" மதிதன துருவில் களங்கமில் லாமல்
வான்மிசை வயங்குறப் புவியின்
விதமுறு சாயை யாற்களங் குளதாய்
விளங்குறுந் தகைமைபோல் ஆன்மா

சதிசெயு மனதால் விகற்பசங் கற்பத்
தன்மைகொண் டியங்குவ தல்லால்
இதமகி தத்துள் சார்வன உளவோ
இயம்பிடாய் குணங்குடி வாழ்வே.''

என்பது தோத்திரப் பாடல்களில் ஒன்று.

இவர் திருமலை அலர்மேல்மங்கை நாயகிமாலை, ஆறைமாநகர் திருக்கச்சி வரதர் வெண்பாமாலை, திருநாராயணபுரத்துப் பதிற்றுப்பத் தந்தாதி முதலிய நூல்களும் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது.

## உஎரு. ஐயாத்துரைப் பாகவதர் - மு
(20—நூ.)

நெல்லை மாவட்டத்தில் உள்ள கயத்தாறு என்னும் ஊரில் முத்தைய பிள்ளை என்பவருக்கு இவர் மகனுகத் தோன்றினுர். இயலிசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு கற்றுத் தேறினுர். அவைகளிற் சொற்பொழிவுகள் செய்வதில் வல்லவரானுர். கிறித்துவ சமயத்திற் புகுந்து அச்சமய நூல்களை ஓதியுணர்ந்து கிறித்து நாதருக்கு அடிமையானுர். சத்திய வேத சங்கீர்த்தனம் என்னும் இசைப்பாடல் நூலை இயற்றினுர். மேற்படி நூலைப் பாராட்டி, மாஸ்கரேனஸ், பாலபாரதி, கா. நமச்சிவாய முதலியார், செல்வநாத முதலியார், செல்வராசுச் செட்டியார், நல்லதம்பிப் பிள்ளை, குழந்தைச்சாமிப் பிள்ளை, சவரிமுத்துப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' திருநெல்லை சில்லா கயத்தாற்றுப் பதியினுன்
திகழும்முத் தமிழில் வல்ல
தீரன்முத் தையவேள் சிறப்புடைச் செல்வனும்
திண்ணமுறு சபாப்ர சங்கி
அருமைசேர் இசைக்கவி தெவிட்டாத்தெள் ளமுதெனை
அமைக்குநல் லாற்றல் உடையோன்
... .. ... ... .. ... ... ....''

என்னுஞ் சிறப்புப்பாயிரப் பகுதிகள் இவருடைய வரலாற்றை விளக்குகின்றன. இவருடைய தாண்டகப் பாட்டு ஒன்றை ஈண்டடியிற் காண்க.

"சித்தசுத்தி மெய்யன்பு சிறிதும் இல்லேன்
 செம்முறைசொல் ஞானமிலேன் சிரத்தை யில்லேன்
புத்தியிலேன் பத்தியிலேன் புனிதன் அல்லேன்
 பொய்யனேன் புலைகளவு புகலப் போமோ
சத்துசித்தா நந்தமெனத் திகழ்ந்து நிற்கும்
 சர்வபரி பூரணமே! சமஸ்து யிர்க்கும்
அத்தாவே! நின்னடிமை பிழைகள் மன்னித்
 தான்மரெட்சை தந்தருள்செய் அமரரேறே."

## உஎசு. ஐயாத்துரை ஞானியார்

### (1866)

சோழவள நாட்டில் தஞ்சைமாவட்டத்தில் நாகபட்டினத்தைச் சேர்ந்த கிராமத்து மேடு என்னும் ஊரிற் சிறந்து விளங்கிய தமிழறிஞர். தந்தையார் பெயர் சிதம்பரம் பிள்ளை; தாயார் பெயர் கமலை. இவர் தோன்றிய குலம் வேளாளர் குலம். திருத்தில்லையில் எழுந்தருளிய சிவகாமியம்மைமீது இவர் சதகம் ஒன்று இயற்றித் திருத்தில்லையில் அரங்கேற்றினர். அச் சதகத்தைப் பாராட்டிக் கிருட்டிணசாமி உபாத்தியாயர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், ஆற்பாக்கம் குமாரசாமி ஓதுவார், திருச்சிற்றம்பல ஞானியார், திருவேங்கடப் பிள்ளை, நாராயண செட்டியார், அ. அப்பாசாமி முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். தில்லைச் சிவகாமசுந்தரி சதகத்தைத் தவிரத் தில்லை நடராசர் சதகமும் இயற்றியிருக்கிறார். இச் சதகத்திற்கு, சண்முகவேலுக் கவிராயர், தேவிபட்டினம் முத்துசாமிப் பிள்ளை, கிருட்டிணசாமி, அப்பாசாமி முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நடராசர் சதகப் பாட்டு ஒன்றை அடியிற் காண்க.

"ஆதியே ஏகபர பிரமமே பல்லுயிர்க்
  கங்கங்கு மாகி நின்ற
 அநாதியே விபுதனே அண்டபகி
  ரண்டனே அத்தனே முத்தனேமின்
சோதியே சுடர்விளக் கேபெரும் செல்வனே
  துரியங் கடந்த பொருளே
 துத்திமணி வாளரவு தத்துசெஞ் சடையனே
  துய்யனே மெய்ய னேசீர்

ஓதியே அன்புமய மானசித் தாந்தனே
உன்னருஞ் சீர்த்தி முதலே
உனையிரு கரங்குவித் தேனுமா தேவியொ
டொருங்குநீ வந்தென் மனதில்
நீதிரிய ஓட்டியான் தினமும்உன் பாதங்கள்
சேவிப்ப அடிமை கொள்வாய்
சென்றெல்லை கண்டவர்க் கொன்றெல்லை புரிகின்ற
தென்தில்லை நடராயனே.''

## உஎரு. ஐயாத்துரைப் பிள்ளை

இராமநாதபுரம் மாவட்டம் முதுகுலத்தூருக்கடுத்த இளங்குலத்தூர் என்னும் ஊரில் முதுகுலத்தூர் ஆறுமுகம் பிள்ளை காலத்தில் இருந்த புலவர். புலமை பெற்றுத் திகழ்ந்த இவர் ஆறுமுகம் பிள்ளையால் இயற்றப்பெற்ற மதுரையமகவந்தாதிக்குப் பதவுரை செய்திருக்கிறார். ஆறுமுகம் பிள்ளையின் சோடசப் பிரபந்தத்திற்குப் பதினைந்து பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.

''சூலாரு சாமிபணி குருசாமி
ஆறுதலந் துலங்குஞ் சாமி
வேலாரு சாமிதிரு வடிமறவாச்
சாமிசைவம் விளங்குஞ் சாமி
நூலாரு சாமியிலக் கியசாமி
இலக்கணத்தை நுவலுஞ் சாமி
பூலாரு சாமிநாற் கவியென்னும்
அமுதமழை பொழியுஞ் சாமி.

பெற்றமதிமிகு பாலன் பெரியோர்கண்
மதிசீலன் பிறசீ வர்க்கே
உற்றவரு ளுடையாளன் கல்வியறி
வொழுக்கமுளன் உலகோர் மெச்சும்
கற்றவர்சி ரோமணியன் இலக்கணமும்
இலக்கியமுங் கரையற் றுய்ந்தோன்
அற்றவருக் கிகரனென் னுறுமுக
நாவலவன் அறைந்தான் மாதோ.''

என்பன சிறப்புப்பாயிரத்தின் இறுதியிரண்டு செய்யுட்கள்.

மதுரையமக வந்தாதி

" தந்திக் குவளை யிடைவிழி யார்புடை சாரமயல்
தந்திக் குவளை யனங்களை மாயத்தவன் தாண்மலரைத்
தந்திக் குவளை யிடங்கற்செற் ருன்முடி தன்னில்வனி
தந்திக் குவளை யணிந்தே மதுரையிற் சாத்தினனே."

## உஎசு. ஐயுலு நாயகர்

(19—நூ.)

இவர் சேலம் மாவட்டம் தருமபுரியில் முன்சிப் கோர்ட்டில் வழக்கறிஞராக இருந்தவர். தமிழ்மொழியிலும் புலமை பெற் றிருந்த இவர் திருப்பதி வேங்கடேசப் பெருமாள் மீது "போற்றி மாலை" என்னும் நூல் பாடியுள்ளார். நூலுக்குத் திருவண்ணுமலை வேங்கடாசல முதலியார் சாற்றுக்கவி யளித்துள்ளார்.

" திருப்பதி வாசா வுன்றன்
திருவடி யதனை நம்பி
இருப்பவர்க் கென்றுந் துன்பம்
இல்லையென் றியம்ப யானும்
விருப்புட னுன்றன் பாதம்
வேண்டியே போற்றி செய்தேன்
பொருப்பெனும் மலையில் வாழும்
புண்ணியா போற்றி போற்றி."

என்பது போற்றி மாலையில் ஒரு பாட்டு.

## உஎஎ. ஒப்பிலாமணித் தேசிகர்

இவர் சோழவள நாட்டிலே திருவாரூரில் இருந்தவர். இவர் பரமேதிகாசமாகிய சிவரகசியம் என்னும் நூலை ௬0கூ0 பாடல் களாகச் செய்து தஞ்சைமா நகரில் சரபோசி மகாராசாவின் முன்பு அரங்கேற்றஞ் செய்தார். இந்நூலில் சிவபெருமானுடைய பரம காரணத்வம், அவர் ஆன்மாக்களினிடத்திலே நடத்தும் ஐந்தொழில், அவரை உண்மை யடியார்கள் வழிபட்டுய்யும் வழிகளாகிய, சரியை கிரியை யோக ஞானச் செய்திகள், சிவ பூசை, சிவனடியார் வழிபாடு, பிரதோடப் பெருமை, ஐந்தெழுத் துப் பெருமை, வில்வப் பெருமை, சிவநாமப் பெருமை முதலிய பல செய்திகள் அடங்கியுள்ளன. இந் நூலாசிரியர் திருவாரூரிற்

பிறந்தவர் என்பதும் திருக்குடந்தையில் இருந்த அன்பர்களின் வேண்டுகோட்படி வடமொழியில் இருந்ததைத் தமிழ்மொழியில் மொழி பெயர்த்துப் பாடித் தஞ்சையரசர் முன்பு அரங்கேற்றஞ் செய்தார் என்பதும் பின்வருஞ் செய்யுட்களாற் பெறப்படுகின்றன.

'திருமருவு கும்பகோ ணத்தில் வாழும்
செல்வமிகு பலர்சனங்கள் சிவன்பால் அன்பர்
பொருவில்சிவ ரகசியபு ராண மாகும்
பொருந்தும்வட மொழிதமிழாற் புனைவாய் என்னத்
தருமமிகு தவவணையாஞ் சைவன் தியாகர்
சந்நிதியில் வரிசைபெறுந் தலைமை பூண்டோன்
இருமைநல்கார் ஊர்ப்பிறந்தோன் ஆரூ ரன்சேய்
இசைகொளொப்பி லாமணிதான் இசைத்த வாறே.''

'மன்னர்புகழ் சரபோசி மகாரா சராசன்
மாநிலங்காத் திடுநாளில் தஞ்சைமா நகரில்
துன்னுமே விளம்பியுற்ற மகரமதி ஐந்தில்
சோதிசிவ ரகசியமொப் பிலாமணிசொற் றமிழை
இந்நிலத்தில் அரங்கேறச் செய்தனர் பொன்மாறை
எழில்சேருந் தீரமத வினைதீர்த்தான் பாகைப்
புன்னைவந் நாதனிவர் சைவநெறி வளர்க்கும்
பூபாலர் அவனியெங்கும் புகழினிதோங் கிடவே.''

## உஎஅ. ஔபளக் கொண்டம பாண்டியர்

(19—நூ.)

இவர் இம்முடிப்பட்டம் ஔபளக் கொண்டம பாண்டியர் என்று கூறப்பெறுவார். ஆய்க்குடிப் பெருநிலக்கிழாராக விளங்கியவர். கல்வியை நன்கு கற்றுச் செய்யுள்பாடுந் திறமும் அமைந்து விளங்கினர். பால குருசாமி என்பவர் இயற்றிய, "சிவகிரி (பழநி) பதிற்றுப்பத்தந்தாதி'' என்னும் நூலுக்கு இவர்,

'' நெடியஅலை உடையகடல் வளையுமுயர்
புடவிமிசை நிலவை யார்ந்த
வடகுவடுஞ் சரியலவென் றோதவளங்
கொண்டசிவ வரையி னோக்கத்

நடமகுடத் துறைதண்ட பாணியின்மேல்
பாலகுரு சாமி சொன்ன
நிடமதுர கவியந்தா திக்குவமை
கற்பகத்தைச் செப்ப லாமே.''

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## உஎகூ. ஓவாத கூத்தன்

பதின்மூன்றும் நூற்றாண்டில் இருந்தவர். கவிச்சக்கரவர்த்தி யாகிய ஒட்டக்கூத்தருடைய பேரர். இவர் சிறந்த புலவராகவும் பாவாணராகவும் விளங்கியிருந்ததாகச் செய்திகள் காணப்படு கின்றன. ஆயினும் இவருடைய பாடல்களோ நூல்களோ இருப்பதாகச் செய்தி யெதுவுந் தெரியவில்லை.

## உஅ௦. கங்காதர தேவர் - பா

(20—நூ.)

இவர் பாண்டேச்சுரம் என்னும் ஊரில் வேங்கடசாமித் தேவர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். ஆயுர்வேதத் திலே தந்தையும் மைந்தருஞ் சிறந்த புகழ்பெற்று விளங்கிய தன்றித் தமிழ்மொழியினும் புலமை பெற்றுத் திகழ்ந்தனர். திருவள்ளுவருடைய திருக்குறளின் முதற் குறளுக்குப் பரிமே லழகர் எழுதிய உரையை விளக்கி இவர், "திருக்குறள் முதற் பாவின் பரிமேலழகர் உரை விளக்கம்", விவேக விளக்கம் என்னும் நூல்களை எழுதியிருக்கிறார். அந் நூலைப் பாராட்டி உ. வே. சாமிநாதையர், வை. மு. சடகோப ராமாநுசாச்சாரியார், காஞ்சீபுரம் இராமசாமி நாயுடு ஆகியோர் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளனர்.

முதற்குறட் பாவின் முதிர்பொருள் விளக்கி
முதற்பா வலர்செய் முதற்பா நூலின்
முதற்பா விற்குள முதன்மை தெரித்தனன்
பண்டிதன் என்று பகரப் பெறும்பெயர்
இருவகை யால்தனக் கேற்கும் வண்ணம்
இலக்கிய இலக்கணக் கலைக்கட லுடனே

ஆயுள்வே தப்பொருள் ஆய்ந்துணர் அறிஞன்
... ... ... ... ... ... ... ...
தேவன் எனும்பெயர் மேவிநனி சிறப்பப்
பலவகை நூலுணர் புலவ னுகிச்
சரவா மருந்து வழங்கும் பெருந்தகை
வாயுறை வாழ்த்தின் உள்ளுறை உரைத்தற்கு
ஏற்புடை யவன்இவ னேயென யாவரும்
மதிக்கும் வண்ணம் வாயுறைத் தேர்ச்சி
தோன்றுதொட் டுடைய நன்றறி வள்ளல்
... ... ... ... ... ... ...
மங்காத சீர்த்தி மலிந்த
கங்கா தரனெனுங் கவிவல் லோனே.''

என்பது சடகோப ராமா நுசாச்சாரியாரின் சிறப்புப்பாயிரம்

## உ௯க. கங்காதர நாவலர் - கி. உ. பா

## (20—நூ.)

தொண்டைவள நாட்டிலே சென்னைமாநகரில் இராயப்பேட்டையில் இருந்தவர். இலக்கண இலக்கியங்கள் வேதாந்த நூல்கள் சைவசித்தாந்த நூல்கள் முதலியவைகளை நன்கு கற்றுத் தேறிச் சொல்லாற்றலிலும் சிறந்து விளங்கினர். இவருடைய சொற்றிறத்தைப் பாராட்டிய அறிஞர்கள் இவருக்கு நாவலர் என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கினர். வேதாந்தத்தையோ அன்றிச் சைவசித்தாந்தத்தையோ அழுந்தப்பற்றுது வேதாந்த சித்தாந்த சமரச நிலையை மேற்கொண்டு ஒழுகினர். இவருடைய பெயர் பிற்காலத்திலே சிவஞானப் பரதேசியார் எனவும் சிவப்பிரகாச தேசிக அடிகள் எனவும் வழங்கியது. இவர் சிவஞானத்வம், சிவாமிர்த பூஷணம், சிவஞானப் பூரணம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். சிவாமிர்த பூஷணத்துள் செய விநாயகர் துதி, அருள்வேண்டுந் தேசிகமாலை, சிவப்பிரகாச சோடசமாலை, மீனேசுவரர் பதிகம், சிவானந்த மாலை, சிவாமிர்த பூடண பந்தியார். நமசிவாய மாலை, விண்ணப்பமாலை ஆகியவை அடங்கியுள்ளன, சிவஞானப் பூரணத்துள், துவாதசமணி, சேவிதாநுசார தெய்வீகமாலை, பஞ்சகுணித மாணிக்கமாலை, துதிப்பதிகம், அருள் வேண்டல், நவமணி மாலை, சிவஞானப் பூரண தெய்வமாலை, நமஸ்கார மாலை முதலியன அடங்கியுள்ளன.

"அன்பருளம் ஆர்ப்பரிக்க ஆநந்த தாண்டவஞ்செய்
சின்மயனே சிற்பரனே தேவர்களுக் கிறைவனே
இன்பநிறை கயிலைநிகர் மயிலைகபா லீச்சுரனே
கன்மனத்தேன் கடைந்தேறக் கடைவிழிசாய்த் தருள்சரனே.

அங்கமதைப் பணியாய்ப்பூண் டகமகிழும் அற்புதனே
துங்கமிகு மெய்யடியார்த் தோத்திரனே சூக்மயனே
எங்கும்புகழ் கயிலைநிகர் மயிலைகபா லீச்சுரனே
கங்குல்நிறை அடிமையின்பாற் கடைவிழிசாய்த் தருள்சரனே."

என்பன துதிப் பதிகத்தில் இரண்டு பாடல்கள். மற்றும் இவர் சிவசாதன நவபோதினி என்னும் உரைநடை நூலையும் இயற்றி யிருக்கிறார். அந்நூல், திருநீறு, சிவகண்மணி, ஐந்தெழுத்து, சைவசமயம் ஆகியவற்றின் பெருமைகளைச் சைவ நூற்பிரமாணங் களோடு விரித்தோதுகின்றது.

## ௨௮௨. கச்சபாலய ஐயர்

(19—நூ.)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமாநகரிற் சிறந்து விளங்கிய புலவர். இவர் சென்னை திருவேட்டீசர்மீது பதிற்றுப்பத் தந்தாதி என்னும் நூல் இயற்றியுள்ளார்.

"காரணன் திருவேட் டீச்சுரத் தமர்ந்த
கருத்தன்மா நிருத்தனா னந்த
பூரணன் அகண்டா காரமாம் வடிவைப்
புகலிராப் பகலிலா விடத்தே
தாரணம் புரிந்து தனித்தது தானும்
தன்மையேயாக் கன்றிநான் முகத்தோன்
நாரணனறியாப் பதம்வெளிப் படுமோ
நவிலுவாய் கவலைகூர் நெஞ்சே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௨௮௩. கச்சபாலய தேவர்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் காஞ்சீபுரத்தில் வாழ்ந்திருந்தவர். நாவினுன் மழுவெடுத்த ஞானப்பிரகாச வள்ளலார் இயற்றிய வீரநாராயணர் விசயம் என்னும் நூலுக்கு இவர் பொழிப்புரை விரிவுரை முதலியன இயற்றியுள்ளார். இவருடைய இலக்கண இலக்கியப் பயிற்சியும் சமய நூல்

அறிவும் இவ்வுரையால் நன்கு விளங்குகின்றன. அவ்வுரையைப் பாராட்டிப் பெரியார் ஒருவர்,

வளமருவுந் திருச்சேய்ஞ லூர்ஞானப்
பிரகாச வள்ளல் முன்னாள்
தளர்வில்செழுந் தமிழ்ப்பாவால் வீரநா
ராயணர்வி சயம்என் றோர்நூல்
மிளிர்தரச்செய் திருப்பவதற் குரைபொழிப்பா
வரைந்திட்டான் விபுதர் போற்றித்
தெளிதருநற் கதிபெறுகாஞ் சியிற்கச்ச
பாலயனுந் தேவன் தானே.''

என்று பாடியுள்ளார். இவரால் இயற்றப் பெற்ற நூல் பழநி வெண்பா மாலை.

## உ௯௪. கச்சபேசுவர தேசிகர்

### (19—நூ.)

தொண்டை மண்டலத்தில் காஞ்சி நகரில் இருந்தவர். ஆளவந்த வள்ளலார் ஆதீனத்தைச் சேர்ந்தவராகிய இவர், அருணகிரிசுவாமிகளால் வெளியிடப் பெற்ற வள்ளலார் சாத்திரப் பதிப்புக்குப் பின்வருஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்:

'சீரார் தருங்கங்கை மதிகொன்றையார் சடைச்
சிவனுமையை யோர் பாலுறும்
செம்மலருண் மறைகரும்பிரத முபநிடதமத்
தெளிவு புகலாகமங்கள்
செய்ய கற்கண்டாகும் அதனினிய சுவையெனத்
திகழுமுப் பொருளுண்மையைத்
தேவர் முனிவரராதி யாவருமுவந்து துதி
செய்யுமீராறு பேரோ(டு)

ஏரார் வளம்பெருகு சீர்காழியந்தலத்
தியலா திசைவ மரபில்
எய்து சிவபாதவிருதயமுனி தவத்தினலன்
என்ன விவ்வுல குய்யவும்
இசைபெறுஞ் சிவஞானவாரமுத மீதாம்
எனப்பதிக மருள் புரியவும்
இறைவனருளா விதரமதகண்டனஞ் செய்
தியம்புபறை முறை நிறுவவும்

வாரார்கொங்கைதிருமாது கேள்வனிடர்
மாற்றி யாருருவ முறவு
மன்னுதிருமண மென்று துன்னுமடியாரெலா
மகிழ் வொடுங்கதி யெய்தவும்
மாதேவி திருமுலைப்பா லுண்டபிள்ளையார்
மல ரடிக்கன்பு பூண்ட
வள்ளலாரெண் ணெண்மர்தம்மினியை சிவஞான
வள்ளலார் பகரு மிந்நூல்

பார் புகழும் வேலூரரங்கசாமிக் குரிசில்
பழுதகல வாய்ந்தச் சினிற்
பதித்தருள்க வென்னமராவதியெனும் வளம்
பதிவாசு ரெட்டி லட்சுமி
பதிநாயகன் சமஸ்தான மௌளிர் வேதாந்த
பாஸ்கரன் ஞான போகன்
பல்வளஞ் செறிகச்சி நகரருணகிரிஞானி
பண்புடனளித் தனனரோ.''

## உஅரு. கச்சிக்கச்சாலைத் தேசிகர்

இவர் காஞ்சிப்புராணம் பாடியுள்ளார்.

''அக்காலை மாதவனோர் கிராத னாகி,
அக்கிர்த்தி தனைக்கவர்ந்தே அகற லோடும்
தக்காரா ந் தேவர்களைத் தடுக்க மாயன்
தனிச்சிலைகோ லிச்சரமாந் தாரை பெய்தான்
எக்காலும் இமையவர்தாம் அஞ்சி யோட
எம்பெருமான் பெரிதுநகைத் தினிய மோவாய்
கைக்காலுஞ் சிலையதனில் ஊன்றி நின்றான்
கணக்கில்பெருங் காலமும்பர் கவலைகூர்ந்தார்.''

என்பது சிவாலயச் சருக்கத்தில் ஒரு பாட்டு. இவரைப் பற்றிய பிற விவரங்கள் புலனாகவில்லை. இது சிவஞான முனிவருடைய காஞ்சிப் புராணத்திலும் வேறானது.

## உஅசு. கடவுள் மாமுனிவர்

18 ஆம் நூற்றாண்டில் கச்சியப்ப முனிவர் காலத்தில் இருந்த சிறந்த புலவர். கச்சியப்ப முனிவருக்கு நண்பர். இவர் வயிற்று வலியினால் பீடிக்கப்பட்டு மிகவும் வருந்துதலைக் கண்ட கச்சியப்ப முனிவர் தம் நண்பராகிய கடவுள் மாமுனிவரைப் பார்த்து, "நீர்

திருவாதவூரடிகளுடைய வரலாற்றைப் புராணமாகப் பாடுவீ ராகில் உம்முடைய நோய் விரைவில் உம்மை விட்டு நீங்கும்" என்று கூறினார். கடவுள் மாமுனிவர் அவ்வாறே நிசச பாடல் களடங்கிய திருவாதவூரடிகள் புராணத்தைப் பாடி நோய் நீங்கப் பெற்றார். ஒரு செய்யுளை அடியிற் காண்க.

"பவளமால் வரையின் நிலவெறிப் பதுபோல்
பரந்தநீற் றழகுபச் சுடம்பில்
திவளமா துடன் நின் றருடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்தில்
தந்துயர் சிலைப்புறத் தெழுதும்
கவளமா களிற்றின் திருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம்."

## உஎஎ. கடுவெளிச்சித்தர்

இவர் பதினெண் சித்தர்களில் ஒருவர்.

"மெய்ஞ் ஞானப் பாதையில் ஏறு—சுத்த
வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு
அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு—உன்னை
அண்டினோர்க் கானந்தமாம் வழிகூறு."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உஎஅ. கணபதி ஐயர்

இவர் ஈழவள நாட்டினர். தந்தையார் பெயர் பாலகிருட்டிண ஐயர். இவர் இந்நாட்டை அடைந்து திருவையாற்றிலே வயிரவர் கோயிலிலே பசியால் இளைப்புற்றுப் படுத்து உறங்கிக் கொண் டிருந்தார். நள்ளிரவிலேயே பாடும் ஆற்றல் இயல்பாக உண்டா யிற்று. உடனே அவ் வயிரவர்மீது பதிகம் ஒன்று பாடினார். பிறகு இங்குப் பல சிவப்பதிகளையும் போற்றி வழிபட்டுக் கொண்டு தம் நாட்டை அடைந்தார். தம் உறவினருள் ஒருவ ராகிய சண்முக ஐயர் என்பவரால் தொடங்கப் பெற்று முடிவு பெறாமல் இருந்த சுந்தரி நாடகத்தை வாளபிமன் நாடகம் என்று பெயர் மாற்றிப் பாடிமுடித்தார். பிறகு வண்ணை வைத்திலிங்கக் குறவஞ்சி, மலையகந்தினி நாடகம், அலங்காரரூப நாடகம், அதி

ரூபவதி நாடகம், பத்திரகாளியம்மை பதிகம், பத்திரகாளியம்மை ஊஞ்சல், விநாயகர் மாலை என்னும் நூல்களையும் இயற்றினார். இவருடைய காலம் நூற்றைம்பது ஆண்டுகட்கு முற்பட்டது.

## ௨௮௯. கணபதிக் கவிராயர்

இவர் சேற்றூர் சமத்தானத்திலே புலவராக இருந்தவர். உடுமலைப் பேட்டைத் தாலுகா குருவப்பநாய்க்கனூரிலே பெருஞ் செல்வராக விளங்கியிருந்த குருசாமி நாயுடு என்பவர் மீது மருத விலாசப் பிரபந்தம் என்னும் நூல் இயற்றியுள்ளார்.

### தலைவி மாற்றம்

**கடை மடக்கு**

"ஓரம் பிறையே தரும் பிறையே
உரைபண் பிறையே கரும்பிறையே
ஊர்ந்தான் மலையக் காற்றேறே
உற்று மலையக் காற் றேறே."

"நாரம் பரவுங் கயிரவமே
நல்லார் புகல்வார் கயிரவமே
நணுகும் வெள்ளைக் கூனனத்தே
நன்கு வெயர்க்கும் ஆனனத்தே."

## ௨௯௦. கணபதிசுப்பிரமணிய அய்யர் - செ ரா.

இவர் கோபிச்செட்டி பாளையத்திற் கடுத்த பிச்சாண்டாம் பாளையம் என்னும் ஊரினர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் கல்வி கற்றுப் பண்டிதப் பட்டம் பெற்றவர். ஈரோடு உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தவர்.

இவர் கந்தர் வெண்பா வந்தாதி, கந்தன் தோத்திரக் கீர்த்தனை, கந்தன் தோத்திரக் காவடிச்சிந்து, கந்தர் ஆனந்தக் களிப்பு, அறநெறிக் கதைகள், அறநெறிக் கும்மி, அறநெறி வியாசங்கள், அறநெறி வெண்பா முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

இவருடைய நூல்களைப் பாராட்டி, வித்துவான் வேங்கடசாமி நாயுடு, வித்துவான் திருவேங்கடாச்சாரி, பண்டித மாசிலாமணி தேசிகர், ச. இராசு முதலியார் முதலியோர் சாற்றுக் கவிகள் வழங்கியுள்ளனர்.

"கல்வியினில் ஞானமார் கல்வியே மேன்மையாம்
பல்வகையும் வேந்தனன்பு பண்புளதாம்—பல்லோர்
அறைவதினும் நன்றாம் அனுபவம் யார்க்கும்
குறைவின்றி யீதல் குணம்."

என்பது அறநெறி வெண்பாவில் ஒரு பாட்டு.

"நாலெழுத்தால் ஆகியதோர் சொல்அதற்கு
நாதன்எனும் பொருள்முதல்மூன் றெழுத்துஞ் சேரின்
கோலியதோர் வழியாகும் முதல்இ ரண்டும்
கூடில்தாண் டெனும்பொருள்கொள் ஓர்சொ லாகும்
மேலுமுள பிற்பாதி அகத்தின் பேராம்
மேவுமுதல் எழுத்தொடுபிற் பாதி கன்னம்
ஏலுமதன் முதலீறு மதுவாம் காணீர்
ஈதுதமிழ் தேர்ஞர் யாதே கூறீர்."

என்பது இவரால் இயற்றப் பெற்ற ஒரு விடுகதைப் பாட்டு. இதற்கு விடையாக விசுவநாத பிள்ளை என்பவர் அடியில் வரும் வெண்பாவைப் பாடியிருக்கிறார்.

"துங்கக் கரிமுகத்துத் தூமணியின் நாமமுடன்
பொங்கும் அலைவாய்ப் பொழிந்துவளர்—நங்குமரன்
பேரும் படைத்த பெரும்புலவ நின்கவியில்
சாரும் பொருள்கடவுள் தான்."

## உகூக. கணபதி தாசர்

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை. தம்முடைய நூலில் நாகைநாதர் என்று குறிப்பிட்டு வருவதால், நாகைபட்டினம் என்னும் ஊரில் வாழ்ந்தவராக இருக்கலாம். இவரால் இயற்றப் பெற்றது நூறு பாடல்கள் அடங்கிய நெஞ்சறி விளக்கம் என்னும் நூலாகும்.

"தந்தைதாய் நிசமுமல்ல சனங்களும் நிசமுமல்ல
மைந்தரும் நிசமுமல்ல மனையவள் நிசமுமல்ல
இந்தமெய் நிசமுமல்ல இல்லறம் நிசமுமல்ல
சுந்தர நாகைநாதர் துணையடி நிசம்பார்நெஞ்சே."

அரியணை யேறினர். அப்போரின் பயனாகக் கன்னர தேவன் காஞ்சிபுரத்தை அடுத்த சில பகுதிகளைக் கைப்பற்றிக் கொண் டான்; எஞ்சியவைகளையே கண்டராதித்தர் அரசுபுரிந்து கொண் டிருந்தார்.

இவர் தம்முடைய ஆட்சிக் காலத்தில் தம்முடைய பெய ரமைத்துக் காவிரியாற்றின் வடகரையில் ஒரு நகரத்தை உண்டாக்கினர். இஃது அந்நாளில் இவருடைய பெயரால் கண்டராதித்தச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரால் வழங் கியது.

இவர் தமிழ்மொழியிற் சிறந்த புலமையும், சிவபெருமா னிடத்தில் பேரன்பும் உடையவர். சிவப்பதிகட்குச் சென்று இறைவழிபாடு செய்தலையே தமது முதன்மையான காரியமாகக் கொண்டிருந்தார். இவர் தாம் செல்லும் சிவப்பதிகளிலெல்லாம் ஒவ்வொரு பதிகம் பாடுதலையுங் கடமையாகக் கொண்டிருந்தார். அப் பதிகங்கள் நன்கு காக்கப்படாமையின் எல்லாம் மறைந் தொழிந்தன. மறையாது எஞ்சிநின்றது தில்லையிற் பாடிய ஒரே ஒரு பதிகந்தான். அப் பதிகம் பன்னிரு திருமுறைகளுள் ஒன்பதாந் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இவருக்கு வீரநாராயணியார், செம்பியன்மாதேவியார் என் னும் பெயருடைய இரண்டு மனைவிமார் இருந்தனர். இவர்களுந் தம்முடைய கணவரைப்போலவே சிவபத்தியிற் சிறந்து விளங்கி னர். செம்பியன் மாதேவியாரிடம் மதுராந்தகன் என்னும் பெய ருடைய புதல்வன் ஒருவன் பிறந்தான். இப்பொழுது திருநல்லம் என்று வழங்கப்பெறும் கோயில் செம்பியன் மாதேவியாரால் கட்டப்பட்டது. அக் கோயிலின்கண், கண்டராதித்தர், செம்பி யன் மாதேவியார், மதுராந்தகன் என்னும் மூவர் திருவுருவங் களும் சிவவழிபாடு செய்துகொண்டிருக்கும் பாவனையாக அமைக்கப்பட்டுள்ளன.

“ மின்னார் உருவம் மேல்விளங்க
வெண்கொடி மாளிகை சூழப்
பொன்னார் குன்றம் ஒன்றுவந்து
நின்றது போலும் என்னாத்

தென்னு என்று வண்டுபாடுந்
தென்தில்லை அம்பலத்துள்
என்னுர் அமுதை எங்கள்கோவை
என்றுகொல் எய்து வதே.''

என்பது இவர் பாடிய கோயிற்பதிகத்தின் முதற்பாட்டு.

## உகசு. கண்ணகுமதுமகுதூ முகம்மது

இவர் பெரிய கச சுல்லன்பியா என்னும் உரைநடை நூலை, அரபு, பாரிசு இந்திக் கித்தாபுகளைக் கொண்டும் நயினுமுகம்மது புலவர் என்பவர் அச்சிட்ட பிரதியைக் கொண்டும், ஆலிம் களுடைய கேள்வியைக் கொண்டும் எவருக்கும் விளங்கத்தக்க எளிய தமிழில் இயற்றியிருக்கிருர். ஆயிரம் பக்கங்களைக் கொண்ட இந்நூல் மூன்று பகுதிகளாக 1902 ஆம் ஆண்டில் வெளிவந்தது. இதில் இருபதுக்கு மேற்பட்ட நபிமார்களின் வரலாறுகள் அடங்கியுள்ளன.

## உகஎ. கண்ணுச்சாமிச் செட்டியார் - தஞ்சை

சோழவளநாட்டில் தஞ்சைமாநகரை யொட்டியுள்ள கரந்தையில் பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இவரைப்பற்றிய முழுச்செய்தியுந் தெரியவில்லை. தஞ்சைத் தலபுராண உரைநடைக்கு இவர் அளித்துள்ள சிறப்புப் பாயிரப் பாடலைக்கொண்டு இவரும் புலவர் என்று மதிப்பிடற் குரியவராகின்ருர்.

''கஞ்சன்மாற் கெட்டாக் கருவேல நாதனமர்
தஞ்சைத் தலமகிமை சார்சரிதம்—நெஞ்சழுந்திக்
கொண்டார் துதித்தார் குவித்திருகை ஆனந்தம்
கண்டார்விண் ணேர்புவியின் கண்.

வெங்கட்ட ராமனெனும் தேவியர்கோ னுன்மேலோர்
தங்கட் கமுதாய்த் தழைத்தோங்கிப்—பொங்கும்
கடல்போல் நடந்ததுவே கண்டுய்யு மாறு
வடகலைமான் தென்கலையாய் வந்து''

என்பன சிறப்புப்பாயிரப் பாடல்களில் இரண்டு.

## உகூஅ. கண்ணுச்சாமிப் பிள்ளை - சி.

தஞ்சைமாவட்டத்தில் உள்ள அம்மாப்பேட்டை என்னும் ஊரில் இருந்தவர். இலக்கணத்தில் அதிகத் தேர்ச்சிபெற்று விளங்கியபடியால் "இலக்கணப் புலவர்'' என்று இவருக்குச் சிறப்புப் பெயர் உண்டாகியிருந்தது. தஞ்சைத் தலபுராண உரைநடைக்கு இவர் மூன்று பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அவைகளில் ஒன்று :

'' பொன்பூத்த தஞ்சைநகர்த் தக்க ணத்துப்
பொலங்குலவும் அலங்கமுளான் புகழ்ச்சி யுள்ளான்
திண்பூத்த கிருட்டிணனுஞ் சாமி யென்போன்
செய்தவத்தில் உதித்தசுதன் வாசு தேவன்
தண்பூத்த நாயகனுர் அன்பிற் பூர்ணச்
சந்திரோ தயமெனப்பேர் தழைத்த அச்சின்
மின்பூத்த அழகொழுகப் பதிப்பித் தன்னுன்
மேன்மைதனைப் புவியறிய விளக்கி னுனே.''

என்பதாகும்.

## உகூக. கதிரித்தம்பியா பிள்ளை - க
## (19—நூ.)

இவர் ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்தில் கந்தப்பிள்ளை என்பவருக்குச் சொந்தப் பிள்ளையாகத் தோன்றிக் கல்விகற்றுப் புலமை பெற்றவர். இவர் யாழ்ப்பாணம் கதிரையாண்டவன் பதிகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

'' மங்களகல் யாணகுணம் எங்குநிறை பொருளாகி
மாதவத் தோர்ம துரமாய்
மணிமந்திர காரண அகண்டபரி பூரண
மகத்துவ மிகுந்த பொருளாய்த்
தங்குமுயர் கற்பனை கடந்தமுக் குணரகித
சகளநிட் களவ பேத
சச்சிதா னந்தநித் தியநிரா மயநிமல
சாசுவத துவாத சாந்தத்
துங்கமிகு தலமீ தமர்ந்தமு விருமுகச்
சோதியே நாதாந் தமே
சோனைமத மொழுகுகரி முகவனுக் கிளையநல்
தோன்றலே ஆன்ற முதலே

வங்கிய மெனுஞ்சொல் வரைராசன் மகள்மைந்தனே
வத்துதா ரணையருள் செய்தே
மரகத மயூரமிசை வந்திரு சரண்டருக
வண்ணைவாழ் கதிரே சனே''

என்பது கதிரையாண்டவன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருOO. கதிரைவேற் பிள்ளை - (கு)

ஈழவள நாட்டிலே உடுப்பிட்டி என்னுமூரிலே வேளாளர் குலத்திலே ஏறக்குறைய நூற்றியிருபது யாண்டுகட்கு முன்னே பிறந்தவர். தந்தையார் பெயர் குமாரசாமி முதலியார். தமிழ் மொழியையும் ஆங்கிலத்தையும் நன்கு கற்றுணர்ந்தவர். சுன்னுகம் அ. குமாரசாமிப் புலவர், உடுப்பிட்டி ஆறுமுகம் பிள்ளை, ஊரெழு. சு. சரவணமுத்துப் புலவர் முதலிய சிலரைத் துணையாகக்கொண்டு பெரிய அகராதி ஒன்றைத் தொகுத்தார். அவ்வகராதி மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது தர்க்கபரிபாடை என்னும் நூலையும் இவர் ஆராய்ந்து பதிப்பித்தார்.

## ருOக. கதிர்வேற் கவிராச பண்டிதர் – த (1870)

தஞ்சை மாவட்டத்திலேயுள்ள தரங்கம்பாடியிற் பிறந்து கல்விகற்றுச் சிறப்புற்றவர். பின்னுளில் சென்னைமாநகரையடைந்து அங்குச் சீர்த்தியுடன் வாழ்ந்திருந்தார். அட்டாவதானஞ்செய்பவராகலின் இவருடைய பெயருக்கு முன் அட்டாவதானம் என்னுஞ் சிறப்புச் சொல்லும் இயைந்து நின்றது. சென்னைமாநகரில் "சதுர்வேத சித்தாந்தப் பேரவை" என்னும் அவை யொன்றினையும் அமைத்து அதில் அடிக்கடி சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்திக்கொண்டிருந்தார். செய்யுள் பாடுவதில் மிகுந்த திறமை யுடையவர் மழவராயனேந்தல் சுப்பிரமணிய ஐயர், அட்டாவதானம் சுப்பையர், வேம்பத்தூர் முத்துவேங்கட சுப்பையர், திருவாவடுதுறை யாதீனம் தாண்டவராய அடிகள், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், புதுவை பொன்னுச்சாமி முதலியார், சிதம்பரம் தளவரிசை சுப்பிரமணிய பண்டிதர்,

தருமபுரம் ஆதீனம் சோமசுந்தரக் கவிராயர், தரங்கம்பாடி சண்முகக் கவிராயர், திருவண்ணுமலை வேங்கடாசல முதலியார் ஆகியோர் இவர் காலத்தில் இருந்த புலவர்களாவர். திருவிளையாடற் புராண இசைப்பாடலுக்கு இவர் பின் வருஞ் செய்யுளைச் சாற்றுக்கவியாகப் பாடியுள்ளார்.

"சந்திர சடாதார திரிநயன சொக்கேசர்
சதுரையருள் மதுரை நகரில்
தானடத் துஞ்சரிதை யானதிரு விளையாடல்
தன்னைப்பூ வலயத் தினில்
சர்வத்ர சாதார ணஞ்செயத் திருமழவை
தன்னிலே அவத ரித்த
சாதுரிய உதயமூர்த் திக்குரவ னுகிவளர்
சற்குணச் சுந்த ரையர்
மைந்தனென வந்தபிர பந்தமிசை சந்தமிகு
வள்ளல்சுப் பிரமணிய வேள்
வளமுடைய கீர்த்தனைகள் ஆகநல் கியவதனை
வண்சுந்தர சோழ புரம்வாழ்
வணிகரில் தலைமைசேர் அழகப்ப மகிபதியின்
மாண்புள முயற்சி யதனுல்
மாதிரமெ லாம்புகழ் நீதிசே ராதிபுரி
மாநகரி லேயு தித்தே
அந்தகா ரந்தவிர வந்தபாற் கரனைநிகர்
அஞ்ஞான இருள கற்றி
அண்டினேர்க் குதவுநெல் மண்டிவேங்கடசாமி
அற்புதத் தபோப லத்தால்
அத்வித மகாயோகன் நித்யமதி வைபோகன்
அருந்தமிழ் லேவி வேகன்
ஆதுலர்க் குபகாரன் மாதுரிய விவகாரன்
அளகைவள ருங்கு பேரன்
மந்த்ரமிகு திரிபதகை மரபில்வரு பாக்கியன்
மடலெழுது போக போக்யன்
மாருத செல்வநிறை நாராய ணச்சாமி
வள்ளலுக் கனுச னுனேன்
வாசவப் பிரதாப கேசவப் பிரபுடிக
மந்திரசா லப்பு யத்தான்
மனமகிழ்ந் தச்சில் பதிப்பித் தளித்தனன்
மகாகீர்த்தி நிலைநிற் கவே."

குடிகேடர்மாலை என்னும் நூலும் வேறு சில நூல்களும் இவரால் இயற்றப்பெற்றன. மேலும், அந்நாளில் அந்நாட்டிலே

வசித்திருந்த மலைப்பெருமாள்சாமி என்பவர் சிறந்த மெய்ஞ் ஞானச் செல்வராக விளங்கியிருந்தார். அவர் வியக்கத்தக்க அருட்டிருவிளையாடல் புரிந்தவர். அப்பெரியார்மீது இவர் பஞ்சரத்தினம் சரமகவி முதலியன இயற்றியுள்ளார். சுப்புப் பிள்ளை என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் இவரை ஆதரித் தார். சுப்புப்பிள்ளைக்கிருந்த கொடிய நோயை மேற்படி அடிகள் தீர்த்தருளினார் என்பதைப் பின்வரும் இவருடைய பாடல் விளக்குகின்றது இவருடைய நூல் வெகுகாலத்திற்கு முன் அச்சிடப் பெற்றது. இப்பொழுது கிடைப்பது அரிது.

*" பாதாதி கேசபரி யந்தமுங் கருமேக*
*படைகொண்டு தலைவீங் கியே*
*பார்க்கின்ற பேரெலாம் ஊர்க்குள் வாராது தடை*
*பண்ணித் துர்க்கந்த மென்றே*
*வாதாடிப் பேசித் துரத்தநின் பக்தனுன்*
*மலர்ப்பதங் கதியென் றுமே*
*வாயில்வழி கின்றவுமிழ் நீரைக் கரத்தினுல்*
*வாங்கியுட லிற்பூ சவே*
*தீதெலா மகற்றியே வச்ரதே கந்தந்து*
*செங்கையாற் பாகை வைத்து*
*திருமண முடித்துவைத் தகலா திருக்கின்ற*
*சேவையுந் தந்த ருளியே*
*பேதையேற் கருள்புரிய வாலமா நகரில்*
*பிறங்கவும் அமர்ந்து கொண்டீர்*
*பிறைதரங் கச்சுப்ப முகினுளத் துறைமலைப்*
*பெருமா ளெனும் பிரமமே."*

## ௩0௨. கதிர்வேற் பிள்ளை - வை

(20—நா.)

இவர் தஞ்சைமாவட்டத்தில் உள்ள திருமுல்லைவாயில் என் னும் ஊரில் இருந்தவர். சிங்கப்பூர் முருகர் இரட்டை மணிமாலை சிவபெருமான் நவமணிமாலை முதலிய நூல்களை இவர் இயற்றி யுள்ளார். நூலைப்பாராட்டித் தில்லையாளி வித்துவான் நா. தம்பியப்ப செட்டியார், பிறையாறு - நா. பெ. இராமச்சந்திர கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''அருமணி பன்னிரு கண்மணி செய்ய அலரவன்மெய்க்
குருமணி கும்ப முனிக்கருள் ஞானக் குழுமணிமால்
தருமணி கொஞ்சிக் குலாமணி வள்ளி தழுவுமணி
திருமணி வாழ் சிங்கை நன்மணி யேவினை தீர்த்தருளே.'

என்பது முருகர் இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## ௱௦௩. கதிர்வேற் புலவர்

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்பு கொங்கு வளநாட்டில் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த ஆத்தூர் தாலுகா சாருவாய், அத்தனூர்ப்பட்டி முதலிய சிற்றூர்களில் வாழ்ந் திருந்தவர். வேளாண் மரபினர். உயர்ந்த நோக்கமும் உறுதியும் உடையவர். முருகக் கடவுளிடத்திலே மாருத பேரன்புடை யவர். உட்காரும்போதும் எழும்பும் போதும், "கதிர்வேலுக்கு எதிர்வேல் இல்லை'' என்று எப்பொழுதும் சொல்லுவார். இவ்வாறு இயம்புவதற்கு இவர் சிறிதுந் தளர்ச்சியடைந்ததே இல்லை. செல்வர்களைப் பாடிப் பரிசுபெற்று வாழ்க்கை நடத்து வதே இவருடைய தொழிலாக இருந்தது.

இவர் ஒரு சமயம் ஒரு நீதிபதியை அடுத்துப் பரிசில்பெற விரும்பினர் அந்நீதிபதி முகமதியசமயத்தினர். இஸ்மால் ராவுத்தர் என்னும் பெயருடையவர். புலவரை மறுநாள் வருமாறு நீதிபதி கூறினர் மறுநாளுஞ் சென்று நீதிபதியைப் புலவர் கண்டார். நீதிபதி வேறொரு நாளைக் குறிப்பிட்டு அந்நாளில் வருமாறு கூறினர். நீதிபதி குறிப்பிட்டநாளில் மீண்டும் புலவர் சென்றார். நீதிபதி நீதிமன்றத்தில் இருப்பதாகத் தெரிந்தது. நீதிமன்றத்திற்குச் சென்று நீதிபதியைக் கண்டார். புலவரைக் கண்ட நீதிபதி வெகுண்டார். "நீர் யார்?'' என்று கேட்டார். "சிலநாட்களாக உம்மிடம் வந்துகொண்டிருக்கும் புலவன் நான் தான். இன்றைக்கு வருமாறு நீர் சொல்லவில்லையா?'' என்று கேட்டார் இவர். உடனே நீதிபதி, "ஓ ஓ!! நீ புலவனா? புதிய பாட்டுப் பாடுவாயா? அல்லது பழைய பாட்டுப் பாடு வாயா?'' என்று கேட்டார். இவர், "புதிய பாட்டும் பாடு வேன், பழைய பாட்டும் பாடுவேன்'' என்று இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றப் பெருமிதத்துடன் கூறினர். புலவருடைய பெருமிதம்

நீதிபதிக்குப் பொருமையையுஞ் சினத்தையும் உண்டாக்கியது. "சிறிதும் அச்சமில்லாமல் ஆணவத்துடன் பேசுகிருயே!" என்ருர். அவ்வளவில் இவர்,

"தத்தினத்தோம் தானதந்தம் தானு—தான
தத்தினத்தோம் தானதந்தம் தானதந்தம் தானு
கொச்சகம் கலிப்பா வெண்பா தூது
கூறுவேன் இப் போது
அச்சமென்ன புலவர்க்கு வாது—அடே
அதையெந்தப் பேய்ப்பயலும் அடக்கப்ப டாது—தத்தின"

இதைக்கேட்ட நீதிபதி, "செருப்பால் அடித்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டார். உடனே புலவர்,

"செருப்புக் கலங்காரம் வாரு—வீட்டைச்
சிங்கார மாய்ப்பெருக்குவது சிறுவிளக்க மாறு
நீ இருப்பது தெருக்கடை ஊரு—உனக்கு
இஸ்மால் ராவுத்தனென்று எவனிட்டான் பேரு—தத்தின"

என்று பாடினர். இதனைக்கேட்ட நீதிபதி, "உன்னுடைய பல்லைப் பிடுங்கினுல் என்ன?" என்று கேட்டார். அதற்குப் புலவர்,

"பாம்புக்குப் பல்லிலே விடம்—வெல்லும்
பாடகர்களுக் கெலாஞ் சொல்லிலே விடம்
வீம்புக்குத் துணிவது மல்லு—லேசில்
விடமாட்டேன் எந்தன்நெஞ்சம் விலையிலாக் கல்லு—தத்தின.

மானமுள்ள துரையென்று அடுத்தேன்-நல்ல
மரியாதைக் காரனென்று வரவரப் பார்த்தேன்
ஆனமட்டும் தூதுகள் விடுத்தேன்
அடங்காத கொண்டியென்று வசைபாடத்தொடுத்தேன்-தத்தின.'

என்று மேலும் வசைபாடத் தொடங்கினர். "வில்லேர் உழவர் பகைகொளினுங் கொள்ளற்க, சொல்லேருழவர் பகை" என்பது திருவள்ளுவர் திருவாக்கன்ருே? புலவரிடத்திலே அச்சங்கொண்ட நீதிபதி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தகுந்த நன்கொடை வழங்கியனுப்பினர். இவ்வாறு வசைப் பாட்டால் எத்தனையோ புலவர்கள் பிறருக்கு அச்சத்தை யுண்டாக்கிச் சிறப்புடன் வாழ்ந்திருக்கிருர்கள்.

கவி கந்தசாமிக் கவிராசர் என்று அழைக்கப்பெற்றார். இவரால் இயற்றப்பெற்ற நூல்களில் 'திருவொற்றியூர் வெண்பா' என்னும் நூல் ஒன்று அறியப்பெறுகின்றது. இந்நூல் திருவொற்றியூரில் எழுந்தருளிய இறைவன்மேலது நூறு வெண்பாக்களால் ஆகியது.

"மாங்குயிலும் வண்டினமும் வந்தொலிக்க மாமயிலும்
ஓங்கிநடமாடும்பொழி லொற்றியே—பூங்கொடியார்
அஞ்சக் கரத்தா லலையாதன் பர்க்கருளும்
அஞ்சாக் கரத்தா னகம்."

என்பது அந்நூலில் ஒரு பாட்டு நூலுக்குப் புரசை யட்டாவ தானம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, திருமணம் கேசவசுப்பராய முதலியார், ஆ. அண்ணாச் சாமிக் கவிராசர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கின்றனர்.

"கொண்டல்வண்ணத் திருமாலை அலங்கரிக்குந்
துழாய்மாலை குலையா நிற்கப்
புண்டரிகத் தயனணிபூ ணூன் மாலை
கலையாகப் பொருத்தஞ் செய்யத்
தண்டலையார் கோரஞ்சூழ் கந்த
சுவாமிபுனை தமிழ்மா லைக்கே
அண்டர்பிரான் தியாகேசர் அணிமாலை
யுங்கடுக்கை ஆய தம்மா."

என்பது கேசவசுப்பராய முதலியார் பாட்டு.

## கந்தசாமித் தேசிகர்

(19—நூ.)

சோழவளநாட்டில் மாயூரத்திற்கு அண்மையில் உள்ள கூறைநாட்டில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியிலும் சைவசித்தாந்தப் பயிற்சியிலும் இவர் சிறந்து விளங்கினார். இவருடைய சித்தாந்தப் புலமையைக் கண்ட அறிஞர்கள் இவருக்குச் "சித்தாந்த ரத்நாகரம்" என்று சிறப்புப்பெயர் வழங்கி மேன்மைப்படுத்தினர். இவருக்குத் தியாகராச தேசிகர் என்னும் பெயருடைய மகனொருவர் இருந்தார். அவருஞ் சிறந்த புலமைபெற்றுப், பெற்றான் சாம்பான் சரித்திரக் கீர்த்தனம் முதலிய நூல்களைச் செய்துள்ளார்.

## ௩௦௧. கந்தசாமிப் பிள்ளை - மு
(1899)

இவர் மதுரைமாவட்டம் திண்டுக்கல்லில் "ஞான ரத்தினு கரம்" என்னும் பெயரோடு அச்சகம் ஒன்று அமைத்து நூல்கள் வெளியிடும் பணியில் நின்றார். காலக்கணிதத்தினுஞ் சைவ நூற் பயிற்சியினும் வல்லவர். இவர் திருவாவடுதுறை அம்பல வாண தேசிகருக்கு முப்பத்தொரு பாடல்சேர் விண்ணப்பம் பாடி அச்சிட்டார். அதன் அவையடக்கம் வருமாறு:

"ஒழுக்கமதி குணம்பொறைநூல் ஓதல் இன்சொல்
உண்மைதரா தரமறிதல் உயர்வாம் ஞானப்
பழக்கமதின் திறமைகளிற் றேர்ந்த நல்ல
பக்குவஞ்சேர் நின்சபையிற் பதிநா வீதென்
றிழுக்குடைய நெஞ்சினன்யான் எடுத்துப் பேசல்
இயலபில்லா திருப்பினுமெய்ஞ் ஞானந் தன்னின்
முழுககாத லாகியன்றோ பகர்ந்தேன் நின்பால்
முத்தர்புகழ் துறைசைவளர் முனிவர் கோவே."

## ௩௦௨. கந்தசாமிப் பிள்ளை - தூ. ந.
(1899)

பாண்டிவளநாட்டில் விருதுப்பட்டியில் இருந்தவர். இலக் கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றுச் செய்யுள் பாடுவதிலே வல்லவராகச் சிறந்து விளங்கியவர். சந்தப்பாடல்களை நன்கு இயற்றியவர். விருதுப்பட்டியில் அந்நாளில் இருந்த வணிக நிலையம் ஒன்றில் தரகராகத் தொழில் புரிந்துகொண்டிருந்தார். "திருச்செந்தூர் முருகக்கடவுள் தோத்திரப் பாமாலை" என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூல் நானூற்று இருபத் தைந்து பாடல்கள் அடங்கப்பெற்றது.

"பரிவொடு மலைமகள் உதவிய சரவண
பவனெனும் அழகிய வடிவேலா
வரிவளை தெரியவும் முகிழ்முலை குழையவும்
வனமகளுடனணை கதிர்காமா
அரியென முறையிடு கரிபடு துயரதை
அகலவு முதவிய பெருமாள் கூர்
புரிவுறு மருகனெ அரகர முருகனெ
பொறையுடன் அருள்செய வருவாயே."

என்பது நூலில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி, சேற்றூர், மு ரா. அருணாசலக் கவிராயர், அரிகேசநல்லூர் அரிகரபாரதிகள், திருநெல்வேலி கவிராச நெல்லையப்ப பிள்ளை, சேற்றூர் இராமசாமிக் கவிராயர், திருநெல்வேலித் தெற்குப் புதுத்தெரு, பால்வண்ண முதலியார், திருப்பாதிரிப்புலியூர் க. ரா. சிவசிதம்பர முதலியார் மாணவர் வேங்கடசாமிப் பிள்ளை, திரிசிரபுரம் காத்த பெருமாள் பிள்ளை, எட்டயபுரம் கருத்தமுத்துப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர் மற்றும் இவர் தூத்துக்குடி சங்கர ராமேசுவரர் பேரில் புகழ்பெறந்தாதி, பாகம் பிரியாள் பேரில் வேண்டு வரம்பெறு மாலை முதலிய நூல்களும் இயற்றியுள்ளார்.

## ௲௧௧. கந்தசாமிப் பிள்ளை - இ
(1887)

இவர் மதுரைமாநகரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் இருளப்பபிள்ளை. கந்தசாமிப் பிள்ளை இசைத்தமிழ்ப் பயிற்சியிற் சிறந்த புலமைபெற்றவர். இவர் விநாயகர், சுப்பிரமணியர், சோமசுந்தரேசுவரர், மீனாட்சியம்மை, திருமால் ஆகிய கடவுளர்மீது இசைப்பாடல்களும் முருகக்கடவுள் மீது சடாட்சரக் கண்ணியும் பாடியுள்ளார் இவர் திருத்தணிகையில் இருந்த சிவாநந்த சுவாமி என்னும் பெரியாருக்கு மாணவராக இருந்தாரென்பது,

"முத்திதரும் திருத்தணிகா சலத்தில் வாழும்
முருகனிரு பதமதனை முழுதுமா நம்பி
சத்தியமா யிலகுசிவா நந்த சாமி
தன்னுடைய சீடர்களிற் கடையேன் யானும்
பத்தியுள்ள எனதாசான் தனைப்ப ணிந்து
பண்ணிசைந்த கீதமதாய்ப் பகவன் மீது
இத்தரையில மதுரைவளர் கந்த சாமி
ஏதேதோ தெரிந்தமட்டும் இயம்பி னேனே."

என்னும் பாடலாற் பெறப்படுகின்றது. இவருடைய இசைப் பாடல் நூலுக்குக் கோகுலாபுரம் அருணாசல முதலியார், மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம் சுந்தரலிங்கம் பிள்ளை, மதுரை சபாபதி முதலியார், பாலகிருட்டிணசாமி நாயுடு,

பிச்சுவையர், நம்பி ஐயங்கார், வேலுச்சாமிச் சேர்வைக்காரர், மீனாட்சிதாசரையர், முத்துச்சடையப் பிள்ளை, எல்லப்ப செட்டியார், இராமகிருட்டிண நாயக்கர் என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௧௨. கந்தசாமிப் பிள்ளை - வெ. ரா

இவர் உடுமலைப்பேட்டையில் இருந்த தமிழறிஞர். "கர்ணாமிருதம்" என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். கலியாண சுந்தரக் கவுண்டரின் சித்திரபந்தனமாலைக்கு அளித்த சாற்றுக் கவிகளில் ஒன்று,

*"பாவலர்பால் ஆவலுளான் பாவியர்பால்*
*ஆவலிலான் பரங்குன றேறும்*
*சேவலர்பால் அன்புடையான் தீவினைபால்*
*வன்புடையான் சிறப்பின் மிக்க*
*ஓவியமார் பந்தனமாலை சுடம்பர்*
*சந்தனமார் உரத்தி னானை*
*தாவருசீர்ப் பெரியோரின் தன்னளிக்கே*
*உரியோனாச் சாற்றி னானே."*

என்பது.

## ௫௧௩. கந்தசாமிப் புலவர் - தி

இவர் ஊற்றுமலைச் சமத்தானப் புலவர்களில் ஒருவராக இருந்தவர். பெரும் புலவர்களில் ஒருவர். திருமழிசை ஏகாம்பர முதலியார் என்பவருடைய வேண்டுகோளின்படி வடபழநி முருகக்கடவுள்மீது "வடபழநி வண்ணமஞ்சரி" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். மேற்படி நூல் ௫௦ வண்ணப் பாடல்களைக் கொண்டது. நூலைப் பாராட்டி முருகதாச சுவாமிகள் என்னும் தண்டபாணி சுவாமிகள், அட்டாவதானம் பூவை - கலியாண சுந்தர முதலியார், வல்லை - சண்முகசுந்தர முதலியார், காஞ்சி நாகலிங்க முதலியார், அரன்வாயில் - தங்கவேலுப் பிள்ளை, திருமழிசை-வடிவேலு முதலியார், ஆலந்தூர் - முத்துசாமி முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"செவியளவு போய்மீண்டு வருநயன வேல்பாய்ந்து
சிதறாது எமாந்து—திரியாதே
தெளிகருணை மேலோங்கு நினதடியர் தாள்சேர்ந்து
செப்பணிசெய் யாவரந்தை—தறையாதே
கலிபிணிக ளாலோய்ந்து திறன்மயிட மேலூர்ந்து
கடுகியம னுன்மாய்ந்து—தொலையாதே
களைவிடர்செய் மாக்கேக நினதடியிலே தாழ்ந்து
கமழ்பொதிகை யாறேர்ந்த—தருள்வாயே
தவிலரிய கோலேய்ந்த இரவிபலை யார்கண்ட
நரகரியுள் மானகூர்ந்த—மருகோனே
நவியமொடு மானேந்தி முடியிலறு கார்வேய்ந்து
நரையெடையி லேதோன்றுப—அவர் வாழ்வே
வலியவிகள் தேன்மாந்தி முரன்றரவ மேசூழ்ந்த
மருமமுறு காரேந்த—தமரேசா
மதிவின்பட வார்விங்கு குயநடம தால்நீந்தும்
வடபழநி யூராண்ட—பெருமாளே."

என்பது வண்ணமஞ்சரியில் ஒரு பாட்டு.

## ருகச. கந்தசாமிப் புலவர் (க)

(19—நூ.)

பாண்டிவளநாட்டில் பெருநாழி என்னும் ஊரில் வழிவழியாகப் புலமை பெற்று விளங்கிய குடியில் தோன்றியவர். இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராண வண்ணம் என்னும் நூலுக்கு இவர்,

"வந்தப்பு மோதுசடைக் கறைக்கண்டன்
ஈன்றருளும் வணிகன் விண்ணோர்
மந்தப்பு வியினிவிடர் செய்சூரன்
உயிர்வதைசெய் திட்ட காதை
கந்தப்பு ராணவண்ணம் எனப்புகன்றான்
எந்நாளுங் கருத்து ளாய்வோன்
நந்தப்புங் கரத்தனடி பணிவிசைய
இராமலிங்க நாவ லோனே."

என்று சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார். இயற்றிய நூல்களைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. பாடலைக்கொண்டு புலமையிற் சிறந்தவரென்று துணியலாம்.

## ௩கரு. கந்தசாமிப் புலவர் (உ)

பாண்டிவளநாட்டில் முத்தாலக் குறிச்சி என்னும் ஊரில் இருந்தவர். இவர் திருச்செந்தூர் நொண்டி நாடகம் என்னும் நூலை இயற்றினர்.

## ௩கசு. கந்தசாமிப் புலவர் (௩)
## (1827)

இவர் மதுரைமா நகரில் இருந்த சிறந்த புலவர். பின்னுளிற் சென்னைமாநகரில் தங்கியிருந்தார். வடமொழியிலுந் தென்மொழியினும் வல்லவராகிய இவர் மிருதிசந்திரிகை என்னும் நீதிநூலைத் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். கீழ்வருஞ் செய்யுள் சிறப்புப்பாயிரமாக அந்நூலின் முகப்பிலே காணப் பெறுகிறது.

"உலகினுறு நரர்பலரும் விவகாரம் எளிதுணர
உரைநடையி னுல்தருமநூல்
ஒன்றுருற் றுதியென்று நம்பினர் தலைமக்காக்கும்
உத்தமன் சத்தி யன்சீர்
இலகுசென் னைத்திறற் சங்கத் தமிழ்த்தலைமை
ஏற்றரிச் சார்ட்டுக் கிளார்க்
ஏந்தல்சொல இங்கிலீஷ் இரண்டாம் சார்ச்சி
இறைநீதி அரசுசெயுநாள்
அலகுகொண் டெண்சாலி வாகன சகாத்தமோர்
ஆயிரத் தெழுநூற் ருெடேழ்
ஆறீரண் டினனருெங் குமன்ருெம்
அன்னுளுமதி காரத் தினில்
சலமின்மனு வாதிமிரு திகளோர்ந்து விவகார
சாரசங் கிரகமெனுநூல்
தன்னைப் புரிந்தனன் தென்னன்மது ரைக்கந்த
சாமிநா மப்பு லவனே."

## ௩கஎ. கந்தசாமிப் புலவர் (௪)
## (1853)

இவருடைய ஊர் இன்னதென்று விளங்கவில்லை. ஆர்க்காடு முத்துக்கிருட்டிண முதலியார் மகன் சுப்பராய முதலியார்

விருப்பப்படி இவர் மூத்துக்கிருட்டிணபுரத்தில் எழுந்தருளிய சோமசுந்தரப் பெருமாள்மீது அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அவ்வந்தாதிக்குத் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் தாண்டவராயத் தம்பிரான், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், அட்டாவதானம் வீராச்சாமிச் செட்டியார், சேமங்கலம் நாராயணசாமி முதலியார், திருநீர்மலை கோபாலகிருட்டிண கவிராயர், தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> "பரமேய பாவலர்கள் சூட்டும் பசுந்தமிழ்ப் பாவொடுநல்
> உரமே யிலாதுழல் என்புன் கவியும் உவந்தருள்வாய்
> திரமேவு கண்டிகை போடென்பு மாலையுஞ் சேர்த்திடலாம்
> வரமேவு மூத்துக் கிருட்ண புரத்தொளிர் மாணிக்கமே."

என்பது அந்தாதியில் மூன்றுவது பாட்டு.

## ருகஅ. சே. கந்தசாமி முதலியார்

இவர் தொண்டைமண்டலத்தில் கைவண்டூரில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் அப்பாசாமி முதலியார். இலக்கண இலக்கியப் பயிற்சியிற் சிறந்து விளங்கிய இவர் திருப்பாச்சூர்ப் புராணம் பாடினர். அந்நூல் பதினேழு சருக்கங்களையும், ஐந்நூற்றுத் தொண்ணூற்றைந்து விருத்தங்களையுங் கொண்டது. அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரால் பார்வையிடப் பெற்று 1905 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது.

> "அண்ணலுமப் பால்வாங்கி இலிங்க மூர்த்திக்
> காட்டியே மஞ்சனமும் மாட்டி யாடை
> வண்ணமுற வேசாத்திக் கந்தஞ் சாத்தி
> மலர்மாலை பலசாத்தி மகிழ்ந்து நோக்கி
> தண்ணமுது பாலினி ரடைக்கா யாதி
> நற்புகையோ டொளிகவரி எவையும் நல்க
> விண்ணவரும் மண்ணவரும் விருப்பி யேத்த
> வியன்சிவபூ சனையுலகில் விளங்கச் செய்தான்."

என்பது மேற்படி புராணத்தில் பால்வாசி யறிந்த சருக்கத்தில் ஒரு பாடலாகும். இவர் இயற்றிய பிற நூல்களைப்பற்றிய செய்தியொன்றுந் தெரிந்திலது.

## ௩௧௯. கந்தசாமி முதலியார் - திரு
(19—நூ.)

தொண்டைவளநாட்டில் திருக்கழுக்குன்றத்தில் வேளாளர் குலத்தில் தோன்றினர். இலக்கண இலக்கியங்களையன்றி அறிவு நூல்களையும் பயின்றுதெளிந்து 'ஞானானந்தச் சிந்து' என்னும் நூலை இயற்றியுள்ளார். மேற்படி சிந்தைப் பாராட்டிச் சென்னை இராயபுரம் புலவர் நாராயணசாமிப் பிள்ளை,

"நந்தாரும் வயற்கழுக்குன் றினிற்கங்கை
குலமுஞற்று நற்றவத்து
வந்தாரும் பெருமிலா ஒருவனாரன்
எனனுணாநது மகிதலக்கு
முந்தாரும் ஞானநிலை யினைக்கந்த
சாமிமுகில் முழைந்து ஞானச்
சிந்தாரும ந்திடப்பெய் திட்டதுமோர்
வியப்பிற்றே தெரியுங் காலே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௩௨௦. கந்தபுராணம் கச்சியப்பர்

கந்தபுராணம் பாடிய கச்சியப்பரல்லர். கந்தபுராணத்தை நன்கு படித்துக் கந்தபுராணச் சொற்பொழிவு செய்வதில் தேர்ச்சியுற்று விளங்கியபடியால் கந்தபுராணம் என்னும் அடைமொழியைத் தம்முடைய பெயருக்கு முன்னுறப் பெற்றார். அந்தகக் கவி வீரராகவ முதலியார் காலத்தினர். இவர் அந்தகக் கவி வீரராகவ முதலியாரைப் புகழ்ந்து,

"பொங்குதமிழ் அயோத்தியில்வாழ் தசரதனென்
பானிடத்துப் பூதூர் வேந்தன்
துங்கவடு கன்னிடத்தும் வீரரா
கவர்இருவர் தோன்றி னாரால்
அங்கொருவன் ஒருகலைமான் எய்திடப்போய்
வசைபெற்றான் அவனி யின்பால்
இங்கொருவன் பலகலைமான் எய்திடப் போய்க்
கல்வியினால் இசைபெற் றானே."

என்று பாடியுள்ளார்.

## ௩௨௧. கந்தப்ப அடிகள் - சரசுவதிபீடம் (1897)

இவர் ஈழவளநாட்டிலே யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். கல்வியறிவில் மிக்கவராக விளங்கிய இவர் துறவு நிலையில் ஒழுகினர். இவருக்கு ஒரு சமயத்தில் கொடியநோய் ஒன்று உண்டாகியது. இவர் அந்நோய் நீங்குமாறு பல சிவப்பதிகட்குஞ் சென்று இறை வழிபாடு செய்தார். ஆயினும் நோய் நீங்கிக் குணம் உண்டாகவில்லை. ஒருநாள் இரவு முருகப்பெருமான் இவருடைய கனவில் தோன்றி, "நீ நம்முடைய கதிர்காமப்பதிக்கு வந்து நம்மை வணங்கி நம்மீது கலம்பகம் ஒன்று பாடுவாயானல் உன்னுடைய நோய் உடனே நீங்கும்" என்றனர். இவரும் உடனே கதிர்காமத்தை யடைந்து கந்தப்பெருமான் மீது கலம்பகம் ஒன்று பாடினர். அப்பொழுதே இவரைப் பற்றியிருந்த நோய் நீங்கியது. இவர் பிறகு காலமுழுவதும் முருகப்பெருமான் மீதே பேரன்புகொண்டு வாழ்ந்திருந்தார். இந்நூலுக்கு வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரும், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரும் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"குருகமர்ந்த வேலையே முருகமர்ந்த சோலையே
கூதிர்தந்த மாலையே ஓதிநின்ற தாலையே
அருகுநின்ற பானலே பெருகிவந்த கானலே
ஆலடர்ந்த நீழலே மாலடர்ந்த ஞாழலே
உருகிநின்ற அன்புதந் தருகுநின்ற வன்பொழித்
தூடல்காட் டெனை முலைபுணர்ந் தாடல்காட் டென்மகிழ்நனுக்
தருமென்மோக மயிலனுள் பிரிவிநோதர் தேடியே
தாவுசோதி மலையிலே போகலான தறிவரே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௩௨௨. கந்தாடைமன்னப்பங்கார்

இவர் வயலூரில் தோன்றியவர். தூப்புள் பிள்ளை எனவும் வேதாந்த தேசிகர் எனவும் வழங்கிய வைணவப் பெரியார்மீது "தேசிகர் திருநூற்றந்தாதி" என்னும் நூலை இவர் பாடியுள்ளார். அந்தாதி வெண்பா வந்தாதி. இவரைப்பாராட்டி,

“பழவினைகள் பாமகலப் பரவாதி சிங்கத்தின்
கழலிணையைத் தன்னெஞ்சில் கழலாமே எந்நாளும்
தொழுதெழுமன் னப்பங்கார் தூயமலர்த் தாளிணையே
தொழுதெழுநீ நன்னெஞ்சே தொல்வினைகள் தொடராவே.”

என்று ஒருவர் பாடியுள்ளார்.

“வேதமுடித் தேசிகனே! வேதியர்கு லத்தரசே!
சாது சனங்களுக்குத் தாவளமே—போதமரும்
நின்னடியை என்றும் நினைத்திருப்பார் பாதமென்றன்
சென்னிதனில் சூடு மலர்.”

என்பது தேசிகர் நூற்றந்தாதியில் ஒரு பாட்டு.

## ௩௨௩. கந்தையாச்சாமி
## (1898)

தென்னாட்டைச் சேர்ந்த இவர் காசி முதலிய வடநாடுகட்குச் சென்றார். காசியில் சில ஆண்டுகள் தங்கி வடமொழி பயின்றார். காசியில் வாசஞ் செய்திருந்தபடியால் காசிவாசி என்னுங் காரணச் சொல் இவருடைய பெயருக்கு முன்னால் இயைந்து நின்றது. வடமொழியிலும் வல்லவராகிய இவர் வடமொழியில் இருந்த காசியாத்திரா தீபம் என்னும் நூலைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார். அந்நூல் காசியில் கடவுள் வழிபாடு செய்பவர்கட்கு மிகவும் பயனுடையதாக அமைந்து விளங்குகிறது.

## ௩௨௪. கமலமுனி

இவர் போகருடைய மாணவர்களில் ஒருவர். கம்மாள குலத்தில் தோன்றியவர் என்பர். சித்தருள் ஒருவர். ‘கமலமுனி ௩00’ என்னும் வைத்திய நூல், இரேகை சாத்திரம் முதலியன இவரால் இயற்றப்பெற்றன.

“ஆகவே இன்னமொரு ரேகை மைந்தா
அறிந்தபட்டுஞ் சொல்லுகிறேன் அன்பாய்க் கேளு
பாகவே பலவிதத ரேகையென்னும்
பாங்கான ரேகையொன்று பகரக்கேளு

ஏகவே மாள்விரலில் ஏறிநிற்கும்
இந்கிறு மூன்றுபுள்ளி இசைந்துநிற்கும்
வாகவே வையகத்தி விந்தரேகை
வரிசையாய்க் கண்டகால் மைந்தா கேளே.''

என்பது பலவிந்த ரேகையின் பலன் கூறும் பாட்டு.

## ௩௨௫. கமுதிநாட்டுப் புலவர்

ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்பு சேதுநாட்டில் இருந்தவர். தெளிவாகக் கல்வி கற்று அரும் பெரும் புலமை யடைந்து விளங்கியிருந்தார். அந்நாளில் மருது பாண்டியர் என்பவர் சிவகங்கையில் அரசுபுரிந்திருந்தார். அவர் பெரும்பாலும் சிறுவயல் என்னும் ஊரில் அரண்மனை அமைத்துக் கொண்டு அங்குத் தங்கியிருந்தார் அவ்வூர் இந்நாளில் அரண்மனை சிறுவயல் என்னும் பெயரோடு வழங்குகிறது. வீரபாண்டியக் கட்டபொம்மன், ஊமைத்துரை என்பவர்களும் இக்காலத்தினரே. மேற்படி புலவர் ஒருநாள் கல்லல் என்னும் ஊருக்குச் சென்றார். புலவருடைய மனைவியும் உடன் சென்றாள். கள்ளர்கள் சிலர் கல்லலுக்கு அண்மையில் உள்ள காட்டில் வழிமறித்துப் புலவரிடமும் அவர் மனைவியிடமும் உள்ளதை ஆராய்ந்தனர். உயர்ந்த பொருள்கள் ஒன்றும் அகப்படவில்லை. புலவருடைய மனைவியின் கழுத்தில் தாலிமட்டும் இருந்தது. கள்ளர்கள் அத் தாலியை வெடுக்கென்று அறுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தனர். புலவர் அன்றிரவு கல்லலில் தங்கியிருந்து மறுநாள் புறப்பட்டு அரண்மனை சிறுவயலுக்குச் சென்று மருது பாண்டியனைக் கண்டார்.

'' மருவிருக்கும் கூந்தல் மனையாள் கணவன்
அருகிருக்கத் தாலி அறுமா—இரவுனக்குச்
செங்கோல் இலையாஇத் தேசமெங்கும் கள்ளருக்குப்
பங்கோ மருதுபூ பா.''

என்னும் வெண்பாவைப் பாடினர். செய்தியை உணர்ந்த மருது பாண்டியர், உடனே பொற்கொல்லரை யழைத்து ஆறுபவுனில் தாலிச்சரடும் தாலியும் செய்துவரச் செய்து புலவர் கையிற் கொடுத்து மனைவியின் கழுத்தில் கட்டச் செய்தார். புலவர் மருது பாண்டியரின் கொடைத்திறனை வியந்து அவரை வாழ்த்திச்

சென்றார். அப்பொழுது அவர் பாடிய பாடலில் "தாலிக்கு வேலி தமிழுக் குதவிய தார் மன்னனே" என்னும் இறுதியடி மட்டுங் கிடைக்கிறது. இவரைப்பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## ௩உ௬. கம்பர் வீட்டு வெள்ளாட்டி

கல்வியிற் சிறந்தவராகிய கம்பர் வீட்டில் இருந்த வேலைக்காரர்கள் கூடச் செய்யுள் பாடும் ஆற்றலுடையவர்களாய்ச் சிறந்து விளங்கினார்கள். இதனாலேயே "கம்பர் வீட்டுக் கட்டுத் தறியுங் கவிபாடும்" என்னுஞ் சொல் வழக்குளதாயிற்று கம்பர் வீட்டில் வீட்டுவேலைகளைச் செய்து கொண்டிருந்த வெள்ளாட்டி யொருத்தி சிறந்த அறிவாளியாய் இருந்தாள். வெண்பா முதலிய பாக்களைப் பாடுந்திறமும் அவளுக்கு நன்றாக அமைந்திருந்தது. அவள் அடிக்கடி வேடிக்கையாகப் பாடல்கள் இயற்றுவாள்.

ஒருநாள் அவ் வெள்ளாட்டி சாணிமிதித்து வராட்டி தட்டிக் கொண்டிருந்தாள். அப்பொழுது கம்பர் வீட்டுக்கு வெளியூரிலிருந்து புலவர் ஒருவர் வந்தார். அவருடைய பெயர் சோமாசி. அவர் கம்பரைக் கண்டு அளவளாவி இன்புற்றுச் செல்லலாம் என்னும் எண்ணத்தோடு வந்தவர். சோமாசிப் புலவரைக் கண்டதும் வராட்டி தட்டிக்கொண்டிருந்த வேலைக்காரி உசாவத் தொடங்கினாள் "நீவிர் எவ்வூர்? எங்கே வந்தீர்?" என்று பல கேள்விகளை அடுக்கினாள். புலவர் தாம் ஒரு புலவரெனவும் கம்பரைக் கண்டு மகிழ்ந்து செல்லுதற்காக வந்ததாகவும் கூறினார். இம் மறுமொழியைக் கேட்டதும் வெள்ளாட்டி, "நீவிர் புலவராயின் நான் ஒரு விடுகதைப் பாடல் சொல்லுகிறேன்; அதனை விடுவித்து பிறகு எங்கள் கம்பரைப் பார்க்கப் போம்" என்று கூறி,

> "வட்டமதி போலிருக்கும் வன்னிக் கொடிதாவும்
> கொட்டுவார் கையினின்று கூத்தாடும்—சுட்டால்
> அரகரா என்னுமே அம்பலசோ மாசி
> ஒருநாள்விட் டேன்ஈ துரை."

என்னுஞ் செய்யுளைக் கூறினாள். சோமாசிப் புலவர் நீண்ட நேரம் எண்ணமிட்டுப் பார்த்தார்; ஒன்றுமே விளங்கவில்லை மெதுவாக அவ்விடத்தைவிட்டு நழுவி விட்டார். அவள் செய்த

கொண்டிருந்த வேலையைப் பார்த்துங்கூடப் புலவருக்கு பொருள் விளங்காமற் போனது வியப்பன்றோ? கம்பர் வீட்டிற் பணி செய்திருந்த வேறு சில பெண்கள் கம்பருடைய கட்டளைப்படி, ஏகம்பவாணருக்காகப் பாண்டிய மன்னனிடம் போய்,

“ மாப்பைந்தார்க் கல்லமுத்து வன்னத்தார்க் கல்லவென் பெண்
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே—பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சீவிமா றாதமிழை
ஆய்ந்திருக்கும் வீரமா றா.”

“ தென்னவா மீனவா சீவிமா றாமதுரை
மன்னவா பாண்டி வளநாடா—முன்னம்
கரும்புக்குத் தாரளித்த துய்யதமிழ் நாடா
கரும்புக்கு வேம்பிலே கண் ”

“ வேம்பா கிலுமினிய சொல்லுக்கு நீமிலைந்த
வேம்பா கிலுமுதவ வேண்டாவோ—மீன்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள் மான்.”

“ இலகுபுக ழாறை ஏகம்ப வாணன்
அலைகை வரும்வருமென் றஞ்சி—உலகறிய
வானவர்கோன் சென்னிமேல் வண்கை வளையெறிந்த
மீனவர்கோன் தல்கிடான் வேம்பு.”

என்னும் பாடல்களைப் பாடி வேப்ப மாலையைப் பெற்று வந்தன ரென்றும் செய்திகள் வழங்குகின்றன.

## ௫௨௭. கயத்தாற்றரசன்

கயத்தாறு என்னும் ஊரில் வாழ்ந்திருந்த ஒரு குறுநில மன்னன் புவிராசனாக விளங்கியதோடு கவிராசனாகவும் இலங்கினான். அந்தகக்கவி வீரராகவ முதலியாருடைய பாடல்கள் இவனுக்கு மிகுந்த உவகையை உண்டு செய்தபடியால் அவருடைய பாடல்களைப் புகழ்ந்து,

“ ஒட்டக்கூத் தன்கவியும் ஓங்கியகம் பன்கவியும்
பட்டப் பகல்விளக்காய்ப் பட்டவே—அட்டதிக்கும்
வீசுங் கவிவீர ராகவனும் வேளாளன்
பேசுங் கவிகேட்ட பின்.”

என்னுஞ் செய்யுளைப் பாடினான். மேற்படிப் புலவரிடம் இவன் மிகுந்த பற்றுக்கொண்டிருந்தவன் என்பது,

"முன்னாட்டுத் தவமுனியும் சேடனும்வான்
மீகனுமே முன்னில் லாமல்
தென்னாட்டு மலையிடத்தும் பாரிடத்தும்
புற்றிடத்தும் சென்று சேர்ந்தார்
இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே
கவிவீர ராக வாநீ
பொன்னாட்டுப் புலவருடன் வாது செய்யப்
போயினையோ புகலு வாயே."

என்று இரங்கிப் புலம்பி இரங்கற்பாப் பாடியிருப்பதாலும் நன்கு பெறப்படும்.

## ௩௨௪. கயாதரர்

இவர் தேவை என்னும் இராமேச்சுரத்தில் வாழ்ந்தவர். அந்தணர் குலத்தில் தோன்றியவர். வடமொழியிலுந் தென் மொழியிலும் வல்லவர். இராமேசுரக் கோவை, அரும்பொருளந் தாதி, கயாதரம் முதலியன இவரால் இயற்றப் பெற்றவை. இவர் வாழ்ந்திருந்த காலம் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னிருக்கலாம் என்று எண்ணுகின்றனர்.

## ௩௨௫. கரபாத்திர அடிகள்

தாயுமான அடிகளாரிடம் அருளுரை பெற்று உடனுறைந்த மாணவர்களில் இவர் ஒருவர். இவர் தமது கையையே உண்கல மாகக் கொண்டு ஐயமேற்றருந்திக் காலங் கழித்துவந்ததால் இவருடைய பெயர் 'கரபாத்திர அடிகள்' என்று காரணப் பெயராக மாற இடுகுறிப் பெயர் மறைந்து போய்விட்டது. பல நூல்களை நன்கு பயின்றிருந்தபடியினால் செய்யுள் பாடுந் திறமும் பெற்றிருந்தார். அடிகளார் வீடுபேற்றை அடைந்தபோது இவர் பின்வரும் இரங்கற்பாவைப் பாடியுள்ளார்.

"சூழுமுச் சுழுத்தி பாழெனா உணர்த்தித்
துரியமீ துற்றரு ளியமாம்
பாழையுங் கடந்த அறிவுநீ யென்றே
பகர்ந்தருள் புரிந்தினிப் பிறவா
வாழ்வையும் அளித்த சற்குரு மணியே!
மறைசையில் உதித்தெழு மருந்தே
தாழ்வுளேன் எனையிங் கிருத்தியெங் கொளித்தாய்
தந்தையுந் தாயுமா னவனே!"

## ௩௩0. கருணாகர அடிகள்

இவர் உபநிடதம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். முப்பத்திரண்டு பாடல்களைக் கொண்ட இந்நூல் வேதாந்தச் செய்திகளை விளக்குவது. இதற்கு ஈசூர் சச்சிதாநந்த அடிகள் உரை எழுதியுள்ளார். உரையைப் பாராட்டிக், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, தி. சண்முகம் பிள்ளை, அ. முனிசாமி நாயகர், பவழை—தங்கவேலையர், செ. ஆறுமுக முதலியார், சேலம் கோமளேசுவர முதலியார், தஞ்சை - சண்முகம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"பொன்போல இலங்குமனஞ் சஞ்சலத்தால் குரங்காம்
புத்திவிசா ரித்தறியும் பொலிவதனால் அரவாம்
தன்போல இலையெனலால் அகங்கார மதமாந்
தனைநிகராஞ் சித்தமொரு தன்மையினால் நாயாம்
மின்போலுஞ் சலனமனம் அசையாமல் நிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து
வன்போரி லருமகங்கா ரத்தினையுங் கடிந்தால்
வைத்தவிடத் திருந்துசித்தம் மகத்துவமுந் தருமே."

## ௩௩௧. கருணாகரக் கவிராயர்

இவர் தொண்டைவள நாட்டில் வாழ்ந்திருந்தவர். திருஞான சம்பந்தப்பெருமான் ஆண் பனையைப் பெண் பனையாகச் செய்த திருவோத்தூரின் சிறப்பைக் கூறும் திருவோத்தூர்ப் புராணத்தை ஆயிரத்துப் பதினறு பாடல்களாகப் பாடியுள்ளார். திருநகரச் சருக்கம், வயிரவர் உற்பவச் சருக்கம், அறுமுகன் சத்திபெற்ற சருக்கம், வீரநடனச் சருக்கம், திருமால் நேமி பெற்ற சருக்கம் முதலிய இருபத்தேழு சருக்கங்கள் அமைந்துள்ளன.

"மறையொரு வடிவு கொண்டு
மலைதொடைம் புலனும ஒன்றிக்
கறைமிடற் றவனைப் பூசை
கைக்களாற் பலநாட் செய்ய
நிறையரு ளாகி யீசன்
நெடியவெள் விடைமீ தேறிப்
பிறைவளர் சடையெம அண்ணல்
பிறங்கிடத் தோன்றி னானல்."

என்பது வீரநடனச் சருக்கத்தில் வரு பாட்டு.

## ௯௯௨. கருணைதாசர்
### (19—நூ.)

இவர் பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்தில் வாசுதேவ நல்லூரைச் சேர்ந்த பனங்காட்டூரில் ஏறக்குறைய எழுபது ஆண்டுகட்கு முன்னர்க் கரும்புலவர் என்னும் பெயரோடு வாழ்ந்திருந்தார். சிவப்பதிப் பயணமாகக் கொங்கு நாட்டிற்குச் சென்றபோது அவிநாசிப் பதியில் அவ்விடத்திய மக்களின் வேண்டுகோளின்படி பத்தாண்டுகட்குமேல் தங்கியிருந்தார். அக் காலத்தில் பெருங்கருணையம்மனிடம் பேரன்பு கொண்டு வழிபட்டிருந்தார். இவர் பெருங்கருணையம்மனிடத்தில் கொண்டிருந்த பேரன்பைக் கண்ட மக்கள் இவருக்குக் 'கருணைதாசர்' என்று பெயர் வழங்கினார்கள். அக் காலத்தில் அந் நாட்டில் பெருமை பெற்று விளங்கிய தங்கமுத்துப் புலவர் என்பவரும் இவரிடத்திலே பல நூல்களை ஓதி உணர்ந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் கருணாகரமாலை, இசைப்பாடல்கள் முதலியன.

> 'நீர்கொண்ட கோலச் சடாடவி தாங்கி நிறைந்தபெருஞ்
> சீர்கொண்ட பேர்கொண்ட வாரணவாசிச் சிவக்கொழுந்தை
> வார்கொண்ட கொங்கைத் துணைகொண் டணைத்துமருவியிந்த
> ஊர்கொண்ட பெண்ணமுதே கருணாகர உத்தமியே.''

என்பது கருணாகர மாலை.

இராகம் கல்யாணி — சாப்பு தாளம்

**பல்லவி**

வாலைகிரு பாகரியே ஈஸ்வரிதேவி
வாலைக்ரு பாகரியே

**அநுபல்லவி**

நீலவிலோதிய நீன்கரு ணாலய
நீலிதிரு சூலி கிருபைபாலி
என்ன சோலியம் மா (வாலை)

**சரணங்கள்**

மந்திர ரூபமே சுந்தர தீபமே
வாமியபிராமி சிவகாமியர தேவதையே (வாலை)

௨. மங்கள பூரணி சங்கரி நாரணி
வஞ்சமென் னெஞ்சின்மறு தஞ்சமில்லை நின்செயல்தான் (வாலை)

௩. முக்கனியே ரசபக்குவமே சிவ
முக்கணனா புகழொளியே ரத்தினியே சுகக்கிளியே (வாலை)

௪. வண்டமிழே ழோதிய தொண்டனை யாதரி
வாழ் கருணைதாசன் கவியான் கருணையாமளையே. (வாலை)

என்பது இசைப் பாட்டு.

## ௧௧௧. கலிசிவலிங்கஞ் செட்டியார்
### (19—நூ.)

இவர் பாண்டிவளநாட்டில் அருப்புக்கோட்டையில் தோன்றியவர். அவ்வூரிலே அந்நாளில் வள்ளிநாயகம் பிள்ளை என்னும் புலவர் ஒருவர் இருந்தார். கல்விச் செல்வம் பொருட் செல்வம் இரண்டும் நன்கு அமையப் பெற்றவர். இவர் அவரிடத்தில் கல்வி கற்றுப் புலமை யடைந்து பாப்பாடுந் திறமை மிக்கவராக விளங்கினார். தம் ஆசிரியராகிய வள்ளிநாயகம் பிள்ளை இயற்றிய நூல்கட்கு இவர்,

"சீரிலகு தென்றலங் கன்றுநின் றாடுமுயர்
தென்மலைக் கலைமு னிவனும்
திகழ்பிறைச் சடிலனைத் தாதா விடுத்திலகு
செல்வனுஞ் சிந்து சூழ்ந்த
பாரிலகு காழியிற் சம்பந்த முனிவனும்
பண்புமிகு வாகீ சனும்
பரமனைக் குரவனுக் கொளும்வாத வூரனும்
பகரிவர்க ளொருவடிவதாய்
ஏரிலகு தாரணியில் இலையென நீந்திடும்
எழிற்கங்கை மரபில் வந்தே
எங்கள்குரு வள்ளிநா யககவிஞர் கோனென
இலங்குபெயர் பெற்ற மேலோன்
நாரிலகு மன்பருக் கருளுமோ மெனமன்றில்
நடனமிடு மூர்த்தி தாளில்
நறுந்தமிழ்ப் பாமாலை யந்தாதி வேய்ந்தனன்
நாவலர்க் கமுத மெனவே."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௱௩௪. கலியாணசுந்தரக் கவுண்டர்
(20—நா.)

இவர் கொங்கு நாட்டிலே கோயமுத்தூர்த் தாலுகா செட்டி பாளையத்திலே நஞ்சப்ப கவுண்டர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமை யடைந்து திகழ்ந்ததுடன் தம்மிடம் கல்விகற்க விரும்பிய பலர்க்குக் கல்வி கற்பித்து அவர்களையும் அறிஞராகச் செய்தவர். இரட்டைநாகபந்தனம், சடாக்கர பந்தனம், நான்காரைச் சக்கிர பந்தனம், இரதபந்தனம், சிவலிங்க பந்தனம், மும்மீன் பந்தனம், சொக்கட்டான் பந்தனம், கமலபந்தனம், சுழிகுளம், சதுரங்க பந்தனம், கோமுத்திரிகா பந்தனம், ஆறுரைச் சக்கிர பந்தனம், சருப்பதோ பத்திர பந்தனம், சதுரநாகபந்தனம், எட்டாரைச் சக்கிர பந்தனம், கடக பந்தனம், முரச பந்தனம், அறுமீன் பந்தனம், வேலாயுத பந்தனம், கூடசதுக்கம், அட்டநாக பந்தனம், மாலை மாற்று, மாத்திரை வருத்தனை, மாத்திரைச் சுருக்கம், ஏகபாதம், நிரோட்டம், ஏகாக்கரம், சுந்துறை செய்யுள் ஆகிய சித்திர கவிகள் அமைந்த 'கந்தன் சித்திரபந்தன மாலை' என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

இவர் இந்த நூலை மிகுந்த அல்லற்பட்டு இயற்றியுள்ளார் என்பது முகவுரையில் "...கலியுகம் 5030 ஆவது விபவ ஆண்டு வைகாசித் திங்களில் ஆறுமுகன் அடியிணையினின்றுதித்த ஆணையின் றேற்றத்தைக் கொண்டும் தண்டியலங்காரம் மாறனலங்காரம் என்னும் இலக்கணங்களைக் கொண்டும் ஆக்கப்படுங்கால் அடைந்த அல்லல்கள் அளவிலடங்கா." என்று எழுதியிருப்பதனுல் பெறப்படுகின்றது.

### சிவலிங்க பந்தனம்

"கண்டவுட னேதாழக் காதன் மிகவகத்தே
கொண்டன்பு முத்தமிழ்வண் குகநேச கச்சோலை
செண்டமரு கடப்பினிதாச் சேர்த்தகுழல் வள்ளிபதி
பண்டைப் பவம்போக்கும் பழனிமலைச் சண்முகனே."

### சொக்கட்டான் பந்தனம்

"தாயனைய சேயனே தாகனக யேகனே
தாயநய ஞேயனே நேயரிய—லாயனே

*சதாநா தாந்தானே சாலநல சிலனே*
*காதாதே தாசிநா கா.''*

என்பன இரண்டு சித்திர கவிகள்.

திருச்செந்தூர்

*'' சிரலைவாய் சேருஞ் சிலம்பனே திங்கடம்பா*
*சிரலைவாய் சிமருகா தேவர்களைச்—சிரலைவாய்ச்*
*சேரா திருக்கவே செய்தோனே தீவினைகள்*
*சேரா திருக்கவே செய்.''*

என்பது முற்றும் மோனை அமைந்த யமக நேரிசை வெண்பா.

**பாராட்டு**

நூலினைப் பாராட்டி, அ. கந்தசாமிப் பிள்ளை, T. V. சதாசிவ பண்டாரத்தார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், சிரவணபுரம் கௌமார மடாலயம் கந்தசாமி சுவாமிகள், தி. மு. செந்தில் நாயகம் பிள்ளை, பவானி குமாரசாமிப் பிள்ளை, உடுமலைப்பேட்டை வெ. ரா. கந்தசாமிப் பிள்ளை, நல்லேப் பள்ளி சு. ஆறுமுகம் பிள்ளை, கணபதி—ரா. கிருட்டிணசாமிக் கவுண்டர், கோயமுத்தூர்* சி. கே. சுப்பிரமணிய முதலியார், செட்டி பாளையம் குப்புச் சாமிக் கவுண்டர், இரகுநாதையர், துடிசைக்கிழார் அ. சிதம் பரனர், மருதப்ப செட்டியார், அண்ணுச்சியப்பன், பழநியப்பன், இராமசாமி, சீநிவாச ஐயர், கோவை. ச. அய்யாச்சாமி பிள்ளை, சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார், கோயமுத்தூர் அ. கிருட் டிணசாமி நாயுடு ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இவர்களிற் சிலர் சித்திர கவியாகவும் இயற்றியுள்ளனர். நால் வகைப் பாக்களுள் சித்திர கவி ஒன்று. தமிழில் சித்திர கவி நூல்களே இல்லை யென்னுங் குறையை இந்நூல் போக்குகிறது. இவருடைய மக்களாகத் தோன்றிய அண்ணுச்சியப்பன், இராம சாமி என்பவர்களும் தமிழ்க் கல்வியை நன்கு கற்றுச் செய்யுள் பாடுந் திறனடைந்தனர். தம் தந்தையாரின் நூலுக்குச் சாற்றுக் கவியும் வழங்கியுள்ளனர்.

---

*இப்பொழுது துறவறத்தை மேற்கொண்டு சம்பந்தசரணுலய அடிகள் என்னும் பெயரோடு விளங்குகின்றனர்.

## ௩௩ரு. கலியாணசுந்தரம் பிள்ளை
(20—நூ.)

சோழவளநாட்டில் கும்பகோணம் என வழங்குந் திருக்குடந்தையை இருப்பிடமாகக் கொண்டவர். புலவர் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றிருந்தவர். தந்தையார் பெயர் வெள்ளைவாரணம் பிள்ளை. இவர் நாட்டரசன் கோட்டை கண்ணப்ப செட்டியார்மீது "காதல்" என்னும் நூல் இயற்றினர். அந்நூலுக்குப் பண்டிதமணி—மு கதிரேசன் செட்டியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், உரத்தூர் - வைத்தியலிங்கம் பிள்ளை, இராமையங்கார், சிவகங்கை - மு. ப. கணபதியா பிள்ளை, உறையூர்-தே. பெரியசாமிப் பிள்ளை, வேம்பத்தூர் - சௌந்திர பாரதி, நாட்டரசன் கோட்டை -சீதாராமையங்கார், திரிசிரபுரம்-மு. நடேச முதலியார், நூலாசிரியரின் தந்தையார் ஆகியோர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர்.

"மானே ! மரகதமே ! மாங்குயிலே ! மாமயிலே !
தேனே ! தெவிட்டாத தெள்ளமுதே ! தீங்கனியே !
கன்னற் கனிரசமே ! கற்கண்டே ! சர்க்கரையே !
வன்னமலர்ப் பூங்கொம்பே ! மாசிலா மாமணியே !"

என்பன நூலிற் சில அடிகள்.

## ௩௩சு. கலியாணசுந்தரம் பிள்ளை

விருத்தாசலம் என வழங்கும் பழமலையில் பேரறிஞராக விளங்கிய தியாகராசக் கவிராயருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். தந்தையாரிடமே இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்து விளங்கிய இவர் செய்யுள் பாடுவதில் திறமை மிக்கவராக விளங்கினர்.

"பஞ்சகர்த் தாக்களொடு பரையெனுஞ் சத்தியே
பகராறு முகங்க ளாகப்
பண்புறும் உருத்திரர்கள் பதினொருவர் சத்தியொடு
பாரவே திகளா யிட
மஞ்சுகண் டுண்மகிழும் மயிலிவர்ந் தடியர்குறை
வாஞ்சையொடு கேட்டரு ளவே
மன்னுபன் னிருசெவிகள் நயனங்கள் கொண்டருளி
மன்பதைகள் ஈடே றவே

*விஞ்சுபுகழ் தணிகைமலை மயிலமலை பேரியொடு*
*வேளூரில் விற்றிருந்து*
*வேண்டுவன ஈதலொத் திப்பேறை மேவியருள்*
*வித்தகா சரவண பவா*
*தஞ்சமென உன்பதாம் புயம்நம்பி வந்தனன்*
*தாயென்ன ஆதரிப்பாய்*
*சலசமென ஒளிர்கைய சதமதி கணிகர்மெய்ய*
*தலையுருவ முருகையனே.''*

என்பது இவர் முருகக் கடவுள்மீது இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ௩௩எ. கலியாணராம சாத்திரி
## (1905)

இவர் சோழவளநாட்டிலே பருத்தியூரிலே இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் கிருட்டிண சாத்திரிகள். கலியாணராம சாத்திரிகள் இசைப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். காலட்சேபஞ் செய்பவர்கட்குப் பயன்படுமாறு இவர் "ருக்மணி பரிணயம்'' என்னும் நூலை இசைப்பாடலாகப் பாடியுள்ளார்.

*'' அவிரிழை அவனி ஈன்ற அணங்குதன் கமலக் கையால்*
*திவளொளித் திலகநன்கு திட்டுழி பினர்வந் தன்னாள்*
*குவளையங் கண்ணை மெல்லக் கூடமாப் புதைக்கு நாதன்*
*பவபய மொழிக்கும் பாத பங்கயம் போற்றி வாழ்வாம்.''*

என்பது நூலின் தெய்வ வணக்கப் பாட்டு.

## ௩௩அ. கல்விக்களஞ்சியப் புலவர்

இவர் மதுரைமா வட்டத்தைச் சேர்ந்த மேலூரிலே சீறாப் புராணம் பாடிய உமறுப் புலவர் வழி முறையில் தோன்றியவர். சீறாப்புராண வண்ணம், சித்திரகவித் திரட்டு முதலியன இவர் இயற்றிய நூல்கள். இவர் முகமதியராயினும் சைவ சமயக் கடவுளரையும் பாடியிருக்கிறார். இத்தகைய மனப்பான்மை அமைதல் மிகவும் அருமை. இவர் 1891 ஆம் ஆண்டில் காலமானார்.

"சில வேதனை யாமொழி யாமிடைச்
செறிந்த வேதனை யன்பதிக் கொங்கையாள்,
சால வேதனை யார்வசைச் சொல்லையும்
சகிக்க வேதனை யார்துன் பையுமையர,
ஏல வேதனை யும்மறந் தஞ்சியே
யிதஞ்சு வேதனை பாவியும் வேண்டிலாக்
கால வேதனை தீர்த்தனை வாய்செழுங்
கமல வேதனை ஆட்கொண்ட கந்தனே."

என்பது இவர் முருகக் கடவுள் மீது இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ௩௩௧. கவிக்களஞ்சியப் புலவர்

இவர் புதுப்பாகை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் கருப்பன். காலம் முதலியன விளங்கவில்லை. இவர் ஏறக்குறைய 850 செய்யுட்கள் அடங்கிய "வேதாளக் கதைச் செய்யுள்" என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

ஒரு காலத்திலே திருக்கைலையில் சிவபெருமான் உமாதேவியாருக்குக் கதைகள் சொன்னார். ஓர் அந்தணன் ஒளிந்திருந்து அக் கதைகளைக் கேட்டு உலகத்தார்கள் அறியும்படியாகச் சொல்லிவிட்டான். இக்குற்றத்திற்காக அவ்வந்தணனைச் சிவபெருமான் வேதாளமாகும்படி சாபங்கொடுத்து விட்டார். பிறகு அந்தணன் சிவபெருமானை வணங்கிச் சாபத்தை நீக்கியருளும்படி வேண்டிக் கொண்டான். சிவபெருமான் அவ்வந்தணனைப் பார்த்து, "நீ காட்டிலே வசித்திரு. விக்கிரமாதித்தன் அக் காட்டின் வழியாக ஒரு நாள் இரவில் வருவான். அச் சமயத்தில் அவனைப் பிடித்துக்கொண்டு இக் கதைகள் முழுவதையுஞ் சொல்லுவாயாகில் இச் சாபம் நீங்கிவிடும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சாபம் பெற்ற அந்தணனாகிய வேதாளம் விக்கிரமாதித்தனுக்குச் சொல்லிய கதை இதுவாதலின் இப் பெயர் பெற்றது. இதில், முதலாகமம், இரண்டாமாகமம், பதுமாபதி கதை, மந்திராபதி கதை, கிளியின் கதை, வீரபரன் கதை, கூர்மக் கதை, சூரன் கதை, தலைவழக்குக் கதை, காற்படிகன் கதை, இரத்தினபதி கதை, மதனசேனை கதை, மிருகாங்கபதி கதை,

அருச்சுனசுவாமி கதை, திரகயகேசரி கதை, கள்ளன் கதை, தெய்வசுவாமி கதை, சிமுதவாகனன் கதை, உமாபதிக் கதை, இந்திரஞாலக் கதை, சந்திரப்பிரபன் கதை, அனங்கமஞ்சரி கதை, சந்திரலோசனன் கதை, சிங்கத்தின் கதை, கூடுவிட்டுக் கூடுபாய்கிற கதை, முறை தெரியாக் கதை, விக்கிரமகேசரி கதை என இருபத்தைந்து கதைகள் உள்ளன.

"சாற்றி னுன்கதை நான்சொலக் கேட்டுநீ
தூற்றி யெங்கணுஞ் சொன்னப ராதத்தால்
ஏற்ற பேயுரு வெய்தி வனத்திலே
வீற்றி ருந்தருள் வேதியா என்றனன்.

வேந்த ருக்குளோர் விக்கிரம கேசனற்
சாந்த சீலன் தனியிர விவ் விடை
வாய்ந்த விக்கதை யத்தனை யுஞ்சொல்லி
ஈந்த சாபம்விட் டெய்துவை இங்கென்றான்."

இச் செய்யுட்கள் அக் கதையின் தொடக்கத்தன.

## ௩௪௦. கவிக்குஞ்சரம் ஐயர்

இவர் பாண்டிவள நாட்டில் வேம்பத்தூரில் சோழிய அந்தணர் குலத்தில் தோன்றியவர். அழகர் கலம்பகம், அழகர் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"கொண்டல் வண்ண அன்றேயுன்
குரைகழற் கமலம் பெற்றேன்
மண்டலம் அளந்த காலே
மற்றும்நான் புறம்போ சொல்லாய்
அண்டர்தென் னமுதம் உண்ண
ஆலமுண் டவர்க்கே சோமன்
துண்டமுன் தந்தாய் தந்தாய்
சுந்தர ராச மாலே."

என்பது அழகர் கலம்பகத்தில் ஒரு பாட்டு.

## ௩௪௧. கவிராச கந்தசாமிப் பிள்ளை

இவர் மதுரைமா நகரத்தில் இருந்தவர். செய்யுளை நன்கு இயற்றுந் திறம் பெற்றிருந்தபடியால் கவிராசர் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றார். இவர் வான்மீகர் என்பவர் செய்த ஆரூடத்தைத் தமிழ்ப் பாக்களாக இயற்றியுள்ளார்.

" திருவளரு மெய்ஞ்ஞான நவகோடி
சித்தர்களே தெளிந்த ஞானப்
பெருமைமிகும் வான்மீக ராருடத்திற்
குறைந்தனையே பொருத்தமாக
கருணையுறு மும தருளால் எழுதுகின்றேன்
கவிராச கந்த சாமி
குருவாக வந்தமர்ந்து சோதிடத்தின்
விபரமென்முன் கூறு வீரே."

என்பது சித்தர்கள் வணக்கப் பாட்டு.

## ௩௪௨. * கவிராச பண்டிதர்

(19—நூ.)

இவர் ~~கொங்கு நாட்டில்~~ அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் சங்கரநாராயண ஐயர். அவரும் சிறந்த புலமையுடையவர். நூல்களுஞ் சில எழுதியுள்ளார். இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் சிற்றம்பலம். இவர் செய்யுள் பாடுவதில் சீர்த்தி யோங்கிச் சிறந்து விளங்கியமையால் இவருடைய இடுகுறிப் பெயர் மறைந்து காரணப் பெயரே நிலைபெற்றது. இவர் திருச்செங்கோட்டுத் தலபுராணத்தை நாற்பத்தைந்து சருக்கங்களும் ஆயிரத்து இருநூற்று இருபத்து மூன்று செய்யுட்களும் அமையப் பாடியிருக்கிறார்.

" இங்கிது காதைகேட் டினிது போற்றினோர்
அங்கவர்க் கருளுவோர் அறிவிற் கற்றுளோர்
பொங்குபா வங்கள்போய்ப் புகழுஞ் செல்வமும்
தங்கிய சங்கரன் சரணஞ் சேர்வரே."

என்பது நூலின் இறுதிப்பாட்டு. ஆக்கியோன் பெயர் முதலிய வரலாற்றுச் செய்திகளைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

" உலவுபோதாயின சூத்திரமுடையவ னியற்காசித்
தலபு ராணிகன் சங்கர நாரணன் தரவருகவிமேகம்
குலவு காசிப கோத்திரந் தனில்வருங் குருபதமுடிக்கோமான்
நிலவு கார்கவி ராசபண்டிதன் தமிழ்நெறி முறையுரைசெய்தான்."

---

* பாண்டிவள நாட்டில் ஒரு கவிராச பண்டிதர் இருந்தார். அவர் வீரைக் கவிராச பண்டிதர் என்று கூறப்பெறுகிறார்.

## ௩சரு. கவிராசநாயகம் பிள்ளை

(20—நூ.)

இவர் திருச்சாய்க்காடு என்னும் சாயாவன புராணத்தைத் தமிழில் இயற்றியுள்ளார். மேற்படி புராணம் பத்துச் சருக்கங்களையும் சகூஉ செய்யுட்களையுங் கொண்டது. பெருந்தோட்டம் தெ. சி. துரைசாமிப் பிள்ளை என்பவர் இதனை 1909 ஆம் ஆண்டில் அச்சிற்பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இராமலிங்கராயர் என்பவர் இந் நூலை இயற்றச் செய்தார் என்பது,

"புண்ணியமோர் வடிவானோன் துண்டீர
வளநாடன் புகலுங் கீர்த்தி
நண்ணுமெழிற் பாகையினன் உலகாளும்
இராமலிங்க ராயன் மிக்க
அண்ணல்சா யாவனத்தர் தலமகிமை
தமிழ்க்கவியால் அறையென் றோத
எண்ணருஞ்சீர்க் காரூரன் கவிராச
நாயகன்தான் இயம்பி னானால்."

என்னுஞ் சிறப்புப்பாயிரப் பாடலாற் பெறப்படுகிறது.

"செந்தமிழ்நூற் புலவர்பலர் யாப்புத் தோறும்
சிறப்பின்மை தனைநாடித் தியங்கா வண்ணம்
முந்தஉரைத் திடுமெழுத்தும் அசையுஞ் சீரும்
முதன்மைபெறு பந்தமடி தொடையின் குற்றம்
வந்தவகை யுளிசெய்யல் எதுகை மோனை
வழுக்கள்பொருள் நலமிலதாய் வைத்தல் தானும்
இந்தவகைக் குற்றமெலாம் எளிதிற் காண
இலக்கியமா வதற்கிதனை இயம்பி னேனே."

என்பது நூலின் அவையடக்கப் பாட்டு. இந் நூலுக்குச் சிதம்பரம் அய்யாக்கண்ணு ஓதுவார், மகாலிங்கக் கவிராசர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௩சச. கவிராச நெல்லையப்ப பிள்ளை - (மு)

~~(1860)~~

1845 ஆம் ஆண்டில் பிறந்தவர்.

தென்பாண்டி நாட்டில் திக்கெலாம் புகழுந் திருநெல்வேலியில் சிறந்த புலவராக விளங்கியிருந்த முத்துக்குமார கவிராசர் என்பவருடைய புதல்வர்களில் இளையவர் இவர். மாணவர்

பலருக்குக் கல்வி பயிற்றல் நூல் இயற்றல் முதலிய பணிகளில் ஈடுபட்டிருந்தார்.

" சூதெனும்பொற் கொங்கையெழிற் றோகையே சென்றுமிகு
சாதெனும்பொன் னுச்சாமித் தாசரென் றன்—மீதுவிசு
வாசத்தாரைக் கண்டென் மையலெலாஞ் சொல்லியவர்
வாசத்தார் வாங்கியிங்கு வா."

என்பது. இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவர் மீது இயற்றிய பாடல்களில் ஒன்று. இவர் சந்திவிநாயகர் இரட்டை மணிமாலை, திருவுருமாமலை முருகக் கடவுள் உயிர்வருக்க மாலை, சந்தத் தமிழ்ப்பத்து, திருப்புடை மருதூர் மும்மணிக் கோவை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் 1916ஆம் ஆண்டு மறைந்தார்.

## ௩௪௫. கவிராசபண்டாரத்தையா

இவர் ஏறக்குறைய எழுபத்தைந்தாண்டுகட்கு முன்பு செங்கோட்டை என்னும் ஊரிற் பிறந்து வளர்ந்து தமிழ் கற்றுச் சிறந்து விளங்கினர். ஐயா என்ற சிறப்பு அடைமொழி இவர் வேளாளர்க்குரிய குருக்களாயிருந்து வந்தவர் என்பதைக் குறிக்கும். இவர் முருகக் கடவுளிடத்திலே பேரன்புடையவர். திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். "மங்காத செந்நெல் வளர் செங்கோட்டை யில்உதித்து, நற்கலை பயின்றுயர் மகாவித்துவான், இயலிசை நற்கவி இராச பண்டாரத்தையா" என்று இவரைக் குறித்துச் சண்முகதாசர் என்பவர் பாடியிருக்கிறார்.

" அப்பன் வருக எனை ஆண்ட
ஐயன்வருக அமர் உலகுக்
கதிபன் வருக கயிலாயத்
தரச குமரன் வருக எங்கள்
வைப்பன் வருக குழல்மொழித்தாய்
மைந்தன் வருக கலவமயில்
மகிழ்வோ டேறித் தேவர்தொழ
வருவான் வருக அறநெறிக்குத்
துப்பன் வருக மெய்ஞ்ஞானத்
துறைவன் வருக புலப்பு குதும்
தொடியன் வருக மணிச் சுடிகைத்
தோளான் வருக துலங்குமனக்

கொப்பன் வருக மாணிக்கக்
    குழையன் வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படையுடைய
    கோமான் வருக வருகவே.''

என்பது இவர் இயற்றிய திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு.

## ௱சசு. கவிராச முத்துக்குமாரசாமியா பிள்ளை

திருநெல்வேலியில் வாழ்ந்திருந்தவர். நெல்லையப்பர் கோயில் வழிவழிப் புலவராக விளங்கியவர். ஆழ்வாரப்ப பிள்ளை என்பவர் இயற்றிய கிரகாச்சிரம தருமம் என்னும் நூலுக்கு இவர்,

'' இவ்வுலகில் குலமகட்குத் தெய்வமெழிற்
    கொழுநனென இசைத்து முன்னோர்
செவ்வியதாம் இல்லறமற் றறமனைத்தும்
    நன்றலதாய்ச் செப்ப லாலே
திவ்வியமா கல்லூரான் முருகலிங்க
    முனிசெய்தவம் சிறக்க வந்தோன்
எவ்வுலகும் புகழ்முருக தாசன் இல்
    லறவியலை இயம்பி னனால்.''

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௱சஎ. கவிராசர்

இலங்கையில் உள்ள திரிகோணமலை என்னும் ஊரில் இருந்தவர். பண்டிதராசர் என்பவர் காலத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் கோணேசர் கல்வெட்டென வழங்கும் கோணேசர் சாசனத்தைப் பாட்டாலும் உரையாலும் இயற்றியிருக்கிறார்.

'' திருந்துகலி பிறந்தைஞ்ஞாற் றொருபதுடன்
    இரண்டாண்டு சென்ற பின்னர்
புரிந்திடப மாதமதி வீரைந்தாந்
    தேதிதிங்கள் புணர்ந்த நாளில்
தெரிந்தபுகழ் ராயமாஞ் சினகரமுங்
    கோபுரமும் தேரூர் வீதி
பரிந்துரந்த மணிமதிலும் பாவநா
    சச்சுனையும் பகுத்தான் மேலோன்.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௨௪௮. கவி வீரராகவ முதலியார்
(1883)

இவர் பொற்களந்தைப்பதி என்னும் ஊரில் இருந்தவர். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர். இவர் திருக்கச்சிநகர் பெருந்தேவித் தாயார் பதிகம், திருக்கச்சிநகர் வரதராசப் பெருமாள் பஞ்சரத்தினங்கள், திருவேங்கடத்தான் பதிகம், திருவேங்கடத்தான் பஞ்சரத்தினம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

"மலைபெற்ற மாதுனைப் போல்விளைன மொழிவர்புன்
மதிபெற்ற மனிதர் அவள்தான்
மற்றுனைப் போல்வீறு பெற்றமண வாளனை
வளம்பெறு பிறந்த கத்தில்
நிலைபெற்று வாழவைத் தனளோ தினந்தினமும்
நிறைபெற்ற அவனை ரைப்பெண்
நீமுழுப் பெண்ணிரந் துண்டசிவன் மனைவியவள்
நிகிலஉல கும்பு ரக்கும்
தலைபெற்ற சோதிமணி மகுடபுரு டோத்தமன்
தன்மனைவி நீயா தலால்
சந்திரவிம் பாரநீ அந்தவுமை அன்னையெத்
தன்மையொப் பாள்சொல் லுவாய்
அலைபெற்ற வேகவதி நதிபெற்ற கச்சியில்
அகம்பெற்ற செல்வ மயிலே
அடியவர்க் காவியே அதுலசஞ் சீவியே
அழகிய பெருந்தே வியே,"

என்பது திருக்கச்சிநகர் பெருந்தேவித் தாயார் பதிகம்.

## ௨௪௯. கழைக்கூத்தி

இவளுடைய இடுகுறிப் பெயர் தெரியவில்லை. காரணப் பெயரே நிலைபெற்று விளங்குகிறது. இவள் கழையின் மீது நின்று பலவகையான வேடிக்கைகளைப் புரியப் பழகியிருந்ததோடு தமிழ் மொழியையும் நன்கு பயின்று சிறந்த புலமையடைந்து செய்யுள் பாடுந் திறனோடு திகழ்ந்து நின்றாள் ஒருநாள் இவள் கழையின் மேல் நின்று பலவகையான கூத்துக்களை இயற்றிக் கொண்டிருக்குங்கால் வீட்டு விலக்காகினள். அதனை வெளிப் படையாகச் சொல்ல நாணி,

" கல்லுருகுங் காலங் கழுக பியு மக்காலம்
வையக மெல்லா மலர்த்தபூ வண்டறியும்
ஓங்க லறியும் உயர்கடலி னுள்ளாழம்
பாங்கனுக்குப் பாங்கன் பயனறிவான் மன்ற
அறிவார் அறிவார் அறியார் அறியார்
ஒருகாம் பிருதலையும் பூ "

என்று பாடிக்கொண்டே இறங்கினுள். அவையிலிருந்த அறிஞர்கள் உண்மையை உணர்ந்து கொண்டனர்.

## ௫௫೦. கள்ளப்பிரான் கவிராசர்

## (19—நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியைச் சேர்ந்த வண்ணூர் பேட்டையில் பெரும் புலவராக விளங்கியிருந்த திருப்பாற்கடல் நாதன் கவிராசர் என்பவருக்கு மகனுகத் தோன்றிய இவர் தாமும் இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்று சிறந்த கவிவாணராகத் திகழ்ந்தார். திருநெல்வேலியிற் புகழ் பெற்று விளங்கிய சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகள், அம்பலவாணன் கவிராசர், புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, க. நாராயண பிள்ளை முதலியோர் இவர் காலத்தில் விளங்கியிருந்த புலவர்களாவர். நாராயண பிள்ளை இயற்றிய இலக்கணப் பரிட்சை என்னும் நூலுக்கு இவர்,

" உலகிருள் நீக்கும் ஒள்ளிய கதிர்போல்
பலவுயிர் மனவிருள் இரிந்துளந் தெளிய
வினைக்கட் டறுத்து மெய்ப்பதம் அடையச்
சாற்றிய சமய நூல் தலைப்படு காவியம்
வேதசித் தாந்த மெய்ந் நூல் விளங்க
இலக்கண நூலே ஏதுவென் றெண்ணி
முன்னோர் பின்னோர் மொழிவிதிக் கிணங்க
பலசொற் பகுப்பும் பகுபத முடிபும்
அவ்வகைக் குதாரண வாக்கியம் அமைத்ததில்
வேற்றுமை அல்வழித் தழுவுதொடர் தழாத் தொடர்
இற்றிதென் பண்பெனச் சிக்கறுத் தொருபெயர்
இலக்கணப் பரிட்சையென் றிடுபெய ரமைத்து
வைணவ துங்கன் மாக்கள் சிகாமணி
நெல்லையம் பதிவாழ் நிபுணகள் வப்பிரான்
சன்றநா ராயண கவிஞன்
சான்றோர் கேள்வியால் சாற்றினன் உணர்ந்தே."

என்னும் நேரிசை யாசிரியப்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறார். ௩௫௩-ல் வருபவரும் இவரே போலும்.

## ௩௫௧. கள்ளப்பிரான் கவிராசர்

இவர், 'வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்' என்னும் பெயரோடு பிள்ளைத்தமிழ் ஒன்று இயற்றியிருப்பதாகத் தெரிகிறது அப் பிள்ளைத்தமிழின் இறுதிப்பாடல்,

"திசைமுகன் வணங்குதென் வைகுந்த நாதனிரு
சேவடிப் போது வாழி
செங்கமல மாதுபுவி மாதுநீ ளாதேவி
சேனேசன் இவர்கள் வாழி
இசைமருவு தமிழ்வேத நவிலுநா வீறன்முதல்
ஈரைந்து பேர்கள் வாழி
எங்கள்குடி வழியடிமை கொண்டுமகிழ் சாந்துரன்
இணைமலர்த் தாள்கள் வாழி
அசைவிலா நற்பொருளை வெளியிட்ட பூதூரன்
அரியபொற் பதங்கள் வாழி
அரிதான முத்திக்கு வித்தான நஞ்சியர்
அழகுபெறு கழல்கள் வாழி
வசையற்ற நோன்புபுரி மாதவர்கள் பூசுரர்கள்
மன்னவர் மனுக்கள் வாழி
மன்றுமணி வண்ணனிசை பன்னுபிள் ளைத்தமிழ்
வழங்குசெந் தமிழ்வா ழியே"

என்பதாகும்.

## ௩௫௨. கள்ளப்பிரான் பிள்ளை - வை

(20—நூ.)

செங்கல்பட்டுத் தாசில்தாராக இருந்த இவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்து உறுப்பினராகவும் இருந்தார். நன்கு கல்வி கற்றுப் புலமை பெற்றவராகலின் சீரிய செய்யுட்களை இயற்றும் பாவலராகவுந் திகழ்ந்து நின்றார். வேங்கடத்துறைவான் கவிராயர் செய்த மாறன் கோவையையும் பதிப்பித்தவரையும் பாராட்டி இவர் சிறப்புப்பாயிரஞ் செய்துள்ளார்.

"திருமகிழ் மார்பன் கிதைவறு செல்வன் சிறுமனிதர்
கருமகிழ் யாக்கைக் கடல்கடந் துய்யக் கழறலும்யா
வருமகிழ்ந் தேத்தி வழிபடச் சோலை வளர்குருகூர்
வருமகிழ் மாறன் மணமலர்த் தாண்மனம் வைத்தவனே."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௩௫௩. கறுப்பண்ண தேசிகர்

இவர் ஏறக்குறைய நூற்றைம்பதாண்டுகட்கு முன்னர், பழனிப்பிரிவு பார்ப்பநகர் என்னும் ஊரில் குழந்தைவேலு என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவர் தில்லையந்தாதி எனப் பெயரிய வெண்பாவந்தாதியைப் பாடியுள்ளார். இந் நூல் நூறு வெண்பாக்களைக் கொண்டது. பொதுவான வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. திருமலைராயன் பட்டினம் வீரப்ப பிள்ளை என்பவர் இந் நூலை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். நூலாசிரியர் வரலாறும் அச்சிட்டவர் வரலாறும் பின்வருமாறு இரண்டு பாடல்களில் அடங்கியுள்ளன.

### நூலாசிரியர் வரலாறு

"எண்டிசை யும்புக ழும்பழ னிபுரிக் கேயருகில்
கண்டிடும் பாப்ப நகர்மேவித் தொண்டர்க்கடியவனும்
தண்டமி ழூற்கறுப் பண்ணன் சிவனரன் தாள்பணிந்து
மண்டல மெச்சிய தில்லையந் தாதி வழுத்தினனே."

### அச்சிட்டவர் வரலாறு

"பலதருமம் இயற்றுதிரு மலைரா சன்றன்
பட்டணத்தில் மேவியசற் சனவன் னேமன்
நலமுறுவே ளாண்குலத்தில் அவத ரித்த
நளின அப்பாப் பிள்ளைதவப் புத்ரனான
தலமகிழ்வீ ரப்பதயா பரனு முத்தி
சார்ந்த தில்லை அந்தாதி தன்னை அன்பாய்
உலகறியச் சருவ சித்து வருடமுள்ளுத்
துருக்கமுடன் அச்சிட்டுப் புகழ்பெற் றானே."

### அந்தாதியில் ஒருபாட்டு

"நஞ்சுகந்து கொண்டதில்லை நாதா பெருமானே
வஞ்சமனக் கோதையர்கள் மையலிலே—துஞ்சும்
தீவினையேன் நின்பாதம் சேவித்துச் சம்புவெனக்
கூவினேன் தொண்டரொடு கூட்டு."

## ஙருச. கனகசபாபதியா பிள்ளை - ஆ
(19—நூ.)

பாண்டிவள நாட்டிலே தென்காசியில் இருந்தவர். தந்தையார் பெயர் ஆண்டியா பிள்ளை. இவர் புலமை பெற்றபின் திருநெல்வேலியில் உள்ள இந்துக் கலாசாலையில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்து பணியாற்றினார். சாமிநாத பிள்ளை என்பவர் இயற்றிய விநாயகபுராணச் சுருக்கம் (சங்கிரகம்) என்னும் நூலுக்கு எட்டுப் பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

**"ஆரமா தரின்மிகுமிற் றிணைவறு**
**உள்ளான்நல் அறிஞர் நேயன்**
**வாரமா எவ்வுயிர்க்கும் தயைபுரிதெஞ்**
**சினன்மேழி வண்ப தாகைத்**
**தீரமால் வேள்விநிகர் வேளாண்மைச்**
**செந்தமிழ்ச்சீர் சிறப்ப வோங்கும்**
**பாரமா பெரியனெனப் புகழ்சாமி**
**நாதனெனும் பாவல் லோனே."**

என்பது அவற்றுள் இறுதிப் பாடலாகும்.

## ஙருரு. கனகசபாபதி முதலியார் - தை. ஆ.
(20—நூ.)

சென்னைமா நகரினர். திருமுருகாற்றுப்படை உரை முதலிய நூல்கள் எழுதியுள்ளார் இவரைக் குறித்துத் திரு. வி. க. அவர்கள் தமது மதிப்புரையில்; "நண்பர் தை. ஆ கனகசபாபதி முதலியார் திருமுருகாற்றுப்படைக்கு ஓர் இனிய உரை கண்டுள்ளார். திரு. முதலியார் ஓவிய வழியில் வந்தவர்; பிறவியில் ஓவிய இயல்பு வாய்ந்தவர்; ஓவியம் நன்முறையில் பயின்றவர்; பலதிற ஓவியம் அமைத்துப் பண்பட்டவர். இத்தகைய ஒருவரால் காணப் பெற்ற உரையில் நக்கீரனார் ஓவியம் புலனாதல் இயல்பன்றோ?... திரு. கனகசபாபதி முதலியார் ஓவியப் புலமையுடன் காவியப் புலமையும் பெற்றவர். அவர் தமிழ் ஆரியம் ஆங்கிலம் பயின்று தெளிவடைந்தவர்; பழந்தமிழ் அமிழ்தை இனிது உண்டவர் அவர் தம் மும்மொழிப் புலமை தற்காலக் கண்கொண்டு நக்கீரனாரை நோக்குதற்குக் கருவியாக நின்று

துணைபுரிந்துள்ளதை இப் பேருரைக்கண் காணலாம்" என்று எழுதுகிறார். இதனால் இவருடைய தமிழறிவு புலனாம்

## ௩ ௫ ௬. கனகசபை ஐயர்
(1893)

இவர் திருப்பனந்தாள் காசிமடப் புலவராக இருந்தவர். இவர் சாமிநாத சுவாமிகள் என்னும் தம்பிரான்மீது கொம்மிப் பாட்டு, பவனிச் சிறப்பு, கொலுச் சிறப்பு தனிப்பாடல்கள் முதலியவை இயற்றியுள்ளார். காசிமடத்து முகப்புத் தூணிலுள்ள குரங்கைக் குறித்து இவர் பாடிய பாட்டு,

"தவராசர் போற்றும் பனசை மடாலயஞ் சார்ந்துவரு
கவிராச ரேநல் விலக்கண மூழ்மூறை கற்றிவிரேல்
கவர்வாசல் தாண்டிவிர் தாண்டிடினும்மைத் தொலைப்பனெனக்
கவிராசன தானும் முகப்பிற் கொடுங்கையைக் காட்டினனே."

என்பது. இவர் பாடிய வேடிக்கையான பாடல்கள் இன்னும் பல. இவரும் பின்னவரும் ஒருவர் போலும்.

## ௩ ௫ ௭. கனகசபை ஐயர் - பு. தெ.
(20—நூ.)

இவர் வீர சைவ மரபிற்றோன்றியவர். ஆனத்தூர் வீர சைவ மடத்தில் இருந்தவர். பழந்தமிழ் நூல்களைக் கற்றுப் புலமை பெற்றிருந்தார். அந்நாளில் பண்ணுருட்டியில் இருந்த அப்பாவையர் என்பவர் திருவதிகைப் புராணம் பாடி அரங்கேற்றஞ் செய்தபொழுது சிவசிதம்பரப் பிள்ளை என்பவர் அரங்கேற்ற ஏற்பாடுகளையெல்லாஞ் சிறப்பாகச் செய்தார். அப்பொழுது இவர் அவர்மீது பல பாடல்கள் இயற்றினர்.

"நாற்றிசையும் மேனுடும் புகழ்பரவும்
அரியநடு நாட்டின் கண்ணே
காற்றுலவு பொதும்பரெலாம் குயில்கூவு
பொழிலணித்தாய்க் கலந்து வாழும்
சாற்றருஞ்சீர்த் தொண்டர்களே மிகவிரவிச்
சார்ந்தோங்கித் தயங்குந் தூய
போற்றுறும்வா னவர்விரவும் அதிகையெனும்
நகர்குடபால் பொருந்தி யோங்கும்."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௩ருஉ. கனகசபைத் தம்பிரான்

(19—நூ.)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடையில் இருந்தவர். திருவொற்றியூர் என வழங்கும் ஆதிபுரியில் எழுந்தருளிய வடிவுடையம்மை மீது இவர் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

> "சந்தமணி வச்சிரப் பலகைமுழு தொளிநிலவு
> தவழ்கிரணம் உமிழ்தருநலால்
> நவளவமிழ் தொழுகுநிறை மதியமென ஒருபால்
> தகைந்துள சகோரங்களும்
> கொந்தொளி கொழித்திருட் படலங் கிழிக்கும்
> குருப்பதும ராகத்தினால்
> கோட்டுமப் பலகையினை இரவியென ஒருபால்
> குழீஇயசக் கரவாகமும்
> வந்தடி வணங்கியிரு சுடரகல ஆடுமவ்
> வாட்டந் தவிர்த்தருளென
> மங்கைநின் பால்வரம் கொளமிடைவ தொப்பமணி
> மாடமெதிர் கண்டோர் விழிப்
> புந்திகவர் எழின்மருவும் ஒற்றிவடி வம்மைநீ
> பொன்னூச லாடி யருளே
> பூலோக கயிலாயர் பாலேக மானபெண்
> பொன்னூச லாடி யருளே."

என்பது பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு.

## ௩ருக. கனகசபை நாயகர் - பு

(1894)

தொண்டைவள நாட்டிலே காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்தவர். புலமை பெற்ற இவர் காஞ்சிபுரம் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். கல்பாக்கம் குமாரசாமி தேசிகர் என்பவர் இயற்றிய ஏகாம்பரநாதர் யமகக் கலித்துறை யந்தாதிக்கு இவர் பதவுரை யெழுதியிருப்பதோடு, "சிவநாமப் பஞ்சரத்நக் கீர்த்தனம்" என்னும் இசைப் பாடல் நூலும் திருவொற்றியூர்ப் பதிற்றுப்பத் தந்தாதியும் இயற்றியுள்ளார்.

> "வாராய் மடநெஞ்சே மாநிலத்தில் வந்துழல்வ
> தோராய் விளையொழிதற் குன்னியே—நேராகச்

*செய்தி வினையொழிக்கும் சிற்பரனார் பொற்பதத்தை*
*மைதீர் மனத்துடனே வாழ்த்து.''*

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௩௬௦. கனகசபைப் பிள்ளை - கூ

## (20—நூ.)

இவர் தென்னுற்காடு மாவட்டத்தில் கூடலூரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர். ஆங்கிலக் கல்வியையுந் தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றுச் சென்னைமா நகரை அடைந்து அரசாங்கக் கணக்கு நிலையத்தில் அலுவல்பார்த்துக் கொண்டிருந்தார். இவர் குல முறைகளையுந் தன்மைகளையும் விளக்கி வருண சிந்தாமணி என்னும் நூலைத் தக்க மேற்கோள்களோடு இயற்றியுள்ளார். அந் நூல் மு ரா அருணசலக் கவிராயரால் பரிசோதித்து வெளியிடப்பட்டிருக்கிறது. நூலைப் புகழ்ந்து பாராட்டித் திருநெல்வேலி நெல்லையப்பன் கவிராசர், வெள்ளகால் - ப. சுப்பிரமணிய முதலியார், சேற்றூர், இராமசாமிக் கவிராயர், மு. ரா கந்தசாமிக் கவிராயர், அட்டாவதானம் சபாபதி முதலியார் மாணவர் தண்டலம் பாலசுந்தர முதலியார், அட்டாவதானம் பூவை - கலியாண சுந்தர முதலியார், - திருமயிலை செந்தில்வேலு முதலியார், வி சுந்தர முதலியார், அ. திருமலைக்கொழுந்துப் பிள்ளை, ஈக்காடு-இரத்தினவேலு முதலியார், விருதை - சிவஞான சுவாமிகள், வேலுச்சாமிப் பிள்ளை, தஞ்சை - வ. சா. சோமசுந்தரம் பிள்ளை, குன்றத்தூர் - மதுரகவி - மாணிக்க முதலியார், முத்தூர் - அ. சங்கரலிங்கம் பிள்ளை, விருத்தாசலம் கலியாணசுந்தரம் பிள்ளை, வீரபத்திர முதலியார், சோழவந்தான் அரசப்ப பிள்ளை, திருமயிலை-தேவாரம் முத்துச்சாமி முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்

*''மன்னுசீர் உலகில் மானிடப் பிறப்பில்*
*வருணம் நான்கெனவ குத்தனர் முன்னம்*
*ஆரியர் திராவிடர் அம்முறை முழுதும்*
*யாவ ருளத்தும் எளி தினில் விளங்கக்*
*கூட லூர்ப் பதியிற் குண நிதி வாய்ந்த*
*கனக சபையெனக் கருதும் பெயரோன்*
*வருண சிந்தா மணியெனும் ஒருநூல்*

வசன நடையில் மாண்புற எழுதி
அருளினன் அதுவுமோர் அரிய நூலே.''

என்பது எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை இயற்றிய அகவற் பாட்டு.

## ௩௯௧. கன்னியப்ப பிள்ளை - ச
(19—நூ.)

இவர் காஞ்சிபுரத்தினர். தந்தையார் பெயர் சகநாதம் பிள்ளை. இவருடைய மரபு ஏனாதி நாயனாருடைய மரபு என்பர். புலமைத் திறம்படைத்த இவர் இனிமையான செய்யுட்களைப் பாடினார். அதனால் இவருடைய பெயர் மதுரகவி என்று வழங்கலாயிற்று. இவர் சிலேடை வெண்பாமாலை என்னும் நூலை இயற்றியுள்ளார். அந் நூலுக்குச் சென்னை இராயபுரம் வே. கி. நாராயணசசாமிப் பிள்ளை என்பவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

'' நிலமிசை நிலவச் செந்தமி ழாய்ந்து
பொலன்பொலி சிலேடை வெண்பா மாலை
நலம்பெற நற்கொடை நச்சினி தியற்றி
உலப்பி லெழுத்தால் உவந்தச் சியற்றினன்
பூங்குயில் பிரசப் பொழிற்றண் பணைசூழ்
காஞ்சி புரத்தோன் கரிய மாலடி
துதிக்குந் துங்கன் தூய காசிபர்
மதிக்குங் கோத்திரம் வருங்கலை வல்லோன்
அருள்நீ டரசர் அகமகிழ் கொள்ளும்
கருணீ கரின்குலக் கதிரவன் என்னப்
பகருஞ் சகநாதம் பிள்ளை பண்ணுள்
இகமீ தியற்றுந் தவமுருக் கொண்டு
வரும்புக ழேந்தி மாமது ரக்கவி
இரும்புகழ்க் கன்னி யப்ப பிள்ளையே ''

என்பது சிறப்புப் பாயிரத்தின் ஒரு பகுதி.

## ௩௯௨. கன்ருப்பூர்க் கவிராயர்
(19—நூ.)

இவர் எவ்வூரினர் என்பது விளங்கவில்லை. கன்ருப்பூர்க் கவிராயர் என்று பெயர் நூல் முகப்பில் காணப்படுகிறது.

கன்ருப்பூர் என்னும் ஊரினர் போலும். ஊற்றுமலை சமத்தானம் பெருநிலக்கிழார் இருதயாலய மருதப்பத் தேவரின் முன்னோர்களில் ஒரு மருதப்பத் தேவரின்மீது இவர் திருவருட் பாமாலையும், நவநீத கிருட்டிணத் தேவர்மீது வசைவிடு தூதும் இயற்றியுள்ளார். இந் நூல்கள் 1884 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டுள்ளன.

> "மணிகொண்ட பொன்மதிலும் மாளிகையுஞ் சூழக்
> கணிகொண்ட ராசைக் கனியே—பணிகொண்ட
> புற்றிடமும் வெள்ளிப் பொருப்பிடமும் பொய்நீர்ந்த
> மற்றிடமும் வாழும் மறைமுதலே—சொற்றெரிந்த
> பாவுடையான் ஏவும் பழம்பொருளை பைங்கிளிநேர்
> ஆவுடையா ளைப்புணரும் ஆதியே—காவிடத்தில்
> பொன்னு கமுநெடிய புன்னு கமுமிரண்டு
> பன்னு கமும்படைத்த பானுவே—எந்நாளும்."

என்பன திருவருட்பா மாலையில் சில கண்ணிகள்.

## ௫௬௫. காக்கையர்

இவர் புசுண்டமகாரிஷி எனவும் பெயர் பெறுவார். இவர் காக்கையர் சிற்பம் புசுண்டர் சல்லியம் என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார்.

> "நன்றுகிளி செம்போத்து வேங்கை கொக்கு
> நரியோனுன் மயில்காகம் புழுகு பூனை
> துன்றுபசு முயனரையான் எருமை கோழி
> துனிகாளை வலமேக நலமா மிக்க
> மன்றுகலை மாண்டேடைக் கருடன் பூனை
> வல்லநாய் உடும்பாந்தை கழுகு கோட்டான்
> பொன்ருத கருவாலி குரங்கு கிரி
> புகல்காடை மூஞ்சூறு இடத்தில் நன்றே."

என்பது இவர் இயற்றிய சகுனபலனில் ஒருபாட்டு.

## ௫௬௪. காங்கேயர்

இவர் தொண்டைவளநாட்டில் செங்குந்தர் மரபில் தோன்றியவர். இவருடைய காலம் பதினேழாம் நூற்றாண்டாக இருக்கலாம் என்பது சிலருடைய முடிபு. இவர் உரிச்சொல் நிகண்டு என்னும் நிகண்டை வெண்பாவால் பாடியிருக்கிறார்.

இவர் வலை வீசுபுராணம் என்னும் புராணம் ஒன்றையும் பாடியிருக்கிறார். சிவபெருமான் உமாதேவிக்கு அருளுரை வழங்கும்போது முருகக்கடவுள் வண்டுருக்கொண்டு உமையின் கூந்தலில் மறைந்திருந்து கேட்டார். அதனை அறிந்த சிவபெருமான் அவரை மகரமீனாகுமாறு சபித்தார். உமை, சிவத்திலும் சத்தியே பெரிதெனச் சொற்போரிட்டாள். சிவபெருமான் அவளை வலைப்பெண்ணாகுமாறு சபித்தார். அவளும் அவ்வாறே பிறந்தாள். அறுமுகனாகிய மகரமீன் கடலைக் கலக்கித்திரிந்தது. இறைவியை மகளாகப் பெற்ற வலைஞர் தலைவன் மகரமீனைப் பிடிப்பவர்கட்குத் தன்மகளைக் கொடுப்பதாக அறிவித்தான். சிவபெருமான் வலைஞனாகச் சென்று மகரமீனைப் பிடித்து உமாதேவியைத் திருமணஞ்செய்தார் என்னுஞ் செய்தி இப்புராணத்தில் கூறப்பட்டுள்ளது. திருவிளையாடற் புராணத்துள்ள இக்கதையை நன்கு விரித்துப் புராணமாகப் பாடிய இவர் இதனை இனிமை ததும்பச் செய்துள்ளார்.

> "கலைவீசு சிறுபிறையுங் கடுக்கையுநுண் டுளையெயிற்றுக்
> கொலைவீசும் விடவரவுங் கொக்கிறகும் ஒளிவீச
> அலைவீசும் புனற்சடையார் அலைகடலிற் படகேறி
> வலைவீசு திருக்கதையை மண்மீது வகுத்துரைப்பாம்."

என்பது புராணத் தொடக்கப் பாடல்.

## ௩௬௫. காசிக்கலியன் கவிராயர்

இவர் வரதுங்கராமபாண்டியனுடைய அவைக்களப் புலவர்களுக்குத் தலைவராக இருந்தவர். இவர் வரதுங்கராமன்மேல், நாண்மங்கலம், குடைமங்கலம், வாண்மங்கலம் என்னும் புறத்திணைக் குரிய பாடல்களைப் பாடியுள்ளார். அவைகளுள்,

> "சீர்கொண்ட செங்கமலை வாழத் திரையாடைப்
> பார்கொண்ட வாள்வீர பாண்டியனென்—றேர்கொண்ட
> கானுலா மாலைக் கனகமகு டம்புனைந்தான்
> மானவே லானபிரா மன்."

என்பது நாண்மங்கலம்.

> "சேணுலவு வெண்டிங்கட் செல்வனெனத் தண்ணென்று
> நீணிலமோ ரேழும் நிழற்றுமே—பேணிவந்து

பூவேந்த ரேத்தும் புகழ்வீர பாண்டியனங்
கோவேந்தன் கொற்றக் குடை.''

என்பது குடைமங்கலம்.

'' பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்கும்
கொற்ற முயர்க்குமறங் கூறுமே—விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தாரேந்து வாள்.''

என்பது வாண்மங்கலம்.

'' கற்றுணர்ந்தோன் காசிக் கலியன் கவிராயன்
மற்றடந்தோள் வேல்வீர மாறனுக்குச்—சொற்புனைந்தான்
நாண்மங் கலமும் நவிற்றுகுடை மங்கலமும்
வாண்மங் கலமும் வகுத்து.''

என்பது மேற்கூறிய மூன்று மங்கலச் செய்யுட்களையும் காசிக் கலியன் கவிராயர் செய்தார் என்பதை வலியுறுத்துகின்றது. இவருடைய காலம் பதினாறும் நூற்றாண்டு என்று எண்ணுகின்றனர். மேற்கண்ட செய்யுட்கள் தென்காசிக் கோயிற் சுவர்களில் எழுதப் பெற்றுள்ளன. இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரமும் பிறசெய்திகளும் புலனாகவில்லை.

## ௯௬. காசிம் புலவர்

இவர் முகமதிய சமயத்தினர். காயற்பட்டினம் என்னும் ஊரிலே பிறந்தவர். தமிழ்க் கல்வியை நன்கு பயிலவேண்டும் என்னும் எண்ணம் இவருக்குண்டாகியது. அந்நாளில் திருவடிக் கவிராயர் என்பவர் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். காசிம் புலவர் இளம்பருவத்திலேயே திருவடிக் கவிராயரை அடைந்து தமக்குக் கல்வி கற்பிக்குமாறு வேண்டிக்கொண்டார் திருவடிக் கவிராயரும் இவருடைய வேண்டுகோளுக்கிணங்கிக் கல்வியைக் கற்பித்தார்.

திருவடிக் கவிராயர் அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ்ப் பாடல்களிடத்திலே மிகுந்த விருப்பங்கொண்டவர். அடிக்கடி இவருக்குத் திருப்புகழ்ப் பாடல்களைப் படித்துக் காட்டியதோடு, ''இவ்வாறு யாராற் பாடமுடியும்?'' என்று சொல்லுவார். ஒருநாள் இவ்வாறு திருவடிக் கவிராயர் உரைத்தபோது

இவருக்குச் சிறிது சினமுண்டாயிற்று. "இத்தகைய பாடல்களை என்னாற் பாடமுடியும்" என்று தம்முடைய ஆசிரியரிடங் கூறினார். இவர் கூறியதைக் கேட்ட திருவடிக் கவிராயர், "எங்கே பாடு பார்க்கலாம்," என்று கூறினார். காசிம் புலவர் கல்விகற்பதை அத்தோடு நிறுத்திக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்.

வீட்டை யடைந்து அருணகிரிநாதருடைய திருப்புகழ்ப் பாடல்களைப்போற் சந்தப் பாடல்களைப் பாடிப்பார்த்தார். இவர் நினைத்தபடி அவ்வளவு எளிதாகப் பாடமுடியவில்லை. தம்முடைய ஆண்டவனை நோக்கிப் பலவாறு வேண்டிக்கொண்டார். இதன் பிறகு சந்தப் பாடல்களைப் பாடத்தக்க ஆற்றல் உண்டாயிற்று. நூற்றுநாற்பத்தொரு பாடல்களை இயற்றினார். அருணகிரி நாதருடைய திருப்புகழை இவர் பன்முறை படித்திருந்தாராகையால் பாடல்கள் அருணகிரிநாதருடைய பாடல்களை அடியொட்டியே அமைந்தன.

"நினதுவழி யேநடக்க நினதுபெய ரேவழுத்த
நினதுபுக ழேபடிக்க—மறையோதி
நினதுசெப மேசெபிக்க நினதடிமை யாகிநிற்க
நினதுபத மேதுதிக்க—அதனாலே

எனதுபவ மேதுடைக்க எனதுமல மேகெடுக்க
எனதுபகை யேதுடைக்க—ஒழியாத
எனதுகலி யேகெடுக்க எனதுதுய ரேதணிக்க
எனதுவச மேகடைக்கண்—அருள்வாயே

வினைமுரச மேயொலிப்ப வணிகவிகை யேகவிப்ப
விரிகவரி காலசைப்ப—இருபாலும்
விருதடலி டால்பிடித்து வருமரசர் மோலிதத்த
விடுபடைஞர் மாளவெட்டி—அடர்சேனை

முனையழிய வீழ்பிணத்தை நரிகழுகு நாயிழுப்ப
முடுகிநடு பேய்புசிக்க—வடிவாளால்
முழுதும்அம ராடிவெற்றி கொளுமபுது லாசுபுத்ர
முதல்வவர சாளுமக்க இறசூலே."

என்பது இவருடைய சந்தப்பாடல்களில் ஒன்று. இவர் தெய்வத் திருவருள் பெற்றிருந்தபடியால் வாக்கும் பலிதவாக்காக விளங் கியது. ஒருபுலவர் ஓர் ஊரார்களின் மீது சீற்றங்கொண்டு,

" பானை உறங்கும் பகலடுப்புத் தீயுறங்கும்
பூனை உறங்கும் புரையூராம் நாடுதனில்
வத்தைப் பழந்தின்பார் வயிறெல்லாம் நண்ணியிட்டுப்
பொத்தைப் பழம்போ லிருப்பார் புரையூரார்."

என்று வசைபாடிவிட்டார். இவ்வாறு பாடக் காரணம் அவருக் குணவிட்டுப் போற்றாமைதான். இதனால் அவ்வூரார் பலநாள் பகலில் உணவுசெய்து உண்ணமுடியாமல் வருந்தினர். பிறகு இவரை அழைத்துச் சென்று பலவாறு போற்றி வேண்டிக் கொண்டனர். இவர் அப் பாடலை மாற்றி,

" பானை உறங்கா பகலடுப்புத் தீயுறங்கா
பூனை உறங்கா புரையூர் நன்னாட்டில்
வத்தைப் பழந்தின்னார் வயிறெல்லாம் நண்ணியிடார்
பொத்தைப்பழம் போலுமிரார் புரையூரார் சீமானே."

என்று பாடினார். இதன்பிறகு அவ்வூராருடைய தொல்லைக ளெல்லாந் தீர்ந்தன.

இவர் தம்முடைய பாடல்களைத் தம் ஆசிரியரிடங் கொண்டு போய்க் காட்டினார். அவர் படித்துப் படித்து மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார். தாம் பாடல்களைப் புகழ்ந்து செய்யுள் ஒன்றும் இயற்றினார். காசிம் புலவருக்கு இருந்த நோய் ஒன்று தீர்ந்த போது,

" கண்டேன் கலியாரக் கலிகடந்தேன் கைவிலையாய்க்
கொண்டேன் சுவர்க்கபலன் கொண்டேனே—பண்டு
வடிவமைத்த நிலவுபச்சை மரகதப்பொன் மயில்வனத்தர்
தடவரைக்கண் அடிபதித்த தாள்."

என்னுஞ் செய்யுளைப் பாடினார்.

## ௬௬எ. காசி - விசுவநாத முதலியார்

இவர் சென்னைக்கு அண்மையிலே உள்ள சைதாப்பேட்டை யில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் தியாக ராச முதலியார். இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலவராக விளங்கினார் யாப்பிலக்கண வினாவிடை, வேதப்பொருள் விளக்கம் பிரம்மசமாச, நாடகம், இடம்பாச்சாரி விலாசம், தாசில்தார் விலாசம், தாலுகா சட்டம், பாகசாத் திரம், சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், அப்பர்சாமி பதிகம்

என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார். இவருடைய நூல்கள் சிலவற்றை இவருடைய மகன் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். இடம்பாச்சாரி விலாசம் படிப்பவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிப்பது. சென்னையில் இருந்த செல்வன் ஒருவனுடைய ஆடம்பரவாழ்க்கையையே எடுத்துக் காட்டி இயற்றியது. தாசில்தார் விலாசம் தாசில்தார்களுடைய அதிகாரபுடல்களையும் பிறவற்றையும் விளக்குவது. தாசில்தார் நாடகம் 1868 ஆம் ஆண்டில் இரண்டாவது பதிப்பு வெளியாயிற்று. தபேதார் கச்சேரிக்கு வருதலை,

"திகழ்மணி மாட மேவுஞ் சென்னையாங் கடிஸ்த லத்தின்
இகழ்வறும் அரசியல் எய்தும் இருபத்தோர் சில்லா தன்னில்
புகழுறச் சிலதா சில்தார் புரியுப்பொல் லாங்குக் கெல்லாம்
மகிழ்புரிந் திடும்த பேதார் வருகின்றார் சபைக்கிப் போதே."

எனவும், மற்றுந் தாசில்தாரர்களுடைய நடவடிக்கைகளை,

"சாட்டிய பழியைத் தானே தாபித்துச் சாட்சி சேர்த்துக்
கோர்ட்டுக்கு அனுப்பி எங்கள் குடிகளைக் கெடுக்க வேண்டாம்
கேட்டது கொடுப்போம் என்று கெஞ்சிஅத் தாசில் தாரைக்
கூட்டமாய்க் குடிக ளெல்லாம் கும்பிட்டுத் தொழுகின் றாரே."

"இட்டத்தின் படிக ணக்கர் இசைந்திடு மணிய காரர்
கொட்டியே கொடுத்த காசால் கூடவே கொண்டு போன
பெட்டியை நிரம்பிக் கொண்ட பிறகந்தத் தாசில் தாரர்
திட்டமே இதுதான் என்று திரும்பிவந் திட்டார் தாமே."

எனவும் நகைச்சுவை ததும்பப் பாடியுள்ளார்.

## ௩௬௮. காட்டுவாவா சாய்பு
### (19—நூ.)

இவர் கரிசைப்பட்டு என்னும் ஊரில் இராமச்சந்திர வெள்ளைப் பொம்மைய நாயகர் என்னும் சிற்றரசரிடத்தில் சமுக வித்துவானாக இருந்தவர். செய்யுளை விரைவாகவும் மிகுதியாகவும் இயற்றுவாராகையால் இவருக்குக் "கவிமேகம்" என்று சிறப்புப் பெயரும் உண்டாகியது. இவர் மேற்படி நாயகர் இயற்றிய இதயதீபம் என்னும் நூலுக்கு,

"சீர்தகுரா மச்சந்த்ர வெள்ளைப் பொம்மையமதன்
நேர்தகித யத்தீப நீதிசொற்றான்—பேர்தகவே

*தெட்சணு மூர்த்தியுரை செய்தான் மணிமாடத்*
*துட் சுடரை வைத்தாங் குவந்து.''*

என்னுஞ் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிறசெய்திகள் புலனுகவில்லை.

## ௩௯௧. காதிரசனு மரைக்காயர்
## (1890)

இவர் பறங்கிப்பேட்டையில் இருந்த முகம்மது மகுதூம் கவுசுமிய்யா சாகிபு என்பவருடைய மகனுகத் தோன்றினுர். இவருடைய சமயம் முஸ்லிம் சமயம். இளமையிற் கல்வி கற்கத் தொடங்கித் தமது மதச்சார்பான கல்வியை நன்கு கற்றுக் கொண்ட பின்னர்த் தமிழ்மொழியையும் நன்கு கற்றுப் புலமையடையவேண்டும் என்று எண்ணினுர். தமிழ்நூல்களைப் போதிப்பதற்குத் தக்கார் அகப்பட்டிலர். பிறகு தாமே தமிழ் இலக்கண இலக்கிய நூல்களைத் தம் மதச்சார்புக் கல்வித்திறமையால் ஒருவாறு கற்றுணர்ந்தார். அகவை இருபத்துநான்கு ஆகும் போது தமிழ்க் கல்வி யறிவும் ஒருவாறு அமைந்தது. தமிழிலே செய்யுட்கள் இயற்றும்படியான திறமையை அடைந்தார். பல தனிப்பாடல்களை இயற்றினுர். "திருமணிமாலை" என்னும் நூல் ஒன்றும் பாடி முடித்தார்.

இவர் செந்தமிழ் அறிவைச் செம்மையாகப் பெற்று விளங்குதலைக் கண்ட சிலர், உமறுப் புலவரால் இயற்றப்பெற்ற சீறுப் புராணத்தின் நபியவதாரப் படலத்திற்கு உரை இயற்றவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். இவரும் அவ்வாறே அப்படலத்தின் கஉ௬ பாடல்களுக்கும் உரைகள் திலகம் என்னும் விரிவுரை எழுதினுர். அவ்வுரை அறிஞர்கள் எல்லாராலும் பாராட்டப் பெற்றுச் சிறப்படைந்தது.

இவர் காலத்தில் இருந்த புலவர்களாகிய, திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், காஞ்சிபுரம் வித்வான் சிவஞான ஐயர், தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளை வழித்தோன்றல், வெண்பாப் புலி வேலுச்சாமிப் பிள்ளை, கவிச்சாகரம் செய்குநயினு மரைக்காயர்,

கா. முகம்மதப்துல் காதிறு மரைக்காயர், அபுல்காசிம் மரைக்காயர், பறங்கிப்பேட்டை அ. முத்துத் தாண்டவராய பிள்ளை ஆகிய புலவர்கள் சிறப்புப் பாயிரம் பாடியிருக்கின்றனர்.

"சீர்மலிநல் அறிஞர்பலர் புகழெட்டி
யாபுரத்துச் செல்வ வேந்தர்
திகழ்சமஸ்தா னத்துவரும் ஒருமுமறுப்
புலவர்கோன் செய்த தாகும்
ஏர்மலிபல் லணிகவினும் வியன்சீருப்
புராணமதில் இணைந்து நின்ற
எழினபியின் அவதாரப் படலமதின்
மாட்சியினை எவருங் கொள்வான்
நார்மலிசொல் லாருரைகள் திகைமெனப்
புத்துரையை நயமாய்ச் சொற்றான்
நகர்பறங்கிப் பேட்டையினில் கவிராச
சிங்கமென நண்ணி வாழ்வோன்
பார்மலிவல் லருமைநிறை பிரசங்க
மழைபொழியும் பண்பு மிக்கோன்
பகர்காதி ரசனுமரைக்காயன்
எனவதியும் பான்மை யோனே."

என்னும் இப்பாடல் பூவை கலியாண சுந்தர முதலியார் பாடியது.

கிறிஸ்துமத தீபிகை என்னும் நூல் ஒன்றும் இவர் இயற்றினர். அந்நூலுக்கு இவருடைய மகனாகிய, கா. சுல்தான் அப்துல்காதிர் மரைக்காயர் நேரிசை யாசிரியப்பாவால் சிறப்புப் பாயிரம் பாடியிருக்கிறார்.

"அருங்குலத் துதித்த பெருங்குண கவுசு
மிய்யா மகவென வையந் துதிப்பக்
கலைமகள் வணங்கக் கலையணி திருத்தி
இலகிய நூல்பல நிலைதர வியற்றினர்
என்னை யீன்ற வென்றிகொ ளையர்
நாவலர் குழுவெலாம் நாவலர் எனவே
போற்றரும் புகழின் மாற்றருஞ் சீர்த்தியர்
இலக்கியக் கடலினும் இலக்கணக் கடலினும்
கரைகண் டுறைந்த நிரைபெறுஞ் சான்றவர்
காதி ரசனு மரைக்காயர்
என்னும் நாமம் மின்னுநா வலரே."

என்பது அச் சிறப்புப் பாயிரத்தின் இறுதிப்பகுதி.

## ௩௭௦. காதிறு முகியித்தீன்

இவர் செய்யிது முகமது என்பவருடைய வழிமுறையிலே தோன்றினார். இவருக்கு 'நவரத்தினகவி' என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டு. இவர் 'பிக்குமாலை' என்னும் நூல் பாடியுள்ளார்.

"ஆதம் இதுரீசு நூஹு மூசா
ஐயூபு ஹாறூன் அல்எஸஉ
ஹூது இபுறாகிம் லூத்து எஹூ
கூபு தாவூது சுலைமான் நபி
ஒதும் இசு மாயில் துல்கிபுலி
யூநுஸ் எஹியா கஜபு ஈசா
சாதுறும் ஸாலிஹிஸ் ஹாக் இல்யாஸ்
சக்கறியா யூசுப் முகம்ம தாமே."

என்பது பிக்குமாலையில் ஒருபாட்டு. இதில் இருபத்தைந்து நபிமார்களின் பெயர் ஒருங்கே உரைக்கப்பட்டுள்ளது.

## ௩௭௧. காத்தபெருமாள் பிள்ளை - ரா
(1899)

இவர் சோழவளநாட்டிலே திரிசிரபுரத்தில் சிறந்த புலவராக விளங்கியிருந்ததன்றிப் புகைவண்டி நிலயத் தலைவராகவும் அலுவல் பார்த்துக்கொண்டிருந்தார். இவரிடம் பலர் கல்வி கற்றுஞ் சிறப்படைந்தனர். செய்யுள் இயற்றுவதினும் வல்லவராகிய இவர், விருதுப்பட்டி கந்தசாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய திருச்செந்தூர் முருகக்கடவுள் தோத்திரப் பாமாலைக்கு,

"பிறைபூத்த சடைமவுலிக் கடவுளருக்
குபதேச பிரானுய்த் தொல்லை
மறைபூத்த வான்பொருளாய்ச் செந்திலமர்
முருகவேள் மலர்த்தாள் ஏத்தி
உறைபூத்த தமிழலங்கல் அணிந்திட்டான்
அவன்பெருஞ்சீர் உரைக்க முந்நீர்த்
தறைபூத்த பணமகுடச் சேடனுக்கும்
நாவுளதோ தமிழ்வ லோரே.

முத்தமிழுக் கிசைந்தகுறு முனிவனிவன்
எனப்புலவோர் முறையின் ஓர்ந்து
பத்திவலி வாய்மைமனத் தூய்மைநலம்
ஞானமெனும் பலவா யேத்தும்

உத்தமசற் குணம்வாய்ந்து விருதைநகர்க்
குயிர்போல ஓங்கி வாழும்
சத்தியவான் எனப்புகழும் கந்தசா
மிக்குரிசில் தவத்தால் மிக்கோன்.

தேமணக்கும் மலர்க்கூந்தல் வள்ளிநா
யகிக்குகந்த செவ்வேள் பொற்றாள்
பாமணக்க உரைத்தகந்த சாமிவள்ளல்
தமிழ்மாலை படிக்குந் தோறும்
நாமணக்கும் மனமணக்கும் உடன்மணக்கும்
புலன்மணக்கும் நவிலக் கேட்போர்
தாமணக்கக் கண்டவுடன் தற்போதம்
நீங்கியுயர் தவமுற் றாரே.''

என்னுஞ் செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௯௭௨. காந்திமதிநாத கவிராயர்
## (1893)

பாண்டிவள நாட்டிலே, திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சேற்றூரிலே சிறந்து விளங்கியவர். இவர் திருப்பனந் தாள் காசிமடத் தலைவர் சாமிநாதசாமிகள்மீது பாடிய பாடல் களில் ஒன்று,

'' கலைமதியான் மாசடையான் காரணத்தான்
ஈகையுளான் கனவா னுவான்
குலவறமா திடத்தானற் பணிவிடையான்
நயவெண்பொன் குன்று மேலான்
பலவயன்மா லறியாதா னெனவுலகம்
பகருவதில் பரனே யொப்பாம்
வலமதிகம் உறும்பனசை வாழ்சாமி
நாதமுனி வரனே போற்றி.''

என்பது.

## ௯௭௩. காந்திமதிநாத பிள்ளை

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலிமாவட்டத்தில் செவ்வல் என்னும் ஊரில் இருந்தவர். தமிழ்மொழியை நன்கு கற்றுப் புலமை பெற்ற இவர் பத்தமடைக் கல்லூரியில் தமிழாசிரிய ராகப் பணிபுரிந்திருந்தார். ஆழ்வாரப்ப பிள்ளை என்பவர் காரா

குறிச்சி மடத்தில் குருபூசை ஒன்றை முன்னிட்டுக் காரைக்கால் அம்மையார் வரலாற்றைச் சொற்பொழிவு செய்தார். அச்சொற் பொழிவில் ஈடுபட்ட இவர் அவரைப் பாராட்டி,

"காரைக்கால் அம்மை திருக் காதையினை யாங்கள்மிகு
சீரைப் பெறும்படி நீ செப்பினையால்—காரைப்
பதியாண்ட அப்பன் பதம்போற்றும் எங்கள்
நிதியே ஆழ் வாரப்ப னே."

என்னும் வெண்பாவைப் பாடினர்

## கூஎச. காந்தியார்

பாண்டிவளநாட்டில் ஆழ்வார் திருநகரியை அடுத்துள்ள தென்திருப்பேரி என்னும் ஊரில் வைணவ சமயத்தில் தோன்றிய பெண்மணி இவர். செய்யுள் இயற்றுவதில் மிக வல்லவராக விளங்கியதோடு, சீவகசிந்தாமணி, பரிபாடல் முதலிய பழைய நூல்களில் புதுப்பாடல்கள் பலவற்றை இயற்றி இடைச்செருக லாக இவ்வம்மையார் சேர்த்தாராம். சிந்தாமணியில் மட்டும் இவ்வம்மையாருடைய பாடல்கள் நானூற்றுக்குமேல் உள்ளன வாம். இவர் தனிநூலாக எதுவுஞ் செய்ததாகத் தெரியவில்லை.

## கூஎரு. காமாட்சிநாதன் செட்டியார் - வ. நா.
(20—நூ.)

பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலிப் பிரிவில் உள்ள நர சிங்க நல்லூரில் இருந்தவர். இவர் திருநெல்வேலியில் எழுந்தரு ளிய நெல்லையப்பர்மீதும் குறுக்குத் துறை முருகக்கடவுள்மீதும் காந்திமதியம்மை பேரிலும் இசைப் பாடல்கள் பல பாடியிருக் கிறார். பாடல்கள் அண்ணமலை ரெட்டியாருடைய காவடிச் சிந் துப் பாடல்களைப் போன்றும் திருப்புகழ்ப் பாக்களைப் போன் றும் அமைந்துள்ளன

"பொன்னுலவு சின்னிகுள" என்ற மெட்டில் ஒருபகுதி :

"அந்தமிகு பூவுலகில் இந்தநெல்லை மாநகர்நல்
அண்டர்புரம் போல்விளங்கி நீடுமே—இதைக்
கண்டவர் கலியகல வோடுமே—சுற்றி
ஆருங்காவினில் நாறும் பூவினில்
ஊறுந்தேனினை ஈரஞ் சேரனி

அன்புடன் நுகர்ந்து ராகம் பாடுமே—அதற்
கானந்தங்கொண்டே மயில்கள் ஆடுமே.''

நாலைப்பாராட்டிக் கல்லிடைக் குறிச்சி வேதாந்த பாகவதர், திருநெல்வேலிப் பேட்டை-சுப்பிரமணிய பிள்ளை, சிந்துபூந்துறை-தெட்சணாமூர்த்திமடம் வேதநாயக அடிகள், திருநெல்வேலி-வழக்கறிஞர் சுப்பிரமணியப் பிள்ளை, நெல்லையப்பர் கோவில் சிவசுப்பிரமணிய பிள்ளை, ஆறுமுகநயினார் பிள்ளை, கோபால சமுத்திரம்-சண்முகதாச பிள்ளை, நூலாசிரியருடைய மகன் நாராயணன் செட்டியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௩௭௬. காரிநாயனார்

இவர் பொன்னிவளநாட்டிலே கொறுக்கை என்னும் ஊரிலே இருந்தவர். தந்தையார் பெயர் புத்தன். இவர் வாழ்ந்திருந்த காலம் பலநூற்றாண்டுகட்கு முன்னும். இவர் கணக்கதிகாரம் என்னும் நூலினை இயற்றியுள்ளார்.

''பொன்னி நாட்டுப் பொருந்திய புகழோன்
மன்னர் கோமான் வழிமுத லுடையோன்
முத்தமிழ் தெரிவோன் முகரியம் பெரும்பதி
மத்திமத் தலத்தின் மறையவர் வாழும்
குற்றமில் காட்சிக் கொறுக்கையர் கோமான்
புத்தன் புதல்வன் காரியென் பவனே''

என்பது பாயிரப் பாடல். மேற்படி நூலில் முத்துத்தாவடம் அறுப்புண்ட கணக்கு,

''கோத்த முத்தணி குங்குமக் கொங்கையார்
கூடியாடிக் குலாவுங் கலவியில்
ஆர்த்த பாரிலொன் றஞ்சிலொன் றாறிலொன்
றமளி மெத்தைமேல் மிதந்திடு மூன்றிலொன்
றேத்த கணவன்பால் ஈரஞ்சும் ஈரெட்டும்
ஏல வார்குழல் கையினி லெட்டிலொன்
றோர்த்த நாவில் எழுபத் திரண்டுமே
உலகுள் ளோரிதைப் பகுத்திட வேணுமே.''

## ௩௭௭. காரிரத்தினக் கவிராயர்

பதினேழாம் நூற்றாண்டில் இருந்த வைணவப் புலவர். திருநெல்வேலிமாவட்டத்தில் ஆழ்வார் திருநகரிக்கு அண்மையில்

உள்ள தென்திருப்பேரையில் வேளாண்மரபிலே உதித்தவர். ஆழ்வார் திருநகரியில் இருந்தவரும் மாறனலங்காரம் முதலான நூல்களை இயற்றியவருமான திருக்குருகைப் பெருமாள் கவிராயரிடம் கல்விபயின்றவர் இவர் மாறன் அலங்காரத்திற்கு உரையெழுதினர். திருக்குறளுக்கும் நுண்பொருள் மாலையென ஓர் உரை எழுதினர். தொல்காப்பிய நுண்பொருள் மாலை எனவும் ஒருநூல் எழுதியதாகக் கூறுவர்.

## ௲௭௮. கார்த்திகேய பிள்ளை - வ.
## (20—நூ.)

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்து மேலைப்புலோலியிலே வல்லியப்ப பிள்ளை என்பவருக்குப் பிள்ளையாக இவர் தோன்றினர். நா. கதிரைவேற் பிள்ளைக்கு இவர் மாதுலனென்னும் முறையினராவர். சைவசித்தாந்த நூல்களிலே இவர் தேர்ச்சிபெற்றுப் பலருக்கும் போதித்தலை மேற்கொண்டிருந்தபடியால் "சுத்தாத்துவித சைவசித்தாந்த போதகாசிரியர் என்னுஞ் சிறப்புப் பெயரும் இவருக்கு அமைந்து நின்றது. "சைவசித்தாந்த சங்கிரகம்" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அதன் அவையடக்கப் பாடல்களும், அந்நூலுக்கு செ. பாலசுப்பிரமணிய முதலியார், நா. கதிரைவேற் பிள்ளை, வெண்பாப்புலி வேலுச்சாமிப் பிள்ளை, பூவை கலியாணசுந்தர முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அவற்றுட் சில வருமாறு :

" பாவானும் உரையானும் திருவருள்பெற்
றிடும்புலவர் பகர்ந்த வித்தைத்
தேவாதி தேவனுமோர் குறியிற்காட்
டிடுமிதனைச் சிறியேன் கல்லா
ஓவாத போதத்தால் உரைக்கவரல்
என்னென்னே ஒன்றோ நாதே
ஆஆ என்செய்கேன் என்றனக்கே
பெருநகையை ஆக்கும் மாதோ."

" ஆயினுமோர் பெருவிருப்பென் உள்ளகலா
தலைத்தலைத்துப் பிடரி ஞட்டப்
பேயனிவன் தெரிந்தவற்றைச் சுருக்கியிளை
யவருணரப் பெட்பிற் செய்தேன்

தாலையநேர் புலவரனம் பால்பீரித்துண்
தலைநயனத் தகுதி கொண்டு
சேலையநேர் இதைமதித்துத் தேர்வர்சைவ
சித்தாந்தத் திம்பா லன்றே.''
''வல்லி யப்பரவள் தவத்தினிற் பிறந்தவன்
புலவர்கள் மதிப்போன்
நல்லி யற்கையின் சைவசித் தாந்தமா
நனிபொரு ளறிந்தோன்
வெல்லி யற்கைச்சித் தாந்தமாக் கடலென
விளம்பிட இருப்பான்
சொல்லி யற்படைக் கார்த்திகே யப்பெயர்த்
தோன்றலா மன்றோ''

என்பன நூலின் அவையடக்கப் பாட்டுக்கள்.

## ௩எக. காலிங்கப் புலவர்

மாயூரந் தாலுகாவில் உள்ள திருவெண்காட்டின் சிறப்பை இவர் திருவெண்காட்டுப் புராணம் என்னும் பெயருடன் பாடியிருக்கிறார். இப்புராணம்: சுவேதவனச் சருக்கம், திருநகர்ச் சருக்கம், தீர்த்தச் சருக்கம், வேதாரசி சருக்கம், சத்தியநல்விரதச் சருக்கம், அக்கினி தீர்த்தச் சருக்கம், சந்திரதீர்த்தச் சருக்கம், ஆதித்ததீர்த்தச் சருக்கம், சுவேதகேதுச் சருக்கம், இந்திரச் சருக்கம், சிவப்பிரியச் சருக்கம், அயிராவதச் சருக்கம், வியாக்கிரபாதச் சருக்கம், சுவேதமன்னச் சருக்கம், மருத்துவச் சருக்கம், திருநடச் சருக்கம், சிவலிங்கச் சருக்கம், திருவிழாச் சருக்கம் என்னும் பதினெட்டுச் சருக்கங்களையும் ஐந்நூற்றெழுபத் தொன்பது பாடல்களையுங் கொண்டது. அச்சாகாத இப்புராணம் தஞ்சை சரஸ்வதிமால் நூல்நிலையத்தில் உள்ளது. பாடல்கள் இனிமை நிறைந்தவை. கீழ்வருவது கடவுள் வணக்கச் செய்யுள்.

''சொற்கண்டு பசுங்கிளியும் கருங்குயிலும்
கடலமுதுஞ் சுவைய றுத
கற்கண்டுந் திறையளக்கும் மலர்த்திருவின்
பெருமானும் கமலத் தானும்
மற்கண்ட விடம்பிறந்த தலைநாளில்
இறவாமல் அருள்செய் தானைப்
பொற்கொண்டல் அனையானைச் சுவேதவனப்
பெருமானைப் போற்று வோமே.''

## ௩௮௦. காவையம்பலவாணத் தம்பிரான்

இவர்தருமபுர ஆதினத்தைச் சேர்ந்த தம்பிரான்களில் ஒருவர். வெள்ளியம்பலவாணத் தம்பிரானிடம் கல்வி கற்றவர் திருவருட் பயனில் அடங்கியிருக்கும் உண்மைப் பொருள்களை அமைத்துக் கலித்துறையாக நூறுசெய்யுட்கள் இயற்றியுள்ளார்.

## ௩௮௧. காழிஞான தேசிகர்

இவர் கார்த்திகேயபுரம் என்னும் ஊரில் இருந்தவர். திருவீழிமிழலையில் எழுந்தருளியுள்ள அழகியமாமுலை அம்மைமீது பிள்ளைத் தமிழ் இயற்றியிருக்கிறார்.

''கஞ்சா சனத்தில் விளங்கிவளர்
கதிர்வெண் தரள மணிமுறுவல்
கமலை கமல மலர்விடு
கடந்து நடந்து வருவதுபோல்
பஞ்சா ரடிமேல் சிலம்பொலிப்பப்
பசும்பொற் சிவிறி கரத்தெடுத்துப்
பையப் பைய நடந்துபுனல்
பாய்ந்து குடைந்து விளையாடும்
மஞ்சார் அளக மின்னிடைசூழ்
மணிமே கலையார் மையெழுதும்
வடிவேல் நெடுங்கண் எழில்கவர
மதித்து விரும்பி வாவிதனில்
அஞ்சேல் உகளும் வீழிநகர்க்(கு)
அரசே வருக வருகவே
அருள்சேர் காத்தி யாயனர் பெண்
அமுதே வருக வருகவே.''

என்பது வருகைப் பருவத்தில் ஒருபாட்டு.

## ௩௮௨. காளிங்கராயப் பிள்ளை

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்னர்க் கோயம்பேட்டில் இருந்தவர். சீர்கருணீகருலதிலகர். புலமை மிக்கமைந்து விளங்கிய இவர் நூறு பாடல்களைக்கொண்ட திருமழிசைச் சிலேடை வெண்பா என்னும் நூல்பாடியுள்ளார்.

"மான்கண் ணியரிடத்தும் வண்கனியா ராமத்தும்
வான்கற் பகமார் மழிசையே—தேன்கமழ்லே
வாஞ்சித் திருப்பதியார் வந்துய்மினென் றருள்வார்
காஞ்சித் திருப்பதியார் காப்பு."

என்பது அச் சிலேடை வெண்பாவில் ஒரு பாட்டு. இந்நூலில் உள்ள எகர ஒகரங்கள் புள்ளி பெற்றுள்ளன. இதனைக்கொண்டு இந்நூலாசிரியர் பழங்காலத்தவரென்பதும், நூல் அச்சுத் தொடக்கக்காலத்திலேயே அச்சிடப்பட்டதென்பதும் பெறப் படும்.

## ரு௫ரு. காளிச்சுவாமிகள்
## (1897)

இவர் எட்டையபுரத்தில் சிறந்த துறவியாக விளங்கியிருந் தவர். இலக்கண இலக்கிய உணர்வும் நன்குபெற்றவர். இவர் கயிலைக் கலித்துறையந்தாதி, கயிலைவெண்பாவந்தாதி, அருணைப் பதிகம், பழமலைப்பதிகம், திருச்செந்திற்பதிகம், கழுகுமலைப் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

"பாகத் துறையும் பசுந்தோகை
பனிமா முகத்துக் குடைந்துருகிப்
பரசு மதியும் வளராமல்
பதுங்கிற் றேருவென் றுன்னிடுமா
சோகத் திரியும் சிறுபிறையைச்
சுடர்சால் வேணி முடித்தபிரான்
தூய மதலை வருகவெனச்
சொல்லு முனங்கிண் கிணிபுலம்ப
வேகத் துடனே வருமுருக
வேளே வருக மெலியாத
விளக்கே வருக அடியாருள்
விளங்கு ஞான மணிவருக
யோகத் துறுவோர் உடலுடல்
உருற்றும் ஒருவ வருகவே
உணர்வு கடந்தோய் உவணகிரிக்
குரியாய் வருக வருகவே."

என்பது கழுகுமலைப் பிள்ளைத்தமிழ் வருகைப் பருவத்தில் ஒரு பாட்டு.

## ௩௮௪. காளிமுத்துப் புலவர்

இவர் தொண்டைவள நாட்டில் சென்னைமாநகரில் இருந்தவர். பலவகையான நயங்களை அமைத்து மிகுவிரைவாகச் செய்யுள் இயற்றக்கூடிய திறமை வாய்ந்தவர். ஆயினும் வறுமையால் வாடினார் அந்நாளில் சென்னைத் திருமயிலையில் பூம்பாவை வேலப்ப முதலியாருடைய மகன் குழந்தைக் குருநாத முதலியார் என்பவர் சிறந்த கொடையாளியாகவும் செல்வராகவும் விளங்கியிருந்தார். இவர் அவர்மீது செய்யுட்கள் பல பாடிச் சென்று பரிசில்பெற்றார். அச் செய்யுட்களில் இரண்டை அடியிற் காண்க. இவர் தனிநூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

புறங்காட்டல்

"மாக மழைக்கரன் பூம்பாவை வேலப்பன் மைந்தன் மின்னார்
மோகன் குழந்தைக் குருநாதன் வெற்பினில் மோடிவைத்துப்
பாகமொழிக் குழல்மாதே விரித்துப் படமெடுக்கும்
நாக மறைத்துக் குழனமக் கிதல் நலமல்லவே."

வெறி விலக்கல்

"வண்டாங் கிசைபயின் மாலையன் வேலப்பன் மைந்தனிதி
கொண்டான் கிளையை வளர்த்தான் குழந்தைக் குவட்டின் பின்னே
பண்டாங் கிசையினன் மால்கொண்டு பாம்பன் குளத் தினடுக்
கண்டாங் கிலைக்கிழித் தாலென்ன பாவங் கருதுவதே"

## ௩௮௫. காளியண்ண பிள்ளை

கொங்குவள நாட்டில் பூந்துறை என்னும் ஊரில் கருணீகர் குலத்தில் தோன்றிக் கல்விகற்றுக் கவிராயராகச் சிறப்புற்றிருந்தவர். இவர் பாமாலைகள் பல இயற்றியிருக்கிறார்.

## ௩௮௬. காளியப்ப பிள்ளை – க
(20—நூ.)

சேற்றூர்ச் சமத்தானத்தில் இருந்தவர். தந்தையார் பெயர் கலியாணசுந்தரக் கவிராயர். இவர் தம் தந்தையாரிடமே இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை நிரம்பப் பெற்றார். சேதுபதி பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்ததோடு அஞ்சல் நிலையத் தலை

வராகவும் இருந்தார். திருமலைச் சிங்காரமாலை என்னும் நூலுக்கு இவர் அளித்த சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"மஞ்சுநிகர் குந்தளமின் மலையரசன்
மகள்மகவாய் வந்த செவ்வேள்
கஞ்சமலர்ப் பதநினைப்போர்க் காத்தருளும்
திருமலைவாழ் கந்தன் மீது
நெஞ்சமகிழ் வுடன்வால சுப்ரமண்யன்
எனுங்கவிஞன் நிகழ்த்து மாலைச்
செஞ்சொன்மது ரகசுவியைத் தேவரமு
துக்கிணையாய்ச் செப் பலாமே."

## ௩௮எ. கிருட்டிண ஐயங்கார்
(19—நூ.)

பாண்டிவள நாட்டில் வீரகேரளம்புதூரில் இருந்த தமிழ் அறிஞர். ஊற்றுமலை இருதயாலய மருதப்பதேவர் மீது பல செய்யுட்கள் பாடிப் பரிசில் பெற்றுள்ளார். அவற்றுள் ஒன்று,

"மாதனங் கந்துக மின்னிடையாள்மத னுனவன்சும்
மாதனங் கந்துளையாக மலர்க்கணை தொட்டெய்யப்பூ
மாதனங் கந்துதை வாரிக்கரள மனமென்றனள்
மாதனங் கந்துடிக் கையீசர்தாச மருதப்பனே."

என்பது. இவரைப்பற்றிய பிறசெய்திகள் தெரியவில்லை.

## ௩௮அ. கிருட்டிண ஐயங்கார் - சி
(20—நூ.)

இவர் ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்னர் நடுநாட்டில் திருவாமாத்தூரில் வாசஞ்செய்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சிங்கையங்கார். கிருட்டிண ஐயங்கார் பலவகைப் பாடல்களையும் எளிதிற் பாடுங் கல்விநலம் பெற்றிருந்தார். திருப்புகழ்ச் சாமிகள் எனவும் முருகதாச சுவாமிகள் எனவும் பெயர் பெற்று விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளோடு இவர் நெருங்கிய பழக்க முடையவர். அப்பெரியார் இயற்றிய திருவாமாத்தூர்ப் புராணத்திற்கு இவர்,

"திருமாதை யூரினில் தண்டபா ணிப்பெயர்ச்
செந்தமிழ்ச் சரபம் வந்துள்
தினரட் சகனுன வபிராமன் மான்மியம்
தெரிதர விரும்பு பல்லோர்
அருளால் வெளிப்படுதல் கருதிமுயல் வுறுநாளில்
அனைவரும் வியப்பெய் தவே
அந்தரி எனதுகன விலொரு சிறியகன் னியாய்
அவனு லதைச்செ யெனலும்
கரவிடமி லாமல்இவள் அவளெனத் தேறினேன்
ககனத்தின் வழியே கினள்
கண்விழித் ததிவிரைவில் அவனுடனவ் வுண்மையைக்
கழறினேன் உவகை மலிவாய்
பரமன்விளை யாடலங் கொன்றியல்வ துஞ்சொலிப்
பழுதறு புராண மாகப்
பாடினல் கினன்உலகில் வாழ்விரே நாளுமெய்ப்
பத்திசெய் துய்விர் களே."

எனச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இதனுல் இவருடைய கனவில் இறைவிதோன்றித் தண்டபாணி யடிகளைக்கொண்டு புராணத்தைப் பாடி முடிக்கச்செய் என்று கட்டளையிட்டதும் இவர் இச்செய்தியைத் தண்டபாணி யடிகளிடம் கூறிப் புரா ணத்தைப் பாடி முடிக்கச் செய்ததும் பெறப்படுகின்றன.

## ௯௰௧. கிருட்டிண ஐயங்கார்

சேது நாட்டில் தோன்றியவர். ரா. இராகவ ஐயங்காருக்கு மாதுலர். அட்டாவதானஞ் செய்வதில் கெட்டிக்காரர். வட மொழி தென்மொழி எனும் இருமொழியிலும் வல்லவர். சமய நூல் ஆராய்ச்சியில் சிறந்தவர். இவர் சேதுபதியைப் பாராட்டி,

"சொன்னவருண் ணுவைத் துணிப்பேன் அவர்சிரத்தைச்
சின்னபின்ன மாகச் சிதறுவேன்—முன்னுதமிழ்த்
தென்னன்முத்து ராமலிங்க சேதுபதி போலஒரு
மன்னனுளன் என்றுன் மதித்து"

என்று பாடியிருக்கிருர். இதனுல் இவர் சேதுபதிமீது கொண் டிருந்த மதிப்பு நன்கு விளங்கும். இவர் நூல்கள் சில இயற்றி யுள்ளார். அவைகள் அச்சானதாகத் தெரியவில்லை.

## ௩௧௦. கிருட்டிண ஐயர்

தஞ்சைமாவட்டத்தைச் சேர்ந்த மாயூரம் தாலுகாவில் இருந்தவர். சிதம்பரம் சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், மயிலைச் சிலேடை வெண்பா முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். இவருடைய பெயர் கிருட்டிணானந்த யோகி எனவும் வழங்கியது

## ௩௧௧. கிருட்டிணசாமி அய்யர் - சா
(20—நூ.)

கொங்குவள நாட்டிலே சேலம் மாவட்டம் ஓமலூர்ப் பிரிவு வெள்ளாளப் பட்டியில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தந்தையாருடைய பெயர் சாமய்யர். தந்தையாராகிய சாமய்யரும் அவருடைய முன்னோர்களும் தமிழ் கற்றுத் தேர்ந்து புலமை படைத்து விளங்கியவர்கள். ஆகவே இவருடைய வழிமுறை புலமைத் தொடர்புடையதாம் கிருட்டிணசாமி ஐயர் தந்தையாரிடமே தமிழ் கற்றுத் தேர்ந்தார். இனிமையமையச் செய்யுளியற்றும் தன்மையும் இவருக்கு அமைந்திருந்தது. சிலையெழுபது உரை என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சாற்றுக் கவிகளில் ஒன்று:

*" பொன்மணக்கும் மாலுடைய பூமணக்கும்*
*பதிமணக்கும் புத்தே ளாய*
*மன்மணக்கும் மகிமணக்கும் மன்பதைக*
*ளேமணக்கும் வன்னி யோர்கை*
*வின்மணக்குங் குலமணக்கும் மேன்மேலும்*
*விதிமணக்கும் வினக்க மாகச்*
*சொன்மணக்கும் பனுவல்களின் சுவைமணக்கும்*
*ஒருரையைச் சொல்லுங் காலே."*

என்பதாகும்.

## ௩௧௨. கிருட்டிணசாமி உபாத்தியாயர்
(19—நூ.)

சோழவளநாட்டிலே தஞ்சை மாவட்டத்திலேயுள்ள நாக பட்டினம் என்னும் ஊரில் பத்தொன்பதாம் நூற்றாண்டின்

இடைப் பகுதியிலும் பிற்பகுதியிலும் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தவர். இவர் பள்ளிக்கூடம் ஒன்றில் அமர்ந்து மாணவர் பலருக்குக்கல்வி கற்பித்தலை மேற்கொண்டிருந்தார். நாகையில் எழுந்தருளியிருக்கும் நீலாயதாட்சியம்மைமீது பிள்ளைத்தமிழ் நூலை இவர் பாடியிருக்கிறார்.

நூல் சொன்னயம் பொருணயம் முதலிய எல்லா நலன்களும் இனிதமையப் பெற்றது. பிள்ளைத்தமிழைப் பாராட்டிச் சென்னைக் கோமளீசன்பேட்டை இராசகோபால பிள்ளை, நாக பட்டினம் புருடோத்தம நாவலர், நாராயண செட்டியார், ஆலந்தூர் முத்துசாமி முதலியார், கோட்டைப்பட்டினம் குருசாமி முதலியார், திருஎவ்வுளூர் இராமசாமி செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

''மலிமகர வாரியைக் கரவாய் மடுத்துவெண்
மணித்திரளை வாரி வாரி
வானத் தெறிந்துடுக் கணமலைத் திந்திரவி
வாட்டமுற நாரம் வீசி
ஒலிவெண் பயக்கடலை அரியோ டுறிஞ்சிநிமிர்
ஓங்கல்மீக் கிழ தாக்கி
உத்சாக மீறியப் பாலையரி யுடனுமிழ்ந்
தும்பர்பய மூட வுலவிக்
கலிதபக் கைலையணை போதுமால் வேண்டலிறை
கட்டளையின் அத்தி கிரியில்
கனதவம் இயற்றக் கணத்தலைவர் பானுறும்
காமர்வளை ஏற்ற ளித்துப்
பொலிசிறு குறும்புபுரி மழுகளிறை யீன்றபிடி
பொன்னூச லாடி யருளே
புன்னாக வனநீடு நன்னாகை அமர்பூவை
பொன்னூச லாடி யருளே.''

என்பது பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டு. மற்றும் இவரால் இயற் றப்பெற்ற நூல் எட்டிகுடி முருகன் பல்சந்தமாலை முதலியன.

ஐயாத்துரை ஞானியார் என்பவர் இயற்றிய திருத்தில்லைச் சிவகாமசுந்தரி சதகம், நடராசர் சதகம் என்னும் நூல்களுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" அட்டாங்க யோகமுஞ் சித்தெட்டு நல்கும் அகிலமிசை
பட்டாங் கனைத்தையும் ஆக்குமெய்ப் போதம் பரிந்தளிக்கும்
சிட்டாங்க மேவுமை யாத்துரைத் தேசிகச் செம்மறனை
திட்டாங்க வம்பலந் கோதுஞ் சதக வெழிற்பொருளே."

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## ௩௯௩. கிருட்டிணசாமி ஐயங்கார்

(20—நூ.)

பாண்டிவளநாட்டில் பெரிய குளம் பிரிவைச் சேர்ந்த அனுமந்தன்பட்டி என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய உடன்பிறந்தாராகிய சீநிவாச ஐயங்கார் என்பவரும் சிறந்த புலவராய் 'மதுரகவி' என்று புகழ்பெற்றிருந்தார். வேங்கட தாசர் என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்று விளங்கிய பெருமா ளையங்கார் என்பவர் இயற்றிய நூல்களுக்கு இவர்,

" திருவளர் கமல வமுதினுல் திகழ்ந்த
திருமணிப் படரொளி மருமன்
செம்மையிற் குறுநுண் டண்டுளி விராஅய்
சிறுவெயிற் கணமணந் தலர்ந்த
மருவளர் மலரும் உவமையில் கழிய
மனமுரைக் கதிதமா யிலகும்
மாணடி முடியிற் சூடிய வுலவா
வலப்புகழ்க் குலத்துணைக் குகந்தோன்
கருவளர் பிறவிக் கடல்மிடல் சுவற்றும்
கருணையன் கைச்சர மிருகைக்
கற்பகஞ் சிறிய திருவடி யடியில்
கற்பவர் நெக்குநெக் குருகி
உருவளர் காயம் பரவச மடைய
ஓங்குசெந் தமிழ்க்கவி மாலை
ஓதினன் மறையோன் வேங்கட தாசன்
உற்றபேர் உருதபேர் எவையே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௩௯௪. கிருட்டிணசாமிக் கவுண்டர் - (ரா)

(20—நூ.)

கொங்குவளநாட்டில் கணபதி என்னுஞ் சிற்றூரில் தோன் றியவர். தந்தையார் பெயர் இராமசாமிக் கவுண்டர். இவர்

இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமைபெற்றுத் திகழ்ந்தார். ‘வேளாள வாலிபன்’ என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்து நடத்தினார் முருகக் கடவுள்மீது சித்திர பந்தனமாலை பாடிய கலியாணசுந்தரக் கவுண்டர் என்பவர்க்கு மைத்துன முறைமையினர். சித்திரபந்தன மாலைக்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார்.

“கந்தன் சித்திர பந்தனமாலை கட்டிய திறமிதுபோல்
முந்தெங் கும்மினி தாயதொர் நூலைக் கண்டில முதலிதுவே
வந்தெங் கும்நம தாருள மேவி மன்னிய தாவிதனின்
அந்தம் பேசுத லாவதன் றெம்மா லாவதன் றெவராலும்

ஓவியங் கற்றிது போன்றதோர் நூலை உலகினிலே
பாவியங் கற்ற கவிவாணர் பாடுந் திறமறியேம்
ஆவியங் கற்றுகச் சூரனை யாக்கிய வண்ணறன்மேல்
காவியங் கற்றவெ னந்தான்செய் தான்சித் திரகவியே.”

என்பன அவற்றுள் இரண்டு பாடல்கள்.

## ௩௯௫. கிருட்டிணசாமி சாத்திரியார்
(20—நூ.)

இவர் முள்ளண்டறம் திருவேதி வேங்கடராமச் சரௌதிகள் என்பவருக்கு மகனாகத் தோன்றினார். இலக்கண இலக்கியங் கற்றுப் புலவரானார். தென்மொழி வடமொழி இரண்டினும் வல்லவர். அவயவலட்சண சாத்திரம் என்னும் வடநூலுக்குத் தமிழ் உரை எழுதி வெளியிட்டார். வேறு சில நூல்களும் இவரால் இயற்றப்பெற்றிருப்பதாகத் தெரிகிறது.

## ௩௯௬. கிருட்டிணசாமி முதலியார் - ப
(20—நூ.)

இவர் மாம்பழக் கவிச்சிங்க நாவலர் காலத்தில் பழகியில் இருந்தவர். கவிச்சக்கரவர்த்தியாக விளங்கிய மேற்படி நாவலரிடமே இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். சங்கீத சந்திரிகை என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரம் ஒன்றை அடியிற் காண்க:

"நீல்கொண்ட கடலாடை புடைகொண்ட புவிமீது
நிறைதமிழ் வழங்கெல்லையுள்
நிற்குமிசை நால்விருப் புள்ளா ருளங்களி
நிரம்பவொரு தக்க நூலைச்
சீல்கொண்ட பாடையாந் தமிழினில் இயற்றிச்
சிறப்புடன் சங்கீத சந்
திரிகையென் னும்பெயர் கொடுத்ததை விளக்கினன்
சேலநகர் சுகவ னேந்த்ரன்
மேல்கொண்ட தவமெலாம் உயர்புத்ர வடிவாகி
மேதினியில் அவதரித் தோன்
மேன்மையுறு முன்சிபுக் கோர்ட்டுப் பீவீடகின்
மெச்சிடும் வாய்ச்சா லகன்
மால்கொண்ட விங்கிலீஷ் தமிழாந் திரங்களின்
மகாபண்டி தக்குஞ் சரம்
வயிரமும் பிற்போக ஒளிவிடும் பிரகாச
மாணிக்க வள்ளல் தானே."

## ௩௬௭. கிருட்டிணமாச்சாரியார்

இவர் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள சூரியங் குட்டம் என்னும் ஊரிற் பிறந்தவர். கல்வி கற்றுச் சிறந்தபின் அரியக்குடி என்னும் ஊரையடைந்து மாணவர் பலர்க்குக் கல்வி கற்பித்துக்கொண்டும், நூல்கள் இயற்றிக்கொண்டும், தம் முடைய காலத்தைப் போக்கினர். வைணவ சமயத்தில் மிகுந்த பற்றுக்கொண்டு மறந்தும் புறந்தொழாக் கொள்கையை மேற் கொண்டிருந்தவர்.

திருபுல்லைத் திரிபந்தாதி, திருவெவ்வுளூர்த் திரிபந்தாதி, திருக்குருகூர் யமகவந்தாதி, திருநாகைத் திரிபந்தாதி, திரு வரியக்குடித் திரிபந்தாதி, திருவரியைச் சிலேடைமாலை, அரியக் குடி அலர்மேன்மங்கை பிள்ளைத்தமிழ் என்னும் ஏழு நூல்களை இவர் இயற்றி வெளியிட்டார். இவருடைய நூல்களைப் பாராட் டிச், சென்னெற்குடி சுப்பராய ஐயர், மு. இராகவ ஐயங்கார், நெடுமரம் இராமசாமி ஐயங்கார், அமராவதிபுதூர் வயி நாக. ராம. அ. இராமநாதச் செட்டியார், அரியக்குடி அரங்கநாதச் செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். திருக் குருகூர் யமகவந்தாதியில் ஒரு பாட்டு:

"வரையடங் காதலர் சொல்வாரிப் பாங்கியர் வான்கங்கையான்
வரையடங் காதலர் நெற்றிக்கண் போன்மதி வாட்டுந்தகு
வரையடங் காதலர் வானோர் தொழநின்ற வாகுருகூர்
வரையடங் காதலர் சோர்குழ லாளுய் வகையுவந்தே."

## ௩௬௫. கிருட்டிணமாச்சாரியார், பி. ஆர். (1896)

இவர் சென்னை மாநகரில் "இந்து ஞானபோதினி" என்னும் பத்திரிகையை நடத்திக்கொண்டிருந்தார். செய்யுள்கள் செய்வதினும் வல்லவர். அந்நாளில் சென்னையில் இருந்த கா. சதாசிவ முதலியார் என்பவர்மீது இவர் இரட்டைமணிமாலை என்னும் நூல் ஒன்றைப் பாடியிருக்கிறார். அந்நூலுக்கு, ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை, கோயமுத்தூர்-சீனிவாச ஐயங்கார், சாமக்குளம் வேங்கடரமணதாசர், குணியமுத்தூர்-கறுப்பண்ண பிள்ளை, போளுவாம்பட்டி-ஆறுமுகம் பிள்ளை, ச. நடேச பிள்ளை, வீராச்சாமிப் பிள்ளை, சி. கே. சுப்பிரமணிய முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சீர்பூத்த கச்சிநகர்ச் செல்வச் சதாசிவனும்
பேர்பூத்த வள்ளற் பெருங்கொடைக்கு—நீர்பூத்த
காரினங்கள் தோற்றுக் கரந்தமையாற் செல்லென்ற
பேரினமுஞ் சொல்வார் பெரிது."

என்பது இரட்டைமணிமாலையில் ஒரு பாட்டு. ஆண்டிப்பட்டி பெருநிலக்கிழாராகிய பெத்தாச்சி செட்டியார்மீதும் இரட்டைமணிமாலை நவமணிமாலை முதலியன பாடியுள்ளார்.

## ௩௬௬. கிருட்டிணமூர்த்தி ஐயர் (20—நூ.)

சிதம்பரம் என வழங்கும் திருத்தில்லைப் பதியினர். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். இருமொழிப் புலமைவாய்ந்த இவர் சிதம்பரம் நாவலர் தமிழ்க் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். மகாபாரத சதகம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றுள்ளது. அந்நூலைப் பாராட்டிக் கிருட்டிணமூர்த்தி சாத்திரிகள், சிவ-தண்டபாணி தீட்சிதர்,

சிவகாமசுந்தர திட்சிதர், ம. க. வேற்பிள்ளை, உ. வே. சாமிநாதையர், சர்க்கரை இராமசாமிப் புலவர். சோழவந்தான் கந்தசாமியார், குப்புச்சாமி திட்சிதர் முதலியோர் நல்லுரை வழங்கியுள்ளனர்.

"கொங்கூது வண்டினம் குலவுதண் டலைசூழ்ந்த
குளிர்நறும் பாஞ்சாலர் கோன்
கொடுஞ்சிலை வளாற்குமவ் வளரிசேய்க் காகவும்
குற்தியன் மகத்து வந்தோர்
சங்கேத மொழிதப்பல் சாலுமோ பாண்டவர்கள்
சங்கைமொழி என்னை யென்றே
தனித்துய குழந்துபின் திரௌபதி சுயம்வரம்
சாற்றவே நகரெங் கணும்
தன்கோது முனிவாய்மை யாலவ ருந்தாயும்
நற்றவரி னேகி மன்னர்
நாணுறச் சிலைகொண்டு நாணேற்றி மங்கையை
நன்மண நாட்டி னால்
தன்கூற்றி னொன்றினல் திரௌபதியின் மேவிடுந்
தண்ணருட் சிவகாமி சேர்
சந்த்ரமௌ லீசனே தில்லைவளர் நடராச
சச்சிதா நந்த சிவமே"

என்பது மேற்படி சதகத்தில் திரௌபதி திருமணப் பாடல்.

## சுOO. கிருட்டிணுநந்தயோகி

(20—நா.)

~~சோழவளநாட்டிலே மாயூரம் என்னும் பதியில் தோன்றியவர்; அந்தண குலத்தினர்~~. இவர் திருக்குருகூர் ஞானசித்தர்மீது அன்பு கொண்டவர். அப்பெரியார்மீது "ஞானசித்த மும்மணிக்கோவை" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூலுக்குரியவராகிய ஞானசித்தர் மெய்ஞ்ஞானச் செல்வங் கைவரப்பெற்றுப் பல புதுமைகளை யியற்றியவர். தண்டபாணி அடிகள், திருச்சிற்றம்பல ஞானியார், பாஞ்சாலங்குறிச்சி சுப்பிரமணிய துரை, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், திருச்சிவபுரம் வேலாயுத முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

கலிவெண்பா

"உறுவார்க் குறுதுணையாம் உள்ளன்பில் நேயம்
பெறுவார்க்குப் பேரின்பப் பேறும்—செறுவார்க்கும்
வெண்பணிலஞ் சூழ்குருகூர் மெய்ஞ்ஞான சித்தனருட்
பண்பணிலம் பாடு படுநெஞ்சே—பெண்பணிக்கே
எந்நாளும் என்றால் இனிப்பிறவா இன்பநலம்
எந்நாட் பெறுவ தியம்பு."

என்பது மும்மணிக்கோவையில் ஒரு பாட்டு.

## ௪0௧. கிருட்டிணபுரத்துக் கவிராயர்

இவருடைய இடுகுறிப்பெயர் இன்னதென்று தெரியவில்லை. சொக்கம்பட்டி பெருநிலக்கிழாருடைய அவைக்களப் புலவராக இருந்தார் மேற்படி பெருநிலக்கிழார் பேராற்றலும் அஞ்சா நெஞ்சமும் படைத்தவர் அவருடைய தொழுவத்தில் இருந்து மாடு ஒன்றை அடித்துக்கொண்டு போவதற்காகப் புலி ஒன்று வந்து தொழுவத்தில் பதுங்கியிருந்தது. செய்தியை உணர்ந்த அவர் விரைந்து சென்று தடியொன்றினால் அப்புலியை அடித்துக் கொன்றுவிட்டார். இச்செய்தியை அறிந்த இக்கவிராயர்,

"செப்பும்வீ ரர்க்குள் புலிசெம் புலிவலங் கைப்புலியாம்
முப்புலி வாழும் இடந்தேடி வந்து முரண்டுசெய்து
தப்பிலி யான மடப்புலி யேதடி யாலடிபட்
டிப்படி யேனிறந் தாய்சூர வானுக் கியல்பல்லவே."

என்னுங் கட்டளைக் கலித்துறைப் பாடலைப் பாடினார் மேற்படி பெருநிலக்கிழார் மானிய நிலங்களால் மிகுந்த பொருளிழப்பு ஏற்படுகிறதென்று இனம் நிலங்களையெல்லாம் கைப்பற்றத் தொடங்கினார். முதலில் இவருக்குக் கொடுத்திருந்த நிலங்களையே கைப்பற்ற முடிவு செய்தார். அப்பொழுது இவர்,

"வட்டங் கொண்டு புவிமன்னர் கும்பிட
வாங்குங் கீர்த்தி வடகரை ஆதிக்கம்
திட்டங் கொண்டது மானியச் சேகரம்
செய்யில் ஆயிரங் கோட்டைக்கு மேலுண்டு
நட்டங் கொண்டது நான்மட்டு மாவிது
ஞாயமாசெம் புலிவ லங்கைப்புலி
பட்டங் கொண்ட பெரிய சுவாமிபூ
பால ராச குபேரகெம் பீரனே."

என்று பாடினார்.

## ௪0௨. கிருட்டிணையர்

மாயூரத்துக்கு அண்மையில் உள்ள நல்லதுக்குடி என்னும் ஊரிலே இவர் இருந்தார். மாயூரத்தில் எழுந்தருளிய அவை யாம்பிகைமீது, "அவையாம்பிகை சதகம்" என்னும் பெயருடன் சதகம் ஒன்று இயற்றியிருக்கிறார். இந்நூல் அச்சிடப்பெற்று வெளிவந்துலாவுகிறது.

"தேனே பாலே சருக்கரையே
தெவிட்டா ருசியே கற்கண்டே
சீனி யுடன்முப் பழச்சாற்றில்
சிறந்த ரசமே செம்பொன்மலை
மானே மடலே மடக்கொடியே
வளர்ந்த வனமே திருவதன
மயிலே குயிலே அன்பரெலாம்
வாரிச் சொரியும் மருநிதியே
ஊனே என்றன் உயிர்க்குயிரே
உள்ளும் புறம்பே யுறுமொழியே
ஒளிசேர் கனகக் கற்பகமே
உதித்த சுடரே திருப்பரமே
வானே வானின் வளிக்கனலே
வனமே பூவே வரைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அவையாம் பிகைத்தாயே."

என்பது மேற்படி சதகத்தில் ஒரு பாட்டு. ✕ (253 இதையும் பக்கம் நோக்க)

## ௪0௩. கிருட்டிணய்யர் - கொ. ரா.

(20—நூ.)

சோழவளநாட்டில் அம்மாப்பேட்டையில் இருந்தவர். சௌராட்டிர வகுப்பைச் சேர்ந்தவர். தமிழ்ப்புலமை பெற்று விளங்கிய இவர் செய்யுட்கள் பல பாடியுள்ளார். வேங்கடராம சாத்திரியார் இயற்றிய தஞ்சைத் தலபுராண நூலுக்குச் சிறப் புப்பாயிரம், தஞ்சைத்தலமான்மியச் சுருக்கம் முதலிய பாடல்கள் இயற்றியுள்ளார். இவை வெகுகாலத்திற்குமுன் வெளிவந் துள்ளன. இவைகளைத் தவிர வேறு தனி நூல்களை இவர் இயற்றியதாகத் தெரியவில்லை.

"தஞ்சனோ டமரி மைழந்த சாமள வருணக் காளி
மஞ்சமர் பவளக் காளி வலமிதங் கோடி யம்மை
கஞ்சனே ழிருடி விண்ணோர் கனநிதிக் கிழவன் வேதச்
செஞ்சொலாள் துதித்துப்பூசை செய்தமாத் தஞ்சை க்ஷேத்ரம்"

என்பது தஞ்சைத்தலமான்மியச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## ௪0௪. கிருபாசங்கர ராசா

(20—நூ.)

இவர் தொண்டைவள நாட்டிலே கோரஞ்சூழூர் என்னும் ஊரிலே கந்தசாமிக் கவிராயர் என்பவருடைய புதல்வராகத் தோன்றியவர். தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து "மகனறிவு தந்தையறிவு" என்பதற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கினார். நாதமுனி முதலியார் என்பவர் இயற்றிய திருமயிலைத் தலபுராணத்திற்கு இவர் அளித்த சிறப்புப் பாடல்களில் இரண்டைக் கீழே காண்க:

"பார்த்தாலுங் கண்மகிழும் படித்தாலும்
மனமகிழும் பாடல் தன்னைக்
கூர்த்தாலும் பொருளதனால் குவலயமுந்
தான்மகிழுங் கோதி லாத
தீர்த்தான்றன் சரிதமதைப் பாடவென்ன
தவம்புரிந்தான் தேவர்க் கெல்லாம்
ஆர்த்தாரான் பங்கில்வளர் அழகியகற்
பகவல்லி அருள்பெற் றோனே.

தேன்கசக்கும் பால்கசக்கும் தீங்கனியின்
சுவைகசக்குந் திங்கள் சூடும்
மான்கரத்தன் அருள்சரித மயிலையின்றன்
புராணமதை மகிழ்ந்து கேட்போர்
ஊன்இனிக்க உயிர்இனிக்க உடலினிக்க
உவட்டெடுத்திங் குயர்ந்து பொங்கி
வான்கலந்தோர் பேரின்பம் விசேடமென
மனதினிலே மதித்தி டாரே."

## ௪0௫. கீழ்வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகர்

இவர் தஞ்சைமாவட்டத்தில் உள்ள கீழ்வேளூர் என்னும் ஊரில் வசித்திருந்தார். திருவாரூர் இலக்கண விளக்கம் வைத்திய

நாத தேசிகருடைய வழிமுறையில் கல்வி பயின்று தெளிந்தவர். இலக்கண விளக்கத்தை நன்ருக ஓதியுணர்ந்திருந்தார். பெரும் புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை பல நூல்களைக் கற்றுத் தேர்ந்து எல்லோராலும் நல்ல புலவர் என்று மதிக்கப்பட்டிருந்த காலத்தில் இவர் இலக்கண விளக்க நூலைப் பாடஞ் சொல்லுவதில் வல்லவர் என்று உணர்ந்தார். இலக்கண விளக்கத்தைப் பாடங் கேட்க விரும்பினுர். திரிசிரபுரத்தில் இருந்து தக்க காணிக்கைப் பொருளுடன் கீழ்வேளூருக்குச் சென்ருர். தம் விருப்பத்தை அவருக்குத் தெரியப்படுத்தினுர். அவருடன் இருந்தவர்கள் பாடங் கேட்டால் செய்யவேண்டியதைத் தெரியப்படுத்தினுர்கள். பிறகு இவரைத் திரிசிரபுரத்திற்கு அழைத்துச் சென்ருர். வேண்டிய வசதிகளையெல்லாஞ் செய்துகொடுத்து இவரிடம் பாடங்கேட்கத் தொடங்கினுர். தேசிகருடைய கைப்புத்தகத்தில் தாம் தேசிகருடைய மாணவர் என்று கையெழுத்துச் செய்து கொடுத்துப் பாடங் கேட்டார். மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கட்கே இவர் பாடஞ் சொல்லியபடியால் பிறகு இவருடைய மதிப்பு மிகுதியாயிற்று. பலபேர் இவரிடம் பாடங்கேட்கத் தொடங்கினுர்கள். பலருக்குக் கல்வி கற்பித்ததையல்லாமல் இவர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

## ௨௦௬. குகபாததாசர்

இவர் புதுக்கோட்டையைச் சார்ந்த புல்வயல் என்னும் ஊரில் எழுந்தருளிய குமரக்கடவுளை முன்னிலைப்படுத்திக் குமரேச சதகம் என்னும் நூலைப் பாடியிருக்கிருர்.

“ வன்னமயில் ஏறிவரு வேலா யுதக்கடவுள்
மலைமேல் உகந்த முருகன்
வள்ளிக் கொடிக்குமுன் வேங்கைமர மாகினேன்
வானவர்கள் சேனுபதி
கன்னன்மொழி உமையாள் திருப்புதல்வன் அரன்மகன்
கங்கைபெற் றருள்புத் திரன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுள்குன் றக்குடியி னன்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேல்
பற்றுகுக பாத தாசன்

பாங்காய் உரைத்ததமிழ் ஆசிரிய விருத்தமாய்ப்
பகர்சதகம் நூறு கவியும்
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாளினுங் கற்ற பேர்கள்
ராசயோ கம்பெறுவர் பதவிதா னும்பெறுவர்
நவில்முத்தி யும்பெறு வரே.''

என்பது சதகத்தின் இறுதிப் பாட்டு.

## ௪0எ. குகை நமச்சிவாயர்

இவர் தெய்வத்திருவருள் கைவரப் பெற்றவர். திருவருணை மலையில் உள்ள குகை ஒன்றில் இவர் வாசஞ் செய்திருந்த படியால், இவருடைய பெயர் குகை நமச்சிவாயர் என வழங்கி நின்றது. மெய்யறிவிற் சிறந்து விளங்கிய இவருக்குக் குரு நமச்சிவாயர் என்பவர் மாணவராக அமைந்து நின்றார். குகை நமச்சிவாயர் அருணகிரியந்தாதி என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

'' கங்கா தரனே ! கடையேனை எந்தநாள்
அங்கா தரவாய் அழைக்குநாள்—நங்காதல்
பார்க்குநாள் சோணேச பார்த்துப் பரகதியில்
சேர்க்குநாள் எந்தநாள் செப்பு.''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௪0அ. குஞ்சி அய்யா பாரதிகள்

இவர் பாண்டிவளநாட்டில் திருச்செந்தின் மாநகரத்தில் வசித்திருந்தவர். அட்டபந்தன செடிபந்தனக் கவிதைகள் என்னும் நூலை இவர் பாடியுள்ளார். அட்டபந்தனக் கவிதை நாற்பத்தேழு பாடல்கள் அடங்கியது.

'' பாரதகண்டத் திடைநதி கடலும்
பருப்பத முடன்பல வளனுஞ்
சீருறுஞ் செந்தின் மாநக ரென்றே
செப்பினர் கேட்டுள மகிழ்ந்து
வாரமா யுறையுங் கன்னிய ரோடும்
வருதிரி சுதந்தர ரோடும்
வீரர்களோடும் வந்திவ ணன்றே
மேவினன் யாவர்க்கு மேலோன்.''

என்பது அட்டபந்தனக் கவிதையில் ஒரு பாட்டு. இந்நூலுக்குத் திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகள், அழகிய சொக்கநாத பிள்ளை, தா. நெல்லையப்ப பிள்ளை, ச. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இவருடைய பெயர் குஞ்சி பாரதிகள் என்றும் வழங்கியது. ஊற்றுமலை இருதயாலய மருதப்பத்தேவர் இவருடைய காலத்தவர். வறுமையால் வாடிய இவர் மேற்படி பெருநிலக்கிழார்மீது செய்யுள்கள் இயற்றிக் கொண்டுபோய்ப் பரிசில் பெற்றுவந்தார். அவர்மீது இவர் ஒரு சமயம் பாடிய பாடலொன்றை அடியிற் காண்க:

"பொன்னமர் புயாதிபுண குணபோச மகராச
புரவலர்கள் புகழ்நே சனே
பொங்கமுறு சங்கநிதி தங்கிவளர் செங்கையாய்
புத்தமுதம் ஒத்த மொழியால்
பன்னுதமிழ் நாவலரெ லாந்துதித் திடவரும்
பாக்யமக லாத சேரமா
பார்த்திபா எங்களித யாலயகு பேரனே
பகருவேன் ஒன்று கேண்மோ
மன்னும் பதஞ்சடையி லாதகோ சிகம்வாவு
மானதனை மருவாக் கலை
வாரொடுந் தோலிட் டிறுக்கியே கையால்
மடக்கியடி யாஉ டுக்கை
கன்னமதம் இல்லாத நாகம்வெம் போர்செயக்
கதியதில் லாத தானை
கம்மியர்கள் பண்ணுத ஆபரண மும்பொறும்
கருணையால் தந்தருள் வையே."

இச்செய்யுளில் இருந்து இவருடைய புலமைத்திறத்தை நாம் ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம்.

## ௨௦௧. குஞ்சுமூசுப் புலவர்

குழந்தைநகர் என்று பெயர்பெற்ற தேங்காய்ப் பட்டினத்திலே இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் சையிது முகமது. குஞ்சுமூசுப் புலவர் தக்க அறிஞர்களிடத்திலே கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கினார். முகமதிய சமயத்தினராகிய இவர், சையிதத்துப் படைப்போர், சலாத்து மாலை, அசபு மாலை, தூதுரையின்மாலை, இறவு சுல்கூல் படைப்போர், மணம்

புரீ மஸ்அலா முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இறவு சூ கூல் படைப்போர் 2431 பாடல்களையுடையது.

“ எங்குலக் கொழுந்தாய் இருவிழி மணியாய்
இலங்கும்என் இருதயக் கனியாய்த்
திங்களா னனத்தின் புதல்வனுக் கிரங்கிச்
செழுநிதி ஆயிரம் களஞ்சி
பொங்கிய மிசிருர்க் கலிங்கமில் விலக்கம்
புகழ்பெற வயமொரு நாளும்
அங்கவன் உரைத்த அவதியிற் கொடுபோய்
அளிப்பதற் கடிமையாற் றகுமோ ?

மாசகலும் ஆதியை மகிழ்ந்தினி திறைஞ்சித்
தேசுமகு முதுபதம் சிந்தையுற வைத்தே
காசில்அபூ பக்கர்கடி தாசினை யெடுத்தே
சூசிதனில் நீலமை துவைத்தெழுது வாரால்.”

என்பன இவர் இயற்றிய சையிதத்துப் படைப்போரில் இரண்டு செய்யுட்களாம். இவர் கல்வி கற்றது மலையாள நாட்டில் வால கவிப்புலவர் என்னும் பெயருடையவரிடம் என்பர். இவரிடமும் வியத்தகு நிகழ்ச்சிகள் பல நிகழ்ந்தனவாம்.

இவர் இறுதிநாளில் புண்ணியப்பதியில் உடலை விடவேண்டு மென்று எண்ணிப் புறப்பட்டாராம். தாம் காலமாகிவிடின் அப் பொழுது தம் மனைவியின் கழுத்தில் இருக்கும் கரியமணி தானுகவே அறுந்து கீழே விழுமென்றும், அவ்வாறு விழுவதைக் கொண்டு தாம் காலமானதை உணர்ந்துகொள்ளலாம் என்றும் கூறிவிட்டுச் சென்ருராம். அவ்வாறே புலவர் காலமான அதே நாளில் அவருடைய மனைவியின் கழுத்தில் இருந்த கரியமணி அறுந்து விழுந்துவிட்டதாம்.

## ௪௧௦. குட்டிசாமி நாயகர்
### (20 - நூ.)

மகாபலிபுரத்தில் வாழ்ந்திருந்தவராக எண்ணப்பெறுகிருர். இவருடைய சொந்த ஊர் திருப்போரூர்க்கு அண்மையில் உள்ள கோவளம் என்பது. இவரிடம் பலர் கல்வி கற்றுச் சிறந்த புலமை பெற்ருர்கள். இவருடைய மாணவர்களில் ஒருவராகிய இராச கோபால முதலியார் என்பவர் இயற்றிய மல்லாபுரத்தல மகாத்

மியச் சுருக்கக் கொம்மிப் பாடல் என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பொன்னியலுந் தமிழ்க்கொம்மிப் பாடன்மூ
வியமாகப் போந்து சொற்றான்
அன்னவனு ரெனிற்சோழ வேளாள
குலதிலகன் அன்பின் மிக்கான்
பன்னருஞ்சீர்க் கடன்மலை யம்பதியன்
ராசகோ பால னாகும்
நன்னயஞ்சேர் புலவரெலாம் இவன்கல்வித்
திறமைக்கு நயப்பர் மாதோ."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## சகக. குட்டியக் கவுண்டர்

ஏறக்குறைய இருநூற்றெழுபத்தைந்தாண்டுகட்கு முன் கோயமுத்தூர் தாலுகா செட்டிபாளையம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் இளமைப் பருவத்திலேயே கண்ணிழந்து மருதமலை முருகன் திருவருள் பெற்றவர். நிலத்திற்குள் 48 நாள் சமாதி செய்திருந்தவர். இவர் இயற்றிய நூல்கள்: மருதீசர் சதகம், மருதீசர் பதிகம், தாய்மகளேசல், பேரூர் பச்சைநாயகி பதிகம், அரசம்பல விருத்தம், பச்சைநாயகி அந்தாதி, பஞ்சாங்க கணித மஞ்சரி, கிரககணித மஞ்சரி முதலியன.

## சகஉ. குணசாகரர்

பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட ஒரு சமணப் புலவர். அமிதசாகரர் என்பவர் இயற்றிய யாப்பருங்கலக் காரிகைக்கு அரிய விரிவுரை யெழுதிய பெரும்புலவர். இவருடைய உரைநயங்களை விரித்துக் கூறப்புகின் மிக விரியும். யாப்பருங்கலம் என்னும் அரிய நூலைச் செய்தவரும் இவரே என்பர்.

"யாப்பருங் கலநனி யாப்புற வகுத்தோன்
தனக்குவரம் பாகிய தவத்தொடு புணர்ந்த
குணகடற் பெயரோன் கொள்கையில் வழாத்
துளக்கறு கேள்வித் துகடீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே."

என்பது யாப்பருங்கலம்.

## சகங. குணவீர பண்டிதர்

பன்னிரண்டாம் நூற்றாண்டில் இருந்த சமணப்புலவர் இவர் தொண்டை நாட்டிலே களத்தூரிலே பிறந்தவர். நேமிநாதம், வச்சணந்திமாலை என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார். "கற்றவர்புகழும் களந்தையென் பெரும்பதி, குற்றமில் வாய்மைக் குணவீரபண்டிதர்" என்று இவரை அறிஞர்கள் பாராட்டியிருக்கின்றனர். இவர் இயற்றிய நேமிநாதம் தொல்காப்பியச் சுருக்கமாக வெண்பா யாப்பினால் அமைந்தது என்பது,

"தொல்காப் பியக்கடலின் சொற்றீபச் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோட்டும் படகென்ப—பல்கோட்டுக்
கோமிகா மற்புலனை வெல்லுங் குணவீர
நேமிநா தத்தின் நெறி."

என்பதாற் பெறப்படும்.

## சகச. குதம்பைச் சித்தர்

சித்தர்களில் ஒருவர்; குதம்பை என்பது அணிகலம். அணிகலன்களை அணிந்த ஒரு பெண்ணை முன்னிலைப்படுத்திப் பாடியபடியால் இவருக்கு இப்பெயர் வந்ததென்பர்.

"வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்பார்க்குப்
பட்டய மேதுக்கடி—குதம்பாய்
பட்டய மேதுக்கடி.
மெய்ப்பொருள் கண்டு விளங்குமெய்ஞ் ஞானிக்கு
கற்பங்க ளேதுக்கடி—குதம்பாய்
கற்பங்க ளேதுக்கடி."

என்பது இவருடைய பாடல்.

## சகரு. குப்புச்சாமிக் கிராமணியார்
(கி. பி. 1868)

இவர் சென்னைமாநகரில் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் தியாகராய கிராமணியார். இவர் மாணிக்கவாசகர் வரலாற்றை நாடகக் காப்பியமாகச் செய்திருக்கிறார். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார்,

புதுவை, க. சுப்பராய முதலியார், சிதம்பரம் ஆயுள்வேத பண்டிதர் செ. வேங்கடாசல முதலியார், புரசை முருகப்ப உபாத்தியாயர் முதலியோர் சிறப்புப் பாக்கள் பாடியுள்ளனர். பரிகள் நரிகளாக மாறிய பின்பு பாண்டியன் திருவாதவூரரைப் பார்த்துக் கேட்டல்:

"பொருளெலாங் கொடுபோய் நல்ல
புரவிகள் கொண்டு வந்தீர்
இரவில்அப் பரிகள் எல்லாம்
எங்குமே கூச்சல் இட்டு
நரிகளாய்ப் போன தென்ன
நல்லமந் திரியே யார்க்கும்
தெரியஇச் சபையில் அந்தச்
செய்தியைச் சொல்லு வீரே."

## சகக. குப்புச்சாமி நாயுடு - த
## (1913)

இவர் மதுரைமா நகரில் இருந்தவர். புலவர் என்று பெயர் பெற்று விளங்கியவர். இவர் இயற்றிய நூல்களில் திருப் போரூர்ச் சுப்பிரமணியர் வருகைப் பத்து, சடாமுனி நவரத்தினம் என்னும் இரண்டு சிறு நூல்கள் மட்டும் அறியப்பெறுகின்றன.

"கந்தா வருக புனக்குறத்தி
காந்தா வருக பன்னிரண்டு
கையா வருக கனகதண்டைக்
காலா வருக வாலையருள்
மைந்தா வருக நந்தாத
வாழ்வே வருக தாழ்வில்சிந்தா
மணியே வருக பிணிதீர்க்கும்
மணியே வருக மந்தி உந்தித்
திந்தா வெனக்கை யாற்பலவின்
செழுங்காய் எனுமத் தளமுழக்கத்
தேமாங் குயிலொத் திசைப்ப வண்டு
செழும்பண் பாட மயிலாடும்
முந்தா டரங்காஞ் சோலைமலை
மூர்த்தி வருக வருகவே
முதல்வா சமர புரிவாழும்
முருகா வருக வருகவே."

என்பது வருகைப்பத்தில் ஒரு பாட்டு.

## சகஎ. குப்புச்சாமிப் பிள்ளை - அ
(20 - நூ.)

சோழவள நாட்டிலே சோழமாதேவி என்னும் ஊரிலே சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கியிருந்தவர். சந்தப்பாடல்கள் இயற்றுவதில் வல்லவர். சதாசிவப் பிரமம், சிரங்கம்-குரு சுப்பிரமணிய ஐயர், ஏ. எம். சடகோபராமாநுசாச்சரியார், திரிசிரபுரம் மு. நடேச முதலியார், அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை முதலியோர் இவர் காலத்தில் விளங்கிய புலவர்கள். இவர் இயற்றிய சாத்துக்கவி ஒன்றை அடியிற் காண்க.

"விண்புகு தருநிறை தண்பொழில் கழனியும்
விரும்புநல் வளந்தரலால்
விழைதகு மடமனை மகவுற வினரொடு
வியக்குறும் வாழ்வினராய்க்
கண்புகு நுதலரன் அன்பின ரொடுவரு
கவிஞரும் ஏனையரும்
கனிந்துள மகிழ்வுற விழைவன வுதவுறு
கனமிகு நல்லோர்சேர்
மண்புகழ் அணிவயல் ஊர்தனில் இனிதமர்
வடிக்கதிர் வேற்குமரன்
வசைமென் மலரடி தனில்வர முறுங்கவி
மாலையைச் சூட்டினனால்
திண்புகு நலமணி மாளிகை நிரையொளிர்
சிரபுர நகர்வாழ்வோன்
சீர்வளர் சுந்தர நாதனெ னும்பெயர்த்
தீந்தமிழ் நாவலனே."

## சகஅ. குப்புச்சாமி முதலியார்

சென்னை திருமயிலையை அடுத்த கிருட்டிணாம் பேட்டையில் தருமசிவ முதலியார் என்பவருக்கு முதன் மைந்தராக இவர் பிறந்தார். தம்முடைய மைத்துனரான ஆனார் சிங்காரவேலு முதலியார் என்பவரிடம் இளமைதொட்டே இலக்கண இலக்கிய நூல்களைக் கற்கத் தொடங்கினர். சொற்பொழிவு செய்யும் திறமை பதினாலாம் ஆண்டிலேயே அமைந்தது.

இராயப்பேட்டை வெஸ்லி கல்லூரியிற் சில திங்கள் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். பிறகு தமிழாசிரியர் வேலையை

விட்டுவிட்டுப் பி. ஆர் அண்டு சன்ஸில் எழுத்தராக அமர்ந்து பல ஆண்டுகள் அவ் வேலையைச் செய்தார். தம்முடைய அலுவலகத்திலேயே ஓழிவு நேரங்களில் தமிழ்க்கல்வியைப் பலருக்குங் கற்பித்து வந்தார். அருணகிரியந்தாதி, சோணசைலமாலை, அட்டப் பிரபந்தம் முதலிய நூல்களை மாணவர்களுக்குப் போதித்தார். இதனால் இவர் வேலைபார்த்த அலுவலகத்திலேயே இவருக்கு ஆசிரியர் என்று பெயர் உண்டாயிற்று.

செங்கற்பட்டு (செங்கழுநீர்ப் பேட்டை), திருக்கழுக்குன்றம், சென்னை முதலிய இடங்களிற் சைவ சபைகள் சில ஏற்படுவதற்குத் தாம் மூலகாரணராக இருந்து அச் சபைகளில் அடிக்கடி சொற்பொழிவுகள் நடத்தினர். திருமயிலை இசைச் சபை (சங்கீத சபை) யைத் தொடங்கியவர்களில் இவரும் ஒருவர்.

1912-ஆம் ஆண்டிற் காஞ்சிபுரத்திற் கூடிய சைவசித்தாந்த மகாசமாசத்திற்கு இவர் ஒரு சொற்பொழிவாளராகச் சென்ற போது இவரையே அச் சமாசத்தின் அமைச்சராக இருக்குமாறு சமாசத்தினர் கேட்டுக்கொண்டனர். இவரும் அதற்கு இணங்கி, அப் பொறுப்பை ஏற்று 1913-ஆம் ஆண்டுமுதல் 1917-ஆம் ஆண்டுவரை நன்கு நடத்திவந்தார். இவருடைய பொறுப்பில் சமாசம் நன்கு வளர்ந்தோங்கிச் சிறந்தது.

1918-ஆம் ஆண்டுமுதல் 1920-ஆம் ஆண்டுவரை சித்தாந்தம் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்தார். திருவாரூர் நான்மணி மாலை உரை, தேவார தசபுராண விளக்கவுரை முதலியன இக் காலத்தில் புதிதாக வெளிவந்தன. மெய்கண்ட சாத்திர மூலத்தை முதல்முதல் அச்சிட்டுப் பலருக்கும் நன்கொடையாக வழங்கினர்.

1922-ஆம் ஆண்டு முதல் திருமயிலை திருவள்ளுவர் கோயில் முதலிய பல இடங்களிற் பல ஆண்டுகள் திருக்குறளைப் பலருக்கும் கைம்மாறு கருதாமலே பாடஞ்சொன்னர். பரிமேலழகர் உரையை விளக்கித் திருக்குறள் விளக்கவுரை யொன்று எழுதிச் சிறுசிறு புத்தகவடிவாக வெளியிட்டார். அவ் வுரை "திருக்குறள் விளக்கம்" என்னும் பெயரோடு விளங்குகிறது. திருக்

குறள் பரிமேலழகர் உரை முழுவதையும் மனப்பாடமாக ஒப்பு விக்கும் ஆற்றல் படைத்தவர்.

சென்னை வளர்ச்சி நெறி அமைச்சராகவிருந்த டி. என். சிவ ஞானம் பிள்ளை, நீதிமன்ற நடுவராக இருந்த சுப்பையா முதலியார் ஆகியோருக்குத் தமிழ் நூல்களையும் சைவ சமய நூல்களையும் போதித்தார். இவருடைய வீட்டில் எப்பொழுதும் மாணவர்கள் பலர் வந்து பாடங்கேட்டுக்கொண்டே யிருப்பார் கள். இவருடைய சொற்பொழிவுகள் கேட்டார்ப் பிணிக்குந் தகையவாக விளங்கும். இவரிடம் ஒரு நூலை ஒருமுறை பாடங் கேட்டவர்கள் பிறகு எளிதில் மறவாமல் உள்ளத்தில் பதிய வைத்திருப்பார்கள்.

கம்பராமாயணம், திருவிளையாடற் புராணம், பெரிய புராணம் முதலிய நூல்களைத் தாமாகவே கற்றுணர்ந்து அவற்றின் நயங்களைப் பிறருக்கும் புகட்டிக்கொண்டிருந்தார். இவருடைய உள்ளத்தில் பரந்த நோக்கம் குடிகொண்டிருந்த படியால் சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறுமல் ஒன்றே குலனும் ஒருவனே தேவனும் என்னுங் கொள்கையோடு வாழ்ந்திருந்தார். முகமதிய சமயத்தினர்கூட இவருடைய அறிவுரையைக் கேட்டு மகிழ்ந்தனர். இவர் 1935-ஆம் ஆண்டு ஜுன் திங்கள் பதினுரும்நாள் இவ்வுலகவாழ்வை நீத்து இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

## சகக. குமரகுருபர உபாத்தியாயர் - கி (19 - நூ.)

சோழவள நாட்டில் நாகபட்டினத்தில் கிருட்டிணசாமி உபாத்தியாயர் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றி யவர். தந்தையாராகிய கிருட்டிணசாமி உபாத்தியாயர் சிறந்த தமிழ்ப்புலமை சான்றவர். இவர் அவரிடமே கல்வி கற்றுத் தேறிப் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் எட்டுகுடி வடிவேலர் மாதப்பத்து, வாரப்பத்து, ஆநந்தக்களிப்பு முதலியன.

'போதுற்ற நான்முகத் தேவும் புரந்தரன் போற்று முன்றன்
பாதத்தை யன்பர் தமக்கருள் வாய்பரை நன்ற மைந்தா
சீதக்களப மணிமுலை வள்ளிதெய் வானைபங்கா
ஆதித்த வாரம் வருவாய் எட் டிக்குடி அற்புதனே.''

என்பது வாரப்பத்தில் ஒரு பாட்டு. வாரப் பத்து, மாதப் பத்து முதலிய நூல்கள் பிறராலும் பிற தலத்திற்குப் பாடப் பட்டுள்ளன.

## ௪௨0. குமரப் பிள்ளை

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன தெரியவில்லை. இவர் வள்ளியம்மை நாடகம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

'' திருநகர்த் தணிகை மேவும் சிவன்சுதன் வேலர் மீதில்
அருந்தமிழ் நாட கத்தை அம்புவி தனிலே பாட
வருவினை அகற்றும் எங்கள் வாம்புலி யூரில் மேவும்
கரிமுகக் கடவுளான கணபதி காப்புத் தானே.''

என்பது நூலின் காப்புப்பாடல்.

## ௪௨க. குமாரசாமிப் பண்டிதர்

வடாற்காடு மாவட்டத்தில் திருப்பத்தூரில் இருந்தவர் குடியேற்ற நல்லூர்ப் புராணம் என்னும் புராணத்தை இவர் அறுநூற்றுப் பதினொன்கு செய்யுள்கள் அமையப் பாடியுள்ளார். இவர் திருப்பத்தூர் சொரூபானந்த சபையில் புலவராக இருந்த தோடு மேற்படியூர் உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகவும் பணிபுரிந்திருந்தார்.

'' ஓடின நடந்தன குரங்கெனக் குதித்தன
வுறுத்தன வுவாவை உழுவைத்
தேடின விரைந்தொரு கணத்துமலை சாரலில்
திரிந்தன எதிர்ந்து பொழிலில்
கூடின பிரிந்தன எறிந்தன அவின்றிரளை
கூவின உறத்த ஒலியால்
சாடின மலர்ச்சினை தரித்தன உதிர்த்தன
தனித்தவன் இருக்கு மிடமே.''

என்பது கருப்புலிப்படலத்தில் ஒரு பாட்டு.

## சஉஉ. குமராண்டி ஞானியார்

(கி. பி. 1898)

இவர் மலையாள நாட்டில் உசரவிளை என்னும் இடத்தில் தோன்றியவர். செந்தமிழ் மொழியை நன்கு கற்றுப் புலமை பெற்று விளங்கினர். அறுமுகப்பெருமான் எழுந்தருளிய பதிகள் தோறும் போய் வழிபாடு செய்தலை மேற்கொண்டிருந்தார். சுப்பிரமணியக் கடவுள்மீது ஹரி முதல் ஃ வரைக்கும் அமைந்துள்ள எழுத்துக்களைக்கொண்டு சடாட்சர விருத்தம் என்னும் சிறு நூலை இயற்றியுள்ளார். இஃது இருபத்து மூன்று பாடல்களால் ஆகியது.

"சிவவசிய சரவண பவாவசிய சாம்பிராச்சிய
திருவாணி தேவி வசிய
செகம்வசிய ஓம்நமோ நாராய ணுவசிய
சிராம செயம்வ சியவா
எவருமென துளம்வசிய வாலைதிரி புரைபுவனை
என்னிதய மாகி வசிய
எனதுமனம் வசியசெக ராசரா சேந்திரரும்
எப்போதும் என்னுள் வசிய
அவமிருகம் அதுவசிய பூதப்ப பசாசுசுரர்
ஆங்கார அரவு வசிய
ஆகாத சத்துருவும் என்னடிக் கீழ்வசிய
அருள்தந்தும் எனையா ளுவாய்
தவம்வசிய மேன்மைதரும் வள்ளிமண வாளனே
சாமிநான் உனைநம் பினேன்
சதுர்மறைகள் அடிமுடியும் நடுமயமும் நிறைகின்ற
சண்முக சிவாநந் தனே."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## சஉங. குமாரகவிராய தேசிகர்

(19—நூ.)

இவர் திலகண்ட குலசேகர பாண்டியன் தென்காசியில் நிலைநிறுத்திய சந்திரசேகரகுரு பரம்பரையில் நாற்பத்திரண்டாவது தலைமுறையில் வந்தவர். இவர் அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் எனவும் வழங்கப்பெறுவார். சைவசமயச் சான்றோர்

பலர் தென்காசிப் புராணத்தைத் தமிழில் பாடித் தரவேண்டும் என்று இவரை வேண்டிக்கொள்ள இவர் அப் புராணத்தைக் கொல்லம் ஆயிரத்துப் பதினறில் பாடி முடித்தார். உச் செய்தி :

" ஆயிரத்துப் பதினறு மாண்டிற்பங்
குனியினிரு பத்தே ழாநாள்
தாயிரதி சோதிதுலா லக்கினத்தில்
தென்காசித் தொல்பு ராணம்
பாயிரத்தோ டாயிரத்தெண் ணூற்றிருபத்
தெட்டுப்பாப் பகர்ந்து முற்றிற்
றேயிரவும் பகலும்விசு வேசனென்பார்
குமாரகவி எழுது மீதே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது. நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ள தட்சணமூர்த்தி தேசிகர்,

" ஆரியத்தில் உள்ளதிருத் தென்காசிப்
புராணகதை ஆராய்ந் தெண்ணிச்
சீரியற்று செந்தமிழால் உலகமெலாம்
புகழ்ந்தேத்தச் செய்து வாமேர்
நாரியற்று விசுவேசன் பதம்பணிந்து
நமையாளும் உலகாள் முன்னே
தேரியற்று சைவமகா சபையிலரங்
கேற்றியிசை நிலைபெற் ருனே."

என்று கூறுவதில் அரங்கேற்றிடம் முதலியவை பெறப்படு கின்றன.

## சஉச. குமாரகுலசிங்க முதலியார்
## (1868 - 1888)

19ஆம் நூற்றுண்டில் யாழ்ப்பாணத்தில் இருந்தவர்; கிறித்துவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லவர். சொற் பொழிவாற்றுவதில் வல்லவர். இவர் பதிவிரதை விலாசம் என்னும் நூலை இயற்றினர்.

" பொற்பில மாதரணி பூடணமாங் கற்புநெறி
விற்பனமே தென்று விளங்கவைக்கும்—அற்புதங்கள்
விஞ்சு பதிவிரதை மெச்சுவிலா சம்பாடக்
கஞ்சமனக் கர்த்தனடி காப்பு."

என்பது இவர் இயற்றிய பதிவிரதை விலாசத்தின் காப்புப் பாடல்.

## ௪உ௫. குமார சரசுவதி
(16 - நூ.)

கிருட்டிணதேவராயர் என்பவர் விசயநகரத்தை அரசாட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் இவர் அவருடைய அவைக் களப் புலவர்களில் ஒருவராக விளங்கியிருந்தார். இவர் சரசுவதி என்னும் பெயருடையவராக இருத்தலின் அந்தணராக இருக் கலாம் என்பது சிலருடைய கொள்கை. இவர் தமிழ்மொழியை அன்றித் தெலுங்கு, கன்னடம், இந்துத்தானி, வடமொழி ஆகியவைகளினும் புலமைபெற்றிருந்தார். இவர் பிறந்த ஊர் முதலியன அறியப்பெறவில்லை.

கிருட்டிணதேவராயர் பிரதாபருத்திரன் என்னும் அரசனைப் போரில் வென்று அவனுடைய மகளைத் திருமணம் புரிந்து கொண்டார். குமாரசரசுவதி இச் செய்தியை ஒரு வெண்பாவில் அடக்கிச் சிலேடைப்பொருளமைத்து,

> " கலிங்க மிழந்து துதிக் கைச்சங்கந் தோற்று
> மெலிந்துகட கம்நழுவ விட்டாள்—மலிந்தமலர்ப்
> பொன்னிட்ட மானகிட்ண பூபால உன்றனக்குப்
> பின்னிட்ட ஒட்டிரன்போற் பெண்."

என்று பாடியுள்ளார். இப் பாட்டு ஒட்டிரனைக் குறித்துக் கூறும்போது: கலிங்கநாட்டை இழந்தும் பல யானைக் கூட்டங் களைத் தோற்றும் கடகம் என்ற ஊரைவிட்டும் ஓடிப்போனான் என்றும், ஒட்டிரனுடைய பெண்ணைக் குறிக்கும்போது ஒட்டிர னுடைய பெண் கிருட்டிணதேவராயனுடைய வெற்றிப் பெருமைகளைக் கேட்டபோது உடையை நழுவவிட்டாள்; கையில் அணிந்துள்ள சங்கவளையல்கள் கழன்றன; காமவேதனை யால் உடல் மெலிந்து தோள்வளையும் கழன்றன" என்று பொருள்படும்.

அபிராமன் என்னும் பெயருடையவன் ஒருவன் குமார சரசுவதியைப் பார்த்து இழிவாக, " அவர் என்ன நான்குமொழி

களிலும் செய்யுள் பாடுகிறவரோ" என்று கூறினன். இம் மொழிகளைக் கேட்டவுடனே இவர்,

"கூத்தாடி லஞ்சக் கொடுக்கா வரேபேட்டிச்
சோத்தாட்டா வைவேசித் தொண்டனே—ஆத்தான
அந்த விழுப்புரமும் அம்பிநக ருங்கெடுக்க
வந்தகுலா மாவபிரா மா."

என்று ஒரு வெண்பாவைப் பாடி அவனை இழிவடையச் செய்தார். இப் பாட்டின் பொருள்; "கூத்தாடிப் பயலே! வேசி மகனே! அடே மகளைப் பெண்டாள்பவனே! இறுமாப்புக் கொண்டவனே! கொள்ளைகொண்டவனே! விழுப்புரத்தையும் அம்பிநகரையுங் கெடுக்கவந்த அடிமைப் பயலே" என்பது. லஞ்சக்கொடுக்கு: தெலுங்குமொழி. அரேபேட்டி சோத்; இந்துஸ்தானி. தாட்டன்; கன்னடம். ஆத்தானம்; வடமொழி. மற்றவை தமிழ். தனிப்பாடல்களைத் தவிர இவர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

## ௪உகூ. குமாரசாமிக் குருக்கள்

பாண்டிவள நாட்டிலே ஓட்டப்பிடாரம் என்னும் ஊரிலே ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தார். தமிழ்க் கல்விச்சாலை ஒன்றை ஏற்படுத்தி மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். புலமைக்கல்வி மிக்க இவர் நூல் கள் பலவற்றிற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பாமரசங் கத்தையு மெய்ப் பரமவனு
பூதிகொளப் பண்ணு வின்பக்
காமரசம் போற்காட்டிக் கன்மவிருட்
படாங்கிழிக்கக் கலிவெண் பாவால்
சேமரம ணீகரசந் தானசிவ
ஞானமுகில் சிறக்கச் சொன்ன
பூமரச மானமெனப் பொலி பதத்தாம்
புகழுடல் புகழார் யாரே."

என்னும் இப் பாட்டு சிவஞானம் பிள்ளை என்பவருடைய ஊடற் கலிவெண்பா என்னும் நூலுக்கு இயற்றியதாகும்.

## ௪உஎ. குமாரசாமி தேசிகர்
### (1894)

இவர் தொண்டைவள நாட்டிலே கல்பாக்கம் என்னும் ஊரிலே வாழ்ந்திருந்தவர் என்பது,

"ஆர்கவி யுலகத் தமரரும் வியக்கும்
சீர்மலி கச்சித் திருநக ரதனில்
கம்பையின் கரைமேற் கரையிலா வருளாம்
அம்பிகை பூசனை அகமகிழ்ந் தாற்றவும்
உம்பரு முனிவரும் யோகரும் பிறரும்
இம்பரும் இறைஞ்சி எண்ணிய பெறவும்
வேத வடிவாய் விளங்குமா வடிக்கீழ்ப்
போத மயமாய்ப் பொலிந்தினி திருக்கும்
திருவே கம்பர் திருவடி போற்றிக்
கருவே கந்தெறக் கற்பாக்க மென்னும்
தலமுறுங் குமார சாமியாம் புலவன்."

என்பதனாற் பெறப்படுகிறது. பெரும்புலமை பெற்று விளங்கிய இவர், ஏகாம்பரநாதர் யமகக் கலித்துறை யந்தாதி முதலிய பல நூல்களைப் பாடியுள்ளார்.

"சங்கங் கலந்த திருக்கச்சி மாநகர்ச் சங்கரன்வெண்
சங்கங் கலந்த களத்துமை பாகன் றரக்கதள்வா
சங்கங் கலந்த வளநீறு சாந்தெனத் தாங்கிபிர
சங்கங் கலந்த முறுதாள தன்றிச் சரணிலையே."

என்பது நூலின் முதற்பாட்டு. நூலைப் பாராட்டிக் கோயமுத்தூர் இலக்கண வித்துவான் சுப்பிரமணியம் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪உஅ. குமாரசாமிப் பிள்ளை (குறுக்கை)

சோழவள நாட்டிலே வேதாரணியம் என்று இந்நாளில் வழங்கும் திருமறைக்காட்டிற்கு அண்மையில் உள்ள குறுக்கை என்னும் ஊரில், சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். பொன்னுச் சாமித் தேவரின் விருப்பப்படி ஆறுமுக நாவலர் சேது புராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்தியபோது இவர் ஆறு

பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரந் தெரியவில்லை.

> "கங்கைஇலை கியசடில முடிஇறைவன்
> தனைஇமவான் களிக்க ஈன்ற
> நங்கைபுணர் தலைவனைப்பூ சித்துமனை
> நெக்குருகி நாடிக் கூப்பும்
> செங்கைஇரா கவன்இலங்கைக் கிறைவனுயிர்
> செகுத்தபழி தீர்த்த ஞால
> மங்கையணி எனவிளங்கு சேதுமான்
> மியமான வடநூல் தன்னை."

என்பது சிறப்புப்பாயிரத்தின் முதற்பாட்டு.

## ௪௨௯. குமாரசாமி முதலியார் - பழூர்
### (20 - நூ.)

இவர், இக்காலத்தில் லால்குடி என வழங்கும் திருத்தவத் துறைப் புராணம் பாடியுள்ளார். மேற்படி புராணம் பதினெட்டுச் சருக்கங்களையும் எழுநூற் றறுபத்தெட்டுப் பாடல்களையுங் கொண்டது. இவர் வடமொழியினும் வல்லவரென்று தெரிகிறது. இவர் தம்முடைய செய்தியை,

> "இருந்திடுஞ் சகாத்தம் ஆயிரத் தைஞ்நூற்
> றெண்பதி னுடனெட்டும் இசையப்
> பொருந்திய விசுவா வசுவரு டத்தின்
> புகழ்மதி மீனமுத் திரத்தில்
> திருந்திய புராணம் வடகலை தமிழாய்ச்
> செய்தனன் திருத்தவத் துறைக்கே
> வருந்தமிழ்க் குமார சாமியான் பழூர்
> வந்தவன் தொண்டைமண் டலனே."

என்று புராணத்திற் குறிப்பிடுகிறார்.

## ௪௩0. குமாரசாமித் தம்பிரான்
### (19 - நூ.)

பாண்டிநன்னாட்டில் வண்டானம் என்னும் ஊரில் வழிவழிச் சைவவேளாளர் குலத்தில் தோன்றியவர். திருவாவடுதுறை ஆதீனத்தில் பதினாறாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த

சுப்பிரமணிய தேசிகரிடம் தீக்கையும் துறவும் பெற்றவர். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்து அவர்களைப் புலவராக்கினுர். பிற்காலத்தில் திருப் பனந்தாள் காசிமடத்தில் தலைவராக அமர்ந்திருந்தார். யாழ்ப் பாணம் வடகோவை சபாபதி நாவலரைக் கொண்டு வடமொழி யில் இருந்த சிவகர்ணுமிர்த நூலைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார். இவர் இயற்றிய பாடல்கள் பல. அவற்றுள் ஒன்று:

> "பேனமார்ந் தொழுகும் பெண்ணைசூழ் வெண்ணெய்ப்
> பெருநகர் வாழுமெய் கண்ட
> ஞானமார் குரவன் நவின்றிடும் நூற்கு
> நன்மைசேர் பாடியம் இயற்றி
> ஊனமார் பிறவிக் கடலுழல் வோர்கட்
> குறுபுணை யாகவே அளித்த
> ஞானயோ கிகள்தந் திருவடிக் கமலம்
> நாஞ்சிரத் தணிந்துவாழ்த் தெடுப்பாம்."

என்பது இவர் சிவஞானமுனிவர்மீது பாடிய ஒரு பாட்டு. டாக்டர் உ. வே. சாமிநாதையர், பெரும்புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை முதலியோர் காலத்தில் இருந்தவர்.

## சஙக. குமாரசாமித் தேசிகர்

பாண்டிவள நாட்டில் வீரவநல்லூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவருடைய தந்தையார் பெயர் மாறியாடும் பெருமாள் சோதிடர். இவர் செய்த காலக்கணித நூல் குமார சுவாமீயம் என்று வழங்கப்பெறுகிறது. இந்நூல், மூலகாண்டம், சாதக காண்டம், முகூர்த்த காண்டம், சிந்தனு காண்டம் என்னும் நான்கு காண்டங்களையும் 54 படலங்களையும், 4312 செய்யுட்களையும் கொண்டு விளங்குகின்றது. இந் நூலைச் சோதிடர் பெரிதும் மதித்துப் பாராட்டிப் போற்றுகின்றனர். இந் நூலுக்கு இவர் ஆசிரியர் என்பது,

> "சோதிட மாகிய வேதிய நாத புராதனன் மால்முதலோர்
> ஈதிட மாய்வரு வாரெனில் யாவும் விடாதியல் பாகநவில்
> சோதிட மேதிட மாக நடாவு குமார சுவாமியும் யான்
> ஓதிட வேயென தோரகம் வாழ்பவன் ஆனை சகோதரனே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது. இந்நூல் முருகக் கடவுளால் அகத்தியருக்கு உணர்த்தப் பெற்றதென்றும் வட மொழியில் இருந்து இவரால் தமிழில் மொழிபெயர்த்து இயற்றப்பெற்றதென்றும் கூறப்படுகிறது. இந்நூல் அச்சாகி வெளிவந்துள்ளது.

## சஙஉ. குமாரசாமித் தேசிகர் - சிவ. சு. (20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே ஒட்டப்பிடாரம் அழகிய வீர பாண்டியபுரம் என்னும் பெயர்களையுடைய ஊரினர். கல்வி கற்றுச் செய்யுள் பாடுந்திறமையைப் பெற்ற இவர் பார்வதி யம்மன் திருக்கலியாண மகிமை, திருவுரு அட்டபந்தன சதகம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

"வள்ளிதெய் வானை யென்னும்
மாதரை மணம்பு ணர்ந்து
எள்ளினுள் எண்ணெய் போல
எங்குமே பரவி நின்று
துள்ளுமா மயில்மீ துற்றுத்
தொண்டரைக் காக்க வந்த
வள்ளலாம் முருக வேளின்
மலரடிப் பாதம் போற்றி."

என்பது திருவுரு அட்டபந்தன சதகத்தில் ஒரு பாட்டு. அம்பா சமுத்திரந் தாலுகா வழுதியூர், வ. தி. அழகுசுந்தரம் பிள்ளை, பாளையங்கோட்டை செயின்ட் பிரான்ஸிஸ் சேவியர் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## சஙங. குமாரசாமிப் பிள்ளை

தஞ்சை மாவட்டத்திலேயுள்ள மருதவனம் என்னும் ஊரில் தோன்றியவர். அதிவீரராமன் பட்டினத்தில் இருந்த புலிக் குட்டிக் கவிராயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுணர்ந்தவர். மருதவன புராணம் முதலிய சில நூல்கள் இவரால் இயற்றப்பெற்றன. இவர் அண்மைக்காலத்தில் வாழ்ந்

திருந்தவர். இவர் பட்டுக்கோட்டை நாடிமுத்துப் பிள்ளைக்கு எழுதிய பாட்டு.

"ஒளிமணியார் இனவளையும் ஒதுக்கலையார் கலையுலகில்
உள்ளோர் உள்ளம்
களிமணிமா டங்களும்பைங் காக்கயமுங் கவினேங்கக்
கங்கையான் மால்
தளிமிகுபட் டுக்கோட்டை தனிலுறைவோன்
வயித்திலிங்கத் தக்கோன் தந்த
நளிமிகுநன் னடிமுத்துக் குரிசிலென வெளிவந்தாய்
நல்லோன் என்றே."

## சஉச. குமாரசாமிப் புலவர்

ஈழவள நாட்டிலே உடுப்பிட்டிக் கோவிற்பற்றிலே வல்லிப் பட்டியிலே வேளாளர் மரபிலே, ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பிருந்தவர். இவர் புரந்தரன் நாடகம் என்னும் நூலையும் தனிப்பாடல்கள் பலவற்றையும் இயற்றியிருக்கிறார்.

## சஉரு. குமாரசாமி முதலியார் - கல்பாக்கம் (19 - நூ.)

இவர் குமாரசாமிக் கவிராயர் என்று அழைக்கப்பெற்றார். இராமாயணம் பாடிய கம்பர்மீது, "கம்பர் யமகவந்தாதி" என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றினார். அந்நூலுக்குக் காஞ்சீபுரம் பு. கனகசபை நாயகர் என்பவர் உரையெழுதினார். இவர் வாழ்ந்திருந்த ஊர் கல்பாக்கம். இவரைப்பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை. யமகவந்தாதியும் பார்வைக்கு அகப் பட்டிலது.

## சஉசு. குமாரசாமி முதலியார் - கோ (க) (1888)

இவர் வேந்தன்பட்டி என்னும் ஊரில் எழுந்தருளிய விநாயகக் கடவுள்மீது நூறு பாடல்கள் கொண்ட அந்தாதி ஒன்று பாடியிருக்கிறார். இவருடைய தந்தையார் பெயர் கோபால கிருட்டிண முதலியார். இவருடைய நாடு தொண்டைநாடு

என்றும், பாண்டிநாட்டிற் சென்று தங்கியிருந்தார் என்றுந் தெரிகிறது. இவர் பாடிய அந்தாதி கலித்துறை யந்தாதி. அந் நூலுக்கு நாகபட்டினம் கிருட்டிணசாமி உபாத்தியாயர், இவ் வுபாத்தியாயருடைய மகன் குமரகுருபர உபாத்தியாயர், சிதம் பரம் பிள்ளை மகன் தெண்டாயுதம் பிள்ளை, நூலாசிரியராகிய குமாரசாமி முதலியாரின் மாணவர் பழநியப்ப செட்டியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "வாள்வரையே கும்பிடுமான் விழியின் வலையதனுள்
> தாள்வரையே கும்பிடுவார்க் கதியுள தாமனமே
> நீள்வரையே கும்பிடுமேல் கணேசனை நேர்ந்துநிதம்
> சூள்வரையே கும்பிடுவார்க் கெந்நாளுந் துயரிலையே."

என்பது அந்தாதியின் ஐந்தாவது பாட்டு. பாடல்கள் பிழை மலியப்பெற்றும் சொன்னயம் பொருணயம் இன்றியும் விளங்கு கின்றன.

## சஙஎ. குமாரசாமி முதலியார் (உ)
### (19 - நூ.)

இவர் திருப்பத்தூரில் செங்குந்தர் மரபில் தோன்றியவர். தந்தையார் பெயர் கந்தப்ப முதலியார் இவர் திருப்பத்தூர்ப் புராணத்தை சகக பாடல்களாக இயற்றியிருக்கிறார். அப் புராணத்தைப் பாராட்டிப், போரூர் அச்சுதாநந்த அடிகள், சிவசங்கர தேசிகர், சென்னை கெ பாலசுப்பிரமணிய முதலியார், திருப்பத்தூர் நல்லதம்பிப் பிள்ளை, முருகைய முதலியார், குமார சாமிப்பேட்டை பச்சையப்ப முதலியார், அன்னசாகரம் தீர்த்த மலை முதலியார், திருப்பத்தூர் தாசரதி செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "பாதிமதி சோதிநுதல் சிரீமதிதன் சுயம்வரத்தைப்
> பார்க்க வேட்டு
> வேதமதி தவமுனிவர் போதரமால் கவியிலரி
> விலங்கென் றுய்ந்த
> ஓதிமதி கண்டரிக்கே மாலையிட்டாள் இருடியர்கள்
> உறுத்து மாயை
> நீதிமதி இறைஞராங்கர் ஏவுதலும் அவன்இவர்மேல்
> நேமி விட்டான்."

என்பது புராணத்தில் ஒரு பாட்டு.

இவர் செங்குந்தவேற் பதிகம் என்னும் பதிகமும் பாடியுள்ளார். இப்பதிகம் செங்குந்தருடைய வேலின் சிறப்பையுஞ் செங்குந்தர் சிறப்பையும் விளக்குவது.

> "சங்கரி சுமங்கலை யிமங்கிரி தருங்குமரி
> தங்கமல நின்ற கரமாம்
> சத்திபர முத்தியில் உதித்தெமை இருத்துமரு
> டாயகி வராகிநிமலி
> இங்குலி கவங்கநிற சங்கரன் இடங்குலவி
> இவ்வுலகம் எவ்வுலகமும்
> ஈன்றகம லாட்சிகா மாட்சிபொற் காற்சிலம்
> பிந்துமணி ஒளியில் வெளியாய்ச்
> செங்கனல் நிறங்குலவு மங்குலெழு மின்கொடி
> திரண்டுரு எழுந்த வகைபோல்
> சித்ரநவ ரத்னமணி முத்தணியு மிட்டகன
> தேவவுரு வாயு திதராத்
> துங்கநவ மங்கையர் இடங்குமர ராய்வந்த
> சுத்தநவ வீர ரங்கை
> சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
> தூயசெங் குந்த வேலே"

என்பது பதிகத்தின் முதற் பாடல்.

## ௬௩௯. குமாரசாமி முனிவர்

(1887)

இவர் திருவண்ணுமலை ஆதீன மடத்தில் இருந்தவர். அவ்வாதீனத்தின் பெரிய குருமூர்த்தியாக எழுந்தருளியிருந்த தெய்வசிகாமணித் தேசிகர்மீது இவர் ஞானவந்தாதி, நான்மணிமாலை என்னும் நூல்களைப் பாடியுள்ளார். நூல்களில் அறிவுநூற் பொருள்கள் நிறைந்து விளங்குகின்றன.

> "சித்துரு அருணைத் தேவ சிகாமணிச் சித்து வாரி
> தத்துரு வலஞ்சூ ழந்த நத்தினுள் உதித்த நல்ல
> முத்துரு முத்தர் வேண்டின் முத்திநன் குதவும் போது
> சத்துரு வாகும் பாசந் தனக்குமா தவர்க்குந் தானே"

என்பது நான்மணிமாலையில் ஒரு பாட்டு. இந்நூல்கள் ஆசிரியர் காலத்திலேயே அச்சாகி வெளிவந்தன. இவரிடம் பலர் கல்வி கற்றுச் சிறப்புற்றனர்.

## சங்கூ. குமாரசுவாமியவதானி

இவர் பதினெழும் நூற்றாண்டில் விளங்கியிருந்த தெய்வச் சிலையார் என்பவர்மீது 'விறலிவிடுதூது' என்னும் நூல் ஒன்று பாடியுள்ளார். தெய்வச்சிலையார் அரியநாயக முதலியார் என்பவருடைய அருமை மருகனெனவும் சிறந்தவள்ளலெனவும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

> "சந்தனந் துப்பட்டி சாலுவை வேண்டியதும்
> வந்தவர்க் கெல்லாம் வழங்கினான்—செந்தமிழைச்
> சூட்டுங் குமார சுவாமி யவதானி
> பாட்டும் படிப்பும் பகுத்தறிந்து நாட்டமுடன்
> வேணுமென்ற ரொக்கமு மேலான சாலுவையும்
> பூணு நவரெத்னப் பூஷணமும்—தோணிறைந்த
> சீனச் சரப்பளியுந் த்யாகங் கொடுத்துவெகு
> மானத் துடனே வரிசைசெய்தான்—தானே."

என்பன விறலிவிடுதூதிற் சில கண்ணிகள். அவதானி என்பதனால் அட்டாவதானம் முதலியவைகளில் தேர்ச்சிபெற்றவர் எனவுந் தெரிகிறது.

## சசஂ. குமாரசூரியப் பிள்ளை

ஈழவளநாட்டிலே உடுப்பிட்டியிலே அண்மைக் காலத்தில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் மயில்வாகனப் பிள்ளை. வரதபண்டிதர் என்பவர் இயற்றிய சிவராத்திரிப் புராணம் என்னும் நூலுக்குக் குமார சூரியப்பிள்ளை பதவுரை எழுதியுள்ளார். உரையைப் பாராட்டித் தும்பளை-வே. கணபதிப்பிள்ளைச் சோதிடர், உடுப்பிட்டிப் புலவர் ஆறுமுகப் பிள்ளை, சுன்னுகம் அ. குமாரசாமிப் புலவர், தும்பைநகர் பஞ்சாட்சரக் குருக்கள், சுப்பிரமணிய சாத்திரிகள், நவிண்டில் கனகசபாபதிக் குருக்கள், புலோலி ம. முத்துக்குமாரசாமிக் குருக்கள் ஆகியோர் உரைச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "கங்கைநதி சூடிசிவ நிசியின் மேன்மை
> கருதரிய புராணமுறை அமைத்துச் சுன்னை
> தங்கியநன் மறையாளன் வரதன் சொன்ன
> தமிழ்க்கவிகள் ஆய்ந்துபத உரையொன் றீந்தான்

பங்கமிலாப் பாவியபண் டிதப்பேர் பெற்ருன்
பகருமயில் வாகனவேள் தந்த பாலன்
கொங்கலரும் பொழிலுடுப்பை நகரி வாசன்
குமாரசூ ரியநாமங் கொண்டோ னன்றே.''

என்பது சுன்னுகம் அ. குமாரசாமிப் புலவர் இயற்றிய பாடல்.

## சசக. குமார தேசிகர்
## (19 - நூ.)

'' மறுவின் மாதவம் மற்று மோருருப்
பெற்றெனப் பிறங்கும் பெருநலம் உடையோன்
கற்றவர் கண்மணி கவின்கொள் விண்மணி
கைதவம் அகலக் கலையெலாம் பயின்ற
சைவ சிகாமணி சத்துணர் மாமணி
பமார முரனருப் பைந்தொடை மார்பன்
குமாரதேசிகப் புலவர்கோன்.. ... ''

என்று பு. கனகசபை நாயகராற் புகழ்ந்து பாராட்டப்பெற்ற இவர் காஞ்சிபுரத்தில் இருந்தார். காஞ்சிபுரம் வழக்கறுத்த நாதர் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

'' பூவுங் கனியு மலிசோலை புடைசூழ் கச்சித் திருநகரின்
மேவும் பெருமான் வழக்கறுத்த விமலன் உமையாள் ஒருபாகன்
தாவுஞ் சினவெள் விடையானென் தன்னைத் தடுத்தாண்
[டவனடியார்
ஏவும் பணிசெய் திடவளித்தான் இதன்மேல் வேண்டும்
[பேறென்னே.''

## சசஉ. குமார பாரதியார்

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை. இவர் திருத்தொண்டர்மாலை என்னும் நூலைப் பாடியிருக்கிருர். இம்மாலை வெண்பாக்களால் ஆகியது. முன் இரண்டு அடிகளில் திருத்தொண்டர் வரலாற்றுக் குறிப்பும் பின்னிரண்டடிகளில் திருக்குறளுமாக உள்ளன.

'' ஞானசம் பந்தரங்கே நண்ணியபி னெண்ணிலா
தானிவிளைத் தானே அமணர்க்கு—மானியார்
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.''

என்பது மங்கையர்க்கரசியார் வரலாற்றுக் குறிப்பமைந்த பாட்டு. இந்நூல் உரையுடன் பரிதாபி யாண்டில் அச்சிடப்பெற்றிருக்கிறது.

## ௪௪௩. குமாரவிசய கிரிவேலச் சின்னோவையன் (18 - நூ.)

இவர் ஒரு பெருநிலக்கிழாரும் செந்தமிழ்ப் புலவரும் ஆவார். இவருடைய தந்தையார் பெயர் விசயகிரிவேலச் சின்னோவையன் இவருடைய வழிமுறையினர் பெரும்பாலாருஞ் செந்தமிழ்ப் புலவர்களாக விளங்கியிருந்திருக்கின்றனர் வையாவிக் கோப் பெரும் பேகன் வழிமுறையினர் ஆண்ட வையாபுரிநாடு சின்னோவையன் வழிமுறையினரால் சில நூற்றாண்டுகள் ஆளப்பெற்றது. வையாபுரி நாட்டிற்குப் பழநிச்சமீன் என்றும் பெயர். இது கொங்குநாட்டின் இருபத்துநானகு பிரிவுகளில் ஒ.ரு.று வையாபுரி நாட்டில் உள்ள பழநிக்கு விசயகிரி என்றும் பெயர் உண்டு. சின்னோவையன் என்பது பழநிப் பெருநிலக்கிழார்களின் குல தெய்வத்தின் பெயர். இதனை அவர்கள் தம் பெயருக்கு இறுதியிற் சேர்த்துக் கூறுவார்கள். இவர் வையாபுரிப் பள்ளு என்னும் நூலை இயற்றியிருக்கிறார். நூலில் பலவிடங்களில் தம் தந்தையைப் புகழ்ந்திருக்கிறார். இவ் வழிமுறையினர் முருகக் கடவுளையே தம்முடைய குலதெய்வமாகக் கொண்டிருந்தவர்கள்.

## ௪௪௪. குமாரவேலு முதலியார் – (புதுவை) (1860)

இவர் புதுச்சேரியிற் பிறந்தவர். கல்வி கற்றுச் சிறப்புற்ற பின் சென்னையை அடைந்து பறைச்சேரிக் கடைக்கண் மையில் சீரங்கபட்டணம் சுப்பராய முதலியார் தெருவில் பள்ளிக்கூடம் வைத்துக்கொண்டு பழங்கால முறைப்படி மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். செய்யுள் பாடுவதில் வல்லவர். பொன்னுச்சாமித்தேவர் சேதுபுராணம், திருக்குறள் பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை முதலிய நூல்களை அச்சிட்டு வழங்கிவருதலை யறிந்த இவர்,

"நண்ணு புகழ்ப்பொன்னுச் சாமியெற் கின்று நயந்தளிப்பன்
வண்ண முறுங்குறள் சேதுபு ராணம் மறுபயின்டேர
டெண்ணருஞ் சைவச் சிவஞான தேவர் இருநிலத்துப்
பண்ணிய பூசனை யின்பய னல்வந்த பாக்கியனே."

என்னும் இச்செய்யுளையும் வேறு சில செய்யுட்களையும் எழுதியனுப்பினர். விரும்பிய நூல்கள் கிடைத்தன. கிடைத்தபின்,

"மேதினியோர் போற்றிசெயு மேன்மை பெறுராம
நாதபுரம் வாழ்கின்ற நாதனே—ஏதமிலாச்
சேது புராணமெற்குச் சேர்ந்ததுபொன் னுச்சாமி
ஆதவனே நின்னருளி னல்."

"கொண்ட லண்டு விண்டலங் குறித்தெழுஞ்செ ழும்புகழ்
மண்டி ராம நாதமா புரத்து வாழு மன்னனும்
தண்ட மிழ்ம ணங்குலவு தாரி லங்கு கின்றநல்
வண்பு யாச லத்த கைய வள்ளல் பொன்னுச் சாமியே."

இவை முதலிய செய்யுட்களை எழுதியனுப்பினர். திரிசிரபுரம் கோவிந்த பிள்ளை இவருடைய காலத்தினர். இருவரும் ஒருநாள் ஒருவரையொருவர் கண்டனர். அப்பொழுது கோவிந்த பிள்ளை, "முத்துவீரப்ப முகில்" என்று ஈற்றடி கொடுத்து ஒரு வெண்பாப் பாடச் சொன்னர். அப்போது இவர்,

"எங்கும் பரவி இரவி யொளிமழுங்கத்
துங்கமுறு கல்விமழை தூவிடுமால்—பொங்கியநன்
முத்தமிழை யோர்ந்த முதல்வ னமையாளும்
முத்துவீ ரப்ப முகில்."

என்று பாடினர். இவ்வளவுக்குமேல் இவரைப்பற்றிய விவரமெதுவுங் கிடைத்திலது.

இவர் தில்லை வெண்பா மாலை என்னும் நூலும் பாடியுள்ளார்:

"பூந்தவிசோன் போற்றப் புலிபதஞ்ச லிக்கெதிரில்
தேந்துளவோன் வாழ்த்தத் திருத்தில்லை—போந்தாடு
பாதா சிவகாமி பாகா நினைப்புகழ
நாதாவென் னுள்ள நயந்து."

என்பது அம்மாலையில் ஒரு பாட்டு. ஆறை முத்தமிழ்க் கவி திருவேங்கடப் பிள்ளை, புதுவைச் சுப்பராய முதலியார், கும்பமங்கலம் அரிகிருட்டிணசாமி முதலியார், திருஎவ்வுளூர் இராமசாமிச் செட்டியார் ஆகியோர் இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪௪௫. கும்பநாத செட்டியார் - ஆ
(19 - நூ.)

சோழவளநாட்டிலே கும்பகோணம் என வழங்கும் திருக் குடந்தைப்பதியில் வைசிய குலத்தில் ஆறுமுக செட்டியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்த இவர், "திருக்குடந்தைப் பதிற்றுப்பத்தந்தாதி" "ஆதி கும்பேசுரர் தோத்திரப் பதிகங்கள்" கண்ணிகள் முதலியன இயற்றி யுள்ளார்.

"சோதி முச்சுட ராகித் துலங்கியே
பாதி மாதர் வடிவம் பரவிடப்
பூதி மேனி உடைய புராதனன்
ஆதி தேவன் குடந்தை அமலனே."

என்பது திருக்குடந்தைப் பதிற்றுப்பத்தந்தாதியில் ஒரு பாட்டு.

## ௪௪௬. கும்பன்

இவர் கம்மியர் குலத்தில் தோன்றியவர். படிக்காசுப் புலவர் காலத்தினர். இவர் இரகுநாத சேதுபதிமீது பல பாடல்களை இயற்றிக்கொண்டு வந்தார். பாடல்களைக்கேட்ட சேதுபதி மகிழ்ந்து பல்லக்கு முதலிய வரிசைகள் வழங்கினார். இதனைக் கண்ட படிக்காசுப்புலவர்,

"ஏதை அறிவான் இவனுக்கேன் பல்லக்குச்
சேது ரகுநாத சிங்கமே—ஓதுகின்ற
கச்சைக்கும் பச்சுரைக்காய் காய்கறிக்கா மோவதுபோல்
தச்சக்கும் பன்சொல் தமிழ்."

என்று ஒரு வெண்பாப் பாடினார். இதனைக் கேட்டவுடனே கும்பர் மிகுந்த சினங்கொண்டு,

"தங்கை தமக்கைகட்குத் தான்பணயம் வாங்குகிற
பங்கமுற்ற கைக்கோளப் பையாரயாம்—எங்கும்
செகத்குரு என்றுதான் தேசமறி யாதோ
பகலிரவும் ஆராய்ந்து பார்."

என்று தாமும் ஒரு வெண்பாப் பாடினார். இவர்களது பகையைக் கண்ட சேதுபதி இருவரையும் ஒன்றுபடுத்தி நண்பர்களாக்கினார்.

## ச ௪ எ. குருசரணாலயன் — தி. ரெ.

(20 - நூ)

சென்னைமா நகரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய இயற் பெயர் தி. ரெ. திருவேங்கடப் பிள்ளை என்பது. உலக விவகாரத் தில் ஈடுபட்டிருந்த இவர் அறிவு நூல்களையும் ஓதியுணர்ந்த தோடு சாந்தாநந்த அடிகள் என்னும் பெரியாரிடத்தில் அரு ளுரையும் பெற்றுச் சிறந்து விளங்கினார். மெய்யறிவுச் செய்தி கள் பலவற்றை ஒன்று தொகுத்து "ஆத்மஞான தீபிகை" என்னும் பெயருடைய நூல் ஒன்றை எழுதினார். அந்நூலுக்கு மருவூர் கணேச சாஸ்திரி, உ. வே. சாமிநாதையர், இலக்குமணாச் சாரியார், எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை ஆகியோர் முன்னுரை எழுதியிருக்கின்றனர். ஆசிரியர் கோ. வடிவேலுச் செட்டியார், காஞ்சிபுரம் நிச்சல இராமாநந்த சுவாமிகள் ஆகியோர் சிறப்புப் பாயிரமும் பாடியுள்ளனர்.

"கல்லாதேன் காமுற்றுக் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லைக் கடைப்பிடித்துச் சொல்லிந்நூல்—தொல்லுலகில்
மாறாது நிற்க மகான்கள் பதந்தொழுதேன்
ஆறாத காதலுடன் ஆர்ந்து."

என்பது இவர் நூலிற் பாடிய மகான்கள் வணக்கம்.

## ச ௪ அ. குருசாமி - நா

(1893)

இவர் கடம்பந்துறை என்னும் ஊரில் துறவியாக விளங்கி யிருந்தவர். திருப்பழனம் நாராயணசாமிகள் என்னும் பெரியா ரிடத்தில் அருளுரை பெற்றவர். இவர் குருதோத்திரம், பரிபூர ணானந்தக் கும்மி, பவரோக வைத்தியம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"எங்கும் நிறைந்ததுமாய் ஏகஉரு வாயனைத்தும்
தங்கும் படிக்கிசைந்த தற்பரமே—பொங்கும்
பரிபூர ணானந்தம் பாடித் துதிக்கத்
தருவாய் மலர்ச்சே வடி."

என்பது பரிபூரணானந்தக் கும்மியின் காப்புச் செய்யுள்.

## ௪௪௯. குருசாமிப் பிள்ளை – மு.
(19 - நூ.)

சோழவளநாட்டில் தஞ்சைமா நகரில் சிறந்த புலவராக விளங்கியிருந்த ஐயாச்சாமிப் பிள்ளை என்பவரின் உடன்பிறந்தா ராவர் இவர். இவருஞ் சிறந்த புலமையடைந்து தமிழாசிரிய ராகத் தொழில்புரிந்திருந்தார். தம்முடைய உடன்பிறந்தார் இயற்றிய தில்லையமகவந்தாதி உரைக்கு இவர்,

> " திரைவிரித்த நெடுங்கடல்சூழ் உலகுபுகழ் சிவபெருமான்
> திருத்தாட் கன்பாம்
> விரைவிரித்த நாற்கவிதேர் மீனாட்சிசுந்தரமால்
> வேய்ந்த சீர்த்தி
> நிரைவிரித்த தில்லையந்தா திக்கெழிலை யாசாமி
> நிபுண சீலன்
> உரைவிரித்த அற்புதங்கேட் டயன்நாணி மரைமலர்க்குள்
> ஒளித்தான் அன்றே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௪௫௦. குருசாமி முதலியார் - மு.
(19 - நூ.)

இவர் சென்னைமா நகரில் முத்துக்குமரப்ப முதலியார் என்பவருக்கு மைந்தனாகத் தோன்றித் தமிழ்மொழியை நன்கு கற்றுத் தேறியதுடன், ஆங்கில மொழியையுங் கற்றுணர்ந்து பாரெஸ்ட் பரிசோதகர் அலுவலகத்தில் தலைமைக் கணக்கராகப் பணிபுரிந்திருந்தார். தாதசுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்று ஞானவழியையும் பின்பற்றி நடந்தார். நூறு செய்யுட்கள்கொண்ட பழநியாண்டவர் தோத்திரப் பாமாலை, கற்புநிலைச் சிறப்பு என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

> " தொல்லை வினையின் தொடக்கறுத்தெப் போதுமுனை
> அல்லும் பகலும் அருச்சிக்க—நல்ல
> பழநிமலை பெற்றெடுத்த பாலகனே சீலா
> பழநிமலை வேலாகண் பார்."

என்பது பழநியாண்டவர் தோத்திரப் பாமாலையில் ஒரு பாட்டு.

## சருக. குருமூர்த்தி ஐயர்

ஈழவளநாட்டில் வட்டுக்கோட்டை யூரினர். கண்ணலிங் கேசுர சுவாமி கோயிலுக்குத் தலைவராக இருந்த இவர், நல்லூர் த. கைலாசபிள்ளை, சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர் ஆகியோ ரிடங் கல்வி கற்றார். கடல்போற் பரந்துள்ள கந்தபுராணத்தைச் சுருக்கி உரைநடையாக்கிக் "கந்தபுராணச் சுருக்கம்" என்னும் பெயரோடு எழுதி வெளியிட்டுள்ளார்.

> "கருக்கடல் முருக்கி முத்திக் கரைதரு காந்த நூலைச்
> சுருக்கவே கல்வி இல்லாத் தொண்டனேன் துணிந்த வாறு
> திருக்கில்வான் முழுதும் இங்கோர் செங்கையி டலக்குவே
> (னென்(று)
> உருக்கரம் இல்லான் என்னும் ஊக்கமே போன்ற தன்றே."

என்பது நூலின் அவையடக்கச் செய்யுள்களில் ஒன்று.

## சருஉ. குலசேகர பாண்டியர்

இவர் மதுரையில் அரசு செய்திருந்த பாண்டிய மன்னர். கல்வி கேள்விகளினும் வல்லவர். இவர் முப்பது பாடல்கள் கொண்ட அம்பிகைமாலை என்னும் நூல் பாடியிருக்கிறார்.

> "திருவே விளைந்தசெந் தேனே வடியிட்ட தெள்ளமுதே
> உருவே மடக்கிள்ளை ஓதிம மேஞற்றை ஆடகப்பூந்
> தருவேதின் தாமரைத் தாளே சரணஞ் சரணங்கண்டாய்
> அருவே அணங்கர சேமது ராபுரி அம்பிகையே."

என்பது மாலையின் முதற் பாட்டு.

## சருங. குலசேகரப் பெருமாள்

இவர் சேரநாட்டை அரசுபுரிந்த அரசர்களில் ஒருவர். வைணவ சமயத்தினர். அரசியலைத் துறந்து திருமால் வழி பாட்டை மேற்கொண்டிருந்தவர். வைணவ சமயத்தை உலகில் பரப்புவதற்கு மிக உழைத்தவர். இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். இவர் இயற்றிய நூல் பெருமாள் திருமொழி.

"செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே."

என்பது திருமொழியில் ஒரு பாட்டு.

## சஙச. குலோத்துங்க சோழன்

இவன் ஒட்டக்கூத்தரிடங் கல்வி கற்றுச் சிறந்த புலமை யடைந்து விளங்கினான். தன்னுடைய ஆசிரியரைப் பெருமைப் படுத்தி அவரைத் தன்னோடு சமஇருக்கையில் வைத்துக்கொண் டிருந்தான். ஒருநாள் அரச அவையில் ஒட்டக்கூத்தருஞ் சோழ மன்னனும் வீற்றிருந்தார்கள். அப்போது புதியர் சிலர் அரசனைக் காணிய வந்தார்கள். இருவரில் அரசன் யாரென்று அவர்கள் அறிந்துகொள்ள முடியாமல் தடுமாறி நின்றார்கள். அவர்க ளுடைய தடுமாற்றத்தைக் கண்ட ஒட்டக்கூத்தர் அரசனை அவர் களுக்குச் சுட்டிக்காட்டத் தொடங்கி,

"ஆடுங் கடைமணி நாவசை யாமல் அகிலமெல்லாம்
நீடுங் குடையைத் தரித்த பிரான்.........

என்று பாடத் தொடங்கினார். தன்னுடைய ஆசிரியர் தன்னைப் புகழ்தல் தகாதென்று எண்ணிய அரசன்,

............ இந்த நீணி லத்தில்
பாடும்புலவர் புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெனைச் சொல்லுவரே."

என்று பாட்டை ஆசிரிய வணக்கமாக முடித்துத் தன்னையும் புதியவர்கட்கு அறிமுகப்படுத்திக் கொண்டான். இதனால் இவனுடைய புலமைத்திறத்தை நன்குணரலாம்.

## சஙரு குவாவங்காஞ்சன்

கல்வெட்டுப் பாடல்கள் பாடியவர்களில் இவரும் ஒருவராகக் கொள்ளப்படுகின்றார்.

"ஏறி விசும்பு மிருநிலமாய்த் தென்பவால்
மாறன் செருவேன் மறங்கனன்று—சிறக்
கொடிமாடத் தன்கொடும்பைக் கூடாத மன்னர்
நெடிமா மதிலிடிந்த நீறு."

"எண்கி ளிருங்கிளையும் ஏறத் கரியவே
வண்கைச் செருமாறன் வாள்காய்த்தி—விண்படர் சேய்
வானுடு தாழ்ந்த மாநாடக் கண்ணனூர்க்
கோனுடர் புக்கொளித்த குன்று."

என்பன இவருடைய கல்வெட்டுப் பாடல்களில் இரண்டு. பாடல்களின் போக்கை நோக்குமிடத்து இவர் காலம் பல நூற்றுண்டுகட்கு முன்னர் எனக் கோடலாம்.

## சஙக. குழந்தைப் புலவர்

குற்றாலம் என்னும் ஊரில் இருந்த இவர் "இராகவர் பிள்ளைத்தமிழ்" என்னும் நூலைப் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் விளங்கவில்லை.

"பூமேவு பைந்துணர்க் கற்பக நிழற்கணுறை
புங்கவர்க ளேனும் அன்பு
புரியுநெஞ் சிலரெனில் அவர்க்கரிய ரென்பதும்
புலவிலங் கிற்கு முளதேல்
தாமேவு மெளியவ ரென்பது முணர்த்தியொரு
தந்தியெதிர் வந்து நின்ற
சததள மலர்க்குநிகர் எங்கள்நா யகனுபய
சரணங்க ளைப்பணிகு வாம்
பாமேவு சொற்புகழ்த் தசரதற் குவகைபுரி
பாலனைக் குணசீ லனைப்
பன்னுமறை அந்தணரும் இமையவரும் எய்துமிடர்
பாறவந் தருள்கு ரிசிலைக்
காமேவு வண்டுவரி பாடநீள் செந்துகிர்க்
காவினெகி னங்களி கொளும்
கமலத் தடஞ்செறி அயோத்திநக ரானவரு
கருணைமுகி லைக்காக் கவே."

என்பது நூலின் காப்புப் பாடல்.

## சஙஎ. குழந்தைவேலு அடிகள்
(20 - நூ.)

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தை அடைந்து கல்வி கற்றுச் சிறந்த அறிஞரானுர். பிறகு திருச்செந்தூரை அடைந்து அவ்விடமே பெரும்பாலுந் தங்கி முருகப்பெருமானைப் போற்றி

வழிபட்டுக்கொண்டிருந்தார். கல்வி கேள்விகளில் வல்லவரான இவரிடம் பலர் கல்வி கற்றனர். அந்நாளில் சண்முகம் பிள்ளை என்பவர் இயற்றிய திருவிளையாடற் புராண சங்கிரகம் என்னும் நூலுக்கு இவர்,

"சுத்தபரப் பிரமமாந் தெய்வம் எந்தை
சுயம்பிரகா சக்கடவுள் அடியைப் போற்றி
பத்தியன்பு கல்வியிசைப் பண்மா ருது
பரமனையே பாடிவாழ் பவள வாயான்
வித்தகஞ்சேர் கங்கைகுலத் துதித்த மேலோன்
விதரணசற் குணநிபுணன் மெய்சொல் நாவான்
உத்தமனு யாவர்களும் மதிக்க வாழ்வோன்
உதாரமுள சண்முகமன் னவனும் அன்பாய்

மின்னை நிகர் மெய்வாழ்க்கை நிலையன் றென்று
விருத்தப்பா இருசதத்தோ டெண்ணைந் துள்ளே
சொன்னயமும் பொருள்நயமும் அடங்கித் தோன்ற
சுரர்முனிவர் மாதவருந் தொழுது வாழ்த்தப்
பன்னகத்தோ னும்புகழப் பத்தி யோங்கப்
பாவலருங் காவலரும் பணிந்து பாட
இந்நாளில் இயற்றியதை எம்மா லாய்ந்தே
இத்துணையென் றெடுத்துரைக்க இசையா தாமே."

என்பன முதலியவாக ஐந்து பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## சரு௯. குழந்தை முதலியார்

இவர் குற்றாலம் என்னும் ஊரில் இருந்தவர். இராகவர் பிள்ளைத்தமிழ் என்னும் நூல் பாடியிருக்கிறார். பாடல்கள் நயம் பொருந்தியன,

"பூமேவு பைந்துணர்க் கற்பக நிழற்கணுறை
புங்கவர்க ளேனும் அன்பு
புரியுநெஞ் சிலரெனில் அவர்க்கரியர் என்பதும்
புள்ளிலங் கிற்கு முளதேல்
தாமேவும் எளியவர் என்பதும் உணர்த்தியொரு
தந்தியெதிர் வந்து நின்ற
சததள மலர்க்குநிகர் எங்கள்நா யகனுபய
சரணங்க ளைப்ப ணிகுவாம்

பாமேவு சொற்புகழ்த் தசரதற் குவகைபுரி
பாலனைக் குணசீலனைப்
பன்னுமறை அந்தணரும் இமையவரும் எய்துமிடர்
பாறவந் தருள்கு ரிசிலைக்
காமேவு வண்டுவரி பாடநீள் செந்துகிர்க்
காலினெகி னங்களி கொளும்
கமலத் தடஞ்செறி அயோத்திநக ராளவரு
கருணைமுகி லைக்காக் கவே.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## சஉகூ. குழந்தைவேலுக் கவிராயர்
### (கி. பி. 1871)

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் ஒச்ச வீரப்பன் என்பது,

'' ஆதிநாள் பெரியோர் மொழிந்திடும் விருத்தம்
ஆயதொண் ணூற்றெருடொன் பதையும்
நீதியாய் அறுநாற் றெருடுசில வாக
நிலைபெற உரைத்ததார் என்னில்
மேதினி புகழும் புதுவையம் பதியில்
விளங்கிய ஒச்சவீ ரப்பன்
மாதவக் குழந்தை வேலன்நல் தமிழால்
பெரியவர் மரபினில் வகுத்தான்.''

என்னுஞ் செய்யுளால் பெறப்படுகிறது. இவர் மார்க்கண்டேய புராணம் என்னும் நூலை சுஎஎ பாடல்கள் அடங்கியதாகச் செய்திருக்கிறார்.

'' ஆலயம் அனந்தம் முடிக்கினும் அன்னம்
அளிக்கினும் அசுரர்கள் கோடி
சோலைகள் அனந்தம் வளர்க்கினுங் கனகம்
சொரியினும் நாளரு வண்ணம்
மாலயன் தேடும் வள்ளலைப் பூசை
வழங்கினுஞ் சுதரிலா தவர்கள்
மேலையம் பதவிப் பேறுகள் அடையார்
சுருதியின் மொழியிது மெய்காண்

என்பது மிருகண்ட மாமுனிச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## சகூ௦. குழந்தைவேலுப் பிள்ளை
(கி. பி. 20—நூ.)

இவர் நடுநாட்டிலே விழுப்புரத்தில் வேளாண்குடியில் தோன்றினர். தந்தையார் பெயர் காத்தபெருமாள் பிள்ளை. இவர் இலக்கண இலக்கியங்களைச் செம்மையாகக் கற்றுச் சிறந்த புகழுடன் விளங்கினர். பண்டிதை அசலாம்பிகை யம்மையார் பாடத் தொடங்கிய திருவிடையூர்ப் புராணத்தின் இரண்டாங் காண்டத்தை இவர் பாடி முடித்தார். இவருடைய தன்மையைப் புராணத்திற்குச் சிறப்புப்பாயிரம் பாடிய சுப்பிரமணியத் தம்பிரான்,

"வேளாளர் என்னும் வியன்குலத் துதித்தோன்
தாளாண் மையினுல் தன்குடி காப்போன்
கல்விக் கடற்கோர் களஞ்சிய மானோன்
நல்விற் பனர்கள் நட்புறச் செய்வோன்
பஞ்சலக் கணங்களும் பண்புற வுணர்ந்தோன்
நஞ்சணி கண்டன் அடியிணை நயந்தோன்
குன்றஞ் செற்ற குமரற் பணிவோன்
என்றன் இடத்தும் இனியஅன் புடையோன்
மழலையந் தீஞ்சொல் மதுரவாக் குடைய
குழந்தை வேலனென் னுங் குணக்குன் றூனுமே."

என்று குறிப்பிடுகிருர்.

"ஆடெடுத்த அம்பலவன் இருந்தோங்குந்
தில்லைநகர் அணைந்தே எம்மைப்
பாடெடுத்த வேதவிதிப் படிமணந்த
இளங்கோவீர் நும்மைப்பற்றி
மாடெடுத்த நகரத்தான் மனத்தடுத்த
மயக்காலே மாய்த்த தன்மை
ஏடெடுத்த கமலமுனிக் கெடுத்தியம்ப
எவரேனும் இல்லையென் செய்வோம்."

என்பது இவர் இயற்றிய நூலில் போர்புரி படலத்தில் ஒரு பாட்டு.

## சகூக. குறட்டி வரதையன்

இவர் வடார்க்காடு மாவட்டத்திலே உள்ள திருவல்லத்துச் சிவன்கோயிற் புலவராக இருந்தவர். அப்பதிச் சிவபிரான்மீது

இவர் 'திருவல்லையந்தாதி' என்னும் நூலைப்பாடி இறையிலி நிலமாக நூறு குழி பெற்றார். இவருடைய ஊராகிய குறட்டி தென்னார்க்காடு மாவட்டத்தில் இருப்பதாகத் தெரிகிறது.

## சகூஉ. குற்றாலலிங்கம் பிள்ளை - ஆ,
(20—நூ.)

பாண்டிவளநாட்டிலே சீவைகுண்டம் பிரிவிலேயுள்ள முரப்ப நாடு என்னும் ஊரினர். அவ்வூர் முரம்பை எனவும் வழங்கும். இவர் பல நூல்களையுங் கற்றுணர்ந்து புலமை பெற்றார். பலரும் படித்துப் பயனடையுமாறு அவ்வூரின்கண், "தமிழ் மாமறைப் புத்தகசாலை" என்னும் பெயருடன் நூல் நிலையம் ஒன்றை ஏற்படுத்தினார். செய்யுள் இயற்றுவதிலும் வல்லவராகிய இவர் "புண்ணியராற்றுப்படை" என்னும் நூலுக்கு,

"துன்று மதுரம் பழுத்தொழுகும் தூயதமிழ்மா மறையதனில்
துவன்று நுட்பப் பொருளாகும் சுவைசால் இனிய நல்தேறல்
நன்றாய் அருந்திச் சிவாகமத்தின் நலத்தை எவரும் நன்குணர
நவையில் நூல்கள் பற்பலவா நவிலும் அதனை யேதெருட்டிப்
பொன்றாழ் சடிலன் அடியருயப் புண்ய ராற்றுப் படையென்னும்
பொருள்சால் பெரிய முறையதனைப் புகன்றான் ராசைச்
[சாலிதனில்
குன்றாக் கார்காத் தார்மரபில் குணவான் ஆர்எஸ் சுப்ரமணி
குலவும் புலமை எவராலும் கூறுந் தரமோ குறித்திடினே."

என்பது முதலிய பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## சகூங. குன்றன் திருச்சிற்றம்பலமுடையான்

கல்வெட்டுப் பாடல்கள் பாடிய புலவர்களில் இவரும் ஒருவர். புதுக்கோட்டை நாட்டிலே வெகுகாலத்திற்கு முன்னர் வாழ்ந்திருந்த இவருடைய கல்வெட்டுப் பாடல்களில் ஒன்று,

"வாளை வயிறு நிறைய மடற்கமுகம்
பாளைபசுந் தேனொழுக்கும் பையூரே—நாளையென்று
செப்பாத வாய்மையான் வேதன் திருமனு நூல்
ஒப்பானென் கோமான்றன் ஊர்."

என்பது. இவர் பதினெடின்றும் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த தாகத் துணியப்பெறுகின்றார்.

## சகூச. கூபத்துக் குருக்களய்யா
(19—நூ.)

திருநெல்வேலியில் இருந்த சிறந்த தமிழ்ப் புலவர்களில் இவரும் ஒருவர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்தவர். கவிராச நெல்லையப்ப பிள்ளை, அழகிய சொக்கநாத பிள்ளை முதலியோர் இவர் காலத்தினர். எட்டையபுரம் கடிகை நமசிவாயப் புலவர் இயற்றிய 'வல்லி பரிணயம்' என்னும் நூலுக்கு இவர்,

> '' இயம்பியமுத் தமிழ்ப்பிறவோர்ந் தினியபல
> கேள்விகளால் இளசை மூதூர்
> நயம்பெறமன் னரசுரிமைத் திறஞ்செலுத்துங்
> குமாரஎட்ட ராச சிம்மம்
> சயந்தருவேற் கழுகுமலைக் குமரர்வள்ளி
> தனைமணந்த சரிதந் தன்னைச்
> சயந்தருநற் கனிபோலத் தந்திடுக
> என்றபடி தமிழில் வல்லோன்.''

என்பதை முன்னாகக்கொண்ட மூன்று பாடல்களாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## சகூரு. செய்கப்துல் காதிறு ஆலீம் சாகிப் (செ)

இவர் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள பேட்டையில் மௌலானா மௌல்வியாக விளங்கியவர். இவர் ஆபிதீன் நற்பதம் ஆறிபீன் அற்புதம், நேர்வழி விளக்கம், தீன்மணி முழக்கம், மசாலா மறுமொழி விசனம் என்னும் நூல்களை இயற்றினார். இவைகளில் ஆபிதின் நற்பதம் ஆறிபீன் அற்புதம் என்னும் நூல் 1903ஆம் ஆண்டில் காரைக்காலில் வெளிவந்தது. இதில் கழுவுதல், முழுகுதல், தொழுகுதல், குர்ஆன் ஓதுமுறை, சக்காத் சதகா, இகுலாஸ், நோன்புகளின் வகை, நசிகத், பிதுகத், பள்ளி வாசல், மஜ்ஜிதி, மக்கட்பேறு, மக்களையும் மனைவியையும் நடத்துமுறை, பொய்ச் சத்தியம், பொய்ச்சாட்சி, கட்குடியின்

கெடுதி, நிக்காகு விவரம் தெளபா, நஞுகா, பைஅத்து, சைகு, முரீது, நபசு மாற்றம், அவுராது நன்மை, திக்று செய்முறை, அறஞ்செயு முறை முதலிய பல செய்திகள் கூறப்பட்டிருக்கின்றன. இது நானூறு பக்கங்கள் கொண்டது.

## ௪௯௯. கேசவ முதலியார் (1862)

தொண்டைவளநாட்டில் திருத்தொட்டிக்கலை என்னும் ஊரில், தொண்டை மண்டலத்துத் துளுவவேளாளர் மரபில் கிருட்டிணசாமி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர்.

> "அருட்டிறம் உடைய கிருட்டின சாமியின்
> மாதவப் பண்பினால் மாலெனத் தோன்றினோன்
> ஈசனார் அடியார்பால் நேசநீங் காதவன்
> கேசவன் என்னுமோர் மாசறு பெயரினன்."

என்று விசாகப்பெருமாள் ஐயர் இவரைப் பாராட்டியுள்ளார். இவர் 'அறுபத்துநான்கு திருவிளையாடற் சற்குருமாலை' என்னும் பெயரோடு மாலையொன்று பாடியுள்ளார். அம்மாலையில் அறுபத்துநான்கு திருவிளையாடல்களுங் கூறப்பட்டுள்ளன.

> "சித்தரைக் கோயிலிற் கண்டு வியக்கச் சனங்கள் சென்றும்
> முத்தரைப் பாண்டியன் கேட்கக் கல்லானை கரும்புணமுன்
> வித்தை புரிந்து நடித்தசொக் கேயென மேவியருள்
> தத்துவமாக மயிலை யிலுங்கண்ட சற்குருவே."

என்பது கல்லானைக்குக் கரும்பருத்திய திருவிளையாடல் அமைந்தது. காஞ்சிபுரம் சபாபதி முதலியார், திருத்தணிகை விசாகப்பெருமாளையர், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், புதுவை, க. சுப்பராய முதலியார், புதுவை பொன்னுச்சாமி முதலியார், ஆற்பாக்கம் குமாரசாமிக் கவிராயர், தரங்கம்பாடி சண்முகக் கவிராசர் முதலியோர் இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளனர். இவர் கல்விச் செல்வத்தோடு பொருட்செல்வமும் பெற்றுச் சிறந்து திகழ்ந்தவர் என்பர்.

## சகூஎ. கைலாசநாத தேசிகர்

பாண்டிவளநாட்டில் களந்தை நகரில் புலியூர் மடாதிபதியாக இருந்தவர். புலமைக்கல்வி கற்ற அறிஞர். இவர் களந்தை என்னும் பதியில் எழுந்தருளிய கோமதியம்மன் என்னும் அம்மைமீது கட்டளைக் கலித்துறை அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அந்நூல் 'கோமதியம்மன் அந்தாதி' என்று பெயர்பெற்றுள்ளது.

"கார்கொண்ட பூங்குழல் பச்சைக் கரும்பு களந்தையில்வாழ்
வார்கொண்ட கொங்கை அபிராம வல்லி மருவுகங்கை
நீர்கொண்ட வேணிப் பிரான்சத்ய வாசகர் நேசம்வைத்த
கூர்கொண்ட சேற்கண்ணி ஆவுடைத் தாயென் குலதெய்வமே"

என்பது அவ்வந்தாதியின் முதல் பாட்டு.

## சகூஅ. கைலாசநாத பண்டாரம்
### (கி. பி. 19—நூ.)

இவர் பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலியைச் சேர்ந்த திருப்புடைமருதூரில் வாசஞ்செய்தவர். சிவாசாரியர் வகுப்பைச் சேர்ந்தவர். இவர் வீரைத் தலபுராணம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார். வீரை என்பது வீரைமா நகர் எனவும் விரவனல்லூர் எனவும் வழங்கப்படுகின்றது. இது திருநெல்வேலிக்கு மேற்கே பத்து நாழிகை வழித்தொலையில் தாம்பிரபன்னியாற்றின் தெற்குப் பக்கத்தில் உள்ளது. நூல் எழுநூற்று எழுபத்து மூன்று பாடல்களையும், தலவிசேடம், பொதிகாசலம், விசுமுகம், வேதங்கள் பூசித்தல், விருகமுனி, இருவர் பூசித்தல், சற்ப விமோசனம், பூமிதேவி பூசித்தல், தருமன் பூசித்தல், அகத்தியர், கனகமுனி பூசித்தல், இராக்கதமோசனம், கங்கை பூசித்தல், அதிவீரம், தீர்த்தம், சித்திரசேனம், வீரகண்டம், வீரமாறம், தெரிசனம் என்னும் பத்தொன்பது சருக்கங்களையும் உடையது.

"சீர்தரு பூமிநாதர் திருவிளை யாட்டைச் சொல்வோர்
பாரினிற் செல்வம் ஓங்கிப் பதுமநன் னிதியுஞ் சேர்வார்
ஏர்பெறு மகப்பே றெய்தி எண்ணிய கரும மெல்லாம்
பூரண மாகப் பெற்றுப் புண்ணியன் பதஞ்சேர் வாரே."

என்பது நூலின் இறுதிப் பாட்டு. நூல்முதலில் ஆயிரத்து எண்ணூற்று எழுபத்து மூன்றும் ஆண்டில் அம்பலவாணன் கவிராசருடைய முத்தமிழாகர அச்சுக்கூடத்தில் பதிப்பித்து வெளியிடப்பெற்றுள்ளது.

## சகூகூ. கைலாய பரதேசி
## (19—நூ.)

சோழவளநாட்டில் குற்றாலம் என இந்நாளில் வழங்கும் திருத்துருத்தியில் இருந்தவர். அறிவு நூல்கள் பலவற்றை நன்கு கற்றுச் சிறந்த அறிவுநூற் புலவராகத் திகழ்ந்தார். இவர் சிவஞானசாரம் என்னும் நூலினை இயற்றியிருக்கிறார். அந் நூல் பல பதிகள்மீதும் பாடப்பட்டதாய் அறுநூறுக்கு மேற் பட்ட பாடல்களைக்கொண்டு விளங்குகின்றது.

> "கோத்திர மீதில் பிறந்திறந் துழன்று
> கொடியமுன் வினையுமிவ் வினையும்
> சேற்றினில் அழுந்திக் கிடப்பனைக் கிடவா
> திறல்பெற இம்மையிற் சனனம்
> மாற்றுவாய் திருவா ரூரின்க ணுறைந்த
> வாழ்முத லாகிய பொருளே
> ஆத்திமா மலரைச் சூடிய பெருமான்
> அன்புவைத் தழைத்தரு ளாயே."

என்பது திருவாரூர்ப் பாடல்களில் ஒன்று. இவரிடம் அறிவு நூற் கல்வி கற்றுச் சிறப்படைந்தவர்கள் பலராவர்.

## சஎ௦. கைலாச பிள்ளை
## (20—நூ.)

இவர் திருநெல்வேலியினர். பிரமசமாசத்திற்குத் தலைவராக இருந்தவர். இவர் சமரசஞான தீபம் என்னும் உரைநடை நூலை எழுதியுள்ளார். அந்நூலில் பிரம சமய வரலாறு, பிரம சமயக் கொள்கை, கடவுள், மக்கள் உயிர், கடவுள் வழிபாடு, சமயநூல் முத்திநெறி, முத்திநிலை, தேவோபாசனை முதலிய பல செய்திகள் அடங்கியுள்ளன.

## ௪௭௧. கொட்டடி ஆறுமுகம் பிள்ளை

இவர் திரிசிரபுரம் கள்ளத்தெருவில் வாழ்ந்திருந்தார். இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்திருந்ததன்றி மருத்துவ நூல்களையும் நன்கு பயின்றிருந்தார். பலவகையான மருந்துகளை ஒரு கொட்டடியில் வைத்துக்கொண்டு நோயாளிகளுக்கு வழங்கிவந்தார். அதனால் இவருடைய பெயருக்கு முன்னால் கொட்டடி என்னும் அடைமொழி இடம்பெற்றது. சென்னை அரசாங்கக் கல்லூரியில் இருந்தவரும், 'குணகரம்' என்னும் நூல் முதலியவற்றை இயற்றியவருமாகிய சேஷையங்கார் என்பவர் இவருடைய மாணவர். இந்த ஐயங்காரும் இவருடைய ஆசிரியராகிய கொட்டடி ஆறுமுகம் பிள்ளையும் தபால் மூலம் எழுதிக்கொள்ளவேண்டிய செய்திகளைச் செய்யுள் வடிவமாகவே எழுதிக்கொள்வர். இவர் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இளைஞராக வாழ்ந்திருந்த காலத்தில் முதியவராக இருந்தார் என்று தெரிகிறது. இவர் இயற்றிய பாடல்கள் கிடைக்கவில்லை. தனிநூல் செய்ததாகவுந் தெரியவில்லை.

## ௪௭௨. கொல்லையண்ண முதலியார்
## (1899)

இவருடைய முழுப்பெயர் விசயராகவ கொல்லையண்ண முதலியார் என்பது. இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் புலமையுடையவர். மணவாளமாமுனிகள் வடமொழியில் அருளிச்செய்த எதிராசவிம்சதி என்னும் நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்.

> "கற்றேனலேன்நான் பெற்றுள காசுக்குணம்
> சிறிதும் விடேன்
> பெற்றேனுனைப் பிறவொன்றிலேன் பெரிதும்மன
> அருள்செய்து நீ
> குற்றேவலாய்ச்செயு மிச்சொலைக் கொண்டே
> அருள்செய வேண்டுமால்
> இற்றேனெனக் கிரங்கிங்கு நீஅருளாழியே
> எதிராசனே."

என்பது நூலின் இறுதிப் பாட்டு.

## சஎங. கோகழி அடிகள்

இவர் மறைஞான தேசிகர் எனவுங் கூறப்பெறுவர். 1043 செய்யுட்கள் அடங்கிய தத்துவ ரத்திஞகரம் என்னுஞ் சீர்பெறு நூல் இவரால் இயற்றப்பெற்றது. இந்நூலில் முப்பொருள் இலக்கணங்களும் சமயபேத சங்கற்ப நிராகரணங்களும், அவத்தை பேதங்களும், யோக பேதங்களும், சித்தி பேதங்களும், ஞானத்தின் வகைகளும், விடுபேற்று நிலைகளும் விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

## சஎச. கோடிக்கரை ஞானியார்

தாயுமானவர் காலத்தில் வாழ்ந்திருந்த ஒரு பெரியார். முதலிற் கோடிக்கரைக் காட்டில் தவஞ்செய்துகொண்டிருந்தார். பிறகு தாயுமான அடிகளோடு சிறிதுகாலம் வசித்திருந்தார். இராமநாதபுரத்தில் தாயுமானவர் காலஞ்சென்றபோது அவர் காலமான ஆண்டு இடம் முதலியவைகளைப் பின்வருஞ் செய்யு ளில் அமைத்துப் பாடியிருக்கிறுர். இதனுல் இவர் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவரென்பதும் பெறப்படும்.

> *"துகளறு சாலி வருடமா யிரத்தைஞ்*
> *ஞூற்ருெடெண் பத்தொன்று தொடரும்*
> *மிகுசுப இருபதாம் வருடந்தை மாதம்*
> *வெண்மதி வாரநாள் விசாகம்*
> *மகிமைசேர் பூரணத் திதியினில் அருத்த*
> *மண்டல சமயத்திற் கங்கை*
> *திகழ்கரை யதனில் தாயுமா னவஞர்*
> *சிவத்தினிற் கலந்ததாந் தினமே."*

## சஎரு. கோட்டாற்று இளம்பெருமாஞர்

இவர் பெயருக்கு முன்னுள்ள கோட்டாறு என்பதைக் கொண்டு இவர் கோட்டாறு என்னும் ஊரில் வாழ்ந்தவராக இருக்கலாம் என்று ஊகிக்கின்றனர். கோட்டாறு என்பது திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்த நாகர் கோயிலாகும். இவருடைய பாடல்கள் பல கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளன.

## ௬௭௬. கோபால ஐயங்கார் - (சு)
(20—நூ.)

இவர் பரம்பக்குடி என்னும் ஊரினர். அந்தணர் குலத்தினர். கல்வி கேள்விகளில் வல்லவராகிய இவர் தேவகோட்டையில் மீனலோசனி அச்சகம் என்னும் பெயரோடு அச்சகம் ஒன்றை நடத்தித் தமிழ் நூல்களை அச்சடிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார்.

''பாலமர் கடலில் மந்தரம் நாட்டிப்
பணிகயி றாகவே கடைந்து
பண்ணவர் கட்கோர் அமுதினை அளித்த
பசுமணி வண்ண னு நாண,
ஆலமர் கடவுள் அடியிணை பரவும்
அணிமுத்து சாமிமூன் றாகும்
அருந்தமிழ்க் கடலில் தாலுவை நிறுவி
அன்பெனு நாருறீஇ மதித்து
வேலமர் முருகற் கிருபதி கங்கள்
விடையுறு பரமனுக் கிரண்டு
வியப்புறு பதிகம் பராபர மாலை
என்றவை யமுதையு மேலோர்
தாலமர் பவர்கட் களித்தனன் இவற்றைத்
தணப்பிலா மனத்தொடு படிப்போர்
தாந்தரு மார்த்த காமமோக் கங்கள்
சாருவர் எளிதினின் அம்மா.''

என்பது இவர் முத்துச்சாமிப் பிள்ளை என்பவருடைய பிரபந்தத் திரட்டு என்னும் நூலுக்களித்த சாற்றுக்கவியாகும். இவ்வருமையான பாடலில் இவர் புலமைத்திறம் நன்கமையப் பெற்றவர் என்பது பெறப்படும்.

## ௬௭௭. கோபால ஐயர் - அ
(20—நூ.)

இவர் ஆலங்குடி என்னும் ஊரினர். புதுக்கோட்டை நாட்டைச் சேர்ந்த கோநகர் முதலிய இடங்களில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். கருவூர் ஆனிலைப் பசுபதீசுவரர்பேரில் நவமணிமாலை, ஆண்டிப்பட்டி பெருநிலக்கிழார் பெத்தாச்சி செட்டியார் மீது காப்புமாலை முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

“கங்கை யணிந்த முடிப்பரமன்
கருணை கொண்டு மதுரையில்வாழ்
சங்கம் புரக்க வவதரித்த
தாயே தமிழ்க்குத் தாய்போல்வாய்
கொங்கு வளநாட் டாண்டிபட்டி
குலவப் புரக்கும் புரவலனே
இங்கு நெடுநாள் வாழவுனை
இனிது காப்பான் பசுபதியே.”

என்பது காப்புமாலையில் ஒரு பாட்டு. பெருந்தேவனார் பாரதம் முதலிய நூல்களை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார்.

## ௩௭௮. கோபாலகிருட்டிண ஐயர்

(20—நூ.)

இவர் ஆம்பூர் என வழங்கப்பெறும் அன்பூரில் புகைவண்டி நிலையத் தலைவராகப் பணிபுரிந்துகொண்டிருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களை நன்கு கற்றுச் செய்யுள் பாடுவதிலும் வல்லவராக இருந்த இவர் பரம கலியாணியம்மன்பேரில் ஆசிரிய விருத்தம் முதலிய சிறு நூல்கள் இயற்றியுள்ளார்.

“மங்களஞ் சேருசிவ சயிலநகர் தன்னிலே
மறைமலர்த் தவிசு ளோனும்
மற்றுமுள தேவரொடு மாதவ ரனேகரும்
மகுடவர்த் தனர்க ளும்நிதம்
சங்கையதி லாமலே சந்ததங் கந்தமலர்
சாத்தித் துதித்து நின்பொற்
சரணமலர் போற்றியே அர்ச்சித்தும் அயல்நிற்ப
சாம்பவி பராக் கென்னவே
செங்கையிற் பொற்பிரம் போடுதிரு நந்தியந்
தேவர்சன் னதிவி லக்கச்
சேடனும் உரைப்பரிய நின்விழா வெழிலையிச்
சேயாற் சொலற்பா லதோ
பங்கயத் திருமால்பின் நங்கைபதி நூற்புவனி
பணிபதாம் புயபா வையே
பன்னகம் பூண்பரன் பங்கினுறை பாரியே
பரமகலி யாணி உமையே.”

என்பது இவர் இயற்றிய பரம கலியாணிப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩௭௯. கோபாலகிருட்டிண ஐயர் - ம

இவர் சிறந்த தமிழறிஞர்களில் ஒருவர். ஆங்கிலப் பயிற்சியும் நன்கு அமையப்பெற்றவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பரீட்சகராகவும், தமிழ்ச் சங்கத்தின் நிர்வாக சபை அங்கத்தினரில் ஒருவராகவும் இருந்து சிறந்த பணியாற்றியதன்றி நச்சினார்க்கினியன், விவேகோதயம் முதலிய பத்திரிகைகள் நடத்தியும் பணிபுரிந்தார். திருச்சி நாஷனல் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார்.

இவரால் அவ்வக்காலங்களில் இயற்றப்பெற்ற தனிப் பாடல்கள் 'அரும்பொருட்டிரட்டு' என்னும் பெயரோடு மூன்று பகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் முதற் பகுதியில், தெய்வ வணக்கம், அவையடக்கம், விநாயக வணக்கம், பரமசிவ வணக்கம், சுப்பிரமணிய வணக்கம், விட்டுணு துதி, நாமகள் துதி, ஐந்தாம் சார்ச் அரசர் முடிசூட்டு விழாப் பாடல்கள், கார்மிகேல் பிரபுவின் வரவேற்பு வாழ்த்து, உ. வே. சாமிநாதையரின் மகாமகோபாத்தியாய பட்ட மகிழ்ச்சிக்கவிகள், மாதாமகர் பிரிவாற்றுமை, தாய் பிரிவாற்றுமை, தந்தை பிரிவாற்றுமை, மூத்த தமையன் பிரிவாற்றுமை, சகோதரி பிரிவாற்றுமை, பாண்டித்துரைத் தேவர் பிரிவாற்றுமை, வேங்கட்டராமையர் பிரிவாற்றுமை முதலிய பிரிவாற்றுமைக் கவிகளும், சுதேசிய வாழ்த்து, மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை வாழ்த்து முதலிய பல வாழ்த்துக் கவிகளும் வேறு பல கவிகளும் அடங்கியுள்ளன. இந்நூலை இவர்தாமே தொகுத்து அச்சிட்டதற்குப்பின் அச்சாகவில்லை யாகையால் இப்பொழுது கிடைப்பது அருமை.

இரண்டாவது பகுதியில் பல ஆங்கிலப் புலவர்கள் செய்துள்ள அரிய பாடல்களின் மொழிபெயர்ப்புப் பாடல்களும், மூன்றுவது பகுதியில் இயற்கைப் பொருள்கள், வரலாறுகள், நீதிச் செய்திகள் முதலியவற்றைப் பற்றிய அரிய பெரிய கட்டுரைகள் ஆகியவைகளும் அடங்கியுள்ளன.

**" திருமதுரை மாநகரில் உயர்குலம்போல்**
**உயர்குணமும் சிறப்ப வாய்ந்த**
**தருமகுண மாமணிஎம் வெங்கட்ட**
**ராமனெனும் தயாள வள்ளால்!**

பெருமைபெறு உயர்தரக்கோர்ட் வக்கிலாய்
கவர்ன்மெண்டு பிளீட ராகி
உரிமையுறு புகழ்மேவி இருபத்தி
ராண்டுனைப்போல் உற்றார் யாரே.''

என்பது இவர் இயற்றிய இரங்கற்பாக்களில் ஒன்று.

''தந்தையே தநயன்எனும் மறைக்கிசையப்
பழநியப்பன் தவப்பே றாக
வந்தகந்தன் நிகர்சாமி நாதன்எங்கள்
அளகப்ப வளவன் ஈன்ற
புந்திமிகு சுந்தரமங் கையர்க்கரசி
தனைமாலை புனைந்தான் இன்றோர்
மைந்தர்களா தியபேறு பதினாறும்
வாய்ந்தென்றும் வாழ்க மாதோ.''

என்பது இவர் இயற்றிய வாழ்த்துப் பாடல்களில் ஒன்று. இவா மூட்டைப் பூச்சியைப் பற்றிப் பாடியது:

''கண்ணுதலான் கைலையையும் கார்வண்ணன் பாற்கடலும்
எண்ணும் பிரமன் எழின்மலரும்—நண்ணியதென்
வஞ்சகமூட் டுப்பூச்சி வன்கொடுமைக் காற்றாதே
அஞ்சியவர் சென்றார் அறி.''

சிறந்த புலவராக விளங்கியிருந்த இவர் 1927 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினேழாம் நாள் (பிரபவ ஆண்டு சித்திரைத் திங்கள் ஐந்தாம் நாள்) இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

''எக்காலும் முயற்சியொடு மேதாவ
தொன்றுரைத்தோ எழுதி யேயோ
தொக்கார்கண் டுவந்திட நின் னுடல்பொருளா
தியமூன்றும் சோர்வி லாமல்
மிக்காரும் தமிழ்மொழிக்கே விழைந்துதவும்
மேன்மையினை விதியி லாதேன்
எக்காலம் கண்டிடுவேன் கோபால
கிருட்டிணனே எங்குச் சென்றாய்.''

என்பது இவருடைய பிரிவாற்றாது நா. இலட்சுமி நரசிம்மையர் என்பவர் பாடிய இரங்கற்பாக்களில் ஒன்றாகும். மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வளர்ச்சியை நாடி இவர் செய்த முயற்சிகள் பலவாகும்.

## ௪௮0. கோபாலகிருட்டிணதாசர்

இவர் வைணவ சமயத்தில் தோன்றியவர். ஆழ்வார்கள் பாடலிலே மிகுந்த ஈடுபாடுடையவர். இவர் திருமால்மீது எம்பிரான் சதகம் என்னும் நூலைப் பாடியுள்ளார். பாடல்கள் திருமால் பெருமை, கண்ணனாகத் தோன்றிய காலத்து நிகழ்ச்சிகள் முதலியவைகளைக் கூறுவன.

"திருமாது வீற்றிருக்குங் கமல மார்பா
திகிரிசங்கந் தரித்தருளுஞ் செய்ய கையா
கருமாணிக் கக்கிரிபோல் நிறத்த மெய்யா
கதிரிரவி மதியிரண்டுங் கண்ணாங் கண்ணா
அருமா மறைப்பொருளாம் ஆதி தேவா
அனைத்துலகும் படைத்தளித்திட் டழிக்கும் ஐயா
இருபாத மலர்போற்ற மெய்யர் நெஞ்சில்
இருக்திநா ராயணனே எம்பிரானே."

என்பது சதகத்தின் முதற்பாடல்.

## ௪௮௧. கோபாலகிருட்டிண பிள்ளை
(20—நூ.)

ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்பு சென்னைமாநகரில் இருந்த அறிஞர். திருநீர்மலை என்னும் ஊரினர். பச்சையப்ப முதலியார் சபாமண்டப மாளிகை என்னும் கட்டிடம் நுழைவு விழாவின்போது இவர் அறுபத்து நான்கு அடிச் சிந்து ஒன்று பாடினார். அம் மாளிகை அந் நாளில் அட்வொகேட் செனரலாக இருந்த சார்ச் நார்ட்டன் என்பவர் அடிப்படைக் கல்நாட்டக் கட்டிமுடிக்கப்பட்டது. அச் சிந்தின் பல்லவியை அடியிற் காண்க:

"சார்ச் நார்ட்டன்முன் கைதொட முற்றுப்பெற்ற
மாளிகையைப் பாரும்—அட்வோகேட் செனரல்
சார்ச் நார்ட்டன்முன் கைதொட முற்றுப்பெற்ற
மாளிகையைப் பாரும்—சார்ச்."

இச் சிந்தையன்றி வேறு நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை. இச் சிந்தைக் கொண்டே இவருடைய புலமை நன்கு உணரத் தக்கதாக உள்ளது.

## ௪௯௨. கோபாலசாமி நாயுடு - து. வீ.
(20—நூ.)

சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே உள்ள சாலிய மங்கலம் என்னும் ஊரில் அஞ்சல் நிலையத் தலைவராகப் பணிபுரிந்தவர். செந்தமிழ்க் கல்வியிற் பேரார்வங் கொண்ட இவர் அந் நாளில் தஞ்சைமாநகரில் பெரும் புலவராக விளங்கி யிருந்த மதுரமுத்து உபாத்தியாயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். இவர் ஏதேனும் நூல்கள் இயற்றினாரா என்பதைப் பற்றி யாதுஞ் செய்தி தெரியவில்லை. மு. சாம்பசிவனார் என்பவர் இயற்றிய 'சிவக்ஷேத்திர யாத்திரானு கூலம்' என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

**"சேடனிற் புலமை சார்பாண்**
**டித்துரைத் தேவர் கோமான்**
**கூடலில் நான்காம் சங்கம்**
**கூட்டிமுத் தமிழ்காக் கும்இந்**
**நாடனிற் சிறப்பின் மிக்க**
**நாட்டரி மளத்தில் செல்வம்**
**நீடுசெல் லப்ப நல்லோன்**
**நேரிய முயற்சி தன்னால்."**

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௪௯௩. கோபாலாச்சாரியார் – கா.
(1904)

இவர் சென்னை மா நகரில் கிறிஸ்தியன் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக விளங்கியிருந்தார். இலக்கண இலக்கியங்களில் சிறந்த புலமைபெற்றிருந்ததன்றிச் செய்யுள் இயற்றல் சொற் பொழிவுகள் செய்தல் முதலியவைகளினுஞ் சிறந்து விளங்கினார். இவர் காலத்திலே சென்னைமா நகரில் உ. வே. சாமிநாதையர், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, திருமயிலை சண்முகம் பிள்ளை முதலியோர் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தனர். இவருடைய செய்யுட்கள் பொருட் செறிவும் இனிமையும் அமைந்தனவாகத் திகழும். விட்டுணு புராணம் என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களில் சிலவற்றை அடியிற் காண்க:

பத்ருகிரி நீதியல் என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

'' நீரினெதிர் சென்று நெருப்பினிடை நின்றுநிதி
கூறுங் கிழியை வென்று கோதில்பரம் இன்னதென்று
பாரும் விசும்புமுயப் பண்ணியநஞ் செந்தமிழ்தான்
சீரின் விளங்கியது தென்மதுரை நன்னாடு.

அந்நற் பதிசூழ் அனைத்தான ஊர்களினும்
கன்னற் றலைமறையக் காய்க்குங் கதிர்வளமார்
செந்நெற் சூடியோர்முன் செய்தவத்தி னாலுதித்தோர்
நன்னர்ப் பனவர்குடி நாளுஞ் செழித்திடுமால்.

ஓது பதியதன்கண் உற்றவந்த நற்குலத்துத்
தீது பதிதலிலாச் செந்தமிழோர் தந்தமிழைச்
சேது பதிகளுக்குச் செப்பினரென் பாரவர்பின்
சாது பதியொருவன் தன்றிறன்யாம் நன்றுரைப்பாம்.

இட்டமிகு தன்மையினான் யாருமவனைச்சாமிக்
குட்டிசுப்ப ராயனெனக் கூறுவரால் ஆங்கவருள்
மட்டில்கலை செல்வ வளமார் நகரத்தார்
சிட்டனெனப் புகழும் சீரங்க நாதன்முதல் ''

## ௪௮௪. கோபால தேசிகர் - தா

இவர் வேமன்ன பரம்பரையைச் சேர்ந்தவர். ஆயிரத்தொரு கண்ணிகள் அடங்கிய மெய்ஞ்ஞானப் புலம்பல் என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

'' அத்திமுகன் திருவடியை அன்பாகப் போற்றிசெய்து
—என்னம்மா
முத்திபெறஞானப் புலம்பல் மூட்டுகிறேன் கேளடியோ
ஆதி திருவருளோ ஆண்டுநின்ற தெப்பொருளோ
—என்னம்மா
நீதிமறை சாற்றிவந்த நிச்சயமும் உருகுதடி. ''

என்பன நூலின் கண்ணிகளில் இரண்டு.

## ௪௮௫. கோரக்க நாதர்

சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் என்னுஞ் சித்தர்கள் ஒன்பதின்மரையும் நவசித்தர்கள் என்பர். இவர் மிகக் கடுந்தவஞ் செய்து தமிழ்நூற் புலமை, மருத்துவநூற் புலமை முதலியன நன்கு அமையப் பெற்றார்.

இவர் இயற்றிய நூறு பாடல்கள் கொண்ட நூலுக்குக் 'கோரக்கர் வைப்பு' என்று பெயர். கஞ்சாப்பூண்டை முதன்முதலாகக் கண்டு பிடித்தவர் இவரே என்றும் அதனால்தான் கஞ்சாப்பூண்டுக்குக் 'கோரக்கர் மூலி' என்று பெயர் உண்டாகியது என்றுங் கூறுகின்றனர்.

## ௪௮௬. கோவிந்தசாமி ஆச்சாரியார்

கொங்குவள நாட்டில் திருப்பூரில் இருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றிருந்த இவர் தென்சேரிகிரியில் எழுந்தருளிய கடவுள்மீது நூல்கள் பல இயற்றியிருக்கிறார்.

## ௪௮௭. கோவிந்தசாமி ஐயர் – மு
(20 - நூ.)

இவர் மதுரை நகரில் முத்துச் சுப்பையர் என்பவருக்கு மைந்தனாகத் தோன்றினார். மதுரைக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த சுப்பராம ஐயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமைபெற்றார். மதுரை செயிண்ட் மேரிஸ் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். செய்யுள் செய்வதில் திறமைமிக்க இவர், "திருவிளையாடல் அகவற்பா, திருவிளையாடல் வண்ணம், சங்கர விசயம்" முதலிய நூல்களை இயற்றியுள்ளார். சங்கரவிசயம் பதினாறு அத்தியாயங்களையும் எழுநூற்றறுபத்தேழு செய்யுட்களையும் உடையது. அந் நூலினைப் பாராட்டி, நாராயணசாமி ஐயர், வயி-நாக. ராம. அ. இராமநாதன் செட்டியார், பா. சுப்பராம ஐயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "கங்கையுடன் பிறையணிந்த திருச்சடையும்
> கறைக்களமும் கரங்கள் நான்கும்
> அங்கியுடன் இருசுடரா முக்கண்ணுந்
> நீவணமும் அரவம் பூண்ட
> அங்கமுமே மறைத்தருளி நிட்களமா
> மிலிங்கவடி வாகி நின்று
> பங்கமிலா வரங்கள்பல கொண்டடியார்
> தினம்பணிந்து பரவ உற்றான்."

என்பது சங்கரவிசயம் இரண்டாம் அத்தியாயத்தில் ஒரு பாட்டு. மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல் மாணிக்கவாசகர் வரலாற்று வெண்பா. அந்நூல் உ௬ள வெண்பாக்களைக் கொண்டது. இதற்கு மு. ரா. அருணசலக் கவிராயர், மு. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்

"ஐயர் வருமுன்னர் ஆன்மநா தப்பெருமான்
செய்ய கதிர்கோடி சேர்ந்ததுபோல்—மெய்யொளிர
மூவுலகில் ஆரகு முற்றுறவோர் வேதியராத்
தாவில் குருந்தடைந்தார் சார்ந்து."

என்பது அந் நூலில் ஒரு பாட்டு.

## ௩௯௯. கோவிந்தசாமி நாடார் - தி (1903)

சோழவள நாட்டிலே நன்னிலந்தாலுகா கௌரியம் என்னும் ஊரில் திருவேங்கட நாடார் என்பவருடைய அருமைத் திருமகனாகத் தோன்றியவர் இவர். இவர் கபிலைச் சரித்திரக் கீர்த்தனை பாடியுள்ளார். 'கபிலைச் சரித்திரம்' என்பது ஒரு பசு புலிக்கு அறிவுரை கூறி அதனை நல்வழியிற் செலுத்திய செய்தியைக் கூறுவது. அவ் வரலாற்றினைப் பலர் வெண்பாவாகவும் விருத்தமாகவும் பாடியுள்ளனர். இவர் இசைப்பாவாகப் பாடியுள்ளார். இடையே விருத்தம் சிந்து உரைநடை முதலியவைகள் விரவியுள்ளன. இரண்டு சிந்துகளை அடியிற் காண்க:

சிந்து

"நீடுமலை வனங்கள் காடுமேடுஞ் சுற்றிவந் தேன்
நீதிதனி லுன்னைப் போலக் காணேனே—இப்போ
கோதிலா வுன்மேல் ஆனந்த மானேன்;
ஆடுமாடு கடம்பையைத் தேடியே வதைகள் செய்து
ஆனுவத்தா லெங்குஞ் சுற்றலானேனே—இன்று
நானும் பாவத்துக்கு ஆளாய்ப் போனேனே."

இது கன்றிடஞ் சென்று திரும்பி வந்த பசுவைப் பார்த்துப் புலி கூறியது. இந் நூலுக்கு மன்னார்குடி தாலுகா ஒளிமதி சாமிநாத பிள்ளை, முத்துச்சாமிப் பிள்ளை, பிறைசை உபாத்தியாயர் சோம

சுந்தரம் பிள்ளை, கடுவாய்க்கரைத் தென்புத்தூர்ச் சுப்பிரமணிய பிள்ளை, விசுவநாதபுரம் சுந்தரம் ஐயர், தேவங்குடி இராம கோவிந்த நாயுடு என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪௯௯. கோவிந்தசாமி ரெட்டியார் – சி
(19 - நூ.)

சோழவள நாட்டில் திருஞானசம்பந்தப் பெருமான் தோன்றி யருளிய சீகாழிப்பதியில் சின்னச்சாமி ரெட்டியார் என்பவருக்கு அருந்தவப் புதல்வராகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றபின் சீர்காழி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்துகொண்டிருந்தார் மாணவர்கட்கு யாப்பிலக்கணம் நன்கு விளங்குமாறு யாப்பிலக்கண வினவிடை என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். அந் நூலை, மாயூரம் அட்டாவதானம் சந்திரசேகரக் கவிராயர், வி. நடராசக் கவி ராயர், பிறையாறு பாவாடை செட்டியார் ஆகியோர் புகழ்ந்து சிறப்புப்பாயிரம் அளித்துள்ளனர்.

"குருலிங்க சங்கமங் கொண்டநற் பதிவாழ்
இருந்தகை மேவுந் தருங்கொடை யாளன்
சின்னச் சாமிமால் செய்தவப் பேற்றால்
மன்னிய சீலன் மாசறு மனத்தோன்
பூவிந்தை கண்டு புலமையில் தேர்ந்த
கோவிந்த சாமி எனும்பெயர் கொண்டும்
அன்பால் உயர்ந்த ஆண்டகை யாளன்
இன் புறச் செய்தான் யாப்பிலக் கணமே."

என்பது நடராசக் கவிராயரின் பாடலில் ஒரு பகுதி.

## ௪௱௦. கோவிந்த நாராயண பிள்ளை – சு
(20 - நூ.)

இவர் தென்பாண்டிவள நாட்டிலே திருநெல்வேலி மாவட் டத்திலே ஸ்ரீவைகுண்டம் பிரிவில் தெய்வச்சிலைபுரம் என்னும் ஊரினர். இவர் மேற்படியூரில் பாலசுந்தர கணேசப் பெருமா னுக்குத் திருக்கோயில் அமைத்துப் பூசனைக்குரிய பொருளும் ஏற்படுத்தி அக் கடவுளுக்குக் கைத்தொண்டு வாய்த்தொண்டு

புரிவதையும் (பணி செய்தலையும் பாடுதலையும்) மேற்கொண்ட வர். இவர் மேற்படி பாலசுந்தர கணேசர்மீது, "முத்தமிழ் அட்சரமாலை" என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந் நூலுக்கு முகவுரையெழுதிய கா. சுப்பிரமணிய பிள்ளை, "இது தமிழின்கண்ணுள்ள முப்பத்து மூன்று எழுத்துக்கள்போல முப்பத்து மூன்று பாக்களடங்கியதாய் முத்தமிழாகிய ஓங்காரத் தின் எழுத்துச்சொற் பொருள்களை இனிது விளக்குவதாயமைந் திருப்பதால் முத்தமிழ் அட்சரமாலை எனப் பெயர் பெற்றது. ஓங்காரத்தின் தோற்றம் அகர, உகர, மகர முறையன்று: உகர அகர மகர முறையே யாமென்ற பண்டைத் தமிழர் கருத்தை இந்நூற் காப்புச் செய்யுளுட் குறிப்பாகவும், நூலின் எட்டா வது பாட்டில் வெளிப்படையாகவும் இந் நூலாசிரியர் விளக்கி யிருப்பதின் புதுமையும் நயமும் பாராட்டற்பாலது" என்று குறிப்பிட்டுள்ளார்.

"தெய்வச் சிலைபுரத்தில் தேமணஞ்சீ லங்கெழும
தெய்வச் சிலையாய்த் திகழ்ந்தவா—உய்விக்கும்
தந்திமுக வாருானம் தங்குமும்ம தாபால
சுந்தரா நின்றாள் துணை."

என்பது நூலில் ஒரு பாட்டு. நூல் உரையுடன் வெளியிடப் பெற்றிருக்கிறது.

## சகூக. கோவிந்த பாரதி - கோ

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் வேம்பத்தூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். சிலேடைப்புலி பிச்சுவையருக்கு இவர் மருகர். சௌந்தர பாரதியிடம் கல்வி கற்றவர். இவர் இயற்றிய நூல் கூடற் பதிகம் முதலியன. கூடற் பதிகத்துப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"சம்புசிவ சங்கரம ஹாதேவ தேவனே
சச்சிதா னந்த வடிவே
சமயமா கமமிருதி வேதவே தாந்தமெய்த்
தத்துவம நாதித மே
வம்புவிரி கொன்றையங் கண்ணிகொக் கிறகுபுனல்
மதியறுக ணிந்திடு சடா

மகுடமதை அயனுமது மலிவனச பதமலரை
மாலுமறி யாரென் றிடின்
அம்புவியில் நின்பெருமை என்புகல்வ தன்புநிறை
ஆதியே அருணிதியே
அவலமதி உறுசிறியன் நினநினிய அருள்பெறவென்
அகந்தனில் நினைந்து நிதமும்
கும்பிடுவ தும்மனத் தெண்ணுத தென்கொலோ
கொடியனே னெனினுந் தயை
கூர்ந்துவந் தேழையெனை யாதரித் தாளுவாய்
கூடலம் பதியி சனே.''

## ௪௯௨. கோவிந்தராச கவிராசர் - பி (1886)

இவர் சென்னைமா நகரில் பிரம்பூரில் வாழ்ந்தவர். திருமணம் கேசவ சுப்பராய முதலியார், சோடசாவதானம் தி. க. சுப்பராயச் செட்டியார் ஆகியோரிடங் கல்வி கற்றுப் புகழ்பெற்றுர். இவரால் இயற்றப்பெற்ற திருத்தணிகைச் சிங்காரமாலை என்னும் நூலுக்குப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், சோடசாவதானம் தி. க. சுப்பராயச் செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

''மங்கையரென் றூற்செவியும் வானுலகென் றூல்விழியும்
செங்கையி னூல்புதைப்பர் சீர்த்தொண்டர்—அங்கவர்க்குப்
பங்கயத்தாள் உண்மகிழப் பாலிப்பாய் எம்பெருமான்
இங்கிதத்தால் தென்தணிகை யில்.
இந்திரனூர் போற்றுவதும் ஏற்ற தவிம்வளர் வார்
முந்துவதும் உட்கரணம் முன்னொடுங்கி—எந்தையொடு
சேர்ந்தின்பம் துய்ப்பதுவும் சீர்த்தணிகை யாமதனூல்
கூர்ந்திமையோர் வானைநகுங் கொண்டு.''

என்பன இவர் இயற்றிய தனிப்பாடல்களில் இரண்டு.

## ௪௯௩. கோவிந்தராச செட்டியார் (20 - நூ.)

பாலாற்றின் கரையில் உள்ள இராணிப்பேட்டை என்னும் ஊரில் சிறந்த அறிஞராக விளங்கிய அண்ணாமலைச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங்களை

நன்கு கற்றுப் புலவராகி மாணவர் பலருக்கு நூல்களைப் பாடஞ் சொல்லிக்கொண்டிருந்தவர். காமக்கூர் சுந்தர முதலியார் இவரை, "பாலாற் றின்வளம் பல்கும் வடபால், சேலாற் றும்வயல் செழிக்குமா ராணிப், பேட்டையில் வாழ்ந்து பெருமான் அடியெனும், வீட்டை யடைந்த வித்துவ சிகாமணி, அண்ணு மலையருள் அரியநற் புலவன், பண்ணுர் மொழியுமை பங்களைப் பணியும், கோவிந்த ராச குணமிகு புலவன், மாவிந்தை யாக மாணவர் பலர்க்கும், பற்பல நூல்களைப் பாடஞ் சொல்லும், விற்பன விதரண மேலவ னுேன்" என்று பாராட்டியுள்ளார். தணிகை நிரோட்டக யமகவந்தாதி என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றுள்ளது. நூலைப் பாராட்டித் திரு. வி. கலியாண சுந்தர முதலியார், ச. சச்சிதாநந்தம் பிள்ளை, கா. மு. சுந்தர முதலியார், தி. செ. வீரபத்திர பிள்ளை, தொ. குப்புச்சாமி யாச்சாரியார், நம்பரைக்கச்சி—வேங்கடாத்திரி ஐயர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "திருச்சக் கரனென் கணன்சென் றிறைஞ்சுந் திருத்தணிகைத்
> திருச்சக் கரநக ரின்றடைந் தேன்கைச் சிரத்துறத் தாழ்ந்
> திருச்சக் கரக்ககந் தீநீ ருடனிணைத் தேதுறக்கத்
> திருச்சக் கரணத் துளானந்தத் தாழ்ந்தனன் சீரியதே."

என்பது நூலின் முதற்பாட்டு.

## ௨௯௪. கோவிந்தராச பாகவதர் – ப
## (19 - நூ.)

இவர் வேலூரில் பள்ளிகொண்டான் என்பவருக்கு அருமைத் திருமகனுகத் தோன்றியவர். புதுவை சோமசுந்தரப் பிள்ளையிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றவர். இவர் பகவத்யான கீர்த்தனம் என்னும் இசை நூலைப் பாடியுள்ளார். அந் நூலுக்குத் திரிசிரபுரம் கோவிந்த பிள்ளை, புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், புதுவை சோமசுந்தரப் பிள்ளை, கோவிந்தப் பிள்ளை குமாரர் நாராயணசாமிப் பிள்ளை, பு. முருகப்ப உபாத்தியாயர், தஞ்சை சாமிநாத ஆசாரியார், ப. இரத்தினவேலு முதலியார், திருமயிலை சண்முகம் பிள்ளை, தஞ்சை சட்டாவதானி பாலவைரக்கண் வேலாயுதப் புலவர், தஞ்சை சண்முகம் பிள்ளை,

செவலைப்புரை சின்னசாமிப் பண்டிதர், புரசை சோதிட முத்திருளப்ப பண்டிதர், திரிசிரபுரம் சீநிவாச தாசர், வல்லிபுரம் நாராயணசாமி தாசர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> " ஆரணம் புகழும் அரிபரந் தாமா
> அச்சுதா அறிதுயில் அமர்ந்தோய்
> வாரணங் கூவ வந்துமுன் நின்ற
> வளர்கரு ணைகரப் பொருளே
> காரண கமலக் கண்ணனே கவினுங்
> கருடகே தனகடல் வண்ணா
> நாரணா ஞான நாயகா உனது
> நற்பதாம் புயமிறைஞ் சுவனே."

என்பது போற்றிப்பாடல்களில் ஒன்று.

## ௪௬௫. கோவிந்தராச முதலியார் – வா. தி
### (20 - நூ.)

இவர் ஆங்கிலக் கல்வியையுந் தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றவர். சென்னை ஐக்கிய நாணய சங்கம் பதிவு நிலையத்தில் கணக்காளராகத் தொழில் புரிந்தவர். செந்தமிழ்ப் பாடல்களை நன்கு இயற்றக் கூடிய திறம் பெற்றவர். "இரத்தின பஞ்சகம்" முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

> " கலியாண சுந்தரனுங் கருணைவள்ளல்
> காதலுடன் சட்டி பூர்த்தி
> நலியாத வண்ணமதா நாமகிழ
> நானிலத்தில் நன்கு செய்தே
> ஒலியாரும் மகோததிசூழ் உலகதனில்
> ஊழிவரை வாழ்ந்து பின்னும்
> வலியாருஞ் சைவமத மேன்மைதெரிந்
> தெஞ்ஞான்றும் வாழ்க மாதோ."

என்பது இவர் அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரின் அறுபதாண்டு நிறைவு விழாவிற் பாடிய பாடல்களில் ஒன்று. இரத்தின பஞ்சகம் என்பது ஐந்தே பாடல்களாயினும் பஞ்சரத்தினம் என்று கூறத்தக்கவாறு சிறந்து விளங்குகிறது.

## ௪௬௬. கோனேரியப்பனையங்கார்

இவர் சீரங்கநாயகியார்மீது ஊசல் பாடியுள்ளார்.

"நீராழி நிறத்தரங்கர் அடிகள் வாழ
நெடுமகுடப் பணிவாழக் கருடன் வாழப்
பேராழி செலுத்தியசே னையர்கோன் வாழப்
பேய்பூதன் பொய்கைமுதற் பதின்மர் வாழ
ஓராழிக் கதிர்வாழத் திங்கள் வாழ
உம்மடியார் மிகவாழ உலகம் வாழச்
சீராழி சங்குகதை சிலைவாள் வாழச்
சீரங்க நாயகியா ராட ரூசல்."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௪௬௭. கௌசிக மகாரிஷி

இவர் முனிவர்கள் எழுவரில் ஒருவர். மெய்யறிவு நூல்கள் பல அருளிச் செய்திருப்பதன்றிக், "கௌசிக சிந்தாமணி" என்னும் காலக்கணித நூலும் செய்திருக்கிறார்.

"மெய்யுறு லக்கினத்தில் வியாழனே யிருக்குமாகில்
அய்யமில் லாதநெஞ்சன் அபநீச ராசியாகில்
கையுறப் பெற்றபிள்ளை கருமத்துக் குதவா னுவன்
பொய்களே மிகவுஞ் சொல்வன் பொருந்திய வறியனாமே."

என்பது நூலில் ஒருபாட்டு.

## ௪௬௮. கௌபால சித்தர்

இவர் சித்தர்களில் ஒருவர்; ஆணிக்கோவை என்னும் நூலை இயற்றியுள்ளார். அந் நூல் "கௌபால சித்தர் ஆணிக்கோவை" என்னும் பெயரோடு வழங்குகின்றது. இவ்வாசிரியர் இந் நூலின் செய்தியைத் தெரிந்துகொள்வதற்குப் பல தீவுகள் தீவாந்தரங்கள், குன்றுகள் மலைகள் முதலான இடங்களில் ஆசிரியரைத் தேடிப்பார்த்துக் கண்டுபிடிக்க முடியாமல் இறுதியில் பொதியமலையில் கண்டுபிடித்து அறிந்ததாகத் தெரிகிறது.

"கொடுத்திட்ட சித்தாதி சித்த ரெங்கள்
குலதெய்வ மாகவெல்லாக் குறிப்புங் காட்டி
அடுத்திட்ட என்னப்பன் என்னை ஆண்ட
ஆண்டவனார் தேவமுனி அருளினாலே

எடுத்திட்டேன் லோகஉப கார மாக
இசைந்ததொரு நல்லாணிக் கோவை நூலை
முடித்திட்டேன் பாடலது அன்பத் தொன்றாய்
முடித்திட்டேன் மொழிந்தகவு பால சித்தன்.''

என்பது நூலில் ஒருபாட்டு.

## ௪௯௯. சங்கரகுமார முனிவர்

தருமபுர ஆதினம் பத்தாவது குருமூர்த்திகளிடம் அருளுரை பெற்றவர். தருமபுரத்தலபுராணம், "சச்சிதாநந்த விநாயகர் பிள்ளைத் தமிழ்'' என்னும் நூல்களை இயற்றியவர்.

## ௫௦௦. சங்கரசுப்பிரமணியக் கவிராசர்

இவர் வேம்பத்தூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். திருவநந்தபுரம் அரசர் முதலானவர்களால் பாராட்டப் பெற்றவர். இவர் திருவநந்தபுரம் பத்மநாபர் பிள்ளைத் தமிழ், பத்மநாபர் மகாரவண்ணம், தலவிலாசம் முதலிய நூல்கள் இயற்றினர்.

## ௫௦௧. சங்கரநாராயண ஆசாரியார்
(1902)

இவர் பாண்டிவள நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த திருச்சுழியல் தாலுகா கூத்திப் பாறை என்னும் நல்லூரில் இருந்தவர். புலவராக விளங்கிய இவர் ஸ்ரீவில்லிபுத்தூர் சூடிக்கொடுத்தாள் பதிகம், சிதம்பரமாநகர் வேங்கடாசல சுவாமி பதிகம், மடக்குவிருத்தப் பதிகம், தோத்திரப் பதிகம் முதலிய பதிகங்களையும் வேறு சில நூல்களையும் இயற்றியுள்ளார். பதிகங்களைப் பாராட்டிக் கரிவலம் வந்த நல்லூருக்கடுத்த சென்னிகுளம் மடாதிபதி சுந்தர சுவாமிகள், வேம்பூர் அழகர்சாமி ஆசாரி, சிவகங்கை காதர்மீருப் புலவர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' ஆயானை அன்பர்பிழை ஆயானை முத்தொழிலும்
ஆற்றி யென்றும்
வியானைத் துவசமெனும் வியானை இன்பரசம்
விளையுங் கீத

வாயானை வஞ்சகர்பால் வாயானைக் கொடியகஞ்ச
வஞ்சன் விட்ட
காயானைக் கோடொசித்த காயாநை மேனியனைக்
கருதாய் நெஞ்சே.''

என்பது மடக்கு விருத்தத்தில் ஒருபாட்டு. இவருடைய பிற பாடல்களும் இவ்வாறே அழகுடையனவாகத் திகழுகின்றன.

## ருoஉ. சங்கரநாராயணக் கவிராசர் - வீ

எட்டையபுரம் சமத்தானத்தைச் சேர்ந்த சம்புலிங்கபுரம் என்னும் ஊரில் வீரராகவக் கவிராயர் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். திருவண்ணநாதக் கவிராயர் என்பவர் இவருடைய உடன் பிறந்தாராவர். இவர் நாராயணசாமி நாயுடு என்பவர் பாடிய ''கேமன்முனிவர் வெண்பாவந்தாதி'' என்னும் நூலுக்கு,

''பொற்புறுசெந் தாமரையாள் தங்குஞ் சிந்து
பூந்துறைவாழ் தட்சணா மூர்த்தி என்னும்
சிற்பரன்சேர் மடாலயங்கோ வில்கொள் கேமற்
றிருமுனிமேல் வெண்பாவந் தாதி தன்னை
அற்புதமாய்ப் பகர்ந்தனன்கற் கண்டோ பாகோ
அருந்தேனோ அமிழ்தோமுக் கனியோ என்ன
நற்புகழ்போ லீஸ்பென்சன் இன்சு பெக்டர்
நாராய ணசுவாமி நாவலோனே.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். சிறந்த புலவராகிய இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை.

## ருoஙு. சங்கரநாராயண பாரதியார்
## (20 - நூ.)

திருநெல்வேலிமாவட்டம் சங்கரநயினார் கோயில் பிரிவு திருவேங்கடம் என்னும் ஊரில் ஏறக்குறைய ஐம்பதாண்டுகளுக்கு முன்னிருந்தவர். ''கன்னியா குமரி பகவதியம்மன் பதிகம்'' என்னும் நூலை இவர் பாடியிருக்கிறார். நூலைப்பாராட்டித் திருவிதாங்கூர்க் கணேச பிள்ளை, கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, தாமரைக்குளம் பத்மநாப பாரதியார், புத்தேரி குமார

சாமிப் பிள்ளை, கோட்டாறு கணபதி ஆசாரி, கன்னியாகுமரி சிதம்பர கிருட்டின ஐயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

"திருமருவுந் தென்குமரிப் பதிவளரும்
பகவதிமா தேவி கஞ்ச
மருமலரந் தாளிணைக்கிவ் வாசிரிய
விருத்தமிரு வனப்பாய்ச் செய்தான்
உருமணிசெந் தேனுததி உண்டுமிழும்
கொண்டலெனை உலகில் இன்பந்
தருமதுர கவிபொழிசங் கரநாரா
யணன்புலவர் தலைவன் தானே."

என்பது கவிமணியின் பாட்டு.

"பொய்யான யாக்கையை மெய்யாக எண்ணியே
புந்திகெட் டலையு மாந்தர்
பேரனபின் கழுகினொடு நாய்நரிகள் வாயிவிடு
புலாலிற் பொதிந்த கூட்டை
அய்யா எனப்பா நீயல்லால்வே றில்லையென
அறைவார்கள் சுற்ற முறையால்
அம்மனி நின்கதையை அன்பினொடு கேளாமல்
அநியாய வாழ்க்கை கொண்டார்
குய்யோவெ னப்பாங்கர் கையால் இழுத்தெமன்
கூட்டியே செல்லும் வேளை
கூடவருவாருமிலை பாடுபடு வார்கள்தொலை
கும்பிட்டு மேத்தி னேன்யான்
மையார்ந்த கண்டனொடு மாயவன் துதிசெயும்
மதியே மதிப்பில் நாயேன்
மருட்கடல் கடக்கவோர் அருட்கலம் எனத்திரை
மணிக்கரையில் வாழ்குமரி யே."

என்பது பதிகத்தில் ஒருபாட்டு.

## ருoச. சங்கரநாராயண பிள்ளை - அ
## (1871)

பாண்டிவளநாட்டில் திக்கெல்லாம் புகழுந் திருநெல்வேலியில் சுப்பிரமணிய பிள்ளை என்பவருடைய அருமைத் திருமகனுகத் தோன்றியவர். இவர் திருத்தொண்டர் ஆநந்தக் களிப்பு என்னும் இசைப் பாடலை இயற்றியிருக்கிறார்.

"ஆனந்த மானந்த மானே—நம
தாவியோ டாக்கை யடங்கலுந் தானே
ஆனந்த மானந்த மானே

விநாயகர் துதி

ஞானமுன் றுடைந் தலைக்கண் ணடி
நாட்டரன் தொண்டர்மெய் நாடிந் நிலைக்கண்
ணானமன் றுதொண் கலைக்கண் ணுமை
யுய்த்து நல்வாக்கரு ளோர்கை மலைக்கண்." (ஆன)

என்பது நூலின் தொடக்கம். இந்நூலுக்குத் திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகள், அம்பலவாணன் கவிராசர், கல்லிடைக் குறிச்சிச் சிதம்பரநாதன் கவிராசர், திருநெல்வேலிப் புராணிகர் சண்முகம் பிள்ளை, அழகிய சொக்கநாத பிள்ளை, புனல்வேலி சுப்பிரமணிய சாத்திரிகள், இராமநாதபுரம் அட்டாவதானம் முத்துச்சாமி அய்யங்கார், திருநெல்வேலி கூபத்துக் குருக்களய்யா, அத்தாள நல்லூர் கந்தசாமிக் குருக்களய்யா, திருநெல்வேலி கவிராச நெல்லையப்ப பிள்ளை, திருநெல்வேலி வழக்கறிஞர் சாமிநாத பிள்ளை, யாழ்ப்பாணம் துறவு இராமலிங்க அடிகள், திருநெல்வேலிமாவட்ட நீதிமன்ற வழக்கறிஞர் வடிவழகிய நம்பியா பிள்ளை, திருநெல்வேலி ஆவுடையப்ப பிள்ளை கு. சிவராம முதலியார், புதூர் வள்ளிநாயகம் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௦௫. சங்கரநாராயணர்

ஏறக்குறைய முந்நூறாண்டுகட்குமுன் பாண்டிவள நாட்டில் வேம்பத்தூரில் வாழ்ந்திருந்தவர். இவர் "மதுரைக்கோவை" என்னும் நூல் இயற்றியிருக்கிறார்.

"தேவுக் கரசு திருவால வாய்க்கொரு தீபமென்னும்
கோவுக் கருந்தமிழ்க் கோவைசெய் தான்கொண் டெழுமொரு [சொற்
காவிற் படிதடஞ் சூழ்நிம்பை காவலன் கற்றுணர்ந்தோர்
நாவுக் கினியனன் சொற்பாடற் சங்கர நாரணனே."

என்பது நூலின் சிறப்புப்பாயிரம்.

காட்சி

"கார்பூத்த சித்தூர வார்பிறை சூடுங் கமலம்பண்டு
பார்பூத்த மின்னென்று பூத்ததுண் டோபனைத் துப்பெருத்து
வார்பூத்த கோல முலையுமை பாகர் மதுரைவையை
நீர்பூப்ப நன்றியுங் கண்டனங் காவில் நிலைபெறவே."

என்பது கோவையின் முதற்பாட்டு. நானூற்று மூன்று பாடல்களைக்கொண்ட இக்கோவை, வையாபுரிப் பிள்ளை அவர்களால் அச்சிட்டு வெளியிடப் பெற்றிருக்கிறது.

## ௫௦௬. சங்கரநாவலர்

இவருடைய தந்தையார் பெயர் சிவசங்கர நாவலர். சங்கர நாவலர் "கன்னியாகுமரித் தலபுராணம்" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அந்நூல் பதினெட்டுச் சருக்கங்களையும் எண்ணூற்றைம்பத்தாறு செய்யுட்களையும் உடையதாக விளங்குகிறது. இப்புராணம் கன்னியாகுமரியின் சிறப்பைக் கூறுவது.

"பலகலையுஞ் சிவாகமமும் படித்துத் தேர்ந்து
பதிபசுபா சத்தினுண்மை பதிந்த உள்ளம்
இலகுமொரு திருமேனிப் புலவர் தம்போல்
ஈன்றசிவ சங்கரன்சேய் சங்கரநா வலன்பால்
அலகில்புகழ்க் கோட்டைவணி கேசர் முந்நூல்
அரிதாகத் தேடியதைப் பாடச் சொல்லத்
தலைமகிழுங் குமரிநகர்த் தலபு ராணம்
தான்தமிழ்நூல் உலகுய்யச் சாற்றி னானால்."

என்பது சிறப்புப்பாயிரம். இதனால் இப்புராணத்தைப் பாடச்செய்தவர்கள் கோட்டாற்றில் உள்ள வணிகச் செல்வர்களென்பதும் பெறப்படுகின்றது. இவர் தோன்றிய காலம் இடம் முதலியன விளக்கமாகவில்லை.

"கல்வி முதிர்ந்த பெரியோரும்
கற்பு நிறைந்த மடவாரும்
செல்வ நிதிக்கோன் தனைப்போலச்
சிறந்த வணிக மரபோரும்
நல்வித் தகரும் பல்குடியும்
நவிலும் வாய்மை தவறாத
சொல்வைத் திருக்கும் நல்லோரும்
தொலையா வளஞ்சேர் கோட்டாறு."

என்பது நாட்டுச் சருக்கத்தில் ஒருபாட்டு.

## ௫௦௭. சங்கரபாண்டியன் பிள்ளை
(கி. பி. 20 - நூ.)

இவர் சங்கரன் கோவிலையடுத்த நகரம் என்னும் ஊரில் சைவ வேளாளர் குலத்தில் பண்டைக் குறுநில மன்னர்களுக்கு அமைச்சராகவும் படைத்தலைவராகவும் விளங்கிய பொன்னம்பலம் பிள்ளை என்பவரின் வழிமுறையில் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறியவர். இவர் மருத்துவத் துறையிலும் சிறந்து விளங்கினார். திருமலையில் எழுந்தருளிய முருகப்பெருமான்மீது பேரன்பு கொண்டவர். திங்கள்தோறும் நிகழும் கார்த்திகை நாளில் அம்முருகக்கடவுளுக்குச் சிறப்பான பூசையியற்றச் செய்வார். அப்பெருமான்மீது வெண்பாவந்தாதி, திருமலைக்குமரன் பதிகம், வருகைப் பதிகம் முதலிய நூல்களையும் வேறு பல நூல்களையும் இயற்றியிருக்கிறார். இவருடைய வெண்பாவந்தாதியைப் பாராட்டி நகரம். வே. முத்துவீருக் கவிராயர்,

> "மாமேவு திருமலைக்கண் வளர்முருகன்
> அடிமலரை வணங்கி யேத்தப்
> பாமேவு புகழிலகும் வெண்பாவந்
> தாதியன்பாய்ப் பகர்ந்தான் பண்பார்
> காமேவு திருநகரப் பதியுறையுங்
> கங்கைகுலக் கலைவல் லாளன்
> நாமேவு பாவலவன் சங்கரபாண்
> டியக்கவிஞன் நயந்து மாதோ."

என்று சாற்றுக்கவி யளித்திருக்கிறார்.

> "பாவலர்க ளின்பமுறும் பண்டிதவ ரோதயனே
> நாவலர்சேர் பண்பை நவநிதியே—தாவலன்சேர்
> மாமயிலி லேறிவரு மாவிரத னேமுருகா
> சேமநிதி சாரவருந் தே."

என்பது வெண்பாவந்தாதியில் ஒரு பாட்டு.

## ௫௦௮. சங்கரமூர்த்தி

இவர் நல்லூர் என்னும் ஊரிலே நல்லதம்பி என்பவருக்கு மகனாகத் தோன்றினார். இவருடைய காலம் நூறு ஆண்டுகட்கு

முற்பட்டதாகும். மாணிக்க வாசகருடைய வரலாற்றை இவர், "மாணிக்கவாசகர் அம்மானை" என்னும் பெயரோடு பாடியிருக்கிறார்.

> "மாணிக்க வாசகரம் மானை தனைக் கேட்போர்கள்
> காணிக்கை யாகக் கைலாயஞ் சேர்வார்கள்
> கற்றுப் படித்தவர்கள் காதாரக் கேட்பவர்கள்
> பெற்றுப் பெருகிப் பெரியகுடி யாயிருப்பார்
> பாடினவர் கேட்பவர்கள் பயனெடுத்துச் சொல்பவர்கள்
> இந்தக் கதையை எழுதிப் படித்தவர்கள்
> இன்னம் இன்னம் சொல்லுமென்று இனிமையாய்க் [கேட்டவர்கள்
> இந்தக் கதையை எழுதிக் கொடுத்தவர்கள்
> எல்லோரும் இன்பமுடன் இனிதாக வாழியரோ."

என்பது நூலின் இறுதி வாழ்த்துப் பாட்டு.

## ௫0க. சங்கரமூர்த்திக் கவிராயர்

பதினெட்டாம் நூற்றாண்டில் இருந்த ஒரு சிறந்த தமிழ்ப் புலவர். சிவஞான முனிவருடைய மாணவர். இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள இராசபாளையத்தில் பிறந்தவர். வேளாள மரபினர். இவர் கன்னிவாடிப் பெருநிலக் கிழார்மீது ஒருகோவை பாடினார். கோவையைக் கேட்டு மகிழ்ந்த பெருநிலக்கிழார் கவிராயருக்கு நன்கொடையாக யானைக் கன்றும் ஓர் ஊரும் கொடுத்தார். சேற்றூர்ப் பெருநிலக் கிழார்மீது ஒருபள்ளும் பாடிப் பரிசு பெற்றார். தனிப்பாடல்களும் பல பாடியுள்ளார். இவர் முதல் முதலாகச் சேற்றூர்ப் பெருநிலக் கிழாரைக் காணச்சென்ற போது அவர் இவரைப் பார்த்து, "நீர்யார்?" என்று உசாவினார். இவர் உடனே,

> "செந்தமிழ் கம்பனுரை செய்வதினிஸ் கும்பனுடன்
> வந்தெதிர்த்தோர் தங்களுக்கு மார்பாணி—சந்ததமும்
> நங்கருணை மீனாட்சி நாதவேள் ஈன்றெடுத்த
> சங்கரமூர்த் திக்கவிரா சன்."

என்னும் வெண்பாவால் மறுமொழி கூறினார்.

இவருடைய விரிவான வரலாறு இருப்பதாகத் தெரிகிறது. பலவிடங்களில் முயன்றும் அகப்படவில்லை.

## ருகo. சங்கரமூர்த்திப் புலவர் - வீ

இவர் தூத்துக்குடி என இக் காலத்தில் வழங்கும் திருமந்திர நகரில் வாழ்ந்திருந்தவர். வீரபாண்டியப் புலவர் எனவும் இவர் கூறப்பெற்ருர். இவர் இயற்றிய நூல்களில் இராமலிங்க சதகம் என்பது ஒன்று இப்பொழுது அறியப்படுகிறது. இஃது இராமேசுவரத்தில் எழுந்தருளிய இறைவன்மேலது. 1896-ஆம் ஆண்டில் அச்சிற் பதிப்பித்து வெளியிடப் பெற்றுள்ளது.

> "சிவாசி வாவெனத் துதிசெ யாதவாய்
> தெரிசி யாதகண் குவித ராதகை
> நவசி வாலயம் வலம்வ ராதகால்
> நவில்பு ராணமா கமமு ருச்செவி
> தவசி ராதிகண் மணிய ணிந்தருள்
> தருவெண் ணீறுடன் பரிசி யாதமெய்
> இவைசி மானுட அவைய வங்களோ
> இராம லிங்கமே இராம லிங்கமே."

என்பது நூலின் முதற்பாட்டு. இவர் வீரபாண்டியக் கட்ட பொம்மன் காலத்தினரெனவும் அம்மன்னனுடைய அவைக்களப் புலவராக அமர்ந்திருந்தபடியினுல் 'வீரபாண்டியப் புலவர்' என்று பெயர் பெற்ருர் எனவும் கூறுகின்றனர்.

## ருகக. சங்கரலிங்கத் தேவர்

(19—நூ.)

அமுதாபுரம் என்னும் ஊரிலே இருந்தவர். இவருடைய பாட்டனூர் பெயர் தருமபுத்திரன் கவிராயர். இத்தருமபுத்திரன் கவிராயரும், சிறந்த புலவர். நூல்கள் செய்துள்ளார். சங்கரலிங்கத் தேவர் செய்த நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை; ஊற்றுமலைப் பெருநிலக் கிழார்மீது இவர் இயற்றிய சில பாடல்கள் அகப்படுகின்றன. அப் பாடல்களுள் ஒன்று,

> "அம்ப ரந்தனின் முன்துயின்றுந் திரு
> வமரர்க் காயிடர் தீர்த்துந் தமனியத்
> தம்ப ரந்தனை யேபுனை மாயவ
> னடிப ணிந்த மனோகர னேதிக

> மும்ப ரந்தனின் வாழுடுவின் குழாத்
> தண்ணவிந்து குலத்திறை போற்புவி
> யம்ப ரந்தடந் தோளினிற் றுங்கிய
> வரச னேயித யாலய பாண்டியனே.''

என்பது. இதற்குமேல் இவரைப் பற்றிய செய்திகள் தெரிய வில்லை.

## ௫௬௨. சங்கரலிங்க பாரதி - ஆ

இவர் சேற்றூர்ச் சமத்தானத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் ஆதிமூல ஆச்சாரியார். இவருடைய வருணம் விசுவப்பிரமகுலம். இவர் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலமையடைந்தார். சிதம்பரதாண்டவ மதுர கவிராயர் என்பவர் இயற்றிய 'மாந்தைப் பள்ளு' என்னும் நூலை நன்கு ஆராய்ந்து பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். கும்பகோணம் சுப்பிரமணியப் பத்தர் என்பவர் மீது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று:

> ''தாராரும் பொற்புயத்தான் தயையாருங்
> கனமனத்தான் தமியேற் கன்பாய்
> ஓராறு மாதம்வரை உபசாரம்
> பொருளுதவி உவந்து செய்து
> பேராருஞ் சாதியபி மானமெனக்
> கென்மடங்கு பிறங்கக் கொண்டு
> சீராரும் இந்நூலை அச்சியற்றும்
> பெருமுயற்சி தேடிக் கொண்டான்.''

என்பது.

## ௫௬௩. சங்கரலிங்க முதலியார் - க. பா (20 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலியில் செங்குந்தர் மரபில் பாடகலிங்க முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் தக்காரிடம் கல்விகற்றுப் புலவரானார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் இரட்டை விநாயகர் பதிகம் முதலியன. இரட்டை விநாயகர் பதிகத்தைப் பாராட்டி மா. குமார

சாமி முதலியார், கு. பழநியாண்டி முதலியார், மு. சு. ஆறுமுக முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நாத வடிவோய் நின்றோனே
நாடுமடியார்க் கருள்வோனே
மாதர் மயக்கில் உழன்றுழன்றே
மதிகெட் டலையும் நாயேற்குன்
போத மளித்துன் பொன்னடிக்கீழ்ப்
பொருந்துந் தொண்டர் தொண்டளிப்பாய்
சீதப் புனல்சூழ் நெல்லையில்வாழ்
செல்வா ரெட்டை விநாயகனே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫கச. சங்கரலிங்கம் பிள்ளை - அ (1898)

தொண்டைவளநாட்டில் முத்தூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். தந்தையாருடைய பெயர் அப்பாவுப் பிள்ளை. இவர் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தார். பீ. ஏ. வரையிலும் ஆங்கிலக் கல்விகற்றூர். தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியும் பெற்றிருந்தபடியால் பாவியற்றும் தன்மையும் பெற்றிருந்தார். அந்நாளில் சென்னை சூளையில் வாழ்ந்திருந்த பெருமாள் நாயுடு புதல்வர் நாதமுனி நாயுடு என்பவர் திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள்மீது கலம்பகம் ஒன்று பாடவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இவரும் அவ்வாறே பாடி முடித்து அரங்கேற்றஞ் செய்தார். அந்நூலைப் புகழ்ந்து; தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, புலவர் அப்பன்செட்டியார், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், கோ. வடிவேலுச் செட்டியார், ஊற்றுமலை கந்தசாமிப் புலவர், இராசகோபால பிள்ளை, காயல் இராமசாமிக் கவிராயர், ஆ. மே. சென்ன கேசவுலு நாயுடு, வள்ளியூர் நமச்சிவாயப் புலவர், திருத்தவத்துறை சேதுராம பாரதியார், அரங்க கோவிந்தராசுலு முதலியார், வல்லி-ப. தெய்வநாயக முதலியார், கின்றை தங்கவேலு முதலியார், வண்ணக்களஞ்சியம், காஞ்சி நாகலிங்க முனிவர், பண்டிதை மனோன்மணி அம்மையார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். மேற்படி கலம்பகத்தில் அம்மானைப் பாடலை அடியிற் காண்க.

"ஆபாரந் தனைப்புரந்த அலிக்கேணி அச்சுதனூர்
பூபாரந் தீர்ப்பதற்குப் புவிவந்தார் அம்மானை
பூபாரந் தீர்ப்பதற்குப் புவிவந்தார் ஆமாகில்
மாபார தம்முடிக்க வலவரோகா ணம்மானை
வலவரவர் வலவராய் வாய்ந்ததிறல் அம்மானை."

பாடல்கள் யாவும் திட்பமும் நுட்பமுஞ் செறிந்து நயத்துடன் விளங்குகின்றன. பீ. ஏ. வரை ஆங்கிலக் கல்விகற்ற ஒருவர் இவ்வாறு கலம்பகம் இயற்றத்தக்க தமிழ்ப் புலமையும் பெற்றிருந்து பாடியது மிகவும் வியக்கத்தக்கதன்றோ? ஆங்கில மோகத்தில் ஆழ்ந்துவிடாது தமிழையும் நன்குகற்ற இவருடைய பண்பு போற்றத்தக்கது.

## ௫௧௫. சங்கரலிங்கம் பிள்ளை - க (1885)

இவர் பாண்டிவளநாட்டிலே மேலவீரராகவபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். சிற்றூர் அலுவலாளராகத் தொழில் புரிந்தார். தாம்பிரவர்ணியாறு என்பது பாண்டிவளநாட்டில் நெல்லைமாவட்டத்தில் ஓடும் ஓர் உயிர்யாறு (சீவநதி). ஆறுகள் யாவுந் தெய்வத்தன்மை பொருந்தியவை என்பது முன்னோர் துணிபு. அத்துணிவுப்படியே இவர் தாம்பிரவர்ணி யாற்றுக்குப் புராணம் ஒன்று இயற்றிப், "பொருனை மாதாவினது தலபுராணம்" என்று பெயர் கொடுத்துள்ளார். ஐந்நூற்றறுபது செய்யுட்களோடு கூடிய இப்புராணம் இடையிடையே உரைநடையையுங்கொண்டு விளங்குகிறது. இப்புராணத்தை யன்றிக் குறுக்குத்துறைப் பதிகம், குறுக்குத்துறைத் திருமுறைப் பதிகம், குறுக்குத்துறைத் திருவருள் நடைப்பதிகம், குறுக்குத்துறைத் திருவருள் எதார்த்த வடிவப்பதிகம், குறுக்குத்துறைக் கந்த சட்டிப்பதிகம், குறுக்குத்துறை அரிமுதலக் கனவரை அட்சரப் பதிகம் முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார். பாடல்கள் யாவும் பிழை மலிந்து காணப்பெறுகின்றன.

"சீர்பொருந்துங் குறுக்குத்துறை வேலனுரு மலையில்
ஓர்பொருளோஞ் சிவசுப்பிரமணியஞ் சுயம்பாக வந்து
ஆர்பொரு ளாதியந்த முகிர்த்தமான கோலமதாய்
கூராய் வகுத்தனன் சிற்பமுத் தையன் குறுக்குத்துறை தனிலே."

என்பது குறுக்குத்துறைப் பதிகத்தில் ஒரு பாட்டு,

## ௫௧௬. சச்சிதாநந்த நமசிவாயர்
(19 - நூ.)

ஈழவள நாட்டில் யாழ்ப்பாணத்து நல்லூரைச் சார்ந்த கொக்குவில் என்னும் ஊரில் இருந்தவர். இவர் முருகக் கடவுளிடத்துப் பேரன்புடையராதலின் தம் பெயரைச் சரவணபவதாசர் என்றுஞ் சொல்லிக்கொண்டார். இலக்கண இலக்கியப் பயிற்சியை நன்குபெற்று நூலாராய்ச்சியில் ஈடுபட்டவர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. பலநூல்கட்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

> "பங்கயச்செழும் பள்ளிகொள் பாரதி கொழுநன்
> செங்கண் மால்முதல் அமரர்கள் தினந்தினங் குழுமிக்
> கங்கை வேணியங் கண்ணுதற் கடவுளைக் குறித்துக்
> கொங்கரும்பிய மலர்கொடே பணிவது கோணமாவசலம்."

என்பது தட்சிண கைலாச புராணத்திற்குப் பாடிய சிறப்புப் பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௫௧௭. சடகோப ஐயர் — சேட
(20 - நூ.)

புதுவைமாநகரில் அந்தணர் குலத்தில் தோன்றிய இவர் பு. அ. பெரியசாமிப் பிள்ளை என்பவரிடந் தமிழ் கற்றுப் புலமை பெற்றார். தம் ஆசிரியர் இயற்றிய புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு,

> "பார்வளருந் தென்புதுவைப் பதிவளருங்
> கரிவரதப் பண்ணவன்மேல்
> ஏர்வளருங் கலம்பகமொன் றியாங்களெலாம்
> கடைத்தேற இயற்றி னானால்
> கார்வளரென் மனக்கல்லில் கல்வியெனும்
> பயிர்வளரக் கருணை பாய்ச்சும்
> பேர்வளர்நல் ஆசிரிய னம்பெரிய
> சாமியெனும் பெரியோன் மாதோ."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார். வேறு சில நூல்களினும் இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல்கள் காணப்பெறுகின்றன.

## ருகஷ. சடகோபதாசர் - கீழையூர்
(18 - நூ.)

இவர் தொண்டை நாட்டிலிருந்து சோழவள நாட்டிற்குக் குடியேறிய வல்லகாளத்தியப்ப முதலியாருடைய மரபில் தோன்றியவர். ஏறக்குறைய இருநூற்றைம்பது யாண்டுகட்கு முன் நாகப்பட்டினம் சிறு பிரிவு கிழையூரில் சடகோபராமாநுச முதலியார் என்னும் பெயரோடு புகழ்பெற்று வாழ்ந்தவர். இவருடைய வழிமுறையினர் இப்பொழுதும் உள்ளனர். இவர் அரிசமய தீபம் என்னும் நூலை இயற்றியுள்ளார் அந்நூல் பரமபதச் சருக்கம், ஆதியோகிச் சருக்கம், பத்திசாரச் சருக்கம், பராங்குசச் சருக்கம், குலசேகரச் சருக்கம், பதுமைச் சருக்கம், முனிவாகனச் சருக்கம், விப்பிரநாராயணச் சருக்கம், பட்டநாதச் சருக்கம், கோதைச் சருக்கம், பரகாலச் சருக்கம், நாதமுனிச் சருக்கம், யாமுநச் சருக்கம், இராமாநுசச் சருக்கம் என்னும் பதினன்கு சருக்கங்களை உடையதாக விளங்குகின்றது.

> "ஆடு மாமணி யரங்கினில் அணங்கனூர் மிடற்றில்
> பாடு மோதையும் பாடலுக் கமைவுறச் சுருதி
> கூடு மோதையும் குரனிறை வீணையிற் கொளுவி
> நாடு மோதையுங் கின்னரர் பதியினை நாடும்."

என்பது பத்திசாரச் சருக்கத்தில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு முத்துக்கிருட்டிண நாயுடு என்பவர் பொழிப்புரை இயற்றியுள்ளார்.

## ருகக. சடகோபப் புலவர்

பாண்டிவள நாட்டில் ஆழ்வார் திருநகரியில் இருந்தவர். இவர் திருமேனி வயித்திய நாதன் என்பவருடைய மாணவரென்று எண்ணுகின்றனர். இச்சடகோபப் புலவர், "குருகூர்ப் பள்ளு","திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம்" முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். குருகூர்ப் பள்ளில் பள்ளன் தோன்றுதலைப் பற்றிய பாட்டை அடியிற் காண்க:

> "கள்ளுடனே சுள்ளருந்திக் களித்து நெளித்துக்கருங்
> கச்சைகட்டிப் பச்சைமணித் தொண்டுகட்டியே
> வெள்ளரிய செம்பவள வொள்ளியதா வடங்கட்டி
> மெய்ப்பாக வாய்த்தசெம்பொற் றுப்பாரங்கட்டித்

துள்ளியமி சைமுறுக்கித் தள்ளவிழுந் திருமாந்து
துன்றுமணிக் கொட்டுத்தோளில் நின்றிலங்கவே
தெள்ளியபுகழ் நம்மாழ்வார் வள்ளமலர்த் தாள்பரவும்
சீபராங்குசப் பள்ளன் தோன்றி னுனே.''

## ௫௨௦. சடாட்சர ஆரியர் - கா
### (19 - நூ.)

இவர் புதுச்சேரியில் புலவராக விளங்கியிருந்தவர். இசைப் பாடல்க ளியற்றுவதிலும் வல்லவராகிய இவர் "அதிபத்த நாயனர் வரலாற்''றை இசைப் பாடலாகப் பாடியுள்ளார். அந் நூலுக்குச் சென்னை இராயபுரம், வே. கி. நாராயணசாமிப் பிள்ளை,

''கதிபத்த ரைப்பரவுந் தன்மையெனக் கண்டோர்ந்(து)
அதிபத்தர் சீர்த்தி அனைத்தும்—புதுவைச்
சடாக்கரவேள் கீர்த்தனமாச் சாற்றினுன் யாரும்
கெடக்கருதா வண்ணங் கிளர்ந்து.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மேற்படி வே. கி. நாராயணசாமிப் பிள்ளையின் செய்யுட்டிரட்டு என்னும் நூலுக்கு இவர் பின்வருங் கட்டளைக் கலித்துறையைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

''சீராருஞ் சென்னை இராய புரங்கோ வைசியகுலப்
பேரோங்கும் கிட்ண சுவாமிப்பிள் ளைப்பெரு மான்தவச்சார்
நாரோங்கு நாரா யணசாமிப் பிள்ளைவித் வானையடுத்(து)
ஏரோங்கச் செய்யுட் டிரட்டெனு நூல்செய்தச் சிட்டனனே.''

## ௫௨௧. சடாட்சரவேலு முதலியார் - தி. ல
### (20 - நூ.)

நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த இவர் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். இவர் காலத்தில் அவ் வூரில் இராசப்ப நாவலர், சுப்பிரமணிய முதலியார், வடிவேலு முதலியார், நரசிம்ம பாகவதர், தி. அ. பொன்னரங்கம் பிள்ளை என்போர் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தனர். சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்த இராசப்ப நாவலர் என்பவர் இயற்றிய திரு

வெண்ணெய் நல்லூர்க் கலம்பகம் என்னும் நூலுக்கு இவர்பின் வருஞ் செய்யுளைச் சாற்றுக் கவியாகப் பாடியுள்ளார்.

"சீர்மேவு திருமுனைப் பாடிநன் னாட்டில்
சிறந்ததென் பெண்ணை தென்பால்
செல்வந் திரண்டதிரு வெண்ணெயம் பதியருட்
டிகழுங் கிருபா புரீசர்
கார்மேவு கற்பகக் காவின்மலர் மாலைகக
னப்புலவர் வாரி சொரியும்
கமலவிரு பதமலரில் நிகரில்சுந் தரர்சொலும்
கவிமாலை சூடி நின்ற
தார்மேவு மவ்வந்தி வண்ணர்மேற் பாமாலை
தான்பாட வேநினைந்து
தவமிகச் செய்துசெந் தமிழிலக் கணவிலக்
கியசலதி துருவியமுதம்
நார்மேவு வெண்ணெய்க் கலம்பக மெனப்பெயர்
நவின்றுதிரு வடிசாத்திய
ஞானசெங் குந்தமர பீல்திலக மானகவி
ராசப்ப நாவ லோனே."

## ௫௨௨. சட்ட முனிகள்

மதுரையில் இருந்த இவர் திருக்கோவலூர் ஞானியார் மடம் ஆறுமுகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பெரியாரை யடுத்துக் கல்விகற்றுச் சிறந்த தமிழ்ப்புலமை பெற்றார். "விண்ணுறு கயிலைப் பதிகம்" முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

## ௫௨௩. சட்டைநாதவள்ளல்

இவர் சீகாழியில் தோன்றியவர். வடமொழி தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் வல்லவர். இவர் வாழ்ந்திருந்த காலம் முதலியன விளங்கவில்லை இவர் "சதாசிவரூபம்" என்னும் நூலை நூற்று ஐம்பத்திரண்டு நூற்பாக்களால் இயற்றியிருக்கிறார். இந் நூல், "வாதுளம்", "காமிகம்" என்னும் இரண்டு ஆகமங்களின் சாரமாகச் செய்யப்பட்டது. இச்செய்திகளை,

"கவலையில் வாதுளம் காமிகம் என்னும்
இரண்டு தந்திரத் தெங்கோன் அருளால்

திரண்ட பொருள்களைச் சீர்பெறத் தொகுத்துத்
தண்டமிழ்த் தொடையால் சதாசிவ ரூபமென்
றெண்டிறற் பனுவல் உளங்கனிந் துரைத்தோன்
ஞானக் குழவியும் நாவினுக் கிறைவனும்
ஊனமில் ஊரனும் ஒருவடி வாகிச்
சிரபுரத் துதித்தோன் திருநெறிக் காவலன்
தருசிவ ஞான சதுர பாடிகன்
அஞ்சுக போதம் அருள்புரி வள்ளல்
கஞ்சுக நாதன் கலைத்தமிழ்க் கடலே.''

என்பது நூலின் சிறப்புப்பாயிரம்.

''ஆயதீயை அதிட்டித் தளவறு
மாயை உபாதா னத்தொடு மன்னி
மாயை முதலா மண்முடி வாக
மூய தத்துவம் முப்பத் தொன்றிலும்
மேய வியாபீத் திடுமுருத் திரனே.''

என்பது நூலில் ஒருபா.

## ௩௨௪. சட்டை முனி

இவர் ஒரு சிறந்த முனிவர். அகத்தியர் காலத்தில் இருந்தவர். தவத்தினால் எல்லாச் சித்திகளையும் பெற்றுச் சிறப்படைந்தார். தமிழ்ப் புலமை, மருத்துவப் புலமை, ஞானநூற் புலமை முதலியன இவரிடம் நிரம்பியிருந்தன. இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், ஞானம் நூறு, கற்பம் நூறு, வாத நிகண்டு, சடாட்சரக் கோவை முதலியன. இவர் சேணியர் வகுப்பில் தோன்றியவர் என்று கூறுகின்றனர். சித்தர்களியற்றிய மருத்துவம் காலக் கணிதம் முதலிய நூல்களிடத்தில் இவர் மிகுந்த வெறுப்புக்கொண்டு அவைகளைப் பறித்துக் கிழித்தெறிந்தார் என்னுஞ் செய்தியொன்றும் வழங்குகின்றது.

''குக்குடச் சூடு கொந்தலைக் கேந்திரன்
தக்குடச் செம்பி சாதக ரகத்தி
அக்குடப் பாணி ஆநந்த வல்லியாம்
தெக்குடக் கோழித் தலைகெந்திப் போகுமே''

என்பது இவருடைய நிகண்டுப் பாடல்களில் ஒன்று. இவருடைய முழுப்பெயர் கைலாயக் கம்பளிச்சட்டை முனி என்று வழங்குகின்றது.

## ௫௨௫. சட்டையப்ப அடிகள்
(20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் செட்டிமார் நாட்டில் ஏறக் குறைய அறுபதுயாண்டுகட்கு முன்பிருந்தவர். கோயிலூரில் மெய்யறிவுச் செல்வராக விளங்கியிருந்த, சிதம்பரஞான தேசிகர் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர். இலக்கண இலக்கியப் புலமையிலும் வல்லவராகிய இவர் தம் அறிவாசிரிய ராகிய சிதம்பரஞான தேசிகர்மீது, "நெஞ்சுவிடு தூது" என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

"காமா திகளென்னுங் கத்துருவாஞ் சத்துருவைப்
போமாறு செய்யும் புகல்வலியோ—டேமாக்கும்
சத்தமுத லைந்தெனுமோர் தன்னிழலைத் தான்சுளிக்கும்
புத்திவிகற் பங்களெலாம் போக்குவிக்கும்—நித்தியமாம்."

என்பன நூலில் இரண்டு கண்ணிகள். நூல்முழுவதும் வேதாந்தக் கருத்துக்கள் செறிந்து விளங்குகின்றன.

## ௫௨௬. சண்முக அடிகள் - திரு
(19 - நூ.)

திருப்பாதிரிப் புலியூரில் கார்த்திகை மடத்தில் இருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியில் வல்லவராகிய இவர் செய்யுள் பாடுதலினும் வல்லவர். பிறரைக்கொண்டு சில நூல்கள் செய் வித்துள்ளார்.

"வேத முதலாய் விரிந்த கலைகளெலாம்
பேதமறக் கொண்ட பெருந்தகையே—வாதமிடும்
வஞ்சருளத் தோன்றுது வானவர்க்கு மெட்டாத
விஞ்சு நிலை காட்டும் விளக்கு."

என்பது இவர் இயற்றிய தனிப்பாடல்களில் ஒன்று.

## ௫௨௭. சண்முக அடிகள்
(1893)

திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனத்தில் தம்பிரான் களுள் ஒருவராக இருந்தவர். சைவசித்தாந்த நூல்களினும்

இலக்கண இலக்கியங்களினும் வல்லவர். இவர் காசிமடத் தலை வர்மீது பல செய்யுட்கள் இயற்றியுள்ளார். அவைகளுள் ஒன்று,

"தனத்திலுற் கனத்தால் தண்மையால் கொடையால்
தாவிலா நல்வழிச் செல்லும்
மனத்தினுல் பொறையால் வாய்மையால் துறவால்
மறைவழி வழாதவர் சேர்நல்
இனத்தினுல் உரத்தால் இம்மையில் நின்றே
டெண்ணுவார் யாவர்மற் றுள்ளார்
தனக்குநே ரில்லாச் சாமிநா தப்பேர்
தயாளநற் றவர்சிகா மணியே."

என்பது. இவர், "சடையப்பர் மாலை", "பெரியநாயகி மாலை", "சந்தான தேசிகர் போற்றிக் கலிவெண்பா", "ஞான சம்பந்த தேசிகர்மாலை", "அகப்பொருள் நவமணிக் கோவை" என்னும் நூல்களையும் பாடியுள்ளார்.

## ருஉ௮. சண்முகக் கவிராயர் – த

பாரதச் சொற்பொழிவு செய்வதில் புகழ்பெற்று விளங்கிய சிறந்த புலவராகிய இவர் நல்லாப் பிள்ளை இயற்றிய பாரதத்தை உரைநடையில் எழுதியிருக்கிறார். மிகவிரிவான இவருடைய உரை தமிழ் நாட்டில் புகழ்பெற்றுச் சிறந்து விளங்குகிறது.

## ருஉகூ. சண்முகக் கவிராயர் - ரா
## (20 - நூ.)

இவர் நகரம்பட்டி இராமலிங்க சோதிடர் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமை பெற்றவர். "புல்வாய் நாயகியம்மன் பதிகம்", "திருத் தாண்டகம்," "பஞ்சரத்தினப் பதிகம்" "சுப்பிரமணியக் கடவுள் ஆசிரிய விருத்தம்," இசைப்பாடல்கள் முதலியன இயற்றி யிருக்கிறார். பாடல்களைப் பாராட்டி இராமநாதபுரம் சிவஞானம் பிள்ளை, வித்வான் கேசவராமசாமி, இராமநாதபுரம் கோ. சுந் தரஞ் செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திருமலர்த் தாள்புவிக் காதார மென்றெனது
சித்தத்தில் உறுதி கொண்டேன்
சிவபரா சத்திநின் னரியபல நாமம்
சிறந்தமறை என்ற றிந்தேன்

அருமையாம் உலகாதி புவனங்கள் எங்கணும்
ஆர்ந்துவளர் சிவ ருக்கே
ஆனகொழு கொம்புநீ யாமென்ப துண்மையே
அம்மம்ம நின்ம கிமையைப்
பெருமைபெறு சேடனுஞ் சொலவஞ்சி லறிவிலாப்
பேதையேன் சொல்ல வசமோ
பிஞ்ஞுகன் இடந்தங்கி அவனிருகண் மணியாய்ப்
பிறங்கு கருணை நந்தியே
மருமலர்ச் செண்பகக் காடேந்து கோதையே
மட்டிலா வாழ்வரு ளுவாய்
மகமுனிவர் புகழ்பாகை நகர்மகிழ அருள்மேவு
மாதுபுல் வாயம் மையே.''

என்பது புல்வாய் நாயகியம்மன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௫௩0. சண்முகசுந்தர முதலியார் - அ
## (19 - நூ.)

இவர் கொன்றைமா நகரம் என்னும் ஊரில் முருகப்ப முதலியார் என்பவருக்குப் பெயரராகவும் அருணாசல முதலியார் என்பவருக்குப் புதல்வராகவும் தோன்றினர். தக்க அறிஞர்கள்பால் இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமை பெற்றதன்றிச் சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தார். ''சிவஞான சித்தியார் தத்துவப் பிரகாசர் உரை, திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார் உரை, சிவஞானபோதம் பாண்டிப் பெருமாள் விருத்தி, சிவஞான சித்தியார் சுபக்கம் மறைஞான தேசிகர், சிவாக்ரயோகியர் ஞானப்ரகாசர், சிவஞானயோகியர், நிரம்ப வழகியர், சுப்பிரமணிய தேசிகர் ஆகியோர் உரை'' முதலிய சைவ சித்தாந்த நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார், சென்னை சிந்தாதிரிப் பேட்டையில் வாழ்ந்திருந்த இவரிடம் பலர் சைவ சித்தாந்த நூல்களை ஓதியுணர்ந்தனர். சைவசித்தாந்தத்திற்கு இவர் செய்த தொண்டு மிகப் பாராட்டக் கூடியது.

## ௫௩௧. சண்முகசுந்தர முதலியார்

ஏறக் குறைய அறுபதாண்டுகட்குமுன் கூடலூரில் இருந்தவர். முருகப்பெருமான்மீது தோத்திர நூல் முதலியன செய்துள்ளார்.

" சீரார் பெரும்பேற் றூப்பதியிற்
சிறப்பி னோங்குஞ் சிவகுருவே
காரார் கேவ லந்தனிலே
கட்டுண் டிருந்த நாயேனைப்
பேரார் சகலம் உறச்செய்தே
பிறங்கும் அடிசேர் மோனமெனும்
ஆரா இன்பம் எற்களித்த
அமலா யான்உன் அடைக்கலமே."

என்பது இவர் திருப்பெரும் பேற்று முருகக் கடவுள்மீது இயற்றிய பாடல்களில் ஒன்று. பாடல்கள் எளிமையும் இனிமையும் பொருந்தியனவாய்க் கற்பார்க்கு உவகையளிப்பனவாக விளங்குகின்றன.

## ௫௩௨. சண்முகசுந்தரம் பிள்ளை - ச

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் அருப்புக் கோட்டையில் சண்முக வேலாயுதம் பிள்ளை யென்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவருடைய பாட்டனார் வள்ளிநாயகம் பிள்ளை சிறந்த புலவர். தந்தையாராகிய சண்முக வேலாயுதம் பிள்ளையும் நல்ல அறிஞர். இவர் தம் தந்தையாரிடமும் பாட்டனாரிடமும் நூல்கள் பலவற்றைப் பயின்று நல்ல புலமை பெற்றார். தம் பாட்டனாராகிய வள்ளிநாயகம் பிள்ளை இயற்றிய "தில்லைமாலை, தில்லைப் பதிற்றுப் பத்தந்தாதி" என்னும் நூல்களுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" பூந்தருக்கந் தரம்பொலிய மலிபெருந்தண்
டலைவேலிப் பொன்னூர் தில்லை
வேந்தருக்கந் தரம்பொருவ வளர்புயத்து
மாலையென மிலையச் செய்தான்
தாந்தருக்கந் தரம்புனைந்து தில்லைமா
லையும்பதிற்றுப் பத்தந் தாதி
யாந்தருக்கந் தரம்பெருகு மிசைநல்லூர்
வள்ளிநா யகவா ளனே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௫௩௩. சண்முகசுந்தரம் பிள்ளை - க
(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் ஸ்ரீவைகுண்டம் தாலுகா வல்லநாட்டினர். இவருடைய தந்தையார் பெயர் கலியாணசுந்தரம் பிள்ளை. சண்முகசுந்தரம் பிள்ளை தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்றுப் புலவராகத் திகழ்ந்தார். "புண்ணியராற்றுப்படை" என்னும் நூலுக்கு இவர் கூறிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று,

> " ஆற்றலொடு தொன்னூல் அருந்தமிழை ஆராயின்
> போற்றுஞ் சுவையமுதாய்ப் பூவுய்யும்—தோற்றமிகுஞ்
> சொல்லார் புகழாசெஸ் சுப்ரமண்ய ஆசுகவி
> வல்லோய்எவ் வூழியினும் வாழ்."

என்பதாகும்.

## ௫௩௪. சண்முக சுவாமிகள்

தருமபுர ஆதீனத் திருக்கூட்டத் தம்பிரான்களுள் ஒருவராக இருந்தவர். சிதம்பரம் செந்தமிழ்ச் சங்கத் தலைவராக அமர்ந்து ஆங்காங்குச் சமயச் சொற்பொழிவுகள் பலசெய்தார். "சடையப்பர் மாலை", "பெரியநாயகி மாலை", "சந்தானதேசிகர் போற்றிக் கலிவெண்பா", "ஞானசம்பந்த தேசிகமாலை", "அகப்பொருள் நவமணிக் கோவை", "செந்தமிழ் இரட்டைமணி மாலை" முதலிய நூல்கள் இவரால் இயற்றப் பெற்றன.

## ௫௩௫. சண்முக சுவாமிகள் - சி
(1872)

சிதம்பரம் என வழங்குந் திருத்தில்லைப் பதியில் வசித்திருந்த இவர் விருத்தாசலம் குமாரதேவர் ஆதீனபரம்பரையைச்சேர்ந்த வேதசிரேணி சிதம்பர சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். தத்துவஞானச் செல்வராய் விளங்கியிருந்த இவர் "தத்துவஞானதீபிகை" என்னும் அரியநூலை இயற்றியிருக்கிறார். அந் நூலைப் பாராட்டிக் குமாரதேவ சுவாமிகள் ஆதீனம் சொக்கலிங்க சுவாமிகள், சிவசுப்பிரமணிய தேசிகர், தண்டபாணியடிகள் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"அகில மதனை ஒழித்தின்பம் அடையக் கருதில் சுழுத்தியினில்
அகில மொழிந்தும் பேரின்பம் அடைந்தார் உளரோ ஆதலினால்
சகல உருப்பேர் மயமான சகங்கள் தனது வடிவென்றே
தகவோ டறியின் அப்பொழுதே சகசா நந்தக் கடல் படிவாய்."

என்பது நூலில் ஒருபாட்டு. வேதசிரேணி என்பது ஊர்ப் பெயர். அப் பெயர் இந்நாளில் திரிந்து வேளைச்சேரி என்று வழங்குகின்றதாகக் கூறுகின்றனர்.

## ருகசு. சண்முக ஞானியார்

திருப்பாதிரிப்புலியூரில் இருந்தவர். முப்பது பாடல்கள் அடங்கிய "முருகரந்தாதி" என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

"வேலா சரணஞ் சரணமென்
மேல்வெகு ளாமலினி
மேலா யினுங்கடைக் கண்பார்
பருப்பத வேந்தன்மகள்
பாலா குறுமுனி யார்க்குந்
திருப்புகழ்ப் பண்ணவர்க்கும்
ஆலாலம் உண்டவர்க் கும்உப
தேசித்த ஆண்டவனே."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

இவர் திருக்கோவலூர் ஞானியார் ஆதீனத்தில் இரண்டாவது தலைவராக இருந்தவர் எனவும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தை ஏற்படுத்தியவர் எனவும், முருகர் அந்தாதியை அன்றி "விநாயகர்மாலை", "சுப்பிரமணிய பரம்பரப் பதிகம்", "சிவகுருலீலை" முதலிய பிறநூல்களையும் இயற்றியுள்ளார் எனவும் கி. பி. 1832 ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நீழலை எய்தினார் எனவும் தெரிகின்றது.

## ருகஎ. சண்முகதாச பிள்ளை - ச

இவர் பாண்டிவள நாட்டிலே கோபால சமுத்திரம் என்னும் ஊரில் தோன்றியவர். தந்தையார் பெயர் சங்கர சுப்புப்பிள்ளை. சண்முகதாசப் பிள்ளை திருநெல்வேலியில் நெல்லையப்பர் கோவிலுக்குப் பின்பக்கத்தில் அமைந்துள்ள திருப்பணி ஆறுமுக

நயினுர் என்னும் அறுமுகப் பரமன்மீது "ஆறுமுக நயினுர் பிள்ளைத் தமிழ்" என்னும் நூல் இயற்றியுள்ளார்.

"சித்திர வெண்ணிற மதியொளி வீசறு
திருமுக மலராடத்
திறலவு ணேச னடுங்க வதைத்திடு
செங்கைவை வேலாடப்
பத்தினி மார்முலை யுற்றணை யப்படு
பன்னிரு தோளாடப்
பண்டி குலுங்கிட அரையில் உடுத்திய
பட்டரை வடமாட
முத்தி விழைந்து தவம்புரி போதக
முத்தர்கள் நெஞ்சகமாம்
முளரி விளங்கிய திருவடி நூபுர
மொலி யிசைந்தாட
அத்தியில் ஒருபெண் வரச்செயும் அதிசயன்
ஆடுக செங்கீரை
அமைவன மேவிய சண்முக நாயகன்
ஆடுக செங்கீரை."

என்பது அப் பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு. மற்றும் கரிசூழ்ந்த மங்கலத்தூர் அரசடி விநாயகர்மீது பதிகம் ஒன்று பாடியிருக்கிருர்.

"இன்னமொரு தாய்வயிற் றிற்றேன்றி இப்புவியில்
இன்னல்அடை யாத வண்ணம்
எழின்மா தவஞ்செய்யும் மேலோர் குழாத்திலுற்
றின்புறுதல் எந்த நாளோ?
வன்னமயில் வாகனத் தினின்மூன்று சத்தியொடு
வந்துவரம் ஈயொ ணுதோ?
வருத்தமென் ணுவினித் தாங்கமுடி யாதுவினை
மாற்றியாண் டருள வேண்டும்
முன்னம் அளவில்லாதபல கோடி தொண்டர்க்கு
முத்தியும் அளித்த தலைவா!
மூக்கலைத் தவமுனிவன் உள்ளம்விட் டகலாத
முத்தனே! முடிவி லானே!
கன்னலொத் திசைபாடும் ஒருபனவன் ஈந்தபொருள்
களையெலாம் உண்ட தேவே!
கரிசூழ்ந்த மங்கலத் தரசடியில் உற்றேங்கு
கருணைவிக் கினரா சனே!"

என்பது மேற்படி பதிகத்தில் ஒரு பாட்டு.

# தமிழ்ப் புலவர்
# பெயர் அகரவரிசை

தமிழ்ப் புலவர் வரிசை

1 முதல் 15-புத்தகங்களில் வெளிவந்துள்ள,

**380 புலவர்களின் பெயர்கள்**

அகரவரிசையில் அடங்கியுள்ளன

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# உள்ளடக்கம்

## தமிழ்ப் புலவர் வரிசை


| நூல் | புலவர்கள் |
|---|---|
| முதற் புத்தகம் | 3 |
| இரண்டாம் புத்தகம் | 11 |
| மூன்றும் புத்தகம் | 14 |
| நான்காம் புத்தகம் | 24 |
| ஐந்தாம் புத்தகம் | 16 |
| ஆறும் புத்தகம் | 31 |
| ஏழாம் புத்தகம் | 24 |
| எட்டாம் புத்தகம் | 32 |
| ஒன்பதாம் புத்தகம் | 35 |
| பத்தாம் புத்தகம் | 30 |
| பதினொன்றும் புத்தகம் | 37 |
| பன்னிரண்டாம் புத்தகம் | 28 |
| பதின்மூன்றும் புத்தகம் | 35 |
| பதினான்காம் புத்தகம் | 30 |
| பதினைந்தாம் புத்தகம் | 30 |
| மொத்தம் | **380** |



*அப்பர் அச்சகம், சென்னை*-1. C. 300.—Nov. 1956.

பதினைந்து புத்தகங்களினும் வெளிவந்துள்ள

# 380 புலவர் பெருமக்களின் பெயர் அகரவரிசை

| | | புத்தக எண் |
|---|---|---|
| | அகோரமுனிவர் | 10 |
| | ~~அண்ணாமலை ரெட்டியார் (சென்னிகுளம்)~~ | ~~5~~ |
| | அதிவீரராம பாண்டியர் | 2 |
| | அநதாரியப்பர் | 13 |
| 5. | அநந்தபாரதி ஐயங்கார் | 11 |
| | அபிராம பட்டர் | 6 |
| | அப்துல்காதிறு ராவுத்தர் | 14 |
| | அமிர்த கவிராயர் (பொன்னங்கால்) | 4 |
| | அம்பலவாண தேசிகர் (துறைசை) | 10 |
| 10. | அம்பலவாண நாவலர் | 10 |
| | அரங்கசாமி ஐயங்கார் | 14 |
| | அரங்கநாத முதலியார் (பூண்டி) | 3 |
| | அரசகேசரி | 6 |
| | அரசஞ்சண்முகனார் (சோழவந்தான்) | 7 |
| 15. | அருணகிரிநாத அடிகள் | 2 |
| | அருணாசலக்கவிராயர் (சீகாழி) | 3 |
| | அருணாசலக்கவிராயர் (மு. ரா.) | 10 |
| | அழகிய சிற்றம்பலக்கவிராயர் (மிதிலைப்பட்டி) | 4 |
| | அழகிய சொக்கநாத பிள்ளை | 6 |
| 20. | அழகிரிராசு | 14 |
| | ~~அழகு முத்துப்புலவர்~~ | 15 |
| | அவிநாசிப் புலவர் | 11 |
| | ஆண்டிப் புலவர் | 13 |
| | ஆதிமூல முதலியார் (இருக்கம்) | 9 |
| 25. | ஆத்மநாத தேசிகர் | 15 |
| | ஆபிரகாம் பண்டிதர் (தஞ்சை) | 9 |
| | ஆலாலசுந்தரம் பிள்ளை (கா.) | 11 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | ஆறுமுக அடிகள் | 15 |
| | ஆறுமுக நாவலர் (யாழ்ப்பாணம்) | 3 |
| 30. | ஆறுமுகம் பிள்ளை (முதுகுளத்தூர்) | 13 |
| | இரட்டைப்புலவர் | 2 |
| | இரமண மகரிஷி | 12 |
| | இராகவ ஐயங்கார் (ரா.) | 12 |
| | இராசம் ஐயர் | 9 |
| 35. | இராசகோபால ஐயங்கார் (வே.) | 12 |
| | இராசேசுவரி அம்மையார் | 8 |
| | இராமகவிராயர் | 11 |
| | இராமசாமி ஐயர் (இசைப் புலவர்) | 13 |
| | இராமசாமிக் கவிராயர் (மு.) | 13 |
| 40. | இராமசாமிக்கவுண்டர் (சேலம்) | 9 |
| | இராமசாமி ராசு | 11 |
| | இராமச்சந்திர கவிராயர் | 11 |
| | இராமநாதச் செட்டியார். அ. (வயிநாகரம்) | 14 |
| | இராமாநுசக் கவிராயர் | 6 |
| 45. | இராமலிங்க அடிகள் (வடலூர்) | 3 |
| | இராமலிங்கத் தம்பிரான் (புலிக்குட்டி) | 13 |
| | இராமலிங்க அடிகள் (ஈசானிய மடம்) | 9 |
| | இரெட்டியப்பட்டி அடிகள் | 14 |
| | இலக்கண முத்தையா | 14 |
| 50. | இலிங்கப்ப ஐயர் | 11 |
| | இன்பகவிப் புலவர் | 4 |
| | ஈசுரமூர்த்தியா பிள்ளை (மு. பொ.) | 14 |
| | ஈழத்துக்குச்சென்ற இரு புலவர்கள் | 6 |
| | உமறுப்புலவர் | 5 |
| 55. | உமாபதி சிவாச்சாரியார் | 4 |
| | உமாமகேசுவரன் பிள்ளை (தமிழவேள்) | 12 |
| | உலகநாத பிள்ளை (தஞ்சை) | 14 |
| | உலகநாத முதலியார் (திரு. வி.) | 15 |
| | ஒட்டக்கூத்தர் | 2 |
| 60. | ஔவையார் | 1 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | கச்சியப்ப சிவாச்சாரியார் | 4 |
| | கச்சியப்ப முனிவர் | 4 |
| | கடிகை முத்துப்புலவர் | 4 |
| | கண்ணப்ப முதலியார் (பாரிப்பாக்கம்) | 15 |
| 65. | கண்ணுச்சாமிப் பிள்ளை (காழி. சிவ.) | 9 |
| | கதிரேசச் செட்டியார் (பண்டிதமணி. மு.) | 8 |
| | கதிரைவேற் பிள்ளை (நா.) | 10 |
| | கந்தசாமி அடிகள் (சிரவணபுரம்) | 7 |
| | கந்தசாமிக் கவிராயர் (முகவூர்) | 13 |
| 70. | கந்தசாமிக் கவிராயர் (மு. ரா.) | 14 |
| | கந்தசாமிப் பிள்ளை (ச. மு.) | 13 |
| | கந்தசாமிப் புலவர் | 13 |
| | கந்தசாமி முதலியார் (பேரறிஞர்) | 11 |
| | கந்தசாமி முதலியார் (பூசை) | 11 |
| 75. | கந்தசாமி முதலியார் (மோசூர்) | 9 |
| | கந்தசாமி முதலியார் (சாத்தூர்) | 8 |
| | கந்தசாமியார் (ரா.) | 12 |
| | கந்தப்ப ஞானதேசிகர் | 13 |
| | கந்தப்பையர் (திருத்தணிகை) | 8 |
| 80. | கம்பர் | 1 |
| | கருணைப்பிரகாசர் | 11 |
| | கருப்பையாப் பாவலர் (கொட்டாம்பட்டி) | 13 |
| | கரு[illegible] | 6 |
| | கலியாணசுந்தர முதலியார் (பூவை) | 7 |
| 85. | கலியாணசுந்தர முதலியார் (திரு. வி.) | 7 |
| | கல்லாடர் | 6 |
| | கவிகுஞ்சர பாரதியார் | 15 |
| | கவிராச பண்டிதர் | 4 |
| | களந்தைக்குமரன் | 11 |
| 90. | கனகசபைக்கவிராயர் (வீரசைவர்) | 15 |
| | கனகசபைப் பிள்ளை (வி.) | 6 |
| | கனகசுந்தரம் பிள்ளை (தி. த.) | 7 |
| | கன்னைய நாயுடு (ஆ. வி.) | 12 |

| | | புததக எண் |
|---|---|---|
| | கார்த்திகேய முதலியார் (மாகறல்) | 14 |
| 95. | கார்மேகக் கவிஞர் | 15 |
| | கால்டுவெல் | 6 |
| | காளமேகப் புலவர் | 2 |
| | கிருட்டிண ஐயர் (கனம்) | 13 |
| | கிருட்டிண பிள்ளை | 6 |
| 100. | கிருட்டிணமாச்சாரியார் (சே.) | 9 |
| | கிருட்டிணமூர்த்தி (கல்கி) | 8 |
| | குகனேரியப்ப நாவலர் | 4 |
| | குப்புச்சாமி ராசு (வெ.) | 14 |
| | குமரகுருதாச அடிகள் (பாம்பன்) | 5 |
| 105. | குமரகுருபரர் | 2 |
| | குமாரசாமி தேசிகர் | 11 |
| | குமாரசாமிப் பிள்ளை (ம. ரா.) | 9 |
| | குமாரசாமிப்புலவர் (சுன்னாகம்) | 7 |
| | குமாரசாமி முதலியார் (சேலம்) | 9 |
| 110. | குமாரசாமி முதலியார் (குன்னூர்) | 14 |
| | குமாரதேவர் | 4 |
| | குருகையூர் வைணவப்புலவர் | 5 |
| | குருஞான சம்பந்தர் | 10 |
| | குருநமச்சிவாயர் | 6 |
| 115. | குழந்தைக்கவிராயர் | 8 |
| | கூழங்கைத்தம்பிரான் | 4 |
| | கைலாச பிள்ளை (சிற்.) | 10 |
| | கைலாச பிள்ளை (த.) | 10 |
| | கோபாலகிருட்டிண பாரதியார் | 14 |
| 120. | கோபால பிள்ளை | 14 |
| | கோபிநாதராயர் (து. அ.) | 15 |
| | கோவிந்தசாமிப் பிள்ளை (ச. க.) | 9 |
| | கோவிந்த பிள்ளை (திரிசிரபுரம்) | 11 |
| | கோவிந்தராச முதலியார் (கா. ர.) | 7 |
| 125. | கோவிந்தராசனார் (சீனி) | 11 |
| | சகதேவ முதலியார் (சேலை) | 8 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | சங்கரசிந்தாமணிப் புலவர் | 12 |
| | சங்கர தாசர் | 14 |
| | சங்கரநமச்சிவாயப்புலவர் | 6 |
| 130. | சங்கர பண்டிதர் | 10 |
| | சச்சிதாநந்த யோகீசுரர் | 14 |
| | சடகோப ஐயங்கார் | 11 |
| | சண்முகசுந்தர முதலியார் (வல்லை) | 9 |
| | சண்முகஞ் செட்டியார் (அ.) | 14 |
| 135. | சண்முகம் பிள்ளை (திருமயிலை) | 8 |
| | சண்முகம் பிள்ளை (வ. சு.) | 9 |
| | சதாசிவச் செட்டியார் (கயப்பாக்கம்) | 10 |
| | சத்திமுற்றப் புலவர் | 6 |
| | சத்தியமூர்த்தி | 14 |
| 140. | சந்திரசேகர கவிராச பண்டிதர் | 11 |
| | சபாபதி நாவலர் | 8 |
| | சபாபதி முதலியார் (மதுரை) | 15 |
| | சபாபதி முதலியார் (புரசை) | 8 |
| | சபாபதி முதலியார் (காஞ்சி) | 13 |
| 145. | சபாரத்தின முதலியார் (குல.) | 9 |
| | சம்பந்த சரணாலயர் | 4 |
| | சம்பந்த முனிவர் | 13 |
| | சயங்கொண்டான் | 2 |
| | சரவணக்கவிராயர் (அட்டாவதானம்) | 6 |
| 150. | சரவணபவாநந்தம் பிள்ளை | 9 |
| | சரவணப்பெருமாட் கவிராயர் (க.) | 8 |
| | சரவணப்பெருமாட் கவிராயர் (உ.) | 13 |
| | சர்க்கரைப்புலவர் (பொன்னெட்டி மாலை) | 10 |
| | சர்க்கரைப்புலவர் (இரண்டாவது) | 10 |
| 155. | சலசலோசனர் | 9 |
| | சவராயலு நாயகர் | 13 |
| | சவாதுப்புலவர் | 13 |
| | சற்குணர் (ச. த.) | 9 |
| | சாந்தலிங்க அடிகள் | 10 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| 160. | சர்க்கரைப்புலவர் | 10 |
| | சாமிநாதையர் (உ. வே.) | 7 |
| | சாமிநாதையர் (சி. வி.) | 10 |
| | சிதம்பர அடிகள் (திருப்போரூர்) | 2 |
| | சிதம்பரநாத முதலியார் (டி. கே. சி.) | 8 |
| 165. | சிதம்பரநாத முனிவர் | 11 |
| | சிதம்பர பாரதியார் | 15 |
| | சிதம்பரம் பிள்ளை (ப.) | 9 |
| | சிதம்பரம் பிள்ளை (மதுரை) | 12 |
| | சிதம்பரம் பிள்ளை (வ. உ.) | 7 |
| 170. | சிதம்பரனார் (துடிசை கிழார்) | 8 |
| | சிவகுருநாத பிள்ளை (ந.) | 12 |
| | சிவக்கொழுந்து தேசிகர் | 8 |
| | சிவசம்புப் புலவர் | 7 |
| | சிவஞான முனிவர் | 3 |
| 175. | சிவஞானம் பிள்ளை (சே.) | 12 |
| | சிவஞான யோகிகள் (விருதை) | 9 |
| | சிவபாதசுந்தரம் | 15 |
| | சிவப்பிரகாச அடிகள் (வியாசர்பாடி) | 14 |
| | சிவப்பிரகாசர் (துறைமங்கலம்) | 3 |
| 180. | சிவப்பிரகாசர் (சித்தர்) | 10 |
| | சிவாக்கிர யோகிகள் | 11 |
| | சிவாநந்தசாகர யோகீசுவரர் | 14 |
| | சிவாநந்த யதீந்திரர் | 12 |
| | சிற்றம்பல நாடிகள் | 10 |
| 185. | சின்னக்குட்டிப் புலவர் (மாவை) | 8 |
| | சின்னத்தம்பிப் புலவர் (யாழ்ப்பாணம்) | 6 |
| | சின்னைய செட்டியார் (விர. லெ.) | 13 |
| | சீநிவாச ஐயங்கார் (தி. செ.) | 12 |
| | சீநிவாச பிள்ளை (கே. எஸ்.) | 14 |
| 190. | சுந்தர அடிகள் (கோடகநல்லூர்) | 15 |
| | சுந்தரதாசப் பாண்டியர் | 13 |
| | சுந்தர முதலியார் (முத்து) | 10 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | சுந்தரம் பிள்ளை (பெ.) (மனோன்மணீயம்) | 3 |
| | சுப்பிரமணிய ஐயர் (வ. வே.) | 8 |
| 195 | சுப்பிரமணியக் கவிராயர் (சே. ரா.) | 14 |
| | சுப்பிரமணியதாசு (திருக்குறள் அவதானி) | 9 |
| | சுப்பிரமணிய தீட்சிதர் | 5 |
| | சுப்பிரமணிய தேசிகர் | 11 |
| | சுப்பிரமணிய பாரதியார் | 5 |
| 200. | சுப்பிரமணிய பிள்ளை (வ. த.) | 9 |
| | சுப்பிரமணிய பிள்ளை (கா.) | 9 |
| | சுப்பிரமணிய முதலியார் (வெ. ப.) | 7 |
| | சுப்பிரமணிய முனிவர் (தொட்டிக்கலை) | 10 |
| | சுப்பைய ஞானதேசிகர் (வீர.) | 15 |
| 205 | சுவாமிநாத தேசிகர் | 5 |
| | சுவாமிநாத பண்டிதர் | 8 |
| | சூலியன் வின்சோன் | 12 |
| | செந்திருநைதயர் (காசிவாசி) | 10 |
| | செந்தில்நாயக அடிகள் (மாதை) | 7 |
| 210. | செய்குத்தம்பிப் பாவலர் | 7 |
| | செல்லையா (வண்ணை) | 9 |
| | செல்வக்கேசவராய முதலியார் | 7 |
| | செவ்வந்திநாத தேசிகர் | 12 |
| | சேக்கிழார் | 4 |
| 215. | சேஷாசல ஐயர் (டி. என்.) | 14 |
| | சேந்தனார் | 6 |
| | சேரமான்பெருமாள் | 6 |
| | சேனாதிராய முதலியார் | 10 |
| | சைவ எல்லப்ப நாவலர் | 4 |
| 220. | சொக்கநாதப் புலவர் | 12 |
| | சொக்கலிங்கச் செட்டியார் (காரைக்குடி) | 7 |
| | சோணாசல பாரதியார் | 15 |
| | சோமசுந்தர குரு | 13 |
| | சோமசுந்தர தேசிகர் (கு.) | 9 |
| 225. | சோமசுந்தர நாயகர் | 8 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | சோமசுந்தரம் பிள்ளை (ம. நா.) | 10 |
| | சோலைய அடிகள் | 13 |
| | ஞானப்பிரகாசர் (சிதம்பரம்) | 15 |
| | ஞானப்பிரகாசர் (கமலை) | 4 |
| 230. | ஞானப்பிரகாசர் (நல்லூர் சுவாமி) | 12 |
| | ஞானியார் அடிகள் | 7 |
| | தண்டபாணிப் பிள்ளை (நாகை) | 9 |
| | தண்டபாணியடிகள் (மாதை) | 5 |
| | தத்துவப்பிரகாசர் | 4 |
| 235. | தத்துவராய அடிகள் | 4 |
| | தலைமலைகண்ட தேவர் | 6 |
| | தாண்டவராயத் தம்பிரான் | 13 |
| | தாண்டவராய முதலியார் (வித்துவான்) | 8 |
| | தாமோதரம் பிள்ளை (சி. வை.) | 3 |
| 240. | தாயுமானவர் | 3 |
| | தியாகராசச் செட்டியார் | 6 |
| | திரிகூடராசப்பன் கவிராயர் | 8 |
| | திருச்சிற்றம்பலம் பிள்ளை | 11 |
| | திருநாவுக்கரசு முதலியார் (மணி.) | 7 |
| 245. | திருமூலர் | 6 |
| | திருவம்பல தேசிகர் | 13 |
| | திருவேங்கடநாதர் (மாதை) | 11 |
| | தில்லைநாயக முதலியார் (தில்லை) | 12 |
| | தில்லைவிடங்கன் மாரிமுத்துப்பிள்ளை | 13 |
| 250. | தேசிகவிநாயகம் பிள்ளை (கவிமணி) | 8 |
| | தேவராச பிள்ளை | 13 |
| | நடராசர் (சே.) | 11 |
| | நடராசன் (வி. சு.) | 15 |
| | நடேச சாத்திரியார் (பண்டித) | 11 |
| 255. | நடேச முதலியார் (மு.) | 12 |
| | நந்திக்கலம்பக ஆசிரியர் | 6 |
| | நமசிவாயப் புலவர் | 6 |
| | நமசிவாயப் புலவர் (பூசை) | 11 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | நமச்சிவாய முதலியார் (கா.) | 7 |
| 260. | நம்பிகாளி | 15 |
| | நம்பியாண்டார் நம்பி | 4 |
| | நல்லசாமிப் பிள்ளை (ஜே. எம்) | 9 |
| | நல்லசிவன் பிள்ளை | 7 |
| | நல்லாப்பிள்ளை | 6 |
| 265. | நவநீதகிருட்டிண பாரதியார் | 9 |
| | நாகலிங்க முனிவர் (காஞ்சி) | 7 |
| | நாராயண ஐயர் | 11 |
| | நாராயண ஐயங்கார் (திரு) | 12 |
| | நாராயணசாமி ஐயர் (பின்னத்தூர்) | 8 |
| 270. | நாராயண தீட்சிதர் | 8 |
| | நாராயண தேசிகர் (சாது) | 15 |
| | நிரம்பவழகிய தேசிகர் | 4 |
| | நீலாம்பிகையம்மையார் (நாகை) | 8 |
| | நெற்குன்றவாண முதலியார் | 5 |
| 275. | பகழிக்கூத்தர் | 6 |
| | படிக்காசுத் தம்பிரான் | 3 |
| | பட்டினத்து அடிகள் | 2 |
| | பத்திரகிரியார் | 13 |
| | பரஞ்சோதியார் | 11 |
| 280. | பரஞ்சோதி முனிவர் (திருவிளையாடல்) | 4 |
| | பரமசிவத்தம்பிரான் | 11 |
| | பரிதிமாற் கலைஞர் | 5 |
| | பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் | 8 |
| | பலராமையர் (ந.) | 9 |
| 285. | பழநியப்ப பிள்ளை (தி. பொ.) | 7 |
| | பாண்டித்துரைத்தேவர் | 5 |
| | பாலகிருட்டிண கவிராயர் | 14 |
| | பாலசுந்தர முதலியார் (தண்டலம்) | 14 |
| | பாலசுப்பிரமணியக் கவிராயர் | 4 |
| 290. | பால்வண்ண முதலியார் (மு) | 14 |
| | பானுகவி அடிகள் | 11 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | பிச்சுவையர் (வேம்பத்தூர்) | 14 |
| | பிச்சுவையர் (கல்போது) | 12 |
| | பிச்சை இபுராகிம் புலவர் | 15 |
| 295. | பிச்சையா நாவலர் | 15 |
| | பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் | 5 |
| | பீமகவிப்புலவர் | 14 |
| | புகழேந்திப்புலவர் | 1 |
| | புதுமைப்பித்தன் | 9 |
| 300. | புராணத் திருமலைநாதர் | 6 |
| | பூசைத்தாயார் | 11 |
| | பூரணலிங்கம் பிள்ளை (மு. சி.) | 8 |
| | பூவராகம் பிள்ளை (ஆ.) | 12 |
| | பெருமாள் கவிராயர் (திருக்குருகை) | 4 |
| 305. | பேரம்பலப்புலவர் | 9 |
| | பொய்யாமொழிப் புலவர் | 2 |
| | பொன்னம்பல அடிகள் | 6 |
| | பொன்னம்பலக் கவிராயர் | 12 |
| | பொன்னம்பலசிவம் | 15 |
| 310. | பொன்னம்பலம் பிள்ளை (ந. ச.) | 8 |
| | பொன்னம்பலம் பிள்ளை | 11 |
| | பொன்னுச்சாமித்தேவர் | 5 |
| | பொன்னையா முதலியார் | 15 |
| | போப்பையர் | 6 |
| 315. | மணிவாசக சரணாலய அடிகள் | 14 |
| | மண்டலபுருடன் | 11 |
| | மதுரகவி | 13 |
| | மதுர கவிராயர் (1) | 11 |
| | மதுரகவி பாரதியார் | 15 |
| 320. | மதுரைநாயகம் பிள்ளை | 10 |
| | மயிலேறும்பெருமாள் பிள்ளை | 3 |
| | மழவை மகாலிங்கையர் | 13 |
| | மறைமலையடிகள் | 7 |
| | மனோன்மணியம்மையார் | 8 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| 325. | மாசிலாமணி தேசிகர் | 10 |
| | மாணிக்க நாயக்கர் (பா. வே.) | 8 |
| | மாம்பழக்கவிச்சிங்க நாவலர் | 4 |
| | மீனாட்சிசுந்தரம் பிள்ளை (மகாவித்துவான்) | 3 |
| | மீனாட்சிசுந்தரக் கவிராயர் (முகவூர்) | 10 |
| 330. | முத்தப்ப செட்டியார் (பாடுவாய்) | 10 |
| | முத்துக்குட்டிப்புலவர் | 6 |
| | முத்துக்குமாரத் தம்பிரான் | 9 |
| | முத்துசிவன் (ஆ.) | 12 |
| | முத்துச்சாமி ஐயர் | 15 |
| 335. | முத்துச்சாமி ஐயங்கார் | 13 |
| | முத்துச்சாமி ஐயர் (வண்டானம்) | 12 |
| | முத்துச்சாமிப் பிள்ளை (தேவிபட்டினம்) | 13 |
| | முத்துச்சாமிப் பிள்ளை (புகழ்) | 9 |
| | முத்துச்சாமிக்கோனார் | 7 |
| 340. | முத்துத்தம்பி பிள்ளை (ஆ.) | 15 |
| | முத்துத்தாண்டவராய பிள்ளை (சீர்காழி) | 9 |
| | முத்துத்தாண்டவர் | 6 |
| | முத்துராமலிங்க சேதுபதி (க.) | 13 |
| | முத்துராமலிங்க சேதுபதி (உ.) | 14 |
| 345. | முருகப்புலவர் (சர்க்கரைமுத்து) | 10 |
| | வசைகவியாண்டான் புலவர் | 6 |
| | வடமலையப்ப பிள்ளையன் | 8 |
| | வடிவேல் செட்டியார் (கோ.) | 12 |
| | வரதநஞ்சைய பிள்ளை (அ.) | 15 |
| 350. | வரதுங்கராம பாண்டியன் | 13 |
| | வரந்தருவார் | 13 |
| | வன்றொண்டர் | 11 |
| | விசயரங்க முதலியார் (பம்மல்) | 8 |
| | விசுவநாத பிள்ளை (வீ.) | 10 |
| 355. | விபுலானந்த அடிகள் | 7 |
| | விருத்தாசல ரெட்டியார் (செங்கணம்) | 11 |
| | வில்லிபுத்தூரார் | 2 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | வீரகவிராசர் | 5 |
| | வீரகவிராயர் (வெண்பாப்புலி) | 12 |
| 360. | வீரபத்திரப்புலவர் | 15 |
| | வீரபாண்டியப்புலவர் | 5 |
| | வீரமாமுனிவர் | 6 |
| | வீரராகவ முதலியார் (அந்தகக்கவி) | 3 |
| | வீரராகவ முதலியார் (முத்தமிழ்க்கவி) | 15 |
| 365. | வெள்ளியம்பல உபாத்தியாயர் | 11 |
| | வெள்ளியம்பலவாணத் தம்பிரான் | 4 |
| | வென்றிமாலைக் கவிராயர் | 10 |
| | வேங்கடசாமி நாட்டார் (பண்டித ந. மு.) | 9 |
| | வேங்கடரமண தாசர் (சாமக்குளம்) | 11 |
| 370. | வேங்கடாசலம் பிள்ளை (கரந்தைக்கவியரசு) | 12 |
| | வேங்கட்டராயலு நாயுடு | 13 |
| | வேதகிரி முதலியார் (களத்தூர்) | 12 |
| | வேதநாயக சாத்திரியார் | 8 |
| | வேதநாயகம் பிள்ளை (ச.) | 5 |
| 375. | வேலாயுத முதலியார் (தொழுவூர்) | 10 |
| | வேலுச்சாமிப் பிள்ளை (வெண்பாப்புலி) | 8 |
| | வேலைய அடிகள் | 11 |
| | வைத்தியநாத நாவலர் (இலக்கண விளக்கம்) | 3 |
| | வைத்தியநாதையர் (மகா) | 13 |
| 380. | வையாபுரிப் பிள்ளை (ச.) | 15 |



## பதினாறு முதல் இருபத்தொன்று வரையிலும் உள்ள ஆறு புத்தகங்களினும் வெளிவந்துள்ள

# 185 புலவர் பெருமக்களின் பெயர் அகரவரிசை


| | | புத்தக எண் |
|---|---|---|
| | அசலாம்பிகை அம்மையார் | 18 |
| | அச்சுதானந்த அடிகள் (சு.) | 19 |
| | அச்சுதானந்த அடிகள் | 18 |
| | அட்டாவதானியார் | 16 |
| 5. | அண்ணாமலை ரெட்டியார் | 19 |
| | அநந்த கவிராயர் | 16 |
| | அநந்தகிருட்டிண ஐயங்கார் | 20 |
| | அநந்த பாரதி சுவாமிகள் | 16 |
| | அந்தோனிக்குட்டி அண்ணாவியார் | 16 |
| 10. | அப்பாச்சாமி முதலியார் (வீ.) | 20 |
| | அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை | 20 |
| | அமிர்தம் பிள்ளை (திருச்சி) | 18 |
| | அம்பிகைபாகப் புலவர் | 16 |
| | அரங்கநாதக் கவிராயர் | 16 |
| 15. | அழகிய திருச்சிற்றம்பல அடிகள் | 19 |
| | ‡அழகுமுத்துப் புலவர் | 18 |
| | அறிவானந்த அடிகள் | 21 |
| | ஆறுமுக அடிகள் (திரு.) | 19 |
| | ஆறுமுகஞ் சேர்வை | 17 |
| 20. | ஆறுமுகத் தம்பிரான் | 16 |
| | ஆறுமுக முதலியார்-வரகவி | 19 |
| | ஆழ்வாரப்ப பிள்ளை | 19 |
| | இடைக்காடனார் | 16 |
| | இராசகோபாலப் புலவர் | 21 |


* இருவரும் வேறு வேறு அறிஞர்கள்.

† 5-ம் புத்தகத்தில் நீக்கி விரிவுபடுத்தப்பட்டது.

‡ 15-ம் புத்தகத்தில் நீக்கி விரிவுபடுத்தப்பட்டது.

| | | புத்தக எண் |
|---|---|---|
| 25. | இராமசாமி நாயுடு (சு.) | 17 |
| | இராமநாத பிள்ளை (சாணுங்குப்பம்) | 17 |
| | இராமநாதன் சர். பொன்னம்பலம் | 17 |
| | இராமலிங்கக் கவிராயர் (பொ. மீ.) | 20 |
| | இராமாநந்த அடிகள் | 18 |
| 30. | இராமாநுச நாவலர் | 18 |
| | இரு முகமதியப் புலவர்கள் | 16 |
| | இரேனியஸ் ஐயர் | 16 |
| | இலக்குமணப் பிள்ளை | 17 |
| | இளையபெருமாள் பிள்ளை (சொ.) | 19 |
| 35. | ஈசூர் சச்சிதாநந்த அடிகள் | 16 |
| | உருத்திரகோடிப் புலவர் | 18 |
| | உலகம்மையம்மாள் | 19 |
| | எம்பெருமான் புலவர் | 18 |
| | எல்லீசர் | 16 |
| 40. | ஏகம்பவாணன் | 20 |
| | ஏரம்பையர் | 17 |
| | கணபதிப் பிள்ளை | 16 |
| | கணேசையர் (சி.) | 31 |
| | கந்தசாமிப் புலவர் | 18 |
| 45. | கந்தப் பிள்ளை (ப.) | 16 |
| | கருத்தமுத்துப் பிள்ளை | 16 |
| | கனகசபாபதி ஐயர் | 21 |
| | கனகசபைப் பிள்ளை (கூ.) | .19 |
| | கனகசபைப் புலவர் | 16 |
| 50. | கனகசபை முதலியார் (மா. அ.) | 17 |
| | காமினி | 19 |
| | கார்த்திகேயப் புலவர் | 16 |
| | கார்மேகக்கோன் (ஆ.) | 18 |
| | காழிக்கண்ணுடைய வள்ளலார் | 16 |
| 55. | காளியண்ண பிள்ளை | 21 |
| | கிருட்டிணசாமிப் பாவலர் (தெ. பொ.) | 18 |
| | கிருட்டிண பாரதி | 18 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | கிருட்டிணமாச்சாரியார் (பில்லாலி) | 21 |
| | குணங்குடி மத்தான் சாகிபு | 20 |
| 60. | குமாரசாமிப் புலவர் (வ.) | 17 |
| | குமாரசாமி முதலியார் | 16 |
| | கேசவ சுப்பராயச் செட்டியார் | 18 |
| | கோடீசுர ஐயர் | 19 |
| | கோபால கிருட்டிணமாச்சாரியார் (வை. மு.) | 17 |
| 65. | சடகோபராமாநுசாச்சாரியார் (வை. மு.) | 17 |
| | சண்முகஞ் செட்டியார் (ரா. க.) | 17 |
| | சதாசிவம் பிள்ளை | 16 |
| | சதாசிவம் பிள்ளை (நாகை) | 17 |
| | சத்திவேற் பிள்ளை. (ஆ.) | 20 |
| 70. | சம்பந்த சரணாலயர் | 21 |
| | சரவணமுத்துப் பிள்ளை | 17 |
| | சரவண தேசிகர் | 21 |
| | சரவணமுத்துப் புலவர் | 16 |
| | சவரிராய பிள்ளை (பண்டிதர்) | 17 |
| 75. | சவுரிப் புலவர் | 21 |
| | சாது இரத்தின சற்குரு | 21 |
| | சாமிக்கண்ணுப் பிள்ளை | 17 |
| | சாமிநாத பிள்ளை (உ. ரா.) | 21 |
| | சாமிநாத பிள்ளை (வி.) | 20 |
| 80. | சாமி வேலாயுதம் பிள்ளை | 18 |
| | சிங்காரவேலு முதலியார் (மா.) | 19 |
| | சிங்காரவேலு முதலியார் (ஆ.) | 17 |
| | சிதம்பரஞான தேசிகர் | 19 |
| | சிதம்பரநாதத் தம்பிரான் | 19 |
| 85. | சிதம்பர பாரதியார் | 20 |
| | சிதம்பரம் பிள்ளை (மு.) | 16 |
| | சிவசுப்பிரமணிய தேசிகர் | 19 |
| | சிவஞான தேசிகர் | 16 |
| | சிவயோக அடிகள் | 21 |
| 90. | சிவராமலிங்க அடிகள் | 17 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | சிவானந்தையர் | 17 |
| | சின்னத்தம்பி | 16 |
| | சிகன்பால்கு ஐயர் | 16 |
| | சுந்தர முதலியார் (வி.) | 20 |
| 95. | சுப்பிரதீபக் கவிராயர் | 16 |
| | சுப்பிரமணிய ஐயர் (தஞ்சை) | 21 |
| | சுப்பிரமணிய ஐயர் (மீ.) | 20 |
| | சுப்பிரமணிய சிவம் | 17 |
| | சுப்பிரமணிய பிள்ளை (தி. செ.) | 20 |
| 100. | சேறைக் கவிராசர் | 18 |
| | சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதி | 18 |
| | சோமசுந்தரப் புலவர் | 17 |
| | சோமநாத பாரதி | 19 |
| | ஞான சித்தர் | 19 |
| 105. | ஞானப்பிரகாச வள்ளலார் (நா.) | 19 |
| | தங்கசாமி | 17 |
| | தங்கமுத்துப் புலவர் | 21 |
| | தத்துவ போதகர் | 20 |
| | தமிழாகரர் | 16 |
| 110. | திருநாவுக்கரசு தேசிகர் | 16 |
| | திருமலை சக்கையா கவுடர் | 21 |
| | திருமலைவேற் கவிராயர் (ச.) | 20 |
| | திருமாளிகைத் தேவர் | 18 |
| | திருமூர்த்தி நயினார் | 18 |
| 115. | திருவரங்கத் தமுதனார் | 21 |
| | திருவேங்கட நாயுடு (க. வ.) | 19 |
| | தெய்வசிகாமணிக் கவிராயர் | 19 |
| | தெய்வசிகாமணிப் புலவர் | 21 |
| | தொண்டைமான் முத்தையா | 20 |
| 120. | தொல்காப்பியத் தேவர் | 18 |
| | நஞ்சையப் புலவர் (அ.) | 21 |
| | நஞ்சையப் புலவர் (க.) | 21 |
| | நமச்சிவாயப் புலவர் (இலங்கை) | 16 |

| | | புத்தக எண் |
|---|---|---|
| | நாகப்ப முதலியார் (அ.) | 20 |
| 125. | நாகமணிப் புலவர் | 17 |
| | நாதமுனி முதலியார் (மயிலை) | 20 |
| | நாராயணசாமிப் பிள்ளை (வெ.) | 16 |
| | நாராயணசாமிப் பிள்ளை (வே. கி.) | 20 |
| | நாராயணசாமிப் புலவர் (ரா.) | 21 |
| 130. | நீலகண்டதாசர் | 19 |
| | *நெல்லையப்ப பிள்ளை (தா.) | 17 |
| | *நெல்லையப்ப பிள்ளை (தா.) | 18 |
| | பக்தவத்சலம் பிள்ளை | 18 |
| | பங்காருப் பத்தர் (சி.) | 20 |
| 135. | பரஞ்சோதி அடிகள் | 21 |
| | பரராசசிங்கன் | 20 |
| | பள்ளிகொண்டான் பிள்ளை | 18 |
| | பாலசுப்பிரமணிய முதலியார் (மா.) | 20 |
| | பாலபாரதி முத்துச்சாமி அய்யர் | 16 |
| 140. | பால பாரதியார் | 16 |
| | பிரதிவாதி பயங்கரப் புலவர் | 18 |
| | பின் வேலப்ப தேசிகர் | 18 |
| | பெருமாளையர் | 20 |
| | பெரும்பற்றப் புலியூர்நம்பி | 20 |
| 145. | பொன்னுயிரங் கவிராய மூர்த்திகள் | 21 |
| | பொன்னையா முதலியார் | 16 |
| | மதுரஞ் சுந்தரபாண்டியனார் | 20 |
| | மயில்வாகனப் புலவர் | 16 |
| | மழவராயனேந்தல் சுப்பிரமணிய பாரதியார் | 17 |
| 150. | மறைஞான சம்பந்தர் (கண்கட்டி) | 16 |
| | மாணிக்கனார் (மு.) | 17 |
| | மாதவையர் (அ.) | 17 |
| | மீனாட்சிசுந்தர முதலியார் (கு.) | 19 |
| | முக்தானந்த அடிகள் | 20 |


* இருவரும் வெவ்வேறாவர்.

| | | புத்தக எண் |
|---|---|---|
| 155. | முத்துக்கிருட்டிண பிரமம் | 16 |
| | முத்துக்குமார கவிராயர் | 16 |
| | முத்துச்சாமிக் கவிராயர் (நகரம்) | 18 |
| | முத்துக்குமாரசாமிக் குருக்கள் | 17 |
| | முத்துக்குமாரத் தம்பிரான் (போரூர்) | 16 |
| 160. | முத்துக்குமாரப் புலவர் | 21 |
| | முத்துச்சாமிப் பாரதியார் | 18 |
| | முத்துச்சாமிப் பிள்ளை (எம்.) | 18 |
| | முத்துராமலிங்க ஞானதேசிகர் | 19 |
| | முத்துவேலுக் கவிராசர் | 19 |
| 165 | முத்தைய பிள்ளை (பொ.) | 20 |
| | முருகதாசக் கவிராயர் | 19 |
| | முருகப்பா (சொ.) | 17 |
| | முருகேசக் கவிராயர் | 16 |
| | முருகேச பண்டிதர் | 17 |
| 170. | முருதாக்கர் | 17 |
| | முனிசாமி முதலியார் (மோசூர்) | 20 |
| | முனிசாமி முதலியார் (சி.) | 18 |
| | வயித்தியலிங்கம் பிள்ளை (வ) | 17 |
| | வரதராசுலு நாயுடு | 18 |
| 175. | விசுவநாதையர் (சு.) | 20 |
| | வில்லியப்ப பிள்ளை | 18 |
| | வில்லியார் | 20 |
| | வீமநாத பண்டிதர் | 16 |
| | வீராசாமிச் செட்டியார் | 18 |
| 180. | வெறிமங்கை பாகக்கவிராயர் | 16 |
| | வேங்கடத்துறைவான் கவிராயர் | 19 |
| | வேங்கடநாதாசாரியர் | 21 |
| | வேங்கடரமண ஐயங்கார் | 21 |
| | வேங்கடராம பிள்ளை (வீ.) | 17 |
| 185. | வேற்பிள்ளை (ம. க.) | 17 |


